ஸ்ரீ :

# பெரிய திருமொழி

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தை முழுமையாகத் தழுவியது.

தெளிவுரை :

ஸ்ரீ உ.வே. டாக்டர் மதி. சீனிவாசன், எம் ஏ,பி.டி.,பி.எச்டி.,

வெளியீடு :

ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ்

பதிப்பகத்தார் & விற்பனையாளர்

144, ஆழ்வார்பேட்டைதெரு,

ஆழ்வார்பேட்டை, சென்னை - 600018

 4335524

## நூல் விவர அட்டவணை


| | | |
|---|---|---|
| நூல் | : | பெரிய திருமொழி - நாலாயிர திவ்யப் பிரபந்தம் |
| பொருள் | : | சமயம் |
| ஆசிரியர்பெயர் | : | தெளிவுரை : ஸ்ரீ உ.வே. டாக்டர் மதி. சீனிவாசன், பேராசிரியர், முன்னாள் தமிழ்த்துறைத்தலைவர், வைணவக் கல்லூரி சென்னை. |
| பதிப்பு ஆண்டு | : | 2000 |
| பதிப்பு | : | ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ் (பதிப்பகத்தார் & விற்பனையாளர்) |
| உரிமை | : | பதிப்பகத்தாருக்கே. |
| மொழி | : | தமிழ் |
| நூலின் அளவு | : | கிரௌன் |
| தாள் | : | மேப்லித்தோ |
| அச்சு எழுத்து | : | 11 பாயிண்ட் |
| மொத்தப்பக்கம் | : | 448 (28 பாரம்) |
| விலை | : | ரூ. /- |
| கணிப்பொறி அச்சு | : | ஈசுவர் லேசர், சென்னை - 18 |
| அச்சிட்டோர் | : | மிர்ரா பிரிண்டர்ஸ், சென்னை - 18 |


## இம் மலர் பற்றி...

அடியேன் அடியேனுடைய விருப்புக்கு உட்பட்டவன் அல்ல. இறைவன் கொண்டு செல்லும் வழியில் பொம்மை போல அடியேன் செல்ல வேண்டும். இறைவன் அடியேனைச் செய்யவைக்கும் வேலைகளைப் பொம்மை போலச் செய்ய வேண்டும். இறைவன் அடியேனை புனிதமான நாலாயிர திவ்ய பிரபந்தத்திற்கு எளிமையான தெளிவுரை வெளியிட கட்டளையிட்டான். பிரபந்தங்களாகிய மலர்த் தோட்டம் அமைத்தவர்கள் பெருமைமிகு ஆழ்வார்கள். மலர்களின் மணத்தை உலகம் முழுவதும் பரப்பியவர்கள் வியாக்கியானங்கள் எழுதிய பெரியவாச்சான் பிள்ளை போன்றவர்கள். நூலை நாங்கள் தெளிவான உரை வெளியிடுவதும் அன்னையின் அருளால்தான். எங்களின் இந்த மலருக்கு இதழ்களாக இருந்த குழுவினருக்கும் பெயரினை வெளிப்படுத்தாது உதவிய இதழ்களுக்கும் எங்கள் நன்றி.

தெய்வத் தொண்டில்
**பாலன்.**

# ஆசி உரை

உண்டியே உடையே உகந்து ஓடும் இம்
மண்டலத்தொடும் கூடுவது இல்லை யான்
அண்டவாணன் அரங்கன் வன்பேய்முலை
உண்ட வாயன் தன் உன்மத்தன் காண்மினே.

- திவ்யப் பிரபந்தம் - 671.

ஆழ்வார்கள் காலந்தொட்டு இன்று வரை மனிதப்பிறவி எடுத்தும் உண்டிக்கும் உடைக்குமே மனிதன் அலைகின்றான். அரங்கனை எண்ணாமல் அலைந்தவர்கள் பேரின்பம் கண்டதுமில்லை. அவர்தம் பெயரும் செயலும் நிலைத்து நின்றதும் இல்லை. மறந்து விட்ட சில மாந்தர்களுக்கு நினைவு படுத்தவே இந்த நாலாயிர திவ்யப் பிரபந்தத்திற்கு தெளிவுரையைக் கொண்டு வருகின்றோம். நம்மவர் பலருக்கு மனமது செம்மையாக இல்லை என்பதால் மந்தரம் ஓத வேண்டியிருக்கின்றது. பிரபந்தம் படித்தவர்களுக்கு மனம் செம்மையாகும். தமிழில் உள்ள பாடல்களுக்கு பலர் வியாக்கியானம், கருத்துரை, எளிய உரை எனப் பலபெயரிட்டு படைத்துள்ளனர். படிக்கும் போது புரிந்த கருத்துக்கள் நூலினை மூடியதும் மறந்து விடாது இருக்கத் தெளிவுரை ஒன்று கொணரவேண்டும் என "வராகி" பாலன் கூறினார்கள்.

அனைத்துப் பாடல்களுக்கும் உரை இருக்க வேண்டும். நாராயணன் பெயரினை உரையாசிரியர் மெய்யாக ஓதுபவராக இருக்க வேண்டும். இதற்கு ஆசிரியராக இருப்பவர் பேராசிரியராக இருக்க வேண்டும். ஆழ்வார்களின் அருள்கிட்டியவராக இருக்க வேண்டும். வேதங்கள் பல இருப்பினும் எளிமையாக 'ஓம் நமோ நாராயணா' எனக் கூறினால்போதும் என்ற இராமானுஜர் போல எளிய முறையில், தெளிவான முறையில் உரை செய்தல் வேண்டும் எனக் குழுவினர் கூறினர். அரங்கன் பெயரினை ஓதவே இம்மனித வாழ்வு என எண்ணி வாழும் ஸ்ரீ உ.வே. டாக்டர் மதி. சீனிவாசனைத் தெளிவுரை தீட்டக் குழு தீர்மானித்தது. அவர்களும் தெளிவுரையை அனைத்துப் பாடல்களுக்கும் செம்மையாக ஆக்கி நமக்கு அளித்துள்ளார்கள். மூன்று அடிக்கு உட்பட்ட நாம் திருமகள் நாதனின் அருளினை பெற வேண்டும் என்ற நல்லெண்ணம் கொண்டவர் திரு. 'வராகி' பாலன் அவர்கள்.

"என்ன நோன்பு நோற்றாள் கொலோ
இவனைப் பெற்ற வயிறுடையாள்"

என அனைவரும் வாழ்த்தும்படி அவர்கள் நாலாயிரம் பாடல்களையும் அவற்றினுக்குரிய தெளிவுரையையும் நான்கு பாகங்களில் வெளியிடுகின்றார்கள். உயர்ந்த தாளில் கணிப்பொறியின் உதவியால் அழகிய அச்சில் நூல்வடிவில் அதிக பொருட்செலவில் இவைகளைக் கொண்டு வருகின்றார்கள். இந்தப் புத்தகங்கள் ஒவ்வொரு திருமாளிகையிலும், திருக்கோயில்களிலும் அலங்கரிக்க வேண்டியவை. இந்த நூல்கள் இருக்கும் இடங்களில் கண்டிப்பாக இலட்சுமி கடாட்சமும் இருக்கும். திரு. 'வராகி' பாலன் அவர்களும் ஸ்ரீ உ.வே. டாக்டர் மதி. சீனிவாசன் அவர்களும் மற்றும் பதிப்புக் குழுவினரும் இதுபோல நற்காரியங்கள் செய்ய பல காலம் நோய்நொடி இன்றி வாழ வேண்டும் என பெரிய பெருமாளையும் பெரிய பிராட்டியரையும் வேண்டி வணங்குகின்றேன்.

**என். கிருஷ்ணசுவாமி ரெட்டியார்**
முன்னாள் நீதியரசர், சென்னை.

ஸ்ரீ :

# பரகாலன் பனுவல்கள்

மயர்வற மதி நலம் அருளப்பெற்ற ஆழ்வார்களில், பரகாலன், பல்வேறு சிறப்புகளும் மேன்மைகளும் உடையவர். திருவாலி நாட்டின் அரசராகச் சிற்றின்ப வாழ்க்கையில் மிதந்த இவர், கலியைச் சாடி, உலகுக்கு உய்வு காட்டினார். அருள் மாரி எனப் பெயர் பெற்ற இத் திருமங்கை ஆழ்வார், கலிக்கோமானாய்க் கண்ணபுரத்து அடியராய், வேதசாரத்தைத், தம் ஆறு பிரபந்தங்களில் அருளினார். தம் தர்சனத்தை இழந்து நம் தர்சனத்தைக் காத்த கூரத் தாழ்வான், இவருக்கு அருளிய தனியன், இவர் பெருமைகளை ஒரு சேர நமக்குக் காட்டுகிறது. நெஞ்சில் அறியாமை இருளை நீக்கும் விளக்கு, இவர் பிரபந்தம் நெடும் பிறவியான நஞ்சைப் போக்கும் நல்ல அமுதம் ஆகும். தமிழின் உந்து துறைகளுக்கும் எடுத்துக் காட்டு; வேதப்பொழிவு இது."

இப்படிப்பட்ட மேன்மை உடைய திருமங்கை ஆழ்வார், தம் வாள் வலிமையால் திருமந்திரச் சீர்மையைப் பெற்றார். இவர் மனைவி குமுதவல்லியின் பாகவத பக்தியே, இவரை அடியார்க்கு அடியாராய் மாற்றிற்று. ஆன்மாவை வெயிலிலே வைத்து, உடலை நிழலிலே வைத்தவர் இவர், என்று பெரியவாச்சான் பிள்ளை கூறுகிறார். முதலில் எம்பெருமானிடம் ஈடுபடாது உலகியல் நிழலில் வீண் ஆனவர்; என்றாலும் குமுத வல்லியின் வேண்டுகோளை நிறைவேற்றப் பாகவத ததியாரதனத்துக்குப் பொருள் தேடினார். அதனால் வழிப்பறி மேற்கொண்டபொழுது திருமகள் கேள்வன் அருளாலே, திருத்திப் பணி கொள்ளப்பட்டார். பிராட்டியின் அருகாழியையும் திருவடி விஞ்சியையும் இவர் கடித்து இழுத்த பொழுது, திருமந்திரப்பொருள் இவரை வலித்து இழுத்துக்கொண்டது. மயர்வு நீங்கி மதி நலம் பெற்ற இவர், தாம் இழந்தவற்றுக்கு மனம் உளைந்து நொந்தார். 'வாடினேன் வாடி' என்னும் பதிகம் தொடங்கிற்று.

இவருடைய பெரிய திருமொழி நூற்றெட்டுத் திருப்பதிகங்கள் கொண்டது. இதிலுள்ள மொத்தப் பாசுரங்கள் 1084 ஆகும். இவர் அருளிய மற்றைய ஐந்து பிரபந்தங்கள், திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் திருவெழு கூற்றிருக்கை, சிறிய மடல், பெரிய திருமடல் என்பன ஆகும். இந்த ஆறு பிரபந்தங்களும், நான்கு வேதங்களாகக் கருதப்படும் நம்மாழ்வாரின் பிரபந்தங்களுக்குத் தொடர்ச்சியான, ஆறு அங்கங்களாக, மதிக்கப்படுகின்றன.

திருமங்கை ஆழ்வார் எம்பெருமானின் கல்யாண குணங்களில் ஈடுபட்டு அருளிய பாசுரங்கள், திருமாலின் ஐவகை நிலைகளையும் குறிப்பிடுவன; என்றாலும் திருமாலின் அர்ச்சாவதார மேன்மையையோ இவர் பெரிதும் உகக்கிறார். திவ்விய தேசப் பெருமான்களிடம் இவர் கொண்ட ஈடுபாடு செஞ்சொற்கவி இன்பம் தருவதுடன் பக்தி தொடக்கமான பரமபக்தி நிலைகளை வெளியிடுகிறது. வி மன்னராகவும் கலை மன்னராகவும் திகழ்ந்த திருமங்கை மன்னர், திருக்கண்ணபுரப் பெருமானிடம் ஈடுபட்ட பான்மை மட்டுமே, நூறு பாசுரங்கள் ஆயிற்று. 'நான் வணங்கும் கண்ணனைக் கண்ணபுரத்தானை' என்று தமக்கே உரியவராக சௌரிப் பெருமானை இனம் கண்டு கொள்கிறார். இவர் மடல் ஊர்வதும் தூது விடுவதும் கூட அர்ச்சை எம்பெருமானிடமே ஆகும்.

திருமாலின் அவதாரங்கள் அனைத்திலும் ஆழ்வார் மனம் இழந்தார்; எனினும் இராமாவதாரத்திலும் கிருஷ்ணாவதாரத்திலும் இவருக்குள்ள தனிப்பட்ட அனுபவம் கரை இல்லாதது. பெரியாழ்வாரின் பொங்கும் பரிவும் நம்மாழ்வாரின் கண்ணன் மீதான காதலும் குலசேகரரின் கவி ஆழமும் இவர் பெரிய திருமொழியில் மிளிர்வதைக் காண்கிறோம்.

பெரிய திருமொழியின் உள்ளார்ந்த மையச் செய்தி, எட்டு எழுத்தான திருமந்திரச்சீர்மையே ஆகும். திரு எட்டெழுத்தைக் கற்றதையும் அதனால் பெற்ற நன்மை, “அடி யார்க்கு உற்றதும்” எனக் குறிப்பிடும் பாசுரம் பெரிய திருமொழியின் பிண்டப்பொருளாக அமைகிறது.

> 'மற்றும் ஓர் தெய்வம் உளதென்று இருப்பாரொடு
> உற்றிலேன்; உற்றதும் உன் அடியார்க்கு அடிமை
> மற்றெல்லாம் பேசிலும் நின் திரு எட்டெழுத்தும்
> கற்று நான் கண்ணபுரத்துறை அம்மானே'

என்பதே இப்பாசுரம்.

திருமாலே பரம்பொருள்; அவனுக்கு உடைமை யான ஆத்மாக்கள், அவனுக்குச் சிறப்புச் செய்யவும் அடிமைப் படவும் உரியன. அதன் விரிவே அடி யார்க்கு ஆட்படுதல் ஆகும். இப்பாசுரத்தையே பிள்ளை உலகாரியமும் உயிர் நாடி யாகக் கொண்டு திருமந்திரத்தை விளக்கினார். இவ்வாழ்வார் வடதேசத் திருப்பிரிதி தொடங்கித் தென் மாவட்டத் திருக்குறுங்குடி வரை சென்று திருமாலை வணங்கி, மங்களாசாசனம் செய்துள்ளதைத் தம் பெரிய திருமொழியில் அருள்கிறார்.

நாலுகவிப் பெருமாள் என விருது பெற்ற இவர், விருத்தப்பா, வெண்பா, கலிப்பா ஆசிரியம் ஆகிய நான்கு யாப்புகளிலும் இவற்றின் இனங்களான பல்வேறு வகைகளிலும் கொடி கட்டித் தன்னிகர் அற்று, விளங்கு கிறார். தாண்டக வேந்தராக உள்ள இவர், அருளிய, திருக்குறுந்தாண்டகம் திருநெடுந்தாண்டகம் இரண்டிலும் வேத உபநிஷதங்களைப் பின்பறறிப் பரத்துவ நிரூபணம் செய்திருப்பது அருளிச் செயலுக்குத் தனி மகுடமாய்த் திகழ்வதாகும். பராசரபட்டர் மலைநாட்டு வேதாந்தியை நஞ்சீயராகத் திருத்தி ஆட்கொண்டது. திருநெடுந் தாண்டகத்தாலேயே என்பதே இதன் ஒப்பற்ற மேன்மை ஆகும்.

ஞான நிலையில் ஆழ்வார் அருளும் மெய்ப்பொருள் உணர்வுகளும், பிரேமநிலையில் பரகால நாயகியாய் உருகும் பகவத் பிரேமையும் நம் ஞானக் கண்ணைத் திறப்பதுடன் பரமபக்திக்கும் வழி காட்டுகின்றன. திருநெடுந்தாண்டகம் முப்பது பாசுரங்களில் முதற்பத்து, ஆழ்வார் தாமான தன்மையில் அருளியது. அடுத்தப் பத்துப் பாசுரங்கள் தாய்ப் பேச்சாகவும் அடுத்த ஏழு பாசுரங்கள் பரகால நாயகியின் காதல் வேட்கை வெளியீடாகவும், இறுதி மூன்றும், ஆழ்வார் தாமான தன்மையில் அருளியதாகவும் அமைகின்றன.

சிறிய திருமடலும் பெரிய திருமடலும் பரகால நாயகி மடல் ஊர்வதை விவரிப்பன. ஆழ்வார் பெண் ணான நிலையில் திருநறையூர்ப் பெருமானிடம் கொண்ட காதலின் ஆற்றாமை, இவ்விரு பிரபந்தங்களிலும் காணப்படுகிறது. பெண்மையைக் குலைத்துக் கொண்டு தமிழ் நெறியை விடுத்து, மடலூர்த் துணிந்த புதுமையை ஆழ்வார் வெளியிடுகிறார். பரகால நாயகி கண்ணனின் வெண்ணெய்க் களவை விவரிக்கும் விதமும், திருவிண்ணகர் தொடங்கித் திருநறையூர் மணி மாடக் கோவில் வரை, பல திவ்விய தேசப் பெருமான்களை அழைப்பதும், நெஞ்சை நீர்ப் பண்டமாக உருக்கி, நம்மையும் பரகால நாயகியாக மாறச் செய்வன.

'திருஎழுக்கூற்றிருக்கை' என்னும் ஆழ்வாரின் பிரபந்தம் சித்திரகவியைச் சார்ந்தது. திருக்குடந்தை ஆராவமுதன் திருவடிகளைப் பற்றும் திருமங்கை ஆழ்வார் இப்பிரபந்தத்தை ரதபந்தமாக அமைத்துள்ளார். இதன்கண் திருமாலின் பரத்துவ மேன்மையும் அவதார நீர்மையும் பேசப்படுகின்றன.

ஆறு பிரபந்தங்களை அருளிய திருமங்கை ஆழ்வார் திருவரங்கத் திருப்பணி செய்தவர். திருவாய் மொழியை வேதச் சிறப்புடன் சமம் ஆக்கி அதற்கென்றே திருவிழாக் கொண்டாடினார். இன்பமாரியான திருவாய் மொழியை இந்த 'அருள் மாரி; திருவரங்கத்தில் செங்கோல் பிடிக்கச் செய்தார். இவர் திருமதிள் காட்டும் கைங்கரியம் மேற்கொண்ட பொழுது, தொண்டரடிப் பொடி ஆழ்வார் நந்தவனத்தை விலக்கிக் கட்டச் செய்தார்.

திருமாலுக்கு ஆட்பட்டுப் பணி செய்த திருமங்கை ஆழ்வார் திருமால் அடியார்களைப் பூசிக்க நோற்றவர். அடியார் அடியார் திருவடிகளை ஏழு படியும், தன் சென்னியில் சூடி மங்கை மன்னர் அருளின் பெரு மழையால் ஆற்றல் மிகுந்த கவி அரசராகத் திகழ்ந்தார். திரு இந்தளூர்ப் பெருமானிடம் 'ஈதே அறியீர்' என்றும் 'வாழ்ந்தேபோம் நீரே' என்றும் துணிவுடன் பேசுவது இவருடையத் தனித் தன்மை ஆகும். எம்பெருமானையே நோக்கி, இவர் 'நின்தனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்தானே' என்று உரிமையுடன் பேசுகிறார்.

இவரது பாசுரங்களில் இயற்கை வருணனை நாட்டு வருணனை, நகரச் சிறப்பு, நீர்வளம், கோவில் மேன்மை ஆகிய பலவும் அற்புதமான கவிதை வடிவில் நம்மைக் கவருகின்றன. தம் காலத்து அரசர்களின் ஆதரவையும் தம் பாசுரங்களில் இவர் நன்றியுடன் குறிப்பிட்டிருக்கிறார். மற்றைய ஆழ்வார்களையும் 'செந்தமிழ் பாடுவார்' 'அன்பு கூறும் அடியவர்' என்னும் தொடர்களால் குறிப்பிட்டுத் தம் வணக்கத்தையும் செலுத்துகிறார்.

திருநறையூர் நம்பியிடமும் திருக்கண்ணபுரப் பெருமான் சௌரிராஜனிடமும் இவர் கொண்டுள்ள பக்தி எல்லையில்லாதது. திருநறையூர் நம்பியிடம் பஞ்சனம்ஸ்காரம் பெற்றதாகவும் ஸ்ரீ சௌரிப் பெருமானிடம் திருமந்திரப் பொருள் கற்றதாகவும் ஆச்சாரிய சீலர்கள் அருள்வார்கள். இவ்விரு பெருமான்களுக்கும் தனித் தனியாக நூறு பாசுரங்கள் இவர் அருளியுள்ளது நோக்குதற்குரியது.

மணவளமாமுனிகள் இவ்வாழ்வாரின் அர்ச்சாவதாரத் திருமேனியில் ஈடுபட்டு அவர் அழகில் தம்மை இழந்தார். அதன் விளைவாய் எழுந்த அற்புதமான கவிதை 'வடிவழகு' ஆகும். திருவரங்கத்தமுதனார் 'கலை பரவும் தனியான் தண் தமிழ் செய்த நீலன்' என்று பாடுகிறார். நாமும் எம்பார் என்னும் ஆச்சாரிய சீலருடன் சேர்ந்து திருமங்கை ஆழ்வார் திருவுள்ளம் நம் நெஞ்சில் தரிக்க, எம்பெருமானார் திருவடியை வேண்டுவோம்.

"எங்கள் கதியே இராமாநுச முனியே
சங்கை கெடுத்தாண்ட தவராசா!–பொங்குபுகழ்
மங்கையர் கோன் ஈந்த மறை ஆயிரம் அனைத்தும்
தங்கும் மனம் நீ எனக்குத் தா."

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

– டாக்டர் மதி.சீனிவாசன்

# பெரிய திருமொழி

## உள்ளுரை




நூல் கிடைக்குமிடம் :

ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ்
144, ஆழ்வார்பேட்டை தெரு,
ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.



All rights reserved. No part of this publication may be reproduced, stored in a retrieval system, or transmitted, in any form or by any means, electronic, mechanical, photocopying, recording or otherwise, without the prior permission of the publishers.

ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

# பெரிய திருமொழி

### பெரிய திருமொழித் தனியன்கள்

### திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்தது

கலயாமி கலித்வம்ஸம் கவிம்லோக திவாகரம்
யஸ்ய கோபி: ப்ரகாசாபி; ஆவித்யம் நிஹதம் தம:

**- திருக்கோட்டியூர் நம்பி**

வாழிபரகாலன் வாழிகலிகன்றி
வாழி குறையலூர் வாழ் வேந்தன்-வாழியரோ
மாயோனை வாள் வலியால் மந்திரங்கொள்
மங்கையர் கோன் தூயோன் சுடர்மான வேல்

**- எம்பெருமானார்.**

நெஞ்சுக்கு இருள்கடிதீபம்: அடங்கா நெடும்பிறவி
நஞ்சுக்கு நல்ல அமுதம்; தமிழ் நன்னூல் துறைகள்
அஞ்சுக்கு இலக்கியம்; ஆரணசாரம்; பரசமயப
பஞ்சுக் கனலின் பொறி; பரகாலன் பனுவல்களே.

**- கூரத்தாழ்வான்.**

எங்கள் கதியே! இராமாநுச முனியே!
சங்கை கெடுத்தாண்ட தவராசா;- பொங்கு புகழ்
மங்கையர் கோன் ஈந்த மறையாயிரம் அனைத்தும்
தங்கும் மனம் நீ எனக்குத்தா.

**-எம்பார்.**



ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

# பெரிய திருமொழி

### பெரிய திருமொழித் தனியன்கள் – உரை

### திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்தது

*கலியின் பாவத்தை அழிக்கும் உலக சூரியனான திருமங்கைக் கவிப்பெருமானைத் தியானம் செய்கிறேன். இவருடைய சொற்கள் அறிவின்மையான இருளைப் போக்குவன.*

**- திருக்கோட்டியூர் நம்பி.**

*பரகாலன் வாழ்க; கலியின் பாவத்தை நீக்குபவர் வாழ்க; திருக்குறையலூரில் வாழும் அரசன் வாழ்க; வாள் வலிமையால் மாயனான இறைவனிடம் திருமந்திரப்பொருளைக் கொண்ட தூயவர் திருமங்கை மன்னன்; இவர் கையில் உள்ள ஒளியுடைய பெரியவேல் வாழ்க.*

**- எம்பெருமானார்.**

*பகைவர்க்கு எமனான திருமங்கை ஆழ்வாரின் நூல்கள் மன இருளைப் போக்கும் விளக்கு; அடங்காத நீண்ட காலப் பிறவியாகிய நஞ்சை மாற்றும் அமுதம்; தமிழில் உள்ள எழுத்து, சொல்,பொருள்,யாப்பு, அணி என்னும் ஐந்திற்கும் இலக்கியம்; வேதப்பொழிவு; புறச்சமயங்களாகிய பஞ்சுக்கு நெருப்பு ஆகும்.*

**- கூரத்தாழ்வான்.**

*எங்களுக்குக் கதி ஆனவரே! இராமானுச முனிவரே! நூல் பயிற்சியில் உண்டாகும் ஐயங்களைப் போக்கி ஆளும் தவத்தோரே! புகழ் மிகுந்த திருமங்கை ஆழ்வார் அருளிய வேதமான ஆயிரம் பாசுரங்களும் அடியேன் மனத்தில் தங்கும்படி தேவரீர் அருளவேண்டும்.*

**- எம்பார்.**

ஸ்ரீ

# திருமங்கை ஆழ்வார் அருளிச்செய்த பெரிய திருமொழி

## பெரிய திருமந்திரத்தின் மகிமை

வாடினேன்; வாடி வருந்தினேன் மனத்தால்;
பெருந் துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன்; கூடி இளையவர் தம்மோடு
அவர் தரும் கலவியே கருதி
ஓடினேன்; ஓடி உய்வது ஓர் பொருளால்
உணர்வு எனும் பெரும் பதம் தெரிந்து
நாடினேன்; நாடி நான் கண்டுகொண்டேன்
நாராயணா என்னும் நாமம். 948

ஆவியே! அமுதே! என நினைந்து உருகி,
அவர்அவர் பணை முலை துணையாப்
பாவியேன் உணராது எத்தனை பகலும்
பழுதுபோய் ஒழிந்தன நாள்கள்;
தூவி சேர் அன்னம் துணையொடும் புணரும்
சூழ் புனல் குடந்தையே தொழுது என்
நாவினால் உய்ய நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம். 949

சேமமே வேண்டித் தீவினை பெருக்கித்
தெரிவைமார் உருவமே மருவி,
ஊமனார் கண்ட கனவிலும் பழுது ஆய்
ஒழிந்தன கழிந்த அந் நாள்கள்;
காமனார் தாதை நம்முடை அடிகள்
தம் அடைந்தார் மனத்து இருப்பார்
நாமம் நான் உய்ய நான் கண்டுகொண்டேன்
நாராயணா என்னும் நாமம். 950

வென்றியே வேண்டி வீழ் பொருட்கு இரங்கி
வேல்கணார் கலவியே கருதி
நின்றவா நில்லா நெஞ்சினை உடையேன்
என் செய்கேன்? நெடு விசும்பு அணவும்
பன்றி ஆய் அன்று பாரகம் கீண்ட
பாழியான், ஆழியான் அருளே
நன்று நான் உய்ய, நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம். 951



ஸ்ரீ

திருமங்கை ஆழ்வார் அருளிச்செய்த பெரிய திருமொழி

பெரிய திருமந்திரத்தின் மகிமை

பெரும்துன்பத்துக்கு இடமாயும் காரணமாயும் உள்ள உடம்பில் நான் பிறந்து, ஆத்மா அதிற் பொருந்தும்படி கூடினேன். பிறகு இளமையான பெண்கள் தரும் இன்பத்தை எண்ணி அவர்கள் போனபடி தொடர்ந்து ஓடினேன். இவ்வாறு சிற்றின்பங்களில் மனத்தைச் செலுத்தி வருத்தமுற்று வாடினேன். முடிவில் உய்வதற்குரிய செம் பொருளான ஞானத்தை இறைவன் திருவருளால் அறிந்து, நன்று, தீது உணர்ந்தேன். 'நாராயணா' என்னும் திருமந்திரச் சீர்மையைக் கண்டு கொண்டேன். 948

பாவியேன் ஆன நான், பெண்களின் பருத்த முலைகளையே துணையாகக் கொண்டு, இறைவனை மறந்து எத்தனையோ பகல்களையும் நாள்களையும் வீணாகக் கழித்தேன். 'என் உயிரே; அமுதே' என்று பெண்களிடம் பொய்யுரை பேசி, சிற்றின்பத்தை எண்ணி உருகி வீண் ஆனேன். ஆயினும், இப்பொழுதோ 'நாராயணா' என்னும் திருநாமத்தை நாவால் கூறும் பேறுபெற்றேன். சிறகுடைய அன்னம் தன் பெடையுடன் கலந்து வாழும் நீர்வளம் உடைய திருக்குடந்தை ஆராவமுதனனைத் தொழுது உய்வுபெற எட்டெழுத்து மந்திரத்தைப் பெற்றேன். 949

நலத்தையே விரும்பிய நான், நன்மைகளைச் செய்யாமல் பாவங்களைப் பெருக்கிப் பெண்கள் வடிவழகில் பொருந்திக் கழித்த காலமெல்லாம், ஊமைகள் கண்ட கனவு போல வீணாகிப் போயின. மன்மதன் தந்தையான திருமால், நம் போன்றவர்களுக்குச் சுவாமி ஆவார்; அடைக்கலம் அடைந்தவர் நெஞ்சில் நீங்கா திருப்பவர். இப் பெருமானின் திருநாமமான 'நாராயணா' என்னும் திருமந்திரத்தை, நான் இன்று உய்வடையக் கண்டு கொண்டேன். 950

வெற்றியே வேண்டிய நான் அழியும் தன்மையான செல்வத்தைப் பெற வருந்தினேன்; வேல் போன்ற கண்களை உடைய பெண்களுடன் கலப்பதையே எண்ணிய என் நெஞ்சம் ஒன்றிலும் நில்லாத நிலை பெற்றேன். ஐயோ! என் செய்வேன்! ஆயினும் சிற்றின்பத்தில் சென்ற நான் உய்வடையும் படி, 'நாராயணா' என்னும் திருநாமத்தை இன்று கண்டு கொண்டேன். பிரளய காலத்தில் நீண்ட ஆகாயத்தைத் தழுவும்படி வளர்ந்து பூமியைத் தூக்கிக் காத்த வராகப் பெருமான் அருளாலேயே இன்று நான் திருமந்திரம் பெற்றேன். 951

கள்வனேன் ஆனேன்; படிறு செய்து இருப்பேன்;
கண்டவா திரிதந்தேனேலும்.
தெள்ளியேன் ஆனேன்; செல் கதிக்கு அமைந்தேன்;
சிக்கெனத் திருவருள் பெற்றேன்;
உள்எலாம் உருகிக் குரல் தழுத்து ஒழிந்தேன்;
உடம்பு எலாம் கண்ண நீர் சோர.
நள்இருள் அளவும் பகலும் நான் அழைப்பன்
நாராயணா என்னும் நாமம். 952

எம்பிரான், எந்தை என்னுடைச் சுற்றம்,
எனக்கு அரசு, என்னுடை வாழ்நாள்,
அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி
அவர் உயிர் செகுத்த எம் அண்ணல்;
வம்புஉலாம் சோலை மா மதிள் தஞ்சை
மாமணிக் கோயிலே வணங்கி,
நம்பிகாள்! உய்ய நான் கண்டுகொண்டேடு
நாராயணா என்னும் நாமம். 953

இல் பிறப்பு அறியீர், இவர் அவர் என்னீர்,
இன்னது ஓர் தன்மை என்று உணரீர்.
கற்பகம் புலவர் களைகண்; என்று உலகில்
கண்டவா தொண்டரைப் பாடும்
சொல்பொருள் ஆளீர் ! சொல்லுகேன், வம்மின்;
சூழ் புனல் குடந்தையே தொழுமின்;
நல்பொருள் காண்மின்; பாடி நீர் உய்ம்மின்
நாராயணா என்னும் நாமம். 954

கற்றிலேன் கலைகள்; ஐம்புலன் கருதும்
கருத்துளே திருத்தினேன் மனத்தை;
பெற்றிலேன் அதனால் பேதையேன் நன்மை;
பெரு நிலத்து ஆர் உயிர்க்கு எல்லாம்
செற்றமே வேண்டித் திரிதருவேன்; தவிர்ந்தேன்;
செல் கதிக்கு உய்யும் ஆறு எண்ணி,
நல்துணை ஆகப் பற்றினேன், அடியேன்
நாராயணா என்னும் நாமம். 955

குலம் தரும்; செல்வம் தந்திடும்; அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலம் தரும் செய்யும்; நீள்விசும்பு அருளும்;
அருளொடு பெருநிலம் அளிக்கும்;
வலம்தரும்; மற்றும் தந்திடும்; பெற்ற
தாயினும் ஆயின செய்யும்;
நலம் தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்
நாராயணா என்னும நாமம். 956





கடவுளுக்குச் சொத்தான ஆத்மாவை என்னதாகத் திருடினேன்; தீமையைச் செய்தேன்; கண்டபடி யெல்லாம் திரிந்தேன்; என்றாலும் பகவான் அருளைத் திடமாகப் பெற்றதால் நான், ஆத்மாவைப் பற்றிய தெளிவு பெற்றேன். அதனால் பரமபதம் செல்ல ஆளாகிவிட்டேன். உள்ளம் நீர்ப்பண்டமாய்க் கரைய, உடம்பெங்கும் கண்ணீர் பெருகி விழ, தழுதழுத்த குரலுடன் இரவும் பகலும் 'நாராயணா' என்னும் நாமத்தை அடியேன் அழைக்கும்படி ஆனேன். **952**

பக்தியில் முதிர்ந்தவர்களே! எனக்கு உதவிய தந்தையான பகவான் உற்றவனாய் என்னை ஆண்டான்; என் வாழ்நாளே அவன்தான். அரக்கர் அஞ்ச, அம்புகளால் நெருக்கி அழித்த என் தலைவன் தஞ்சைமாமணிக் கோயிலில் எழுந்தருளி உள்ளான். மணம் வீசும் சோலைகளும் மதிளும் உள்ள அத்திருத்தலத்தில் உள்ள பகவானை வணங்கி, அடியேன், உய்வடைய நாராயண நாமத்தை அறிந்தேன். **953**

பொருள் பொதிந்த சொல் ஆளும் கவிஞர்களே! நீங்கள் இழிதொழில் செய்பவரின் இல்லம், குடிப்பிறப்புகளை அறியாமல், 'கற்பகமே! கற்றோரைக் காப்பவரே!' என்று கண்டபடி புகழாதீர்! இன்றைய இச்செல்வர் முன்பு ஏழைகளே என்பதை நீங்கள் அறிவீர்களா? தீர்ந்த உறுதிப்பொருளைக் கூறுகிறேன்; வந்து கேளுங்கள். ஆராவமுதப்பெருமானை வணங்குவீர்களாக. நீர்வளம் மிகுந்த திருக்குடந்தையில் உள்ள அப்பகவானின் 'நாராயண' நாமத்தைப்பாடி உய்வு பெறுங்கள், இதுவே நற்பொருள். **954**

நான் சாத்திரங்களைக் கற்கவில்லை; ஐம்புலன்களின் கருத்துக் கிசைய மனத்தை வலிய மூட்டிப் போந்தேன். அறிவற்ற நான் எந்த நன்மையும் பெறவில்லை. உலகத்துப் பிராணிகளுக்குத் துன்பம் செய்து திரிந்தேன். இவ்வாறு இருந்தும் பகவான் அருளால் இவைகள் தவிர்ந்தன. நல் வீடுபெறும் வழியை நினைத்து அடியேன் 'நாராயண' மந்திரத்தைத் துணையாகப் பற்றினேன். **955**

'நாராயணா' என்னும் திருநாமம் அதைப் பயின்றவர்களுக்குத் தொண்டு புரியும் நற்குலத்தைத் தரும்; செல்வம் தரும்; அடியார் படும் துயரங்களைத் தரைமட்டம் ஆக்கும். பரமபதத்தைக் கொடுக்கும். இறைவன் அருளையும் கைங்கர்யம் செய்யும் இடத்தையும் தரும்; பகவானை அனுபவிக்கும் சக்தியையும் தரும். இன்னும் பல நன்மைகளைச் செய்யும். பெற்றதாயை விடவும் நன்மை செய்து ஆத்ம ஞானத்தைத் தரும். கைங்கர்யமாகிய செல்வத்தைத் தரும் இத் திருநாமத்தை நான் கண்டு கொண்டேன். **956**

மஞ்சு உலாம் சோலை வண்டுஅறை மாநீர்
மங்கையார் வாள் கலிகன்றி
செஞ்சொலால் எடுத்த தெய்வ நல் மாலை
இவை கொண்டு சிக்கென, தொண்டீர்!
துஞ்சும்போது அழைமின்; துயர் வரில், நினைமின்;
துயர்இலீர் சொல்லிலும் நன்று ஆம்;
நஞ்சு தான் கண்டீர் நம்முடைய வினைக்கு
நாராயணா என்னும் நாமம். 957

## திருப்பிரிதி

வாலிமா வலத்து ஒருவனது உடல்கெட
வரி சிலை வளைவித்து அன்று
ஏலம் நாறு தண்தடம் பொழில் இடம்பெற
இருந்தநல் இமயத்துள்
ஆலி மாமுகில் அதிர்தர, அருவரை
அகடுஉற. முகடுஏறி
பீலிமா மயில் நடம்செயும் தடஞ்சுனைப்
பிரிதி சென்று அடை, நெஞ்சே ! 958

கலங்க மாக்கடல் அரிகுலம் பணிசெய்ய
அருவரை அணைகட்டி
இலங்கை மாநகர் பொடிசெய்த அடிகள் தாம்
இருந்தநல் இமயத்து.
விலங்கல் போல்வன விறல்இரும் சினத்தன
வேழங்கள் துயர்கூர.
பிலம் கொள் வாள் எயிற்றுஅரி அவைதிரிதரு
பிரிதி சென்று அடை நெஞ்சே! 959

துடிகொள் நுண் இடைச் சுரிகுழல் துளங்கு எயிற்று
இளங்கொடி திறத்து, ஆயர்
இடிகொள் வெம் குரல் இனவிடை அடர்த்தவன்
இருந்த நல் இமயத்து.
கடிகொள் வேங்கையின் நறுமலர் அமளியின்
மணி அறைமிசை வேழம்
பிடியினோடு வண்டு இசைசொல, துயில்கொளும்
பிரிதி சென்றுஅடை, நெஞ்சே! 960





*மேகங்கள் உலாவும் சோலையும் வண்டுகள் ஒலிக்கும் நீர் நிலைகளும் உள்ள திருமங்கை நாட்டின் தலைவரான ஆழ்வார் வாள் ஏந்தியவர்; கலியின் தீமையைப் போக்கியவர்; இத்திருமங்கை ஆழ்வார் தம் செஞ்சொற்களால் அருளிய தெய்வ மாலையான இப்பாசுரங்களால் பகவான் திருநாமத்தைக் கூறுங்கள்; இறக்கும் காலத்தும், துயரம் ஏற்படும் பொழுதும் கூறுங்கள். துயரம் இல்லாதவர் கூறினாலும் நன்மையே தரும் நாராயண நாமம் நம் பாவங்களுக்கு நஞ்சாகும்.* **957**

## திருப்பிரிதி

*மிகுந்த பலம் பொருந்திய ஒப்பற்ற வாலியின் உடல் சிதறும்படி வில்லை வளைத்த ஸ்ரீ இராமபிரான் எழுந்தருளிய திருத்தலம் திருப்பிரிதி ஆகும். பரந்த சுனைகள் சூழ்ந்த இத்தலம் இமயமலைப் பகுதியில் உள்ளது. இங்கே மணம் வீசும் சோலைகள் உண்டு; பெரிய மேகங்கள் பொழியும் நீர்த்துளிகளின் ஒலியைக் கேட்ட மயில்கள், தங்கள் அடிவயிறு தழுவும்படியாக மலைச்சிகரங்களில் மேலே ஏறி, ஒடி ஆடும். நெஞ்சமே; இத்தலத்தைச் சென்றடைவாயாக.* **958**

*குரங்கினங்கள் அடிமை செய்ய, இராமபிரான் பெரிய கடல் கலங்கவும் அதன்மேலே மலைகளை இட்டு அணை கட்டி, இலங்கை அடைந்து அந்நகரைப்பொடி ஆக்கினான். இப்பெருமான் எழுந்தருளி உள்ள திருப்பிரிதித்தலம் இமயமலைப் பகுதியில் உள்ளது. இங்கே, மலை போன்ற மிடுக்குடைய சினங் கொண்ட யானைகள் அஞ்சும்படி, வாள் போன்ற பற்களை உடைய சிங்கங்கள் குகைகளிலிருந்து புறப்பட்டு வெளிவரும். நெஞ்சமே; இத்தகைய திருப்பிரிதித்தலத்தை நீ அடைவாயாக.* **959**

*ஒசிந்த இடையையும் கருங் கூந்தலையும் உடைய நப்பின்னையை அடைய, இடியென முழங்கிய ஏழு எருதுகளை அடக்கிய கண்ண பெருமான் எழுந்தருளி உள்ள திவ்விய தேசம் திருப்பிரிதி ஆகும். இங்கே பாறைகளின் மேல், வேங்கைப் பூப்படுக்கையில் ஆண் யானை தன் பெண் யானையுடன் படுத் துறங்கும். வண்டுகள் ரீங்காரம் செய்து இசைபாடும் இத்தலத்தை, மனமே! நீ அடைவாயாக.* **960**

மறம்கொள் ஆள்-அரி உருஎன வெருவர,
ஒருவனது அகல் மார்வம்
திறந்து வானவர் மணி முடி பணிதர
இருந்த நல் இமயத்துள்,
இறங்கி ஏனங்கள் வளைமருப்பு இடந்திடக்
கிடந்து அருகு எரிவீசும்
பிறங்கு மாமணி அருவியோடு இழிதரு
பிரிதி சென்று அடை, நெஞ்சே! 961

கரைசெய் மாக்கடல் கிடந்தவன் கனைகழல்
அமரர்கள் தொழுது ஏத்த,
அரை செய் மேகலை அலர்மகள் அவளொடும்
அமர்ந்த நல் இமயத்து,
வரைசெய் மாக் களிறு இளவெதிர் வளர்முளை
அளைமிகு தேன்தோய்த்துப்
பிரச வாரி தன்இளம் பிடிக்கு அருள்செயும்
பிரிதி சென்று அடை, நெஞ்சே! 962

பணங்கள் ஆயிரம் உடைய நல் அரவு அணைப்
பள்ளிகொள் பரமா! என்று
இணங்கி வானவர் மணிமுடி பணிதர
இருந்த நல் இமயத்து.
மணம்கொள் மாதவி நெடுங்கொடி விசும்பு உற
நிமிர்ந்து அவை முகில் பற்றிப்
பிணங்கு பூம் பொழில் நுழைந்து வண்டு இசைசொலும்
பிரிதி சென்று அடை, நெஞ்சே! 963

கார் கொள் வேங்கைகள் கனவரை தழுவிய
கறி வளர் கொடி துன்னிப்
போர்கொள் வேங்கைகள் புனவரை தழுவிய
பூம்பொழில் இமயத்துள்.
ஏர்கொள் பூஞ்சுனைத் தடம்படிந்து இனமலர்
எட்டும் இட்டு, இமையோர்கள்
பேர்கள் ஆயிரம் பரவி நின்று அடிதொழும்
பிரிதி சென்று அடை, நெஞ்சே! 964

இரவு கூர்ந்து, இருள்பெருகிய வரைமுழை
இரும் பசிஅது கூர.
அரவம் ஆவிக்கும் அகன் பொழில் தழுவிய
அருவரை இமயத்து.
பரமன், ஆதி, எம்பனி முகில்வண்ணன் என்று
எண்ணி நின்று இமையோர்கள்
பிரமனோடு சென்று, அடிதொழும் பெருந்தகைப்
பிரிதி சென்று அடை நெஞ்சே! 965





வடிவத்தைப் பெயரிட்டுக் கூறினாலே பயப்படும் படியாகக் கோபமுடன் தோன்றிய நரசிம்மன், இரணியனின் அகன்ற மார்பைப் பிளந்தான், தேவர்கள் தங்கள் மணிமுடிகளால் வணங்கப் பெறும் மேன்மை உடைய இப்பெருமான், இமயத்தில் உள்ள திருப்பிரிதியில் எழுந்தருளி உள்ளான். இங்கே, பன்றிகள் கொம்புகளால் பாறைகளைப் பிளக்கும் பொழுது மணிகள் வெளிப்பட்டு ஒளியுடன் மலை அருவியில் உருண்டு விழும். நெஞ்சமே! நீ இத்திருப்பிரிதியை அடைவாய். 961

கரை இன்றியும், தானே அடங்கி இருக்கும் திருப்பாற் கடலிலே, தன்திருவடிகளிலே தேவர்கள் வணங்கித் துதிக்கும் படியாகத் திருமால்பள்ளி கொண்டான். திருவரையில் மேகலை அணிந்த திருமகளுடன் கூடிய இப்பகவான், எழுந்தருளிய திருப்பிரிதி இமயமலையில் உள்ளது. இங்கே மலைபோன்ற ஆண்யானைகள் இளமூங்கில் முளைகளைப் பிடுங்கித் தேனில் தோய்த்து சிறிய குட்டி யானைகளின் வாயில் பருக்கை தட்டாதபடி தேன்பாகுடன் ஊட்டும், மனமே! நீ இத்திருப்பிரிதிக்குச் செல்வாய். 962

இமயமலையில் உள்ள திருப்பிரிதி எம்பெருமானின் பாதங்களில் தங்கள் மணிமுடிகளை வைத்து வணங்கும் தேவர்கள், "ஆயிரம் படங்களுடைய ஆதிசேஷன் மீது பள்ளி கொண்ட பரமா!" என்று துதிப்பார்கள். இத்தலத்தில் மணம் பெருக்கும் குருக்கத்திக் கொடிகள் வான் ஓங்கி மேகங்களை வளைக்கும். மலர்ச்சோலையில் வண்டுகள் நுழைந்து பாடும். மனமே! நீ இங்குப் போவாயாக. 963

இமயத்தாழ் வரைகளில் வளர்ந்த மிளகுக் கொடிகள், மேகத்தைத் தொடும் வேங்கை மரங்களைத் தழுவும். கொல்லை நிலங்களில் போரிடவல்ல வேங்கைப் புலிகள் வாழும்; இங்கே பூஞ்சோலைகள் உள்ளன. பிரமன் முதலிய தேவர்கள், பூக்கள் மலர்ந்த சுனையில் நீராடி, எட்டுவகையான பூக்களை இட்டுத் திருமாலின் ஆயிரம் திருநாமங்களை ஓதி வணங்குவார்கள். நெஞ்சமே! இப்பதியை நீ அடைவாய். 964

இமயமலையில் சோலைச் செறிவாலே, எப்பொழுதும் இரவே போல் இருள் மண்டிய குகைகளில், மிகுந்த பசியுடன் மலைப்பாம்புகள் கொட்டாவி விடும். உள்சோலைகளும் ஏற அரிய, தாழ்வரைகளும் இங்கு உண்டு. இத்திருப்பிரிதியில், தேவர்கள் பிரமனுடன் கூடிநின்று, "பரமபுருஷா! ஆதிகாரணா! மேகவண்ணா!" என்று திருமாலைத் துதிப்பார்கள். நெஞ்சமே! நீ இத்திருப்பிரிதியை அடைவாய். 965

ஓதி ஆயிரம் நாமங்கள் உணர்ந்தவர்க்கு
உறு துயர் அடையாமல்,
ஏதம் இன்றி நின்று அருளும் நம் பெருந்தகை
இருந்த நல் இமயத்து.
தாது மல்கிய பிண்டி விண்டு அலர்கின்ற
தழல் புரை எழில் நோக்கி,
பேதை வண்டுகள் எரி என வெருவரு
பிரிதி சென்று அடை, நெஞ்சே! 966

கரிய மாமுகில் படலங்கள் கிடந்து அவை
முழங்கிட களிறு என்று
பெரிய மாசுணம் வரைஎனப் பெயர்தரு
பிரிதி எம் பெருமானை
வரிகொள் வண்டு அறை பைம்பொழில் மங்கையர்
கலியனது ஒலிமாலை
அரிய இன் இசை பாடும் நல் அடியவர்க்கு
அருவினை அடையாவே. 967

## திருவதரி

முற்றமூத்துக் கோல்துணையா,
முன்அடி நோக்கி வளைந்து,
இற்றகால் போல்தள்ளி மெள்ள
இருந்துஅங்கு இளையாமுன்.
பெற்ற தாய்போல் வந்தபேய்ச்சி
பெருமுலை ஊடுஉயிரை
வற்ற வாங்கி உண்ட வாயான்
வதரி வணங்குதுமே. 968

முதுகு பற்றிக் கைத்தலத்தால்,
முன் ஒரு கோல் ஊன்றி,
விதிர் விதிர்த்து கண் சுழன்று
மேல் கிளைகொண்டு இருமி,
இது என் அப்பர் மூத்த ஆறு என்று
இளையவர் ஏசாமுன்
மது உண் வண்டு பண்கள் பாடும்
வதரி வணங்குதுமே. 969





பகவானின் ஆயிரம் திரு நாமங்களை ஓதி அவனே கதி என்று உணர்ந் தவர்களுக்கு பாவங்கள் கிட்டாதபடி, காப்பாற்றி அருளும் நம்பெருந்தகை, இமயமலைத் திருப்பிரிதியில் எழுந்தருளி உள்ளான். இங்கே, மகரந்தத்துடன் நெருப்புப்போல மலரும் அசோக மலர்களைத் 'தீ' என்று எண்ணி, வண்டுகள் பயப்படும். இத்திருத்தலத்தை, நெஞ்சே நீ அடைவாயாக. 966

நெருங்கிக் கிடந்த கருத்த மேகக் கூட்டங்கள் முழங்கிய ஒலியைக் கேட்ட பெரியமலைப்பாம்புகள், யானைகள் வருவதாய் எண்ணி மலைபோலே அசைந்து வரும் காட்சி காணப்பெறும் திருத்தலம் திருப்பிரிதி ஆகும். இங்கு நித்தியவாசம் செய்யும் எம்பெருமானை வண்டொலிக்கும் சோலைகள் உள்ள திருமங்கை நாட்டு மன்னர் கலியன் ஒலிமாலையாக இப்பாசுரங்களை அருளினார். இவ்வரிய இசைப்பாடலைப் பயிலும் அடியார்களைப் பாவங்கள் அனுகமாட்டா. 967

## திருவதரி

முற்றிய முதுமைக் காலத்தில், ஊன்று கோலே துணையாகக் கொண்டு, முன்னே அடிஇட்டு நடக்க நேரிடும்; தலை கவிழ்ந்து, முறிந்தது போலே தடுமாறி, மெள்ள உட்காரும் இளைப்பு உண்டாகும். இத்தகைய கிழட்டுத்தனம் வரும் முன்பே, திருவதரித் தலத்தை வணங்குவோம். பெற்றதாய் போல் வந்த பூதனைப் பேயின் பெரிய முலை வழியே அவள் உயிரைக் குடித்த வாயுடைய ஸ்ரீகிருஷ்ணன் எழுந்தருளிய திவ்விய தேசம் இது. 968

ஒரு கையால் கொம்பு ஊன்றிக்கொண்டு மற்றொரு கையால் முதுகைப் பிடித்துக் கொண்டு உடல் நடுங்க நடக்கும் பொழுது மேல் மூச்சு எழும், இருமல் மேலிடும், இவற்றைப் பார்க்கும் இளம் பெண்கள்," இக்கிழவனைப் பார்' என்று கேலிசெய்து ஏசுவார்கள். இப் படிப்பட்ட கிழட்டுத்தனம் வரும் முன்னமேயே, வண்டுகள் பூவில் மது அருந்தி இசைபாடும் சிறப்பு உடைய திருவதரியை வணங்குவோம். 969

உறிகள் போல் மெய்ந் நரம்பு எழுந்து,
ஊன் தளர்ந்து உள்ளம் எள்கி,
நெறியை நோக்கிக் கண் சுழன்று
நின்று நடுங்காமுன்,
அறிதி ஆகில் நெஞ்சம்! அன்பாய்
ஆயிரம் நாமம் சொல்லி,
வெறி கொள் வண்டு பண்கள் பாடும்
வதரி வணங்குதுமே. 970

பீளை சோரக் கண் இடுங்கி,
பித்து ஏழ மூத்து இருமி,
தாள்கள் நோவத் தம்மில் முட்டி,
தள்ளி நடவாமுன்,
காளை ஆகி, கன்று மேய்த்து,
குன்று எடுத்து அன்று நின்றான்
வாளை பாயும் தண் தடம் சூழ்
வதரி வணங்குதுமே. 971

பண்டு காமர் ஆன ஆறும்,
பாவையர் வாய் அமுதம்
உண்ட ஆறும், வாழ்ந்த ஆறும்,
ஒக்க உரைத்து இருமி,
தண்டு காலா ஊன்றி ஊன்றி,
தள்ளி நடவாமுன்,
வண்டு பாடும் தண் துழாயான்
வதரி வணங்குதுமே. 972

எய்த்த சொல்லோடு ஈளை ஏங்கி,
இருமி, இளைத்து உடலம்,
பித்தர் போலச் சித்தம் வேறாய்ப்
பேசி அயராமுன்
அத்தன், எந்தை ஆதி மூர்த்தி
ஆழ் கடலைக் கடைந்த
மைத்த சோதி எம்பெருமான்
வதரி வணங்குதுமே. 973

பப்ப அப்பர் மூத்த ஆறு
பாழ்ப்பது சீத் திரளை
ஒப்ப ஐக்கள் போத உந்த;
உன் தமர் காண்மின்; என்று
செப்பு நேர் மென் கொங்கை நல்லார்-
தாம் சிரியாத முன்னம்,
வைப்பும் நங்கள் வாழ்வும் ஆனான்
வதரி வணங்குதுமே. 974





முதுமைக் காலத்தில் சதைப்பற்று உலர்வதாலே உடல் நரம்புகள் உறிக்கயிறுகள் போலப் புடைக்கும்; நடக்கும் வழியில் மேலே செல்ல முடியாதபடி, கண் சுழன்று, மனம் தளர்ந்து, நடுக்கம் ஏற்படும். நெஞ்சமே! இத்தகைய கிழட்டுத்தனம் வரும் முன்பே, உனக்கு ஞானம் இருந்தால், பகவானின் ஆயிரம் திருநாமங்களைக் கூறி வண்டு இசைபாடும் திருவதரியை வணங்குவாய். 970

கிழத்தனத்தில் கண்கள் இடுங்கிப்பீளை வழியும்; பித்தம் மேலிட்டு இருமல் உண்டாகும்; கால்கள் இரண்டும் முட்டித்தடுமாறி நடக்க நேரிடும். இத்தகைய முதுமைக்கு முன்பேயே, வாளைமீன்கள் பாயும் சுனைகள் உள்ள வதரியை வணங்குவோம். கன்றுகளை மேய்த்தும் பின் மலையைக் குடையாகத் தூக்கி நின்ற, காளைபோன்ற கண்ணபெருமான் எழுந்தருளி உள்ள திருத்தலம் இதுவே ஆகும். 971

வாலிபப் பருவத்தில் பெண்கள் தன்னைக் காமுற்ற படியையும், அவர்கள் வாயமுதம் அருந்திச் சிற்றின்பத்தில் ஆழ்ந்ததையும் கூறியவாறு, இளைப்பால் இருமியபடி, தடியையே காலாகக் கொண்டு ஊன்றி நடக்கும் கிழட்டுத்தனம் ஏற்படும். இதற்கு முன்பேயே, வண்டுகள் பாடும் திருத்துழாய் சூடிய திருமால் எழுந்தருளி உள்ள திருவதரியை வணங்குவோம். 972

தளர்ந்த பேச்சுடன் கோழையாலே இளைத்து இருமிக் கொண்டு, உடல் மெலிந்தபடி, பைத்தியக்காரன் போலே சித்தம் வேறுபட்டுப் பேசி அயர்வதற்கு முன்பேயே, திருவதரியை வணங்குவோம். தந்தையாய், உலககாரணனனாய்க் கடல் கடைந்த கருத்த ஜோதியான திருமாலின் திருப்பதி இவ்வதரி ஆகும். 973

கிழத்தனம் அடையும் காலத்தில் திரண்ட சீழ் போலக் கோழை வெளிப்படும். இதனைக் காணும் செப்புப் போன்ற மார்புடைய பெண்கள், "உங்களுடன் உறவு கொண்ட இக்கிழவர் மூப்படைந்த படியைப் பாருங்கள்" என்று தங்களுக்குள் கேலி பேசிச் சிரிப்பார்கள். இத்தகைய முதுமை வரும் முன்பேயே, நம் வைப்பு நிதியாய் இருந்து வாழ்விக்கிற திருமால் எழுந்தருளி உள்ள திருவதரியை வணங்குவோம். 974

ஈசி போமின்; ஈங்கு இரேன்மின்;
இருமி இளைத்தீர்; உள்ளம்
கூசி இட்டீர் என்று பேசும்
குவளை அம் கண்ணியர்பால்
நாசம் ஆன பாசம் விட்டு
நல் நெறி நோக்கல் உறில்.
வாசம் மல்கு தண் துழாயான்
வதரி வணங்குதுமே. 975

புலன்கள் நைய மெய்யில் மூத்து
போந்து இருந்து உள்ளம் எள்கி
கலங்க ஐக்கள் போத உந்தி,
கண்ட பிதற்றாமுன்,
அலங்கல் ஆய தண் துழாய்கொண்டு
ஆயிரம் நாமம் சொல்லி
வலங்கொள் தொண்டர் பாடி ஆடும்
வதரி வணங்குதுமே. 976

வண்டு தண் தேன் உண்டு வாழும்
வதரி நெடு மாலைக்
கண்டல் வேலி மங்கை வேந்தன்
கலியன் ஒலி மாலை
கொண்டு தொண்டர் பாடி ஆடக்
கூடிடில். நீள் விசும்பில்
அண்டம் அல்லால், மற்று அவர்க்கு ஓர்
ஆட்சி அறியோமே. 977

## திருவதரி ஆச்சிரமம்

ஏனம் முன் ஆகி இரு நிலம் இடந்து, அன்று
இணை அடி இமையவர் வணங்க
தானவன் ஆகம் தரணியில் புரளத்
தடஞ் சிலை குனித்த என் தலைவன்
தேன் அமர் சோலைக் கற்பகம் பயந்த
தெய்வ நல் நறு மலர் கொணர்ந்து,
வானவர் வணங்கும் கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 978





கிழவர்களைக் காணும் பெண்கள், "சீச்சீ! இருமலால் உடல் இளைத்தவர்களே! உள்ளம் கூசப்பட்டீர்; இங்கிருந்து போங்கள்" என்று இகழ்வார்கள். குவளைப்பூப்போன்ற கண்களை உடைய இப்பெண்களிடத்தே உண்டான தொடர்பு நாசத்தை உண்டாக்குவது, ஆகவே அதனைத் தவிர்த்து நல்வழி போக வேண்டுமாயின், மணம் மிகுந்த துழாய் அணிந்த திருமால் எழுந்தருளிய திருவதரியை வணங்குவோம். 975

ஐம்புலன்கள் நைந்து போகும் முதுமைக் காலத்தில், தனி இடம் தேடி இருந்து நெஞ்சு கலங்கிக் கோழையை உமிழ்ந்தவாறு வாயில் வந்தபடி பிதற்ற நேரிடும். இவ்வாறு ஆகும் முன்னமேயே திருவதரிப் பெருமானை வணங்குவோம். ஸ்ரீவைஷ்ணவ அடியார்கள் திருவதரியில் திருத்துழாய் மாலையைக் கையில் ஏந்தியவாறு பகவானின் ஆயிரம் நாமங்களைக் கூறிக்கொண்டு, பாடி, ஆடி வலம் வருவார்கள். 976

வண்டுகள், குளிர்ந்த தேனை அருந்திக்களிக்கும் திருவதரியில் எழுந்தருளிய திருமாலை, தாழை வேலிகள் உள்ள திருமங்கை நாட்டரசர் கலியன், இப்பாசுரங்களில் பாடித் துதித்தார். ஒலி நயமுடைய இப்பாசுரங்களைப் பாடி ஆடும் தொண்டர்களாகிய அடியார்களுக்குப் பரமபதம் அன்றி வேறெங்கும் ஆட்சி இல்லை. 977

## திருவதரி ஆச்சிரமம்

திருமால் பிரளய காலத்தில் பிரமன் முதலியோர் தன் இணைத் திருவடிகளில் வணங்கும் படியாகப் பன்றி வடிவெடுத்துப் பூமியைக் குத்தி எடுத்துக் காப்பாற்றினான். அவனே ஸ்ரீராமனாக வந்த பொழுது பெரிய வில்லை வளைத்து இராவணன் உடல் பூமியில் புரளுமாறு வதைத்தான். இந்தத் தலைவனே, தேன் மிகுந்த சோலையின் கற்பக மலர்களைத் தேவர்கள் தூவி வணங்குமாறு கங்கைக் கரையில் வதரிகாசிரமத்தில் எழுந்தருளி உள்ளான். 978

கானிடை உருவை, சுடு சரம் துரந்து
கண்டு முன், கொடுந் தொழில் உரவோன்
ஊன் உடை அகலத்து அடு கணை குளிப்ப,
உயிர் கவர்ந்து உகந்த எம் ஒருவன்-
தேன் உடைக் கமலத்து அயனொடு தேவர்
சென்று சென்று இறைஞ்சிட, பெருகு
வானிடை முது நீர்க் கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 979

இலங்கையும் கடலும், அடல் அரும் துப்பின்
இரு நிதிக்கு இறைவனும், அரக்கர்
குலங்களும் கெடமுன் கொடுந்தொழில் புரிந்த
கொற்றவன்- கொழுஞ்சுடர் சுழன்ற
விலங்கலில் உரிஞ்சி மேல்நின்ற விசும்பில்
வெண் துகில் கொடி என விரிந்து
வலம் தரு மணி நீர்க் கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 980

துணிவு இனி உனக்குச் சொல்லுவன், மனமே
தொழுது எழு; தொண்டர்கள்-தமக்குப்
பிணி ஒழித்து அமரர் பெரு விசும்பு அருளும்
பேர் அருளாளன் எம் பெருமான்-
அணி மலர்க் குழலார் அரம்பையர் துகிலும்
ஆரமும் வாரி வந்து, அணி நீர்
மணி கொழித்து இழிந்த கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 981

பேய் இடைக்கு இருந்து வந்த, மற்று அவள்-தன்
பெரு முலை சுவைத்திட பெற்ற
தாய் இடைக்கு இருத்தல் அஞ்சுவன் என்று
தளர்ந்திட வளர்ந்த என் தலைவன்-
சேய் முகட்டு உச்சி அண்டமும் சுமந்த
செம்பொன் செய் விலங்கலில் இலங்கு
வாய் முகட்டு இழிந்த கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 982

தேர் அணங்கு அல்குல் செழுங் கயல் கண்ணி-
திறத்து ஒரு மறத் தொழில் புரிந்து
பார் அணங்கு இமில் ஏறு ஏழும் முன் அடர்த்த
பனி முகில் வண்ணன் எம் பெருமான்-
காரணம் தன்னால் கடும் புனல் கயத்த
கரு வரை பிளவு எழக் குத்தி,
வாரணம் கொணர்ந்த கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 983





ஸ்ரீ ராமன் காட்டில் மாயமானைக் கண்டு அதன்மீது அம்பு செலுத்திக் கொன்றான்; கொடிய செயலுடைய வாலியின் மார்புச் சதையில் அம்புவிட்டு அழுத்தி வதைத்தான். ஒப்பற்ற வலிமை உடைய இந்த என் தலைவன், வானிலிருந்து பெருகி வரும் கங்கைக் கரையிலுள்ள வதரி ஆசிரமத்தில் எழுந்தருளி உள்ளான். தேனுடைய தாமரையில் தோன்றிய பிரமனும் தேவர்களும் இங்கே சென்று அப் பெருமானை வணங்குவார்கள். 979

இலங்கையையும், அகழான கடலையும், சங்கநிதி பதும நிதிகளுடன் விளங்கிய, வெல்ல முடியாத இராவணனையும், அரக்கர் குலத்தையும் இராமபிரான் அழித்தான். பேரரசனான இவனே, வதரியாசிரமத்தில் எழுந்தருளி உள்ளான். சூரியன் சுற்றி வரும் மேருமலையைத் தாக்கி, வானில் வெண்ணிறக் கொடி போலப் பரந்து தெளிவாக ஓடும் கங்கை நதிக்கரையில் இத்திருத்தலம் உள்ளது. 980

நெஞ்சமே! உனக்கு உறுதிப்பொருள் ஒன்றைக் கூறுகிறேன். அடியார்களின் பிறவி நோயை நீக்கிப் பரமபதத்தை அளிக்கும் அருளாளனை வதரி ஆசிரமம் சென்று தொழுது உய்வு அடைவாய், இத்தலம், பூச்சூடிய கூந்தலுடைய தேவமாதர்களின் ஆடைகளையும் மாலைகளையும் மணிகளையும் திரட்டிக் கொண்டு ஓடும் கங்கை ஆற்றின் கரையில் உள்ளது. 981

தாயைப் போல் வந்த பூதனைப் பேயின் மடியில் அமர்ந்த கண்ணன், அவள் முலையைச் சுவைப்பதைப் பார்த்த யசோதை, 'பாதகியின் மடியில் குழந்தை இருப்பது பயமாய் உள்ளதே' என்று பரிவுற்றாள். இவ்வாறெல்லாம் வளர்ந்த எம்பெருமான், செம்பொன்னாய் ஒளிவிடும் மேருமலைச்சிகரத்தினின்று விழுந்தோடும் கங்கைக்கரையின் வதரிஆசிரமத்தில் எழுந்தருளி உள்ளான். 982

தேர்த்தட்டுப்போன்ற இடையையும் கயல் மீன் போன்ற கண்களையும் உடைய நப்பின்னைக்காகக் கண்ணன், உலகத்தார் அஞ்சும் படியான கழுத்துத்திமிலுடைய காளைகள் ஏழினையும் அடக்கி வீரச்செயல் செய்தான். இந்த மேக நிற எம்பெருமான், பகீரதன் காரணமாய், வேகமுடன் மலைகளைப் பிளந்தவாறு யானைகளைத் தள்ளிக்கொண்டு ஓடும், கங்கைக்கரையில் உள்ள வதரி ஆசிரமத்தில், எழுந்தருளி உள்ளான். 983

வெம் திறல் களிறும், வேலைவாய் அமுதும்,
விண்ணொடு, விண்ணவர்க்கு அரசும்
இந்திரற்கு அருளி எமக்கும் ஈந்தருளும்
எந்தை எம் அடிகள் எம் பெருமான்-
அந்தரத்து அமரர் அடி இணை வணங்க,
ஆயிரம் முகத்தினால் அருளி
மந்தரத்து இழிந்த கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 984

மான் முனிந்து ஒரு கால் வரி சிலை வளைத்த
மன்னவன், பொன் நிறத்து உரவோன்
ஊன்முனிந்து அவன் உடல் இரு பிளவா
உகிர் நுதி மடுத்து அயன் அரனைத்
தான் முனிந்து இட்ட வெம் திறல் சாபம்
தவிர்த்தவன்-தவம்புரிந்து உயர்ந்த
மா முனி கொணர்ந்த கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 985

கொண்டல் மாருதங்கள், குலவரை தொகு நீர்க்
குரை கடல் உலகு உடன் அனைத்தும்
உண்ட மா வயிற்றோன் ஒண் சுடர் ஏய்ந்த
உம்பரும் ஊழியும் ஆனான்-
அண்டம் ஊடு அறுத்து அன்று அந்தரத்து இழிந்து அங்கு
அவனியாள் அலமரப் பெருகும்
மண்டு மா மணி நீர்க் கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானே. 986

வரும் திரை மணி நீர்க் கங்கையின் கரைமேல்
வதரி ஆச்சிரமத்து உள்ளானை.
கருங் கடல் முந் நீர் வண்ணனை, எண்ணி
கலியன் வாய் ஒலி செய்த பனுவல்
வரம்செய்த ஐந்தும் ஐந்தும் வல்லார்கள்
வானவர் உலகு உடன் மருவி,
இருங் கடல் உலகம் ஆண்டு வெண் குடைக் கீழ்
இமையவர் ஆகுவர் தாமே. 987





*என் தந்தையாய்த் தலைவனான எம்பெருமான், இந்திரனுக்கு வலிமை உடைய ஐராவத யானையையும் பாற்கடல் அமுதத்தையும் தேவர் உலகுடன் அரச பதவியையும் அருளினான். ஆயின் அடியோங்களுக்கோ தன்னையே ஈந்தான். தேவர்கள் வணங்கவும் திருமால் ஆணையால், மந்திர மலையிலிருந்து இறங்கி ஆயிரம் முகங்களாகப் பெருகி ஓடும் கங்கைக்கரையிலுள்ள வதரியாசிரமத்தில் இப்பெருமான் உள்ளான்.* **984**

*மாயமான் மீது வில் வளைத்து அம்பு எய்தவனும், பொன்நிற இரணியன் உடலைப் பிளக்கக் கூர்மையான நகங்களை அழுத்தியவனும், பிரமன் சினத்துக்கு ஆளான சிவன் சாபத்தை நீக்கியவனும், ஆகிய எம்பெருமான், தவம் செய்துயர்ந்த பகீரதன் கொண்டு வந்த கங்கைக்கரையில் வதரியாசிரமத்தில் எழுந்தருளி உள்ளான்.* **985**

*மேகங்கள், காற்றுக் கூட்டங்கள், மலைக்குலங்கள் ஒலிக்கும் கடல்கள், பூமி, ஆகியவற்றை உண்டு, வயிற்றில் அடக்கிக் காத்த எம்பெருமான் சந்திர, சூரியர்களையும் மேல் உலகங்களையும் தன் பகுதிகளாகக் கொண்டு யாவற்றையும் ஆள்கிறான். அவ்விறைவனே, வதரி ஆசிரமத்தில் உள்ளான். வானிலிருந்து கிளம்பி அண்டவெளியில் இறங்கி, பூமித் தாயைச் சாடி, வெள்ளமாய் ஓடிய கங்கை ஆற்றங்கரையில் இத்தலம் உள்ளது.* **986**

*மிகுந்த வேகத்துடன் மோதும் அலைகளுடன், தெளிந்த நீரோடும் கங்கை ஆற்றின் கரையில் அமைந்த, வதரியாசிரமத்தில் நித்திய வாசம் செய்யும் கடல் நிறப் பெருமானைக் கலியனாகிய திருமங்கை ஆழ்வார் அவனருளால் துதித்துப் பாடினார். இப்பத்துப்பாசுரங்களையும் பொருளுடன் பயில வல்லவர்கள், கடல் சூழும் இவ்வுலகில் செங்கோல் செலுத்தி ஆண்டு, பின், வானவர் உலகடைந்து, முடிவில் நித்திய சூரிகளுடன் கூடப் பெறுவார்கள்.* **987**

## திருச்சாளக்கிராமம்

கலையும் கரியும் பரிமாவும்
திரியும் கானம் கடந்துபோய்,
சிலையும் கணையும் துணையாகச்
சென்றான். வென்றிச் செருக்களத்து;
மலை கொண்டு அலை நீர் அணை கட்டி
மதிள் நீர் இலங்கை வாள் அரக்கர்
தலைவன் தலை பத்து அறுத்து உகந்தான்
சாளக்கிராமம் அடை, நெஞ்சே! 988

கடம் சூழ் கரியும் பரிமாவும்,
ஒலி மாத் தேரும் காலாளும்
உடன் சூழ்ந்து எழுந்த கடி இலங்கை
பொடியா வடி வாய்ச் சரம் துரந்தான்-
இடம் சூழ்ந்து எங்கும் இரு விசும்பில்
இமையோர் வணங்க மணம் கமழும்
தடம் சூழ்ந்து எங்கும் அழகு ஆய
சாளக்கிராமம் அடை, நெஞ்சே! 989

உலவு திரையும் குல வரையும்
ஊழி முதலா எண் திக்கும்
நிலவும் சுடரும் இருளும் ஆய்
நின்றான்; வென்றி விறல் ஆழி
வலவன்; வானோர் தம் பெருமான்;
மருவா அரக்கர்க்கு எஞ்ஞான்றும்
சலவன்-சலம் சூழ்ந்து அழகு ஆய
சாளக்கிராமம் அடை நெஞ்சே! 990

ஊரான்; குடந்தை உத்தமன்;
ஒரு கால் இரு கால் சிலை வளையத்
தேரா அரக்கர் தேர் வெள்ளம்
செற்றான் வற்றா வரு புனல் சூழ்
பேரான்; பேர் ஆயிரம் உடையான்;
பிறங்கு சிறை வண்டு அறைகின்ற
தாரான் - தாரா வயல் சூழ்ந்த
சாளக்கிராமம் அடை, நெஞ்சே! 991





## திருச்சாளக்கிராமம்

*இராமபிரான் வில்லையும் அம்புகளையும் துணையாகக் கொண்டு, மான்கள், யானைகள், குதிரைகள் வாழும் காட்டைத் தாண்டி, வெற்றியை வேண்டிப் போர்க்களம் புகுந்தான். அலைகடல் மீது மலையால் அணை கட்டி, கடல் அகழும் மதிளும் சூழ்ந்த இலங்கை அரசன் அரக்கர் தலைவன் இராவணனின் பத்துத் தலைகளையும் அறுத்து உகந்தான். ஏ! நெஞ்சமே! நீ இப்பெருமான் எழுந்தருளிய சாளக்கிராமத்தை அடைவாய்.* 988

*மதயானைகளும், குதிரைகளும், ஒலிக்கும் தேர்களும், வீரர்களும் திரண்டு காவலாய் விளங்கும் இலங்கையைத் தன் கூரிய அம்புகளால் பொடியாகச் செய்த இராமபிரான் திருச்சாளக்கிராமத்தில் எழுந்தருளி உள்ளான். இத்திருத்தலம் எங்கும் தேவர்கள் நிறைந்து நின்று வணங்குவர்; பூமணம் வீசும் குளங்களாலே சூழப்பட்ட அழகுள்ளது இத்திருத்தலம். மனமே! இந்த சாளக்கிராமத்தை நீ அடைவாய்.* 989

*எம்பெருமான், அலைகடல்கள், மலைகள், ஊழிக்காலம் முதலாக உள்ள எட்டுத்திசைகள், சந்திரன், சூரியன், இருள், ஆகியவற்றின் உள்ளே தங்கி நியமிக்கிறான்; வெற்றிபெறும் பலமுடைய சக்கரம் ஏந்தியவன்; பிரமன் முதலிய தேவர் தலைவன்; என்றும் எதிர்க்கும் அரக்கர்களுக்கோ அவன் பகைவன். இத்தகைய பகவான் எழுந்தருளிய நீர்வளம் சூழ்ந்த சாளக்கிராமத்தை, நெஞ்சமே! நீ சென்றடைய வேண்டும்.* 990

*திருஊரகத்தில் உள்ளவன்; திருக்குடந்தையில் உள்ள உத்தமன்; முன்பு இராமனாக அவதாரம் செய்து வில் வளைத்து அரக்கர் படையை அழித்தவன்; வற்றாத காவிரி சூழும் திருப்பேர் நகரில் எழுந்தருளியவன்; ஆயிரம் திரு நாமங்களை உடையவன்; வண்டு ஒலிக்கும் துழாய்மாலை அணிந்த இந்த எம்பெருமான், தாராப்பறவைகள் வாழும் வயல்கள் விளங்கும் சாளக்கிராமத்தில் உள்ளான். நெஞ்சமே! இத்தலத்தை நீ அடைவாயாக.* 991

அடுத்து, ஆர்த்து எழுந்தாள் பில வாய் விட்டு
அலற, அவள் மூக்கு அயில் வாளால்
விடுத்தான்; விளங்கு சுடர் ஆழி
விண்ணோர் பெருமான்; நண்ணார்முன்
கடுத்து ஆர்த்து எழுந்த பெரு மழையைக்
கல் ஒன்று ஏந்தி இன நிரைக்காத்
தடுத்தான் -தடம் சூழ்ந்து அழகு ஆய
சாளக்கிராமம் அடை, நெஞ்சே! 992

தாய்ஆய் வந்த பேய் உயிரும்
தயிரும் விழுதும் உடன் உண்ட
வாயான்; தூய அரி உருவின்
குறளாய்ச் சென்று மாவலியை
ஏயான் இரப்ப மூவடி மண்
இன்றே தா என்று உலகு ஏழும்
தாயான்; காயா மலர் வண்ணன் -
சாளக்கிராமம் அடை நெஞ்சே ! 993

ஏனோர் அஞ்ச வெம் சமத்துள்
அரி ஆய், பரிய இரணியனை
ஊன்ஆர் அகலம் பிளவு எடுத்த
ஒருவன்; தானே இரு சுடர் ஆய்
வான்ஆய், தீ ஆய் மாருதம் ஆய்.
மலை ஆய். அலை நீர் உலகு அனைத்தும்
தான்ஆய் தானும் ஆனான் -தன்
சாளக்கிராமம் அடை நெஞ்சே! 994

வெந்தார் என்பும் சுடு நீறும்
மெய்யில் பூசி கையகத்து ஓர்
சந்துஆர் தலைகொண்டு உலகு ஏழும்
திரியும் பெரியோன்-தான் சென்று என்
எந்தாய் சாபம் தீர் என்ன
இலங்கு அமுது நீர் திருமார்பில்
தந்தான்- சந்து ஆர் பொழில் சூழ்ந்த
சாளக்கிராமம் அடை நெஞ்சே! 995

தொண்டுஆம் இனமும் இமையோரும்
துணை நூல் மார்வின் அந்தணரும்
அண்டா! எமக்கே அருளாய் என்று
அணையும் கோயில் அருகு எல்லாம்
வண்டுஆர் பொழிலின் பழனத்து
வயலின் அயலே கயல் பாயத்
தண்தாமரைகள் முகம் அலர்த்தும்
சாளக்கிராமம் அடை நெஞ்சே! 996





ஆரவாரத்துடன் வந்த சூர்ப்பநகை, குகை போன்ற தன் வாய்விட்டு அலறும்படி, இராமபிரான் அவள் மூக்கை, இலக்குவன் வாளால் வெட்டச் செய்தான். இந்த பகவானே, இந்திராதிகள் முன்னே கோவர்த்தன மலையைத் தூக்கிப் பசுக் கூட்டத்தைக் காத்தவன். இவ்வெம்பெருமான் எழுந்தருளிய, குளங்கள் சூழ்ந்த சாளக்கிராமத்தை, நெஞ்சமே! நீ சென்றடைவாய். **992**

வெண்ணெய் உண்ட வாயுடைய கண்ணன், தாய் வடிவில் வந்த பூதனையின் உயிரையும் குடித்தான். இரக்கத்தகாத பெரியவனான திருமால் தூய வாமனனாய் மாவலியிடம் போய் 'மூவடிமண்தா' என்று யாசித்து, ஏழு உலகங்களையும் தாவி அளந்தான். நெஞ்சமே! காயாமலர் நிறத்தவனான இந்த பகவான் எழுந்தருளிய சாளக்கிராமத்துக்கு நீ செல்வாயாக. **993**

நரசிம்மப்பெருமான் அசுரர் அஞ்சும்படி, பருத்த இரணியனுடன் செய்த போரில் அவன் மார்புச் சதையைக் கிழித்துக் கொன்றான். ஒப்பற்ற இத்திருமாலே, சந்திரன், சூரியன், வானம், தீ, காற்று, மலைகள், கடல்கள், ஆகியவைகளாய், நிறைந்து, தானே, தலைவனாய் உள்ளவன், நெஞ்சமே! இந்த பகவான் எழுந்தருளிய சாளக்கிராமத்தை நீ அடைவாய். **994**

வெந்த எலும்பையும் சுட்ட நீற்றுப்பொடியையும் உடம்பில் அணிந்தவனாய், பிரம கபாலத்தைத்தன் கையில் ஏந்தி, ஏழுலகும் திரிந்த சிவபெருமான், திருமாலிடம் சென்று, 'என் தந்தையே! என் சாபத்தைப் போக்கி அருளுக' என்று வேண்டவும், பெருமான் தன் மார்பிலிருந்து பொங்கிய அமுத நீரால் அவன் சாபத்தைப் போக்கினான். நெஞ்சமே! இத்திருமால் எழுந்தருளிய, சந்தன மரச் சோலைகள் சூழ்ந்த சாளக்கிராமத்தை அடைவாயாக. **995**

கைங்கர்யம் செய்யும் வைணவ அடியார்களும் நித்திய சூரிகளும், இரட்டைப் பூணூல் அணிந்த அந்தணரும் சாளக்கிராமம் சென்று, 'உலகத்தலைவனே! எங்களுக்கு அருள்க!' என்று வணங்குவார்கள். வண்டுகள் வாழும் சோலைப் புறத்து வயலில் கயல் மீன்கள் பாய்ந்து ஓடவும் குளிர்ந்த தாமரை மலர்கள் முகம் காட்டி மலரும் சிறப்புடைய சாளக்கிராமத்தை நெஞ்சமே! நீ சென்றடைவாய். **996**

தாராஆரும் வயல் சூழ்ந்த
சாளக்கிராமத்து அடிகளை,
கார்ஆர் புறவின் மங்கை வேந்தன்
கலியன் ஒலிசெய் தமிழ்மாலை,
ஆர்ஆர் உலகத்து அறிவு உடையார்.
அமரர் நல் நாட்டு அரசு ஆளப்
பேர் ஆயிரமும் ஓதுமின்கள்;
அன்றி இவையே பிதற்றுமினே. 997

## நைமிசாரணியம்

வாள் நிலா முறுவல் சிறு நுதல் பெருந் தோள்
மாதரார் வன முலைப் பயனே
பேணினேன்; அதனைப் பிழை எனக் கருதிப்
பேதையேன் பிறவி நோய் அறுப்பான்
ஏண் இலேன் இருந்தேன்; எண்ணினேன்; எண்ணி
இளையவர் கலவியின் திறத்தை
நாணினேன்; வந்து உன் திருவடி அடைந்தேன்-
நைமிசாரணியத்துள் எந்தாய்! 998

சிலம்பு அடி உருவின கரு நெடுங் கண்ணார்
திறத்தனாய், அறத்தையே மறந்து
புலன் படிந்து உண்ணும் போகமே பெருக்கிப்
போக்கினேன் பொழுதினை வாளா;
அலம் புரி தடக்கை ஆயனே! மாயா
வானவர்க்கு அரசனே! வானோர்
நலம் புரிந்து இறைஞ்சும் திருவடி அடைந்தேன் -
நைமிசாரணியத்துள் எந்தாய்! 999

சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து
சுரி குழல் மடந்தையர் திறத்துக்
காதலே மிகுத்துக் கண்டவா திரிந்த
தொண்டனேன் நமன் தமர் செய்யும்
வேதனைக்கு ஒடுங்கி நடுங்கினேன்;வேலை
வெண் திரை அலமரக் கடைந்த
நாதனே வந்து உன் திருவடி அடைந்தேன்-
நைமிசாரணியத்துள் எந்தாய்! 1000





உலகில் அறிவுடையோர்களே! நித்திய சூரிகளின் பரமபதத்தை அடைந்து ஆள்வதற்குத் திருமாலின் ஆயிரம் திருநாமங்களை ஓதுங்கள், இல்லையாயின் தாராப்பறவைகள் நிறைந்த வயல்களால் சூழப்பட்ட சாளக்கிராமத்து எம்பெருமானைப் பற்றிய இப்பத்துப் பாசுரங்களைப் பயிலுங்கள், இவை மேகச் சூழல் நிறைந்த திருமங்கை நாட்டு மன்னர் கலியனால் அருளப்பட்டவை. 997

## நைமிசாரணியம்

நைமிசாரணியத்தில் உள்ள என் தந்தையே! ஒளி கூடிய புன்சிரிப்பும் பருத்த தோள்களும் கொண்ட பெண்களின் அழகான மார்புகளையே பயனாகக் கருதினேன்; அறிவற்ற நான் அச்செயலைத் தவறென்று உணர்ந்து பிறவி நோயைப் போக்க எண்ணவில்லை. இப்படிக் கழிந்த செயலுக்கு வருந்தும் நான், இளைய பெண்களின் சேர்க்கையை நினைத்து வெட்கம் அடைகிறேன். இந்த வெட்கத்துடன் உன் திருவடிகளில் விழுந்து சரணம் புகுந்தேன். 998

நான், சிலம்புடன் கூடிய அழகான பாதங்களையும் கறுத்து நீண்ட கண்களையும் உடைய பெண்களுக்கு அடிமை ஆனேன்; அறமே வடிவான உன்னைச் சற்றும் நினையாமல் புலன் இன்பங்களின் மோகத்தை பெருக்கிக் காலத்தை வீணாகக் கழித்தேன். நைமிசாரணியத்தில் உள்ள என் தந்தையே! கலப்பை ஏந்திய திருக்கரத்து ஆயனே! மாயவா! தேவர்கள் தலைவா! நித்திய சூரிகள் பக்தியுடன் வணங்கும் உன் திருவடிகளில் அடியேன் அடைக்கலம் புகுந்தேன். 999

நான் மிகவும் சூதாடித்திருட்டுத் தொழிலைத் துணிந்து செய்தேன்; சுருண்ட மயிர்க் கூந்தல் உடைய பெண்களிடத்தில் ஈடுபட்டு கண்டபடி திரிந்து அவர்களுக்குத் தொண்டு செய்தேன். இப்பொழுது அச்செயல்களுக்கு வருந்தி, யமபடர் செய்யப் போகும் வேதனைகளை எண்ணி நிலை குலைந்தேன். வெண்மையான அலைகள் உடைய பாற்கடல் கலங்கும்படி கடைந்த பெருமானே; நைமிசாரணியத்தில் எழுந்தருளிய என் தந்தையே! தேவரீர் திருவடிகளில் வந்து சரணம் புகுந்தேன். 1000

வம்பு உலாம் கூந்தல் மனைவியைத் துறந்து
பிறர் பொருள், தாரம் என்று இவற்றை
நம்பினார் இறந்தால், நமன் தமர் பற்றி
ஏற்றி வைத்து எரி எழுகின்ற
செம்பினால் இயன்ற பாவையைப் பாவீ!
தழுவு என மொழிவதற்கு அஞ்சி
நம்பனே! வந்து உன் திருவடி அடைந்தேன்-
நைமிசாரணியத்துள் எந்தாய்! 1001

இடும்பையால் அடர்ப்புண்டு. இடுமினோ துற்று என்று
இரந்தவர்க்கு இல்லையே என்று
நெடுஞ் சொலால் மறுத்த நீசனேன் அந்தோ!
நினைக்கிலேன் வினைப் பயன் தன்னை;
கடுஞ் சொலார் கடியார், காலனார் தமரால்
படுவது ஓர் கொடு மிறைக்கு அஞ்சி
நடுங்கி நான் வந்து உன் திருவடி அடைந்தேன் -
நைமிசாரணியத்துள் எந்தாய்! 1002

கோடிய மனத்தால் சினத் தொழில் புரிந்து,
திரிந்து நாய் இனத்தொடும் திளைத்திட்டு.
ஓடியும் உழன்றும் உயிர்களே கொன்றேன்.
உணர்விலேன் ஆதலால் ;நமனார்
பாடியைப் பெரிதும் பரிசு அழித்திட்டேன்;
பரமனே! பாற்கடல் கிடந்தாய்!
நாடி நான் வந்து, உன் திருவடி அடைந்தேன்-
நைமிசாரணியத்துள் எந்தாய்! 1003

நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழிந்தும்
நீதி அல்லாதன செய்தும்
துஞ்சினார் செல்லும் தொல் நெறி கேட்டே
துளங்கினேன்; விளங்கனி முனிந்தாய்!
வஞ்சனேன் அடியேன் நெஞ்சினில் பிரியா
வானவா !தானவர்க்கு என்றும்
நஞ்சனே! வந்து உன் திருவடி அடைந்தேன்-
நைமிசாரணியத்துள் எந்தாய்! 1004

ஏவினார் கலியார் நலிக என்று என்மேல்-
எங்ஙனே வாழும் ஆறு? -ஐவர்;
கோவினார் செய்யும் கொடுமையை மடித்தேன்.
குறுங்குடி நெடுங்கடல் வண்ணா!
பாவின்ஆர் இன்சொல் பல்மலர் கொண்டு உன்
பாதமே பரவி நான் பணிந்து என்
நாவினால் வந்து உன் திருவடி அடைந்தேன்-
நைமிசாரணியத்துள் எந்தாய்! 1005





*மணம் வீசும் கூந்தலுடைய மனைவியை விட்டுப் பிறர் பொருளையும் மனைவிகளையும் விரும்புபவர்கள் இறந்தால், யமனும் பணியாளரும் அவர்களைத் துன்புறுத்துவர். செம்பால் செய்யப்பட்ட பெண் சிலையைச் சூடேற்றி நெருப்புப் பொறி வீசச் செய்து, 'பாவீ! இதனைத் தழுவுவாய்" என்று கூறித் தண்டிப்பார்கள். இச்சொற்களுக்கு அஞ்சிய நான், நைமிசாரணியத்துள் உள்ள நம்பத் 'தகுந்த என் தந்தையே! உன் திருவடி அடைந்தேன்.* 1001

*வறுமையால் வாடி, 'ஒருகளம் சோறு இடுங்கள்' என்று கேட்டவர்களுக்கு, 'இல்லை' என்று கடுமையாய்ப் பேசி மறுத்தேன். நீசனான நான் அத்தீவினைப்பயனைச் சிந்திக்க வில்லை. இப்பொழுதோ, அதன் விளைவை எண்ணுகையில். கடுஞ்சொல்லும் செயலும் உடைய யமதூதர்களால் உண்டாகும் துன்பத்திற்குப் பயப்படுகிறேன். நைமிசாரணியத்தில் உள்ள என் தந்தையே! உன் திருவடியில் அடைக்கலம் புகுகிறேன்.* 1002

*பாற்கடலில் பள்ளி கொண்ட பரமனே! நைமிசாரணி யத்தில் உள்ள என் தந்தையே! நான், மனம் திரிந்து, கோபத்துடன் தீச்செயல் செய்து, நாய்களுடன் சென்று வேட்டை ஆடி, மகிழ்ந்து, பிராணிகளைக் கொன்றேன். ஞானமற்ற அடியேன் தற்பொழுது நன்கு ஆராய்ந்தபின், தவறுக்கு வருந்தி உன் திருவடி அடைந்தேன். அதனால், யமபுரம் புகும் நிலையை அழித்து விட்டேன்.* 1003

*அடியேன் முன்பு, நீதியற்றவற்றை மனத்தில் எண்ணி, வாயால் பேசித் தவறு செய்தேன். பின்பு, இறந்தவர்கள் செல்லும் நரகத்தைப் பற்றிப் பெரியவர்கள் கூறுவதைக் கேட்டு நடுங்கினேன். விளாம்பழமாய் ஒளிந்து நின்ற அசுரனைக் கொன்றவனே! என் வஞ்சனை நெஞ்சிலும் வந்து தங்கிய பெருமானே! அசுரர்க்கு நஞ்சானவனே! நைமிசாரணியத்தில் உள்ள தந்தையே! உன் திருவடி அடைந்தேன்.* 1004

*திருக்குறுங்குடியில் எழுந்தருளிய கடல் நிறப்பெருமானே! கலிகாலம் என்னை வருத்தும்படி ஐம்புலன்களை ஏவிற்று. ஆயினும் அவை பிழைத்து வாழும் வழி ஏது? ஆளவந்த அவற்றின் கொடுமையை அப்புறப்படுத்தி விட்டேன். நைமிசாரணியத்தில் உள்ள தந்தையே! என் நாவால், இனிய பாடல் மலர்கள் கொண்டு உன் பாதத்தில் இட்டுத் துதிக்கிறேன். உன்னையே அடைக்கலமாகப் பற்றி விட்டேன்.* 1005

ஊன் இடைச் சுவர் வைத்து என்பு தூண் நாட்டி
உரோமம் வேய்ந்து ஒன்பது வாசல்
தான் உடைக் குரம்பை பிரியும்போது உன் தன்
சரணமே சரணம் என்று இருந்தேன்;
தேன் உடைக் கமலத் திருவினுக்கு அரசே!
திரை கொள் மா நெடுங் கடல் கிடந்தாய்!
நான் உடைத் தவத்தால் திருவடி அடைந்தேன்-
நைமிசாரணியத்துள் எந்தாய்! 1006

ஏதம் வந்து அணுகாவண்ணம் நாம் எண்ணி
எழுமினோ தொழுதும் என்று இமையோர்
நாதன் வந்து இறைஞ்சும் நைமிசாரணியத்து
எந்தையைச் சிந்தையுள் வைத்து,
காதலே மிகுத்த கலியன் வாய் ஒலிசெய்
மாலை தான் கற்று வல்லார்கள்
ஓத நீர் வையம் ஆண்டு வெண் குடைக் கீழ்
உம்பரும் ஆகுவர். தாமே. 1007

## சிங்கவேழ்குன்றம்

அம் கண் ஞாலம் அஞ்ச அங்கு ஓர் ஆள் அரி ஆய் அவுணன்
பொங்க ஆகம் வள் உகிரால் போழ்ந்த புனிதன் இடம் -
பைங் கண் ஆனைக் கொம்பு கொண்டு பத்திமையால் அடிக்கீழ்ச்
செங்கண் ஆளி இட்டு இறைஞ்சும் சிங்கவேழ்குன்றமே. 1008

அலைத்த பேழ் வாய் எயிற்று ஓர் கோளரி ஆய் அவுணன்
கொலைக் கையாளன் நெஞ்சு இடந்த கூர் உகிராளன் இடம்-
மலைத்த செல் சாத்து எறிந்த பூசல் வன் துடி வாய் கடுப்ப
சிலைக் கை வேடர் தெழிப்பு அறாத சிங்கவேழ்குன்றமே. 1009

ஏய்ந்த பேழ் வாய்வாள் எயிற்று ஓர் கோளரி ஆய்,அவுணன்
வாய்ந்த ஆகம் வள் உகிரால் வகிர்ந்த அம்மானது இடம்-
ஓய்ந்த மாவும், உடைந்த குன்றும் அன்றியும் நின்று அழலால்
தேய்ந்த வேயும் அல்லது இல்லாச் சிங்கவேழ்குன்றமே. 1010

எவ்வம் வெவ் வேல் பொன்பெயரோன் ஏதலன் இன் உயிரை
வவ்வி ஆகம் வள் உகிரால் வகிர்ந்த அம்மானது இடம்-
கவ்வு நாயும் கழுகும், உச்சிப்போதொடு கால் சுழன்று
தெய்வம் அல்லால், செல்ல ஒண்ணாச் சிங்கவேழ்குன்றமே. 1011





சதையே சுவராக, எலும்பே தூணாக, மயிரால் வேய்ந்த, ஒன்பது வாசல்களை உடைய குடிசையாகிய இவ்வுடம்பை விட்டு உயிர் போகும் பொழுது, உம் திருவடிகளே காப்பு என்று நினைத்தேன். தேனுள்ள தாமரையில் வாழும் திருமகள் நாதனே! பாற் கடலில் பள்ளி கொண்டவா! நைமிசாரணியத்துள் எந்தாய்! என் தவமான உம் திருவடிகளை நான் அடையப் பெற்றேன். 1006

'துன்பங்கள் வராதிருக்கத் துதிப்பதற்கு எழுங்கள்' என்று தேவர்களும் இந்திரனும் வந்து வணங்கும் நைமிசாரணியப் பெருமானைப் பற்றி, உள்ளார்ந்த பக்தியுடன் பாடிய கலியனின் இப்பாசுரங்களைக் கற்க வல்லவர்கள் கடல் சூழ்ந்த பூமியை ஆண்டு, பரமபதம் அடைவார்கள். 1007

## சிங்கவேழ்குன்றம்

அழகிய உலகம் அஞ்ச, ஒப்பற்ற நரசிம்மமாகத் தோன்றி இரணியாசுரனின் உடலைக் கூர்மையான நகத்தால் பிளந்த பெருமான் எழுந்தருளிய சிங்கவேள் குன்றத்தில், சிவந்த கண்களுடைய சிங்கங்கள் யானைக் கொம்புகளைப் பறித்துப் பகவான் திருவடிகளில் இட்டு வணங்கும். 1008

நாவைத்துழாவியவாறு ஒளிப்பற்களுடன் வலிமை தெரியத் தோன்றிக் கொல்வதே இயல்பாக உடைய இரணியனின் மார்பை நகத்தால் பிளந்த நரசிம்மன், சிங்க வேள்குன்றில் எழுந்தருளி உள்ளான். வேடர்களின் வில், உடுக்கை ஒலிகளும், வழி மறிக்கப் பட்ட போரின் போர்க் கூச்சலும், இங்கே கேட்கும். 1009

அகன்ற வாயையும் வாள் போன்ற பற்களையும் மிகுந்த வலிமையையும் உடையவனாய்த் தோன்றி இரணியனின் உடம்பை நகத்தால் கிழித்த நரசிம்மப் பெருமான் சிங்கவேள் குன்றத்தில் உள்ளான். களைத்துப் படுத்த மிருகங்களும் உடைந்த குன்றுகளும் அரைகுறையாய் எரிந்து அவிந்த மூங்கில்களும் அன்றி வேறெதுவும் இங்கே காணப்படா. 1010

துன்புறுத்தும் வேலாயுதம் ஏந்திய இரணியனின் உடலைத் தன் கூரிய நகங்களால் பிளந்த நரசிம்மன் எழுந்தருளிய சிங்கவேள் குன்றத்தில் வேட்டை நாய்களும் கழுகுகளும், சூரியவெப்பமும், சூறைக்காற்றும் நிறைந்திருக்கும். தெய்வ அடியார்களைத் தவிர மற்றவர் இங்குப் போக முடியாது. 1011

மென்ற பேழ்வாய் வாள் எயிற்று ஓர் கோளரி ஆய், அவுணன்
பொன்ற ஆகம் வள் உகிரால் போழ்ந்த புனிதன் இடம்-
நின்ற செந்தீ மொண்டு சூறை நீள் விசும்பூடு இரிய
சென்று காண்டற்கு -அரிய கோயில் சிங்கவேழ்குன்றமே. 1012

எரிந்த பைங் கண் இலங்குபேழ் வாய் எயிற்றொடு இது எவ் உரு என்று
இரிந்து, வானோர் கலங்கி ஓட, இருந்த அம்மானது இடம்-
நெரிந்த வேயின் முழையுள் நின்று நீள் நெறிவாய் உழுவை
திரிந்த ஆனைச் சுவடு பார்க்கும் சிங்கவேழ்குன்றமே. 1013

முனைத்த சீற்றம் விண்சுடப் போய், மூவுலகும் பிறவும்
அனைத்தும் அஞ்ச ஆள் அரி ஆய் இருந்த அம்மானது இடம்-
கனைத்த தீயும் கல்லும் அல்லா வில் உடை வேடரும் ஆய்,
தினைத்தனையும் செல்ல ஒண்ணாச் சிங்கவேழ்குன்றமே. 1014

நாத் தழும்ப நான்முகனும் ஈசனும் ஆய் முறையால்
ஏத்த அங்கு ஓர் ஆள் அரி ஆய் இருந்த அம்மானது இடம்-
காய்த்த வாகை நெற்று ஒலிப்பக் கல் அதர் வேய்ங்கழை போய்த்
தேய்த்த தீயால் விண் சிவக்கும் சிங்கவேழ்குன்றமே. 1015

நல்லை நெஞ்சே! நாம் தொழுதும்: நம்முடைய நம் பெருமான்
அல்லிமாதர் புல்க நின்ற ஆயிரந் தோளன் இடம் -
நெல்லி மல்கி கல் உடைப்ப, புல் இலை ஆர்த்து அதர்வாய்
சில்லி சில் என்று ஒல் அறாத சிங்கவேழ்குன்றமே. 1016

செங் கண் ஆளி இட்டு இறைஞ்சும் சிங்கவேழ்குன்று உடைய
எங்கள் ஈசன் எம் பிரானை இருந் தமிழ்நூல் புலவன்
மங்கை ஆளன் மன்னுதொல் சீர் வண்டு அறை தார்க் கலியன்
செங்கையாளன் செஞ்சொல் மாலை வல்லவர் தீது இலரே. 1017





மெல்லும் வாயும், வாள் போன்ற பற்களும் வலிமையும் கொண்டு தோன்றி, இரணியனின் உடலைக் கூர்மையான நகத்தால் பிளந்த நரசிம்மன் எழுந்தருளிய சிங்கவேள்குன்றில், சூறைக்காற்று நெருப்பை முகந்தவாறு வானில் பரவுவதால், இக்கோயிலுக்கு யாரும் எளிதில் போக முடியாது. **1012**

'இது என்ன பயங்கரவடிவம்!' என்று தேவர்கள் அஞ்சி ஓடும்படி, தீக் கண்களுடன் பற்கள் தெரிய வாய் பிளந்தவாறு தோன்றிய நரசிம்மன், சிங்கவேள் குன்றில் எழுந்தருளி உள்ளான். இங்கே புலிகள் மூங்கில் புதர்களில் ஒளிந்தபடி, யானைகளின் அடிச்சுவடுகளை ஆராயும். **1013**

தோன்றிய சினம் மேன்மேலும் வளர்ந்து வானைச்சுட்டு, மூன்றுலகங்களும் அஞ்சும்படி, அவதாரம் செய்த நரசிம்மன், சிங்கவேள் குன்றில் எழுந்தருளி உள்ளான். இங்கே, வெடித்து ஒலிக்கும் நெருப்பு எரிய, கற்களும் வெந்து போகும். மேலும், வில்லேந்திய வேடர்களும் இருப்பதால், நொடிப்பொழுதும் இங்குச் செல்ல முடியாது. **1014**

நாத்தழும்பேற பிரமனும் சிவனும் துதிக்க, அவதாரம் செய்த நரசிம்மன் எழுந்தருளிய தலம் சிங்கவேள்குன்றம் ஆகும். இங்கே, வாகை மர, நெற்றுக்கள் காய்த்து ஒலிக்கும்; கல்வழியில் வளர்ந்த மூங்கில்கள் வானோங்கி உராய்வதால், ஆகாயத்தில் நெருப்புப் பரவிச் சிவந்திருக்கும். **1015**

பாங்கான நல்ல நெஞ்சமே! நம்பெருமான் நரசிம்மன், பெரிய பிராட்டியாரைத் தழுவிய படி காட்சிதரும் சிங்கவேள் குன்றம் சென்று தொழுவோம். நெல்லிமரங்கள் வளர்ந்து கற்கள் உடைபடும் ஓசையும் பனை ஓலைகளின் ஒலியும், வழியில் சில் என்று கேட்கும் தலம் அது. **1016**

சிங்கவேள் குன்றில், வீரத்தால் சிவந்தகண்களை உடைய சிங்கங்கள், நரசிம்மப்பெருமான் திருவடிகளில் காணிக்கைகளை இட்டு வணங்கும், இந்த எம்பெருமானைத் தமிழில் வல்ல புலவரான திருமங்கை மன்னர் இப்பாசுரங்களில் துதித்தார். வண்டொலிக்கும் மாலை அணிந்த, கொடையாளர் கலியனின் இச்சொல்மாலைக் கற்க வல்லவர் தீமை இன்றி வாழ்வர். **1017**

## திருவேங்கடம் – 1

கொங்கு அலர்ந்த மலர்க் குருந்தம்
ஒசித்த கோவலன், எம்பிரான்
சங்கு தங்கு தடங் கடல் துயில்
கொண்ட தாமரைக் கண்ணினன்
பொங்கு புள்ளினை வாய் பிளந்த
புராணர் தம் இடம் பொங்கு நீர்ச்
செங்கயல் திளைக்கும் சுனைத் திரு
வேங்கடம் அடை, நெஞ்சமே. 1018

பள்ளி ஆவது பாற்கடல். அரங்-
கம்; இரங்க வன் பேய் முலை
பிள்ளையாய் உயிர் உண்ட எந்தை
பிரான் அவன் பெருகும் இடம்
வெள்ளியான், கரியான், மணி நிற
வண்ணன் என்று எண்ணி நாள்தொறும்
தெள்ளியார் வணங்கும் மலைத் திரு-
வேங்கடம் அடை நெஞ்சமே! 1019

நின்ற மா மருது இற்று வீழ
நடந்த நின்மலன், நேமியான்.
என்றும் வானவர் கைதொழும் இணைத்
தாமரை அடி எம் பிரான்
கன்றி மாரி பொழிந்திட. கடிது
ஆநிரைக்கு இடர் நீக்குவான்.
சென்று குன்றம் எடுத்தவன் திரு-
வேங்கடம் அடை நெஞ்சமே! 1020

பார்த்தற்கு ஆய், அன்று பாரதம் கைசெய்-
திட்டு வென்ற பரஞ்சுடர்,
கோத்து அங்கு ஆயர் தம் பாடியில் குரவை
பிணைந்த எம் கோவலன்,
ஏத்துவார் தம் மனத்து உள்ளான் இட-
வெந்தை மேவிய எம் பிரான்,
தீர்த்த நீர்த் தடம் சோலை சூழ் திரு-
வேங்கடம் அடை, நெஞ்சமே! 1021





## திருவேங்கடம் – 1

*சங்குகள் வாழும் அகன்ற பாற்கடலில் கண் வளர்ந்த தாமரைக் கண்ணனான ஸ்ரீகிருஷ்ணன், மணம் வீசும் பூக்களுடைய குருந்த மரமாக நின்ற அசுரனைக் கொன்றான். பறவையான பகாசுரனின் வாயைப் பிளந்த இப்பகவான் மீன்கள் விளையாடும் நீர்ச்சுனைகள் உள்ள திருவேங்கடத்தில் தொன்று தொட்டு எழுந்தருளி உள்ளான். நெஞ்சமே! நீ அத்திருமலைக்குச் செல்வாய்.* **1018**

*கொடிய நெஞ்சுடைய பூதனை கதறக் குழந்தையாய், அவள் முலை வழியே உயிர் குடித்த கண்ணனான எம்பிரான், பள்ளிகொள்ளும் இடங்கள் திருப்பாற்கடலும் திருவரங்கமும் ஆகும். இவன் பெருகி வளர்ந்து நின்ற திருவேங்கடத்தில் தெளிவுள்ள அடியார்கள், இவனை வெண்மையன், கரியவன், நீலமணி நிறத்தன் என்று வடிவுகளை ஏத்தித் தினமும் வணங்குவர் நெஞ்சமே! இத்திருமலையை நீ அடைவாயாக.* **1019**

*நின்ற மருதமரம் அசுரன் என்னும் நினைவில்லாமல், அதன் நடுவே போன தூயவனான கண்ணன் அதனை முறிந்து விழச் செய்தான். கோபத்துடன் இந்திரன் பெய்வித்த மழையிலிருந்து பசுக்களைக் காக்க உடனேயே, கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்தவனே, இன்னொரு மலையான திருவேங்கடத்தில் சக்கரக் கையனாக நின்று காக்கிறான். நெஞ்சமே! நித்திய சூரிகள் கை தொழும் தாமரைத் திருவடிகள் உடையவனின் திருமலையை நீ அடைவாய்.* **1020**

*ஒளி மிகுந்த பகவான் அன்று பாரதப் போரில் அர்ஜுனனுக்காக அணிவகுத்து வென்றான்; ஆய்ப்பாடியில் தோன்றிய கோபாலனான கண்ணன் குரவைக் கூத்து ஆடியதை, ஏத்தித் துதிப்பார்களின் மனத்தில் தங்கி இருப்பான். திருவிடவெந்தைத் தலத்தில் எழுந்தருளிய இந்த எம்பெருமானே, புனிதமான சுனைகளும் சோலைகளும் சூழ்ந்த திருவேங்கடத்தில் உள்ளான். நெஞ்சமே! இத்திருமலையை நீ அடைவாய்.* **1021**

வண் கையான், அவுணர்க்கு நாயகன்
வேள்வியில் சென்று மாணியாய்,
மண் கையால் இரந்தான், மராமரம்
ஏழும் எய்த வலத்தினான்.
எண் கையான் இமயத்து உள்ளான் இருஞ்-
சோலை மேவிய எம் பிரான்,
திண் கைம் மா துயர் தீர்த்தவன் திரு-
வேங்கடம் அடை நெஞ்சமே! 1022

எண் திசைகளும் ஏழ் உலகமும்
வாங்கி பொன் வயிற்றில் பெய்து,
பண்டு ஓர் ஆல்இலைப் பள்ளி கொண்டவன்,
பால் மதிக்கு இடர் தீர்த்தவன்.
ஒண் திறல் அவுணன் உரத்து உகிர்
வைத்தவன் ஒள் எயிற்றொடு
திண் திறல் அரியாயவன் திரு-
வேங்கடம் அடை, நெஞ்சமே! 1023

பாரும், நீர் எரி காற்றினோடு
ஆகாசமும் இவை ஆயினான்,
பேரும் ஆயிரம் பேச நின்ற
பிறப்பிலி பெருகும் இடம்
காரும் வார் பனி நீள் விசும்பிடைச்
சோரும் மா முகில் தோய்தர,
சேரும் வார் பொழில் சூழ் எழில் திரு-
வேங்கடம் அடை நெஞ்சமே! 1024

அம்பரம் அனல், கால், நிலம், சலம்
ஆகி நின்ற அமரர் கோன்
வம்பு உலாம் மலர்மேல் மலி மட
மங்கை தன் கொழுநன் அவன்
கொம்பின் அன்ன இடை மடக் குற
மாதர் நீள் இதணம் தொறும்
செம் புனம் அவை காவல் கொள் திரு-
வேங்கடம் அடை நெஞ்சமே! 1025

பேசும் இன் திருநாமம் எட்டு எழுத்தும்
சொல்லி நின்று பின்னரும்
பேசுவார் தமை உய்ய வாங்கி,
பிறப்பு அறுக்கும் பிரான் இடம்-
வாச மா மலர் நாறு வார் பொழில்
சூழ் தரும் உலகுக்கு எலாம்
தேசமாய்த் திகழும் மலைத் திரு-
வேங்கடம் அடை, நெஞ்சமே! 1026





எல்லாம் வல்ல இறைவன் கொடையாளனான அசுரர் தலைவன் மாவலியின் வேள்விச் சாலையில் பிரமசாரியாய்ப் போய்ப் பூமியை யாசித்தான். ஏழு மராமரங்களை எய்த வலிமை உடையவன்; எட்டுக் கைகள் உடையவன்; இமயத்தில் திருப் பிரிதியிலும் திருமாலிருஞ் சோலையிலும் எழுந்தருளினான். கஜேந்திரனின் துயர்தீர்த்த இப்பெருமான் எழுந்தருளிய திருவேங்கடத்தை, நெஞ்சமே! நீ அடைவாய். 1022

பிரளய காலத்தில் பகவான் எட்டுத்திசைகளையும் ஏழுலகங்களையும் உண்டு வயிற்றில் வைத்து, ஆலந்தளிரிலே பள்ளிகொண்டான். பால் நிறச் சந்திரனின் துன்பத்தைப் போக்கி னான்; வலிமைபெற்ற இரணியனின் மார்பை நகத்தால் கிழித்த, ஒளிப்பற்கள் உடைய நரசிம்மப்பெருமான் நித்திய வாசம் செய்யும் திருவேங்கடத்தை நெஞ்சமே! நீ அடைவாய். 1023

கர்மம் அடியாகப் பிறக்கும் பிறப்பற்ற பேரிறைவன், நிலம், நீர், காற்று, நெருப்பு, விண் ஆகியவற்றில் தானேயாய் இருப்பவன் ஆவான். அவன் ஆயிரம் திருநாமங்களையும் கூறி வணங்கும் படியாய் எழுந்தருளிய திருவேங்கடத்தில் மேகங்களும் பனித் துளிகளும் வானிலிருந்து விழுவன. நெஞ்சமே! மேகங்கள் தவழும் சோலைகள் சூழ்ந்த இத்திருமலையை நீ அடைவாய். 1024

நித்திய சூரிகளின் தலைவனான பகவான், ஆகாயம், தீ, காற்று, பூமி, நீர் ஆகியவற்றுள் தானே ஆனவன்; மணம் வீசும் தாமரையில் பொருந்திய திருமகள் நாயகன் எழுந்தருளிய திருவேங்கடத்தில் தினைப்புனங்களில், வஞ்சிக் கொடி போன்ற குறம்பெண்கள் பரண்கள் மேலிருந்து காவல் புரிவார்கள். நெஞ்சே! இத்திருமலையை நீ அடைவாய். 1025

யாவராலும் பேசப்படும் இனிய திருநாமம் ஆன எட்டெழுத்தைச் சொல்லிச் சொல்லிப் பயில்பவர்கள் உய்வு பெற, எம்பெருமான் அவர்களை ஏற்று, அவர்களின் பிறவிப் பிணைப்பைப் போக்கி அருள்கிறான். இப்பெருமான் எழுந்து அருளிய திருவேங்கடம், மலர்மணம் வீசும் சோலைகள் உடையதாய், உலகுக்கெல்லாம் ஒளி தரும், திலகமாய் விளங்கு கிறது. நெஞ்சே! நீ இத்திருமலையை அடைவாய். 1026

செங்கயல் திளைக்கும் சுனைத் திரு-
வேங்கடத்து உறை செல்வனை
மங்கையர் தலைவன் கலிகன்றி
வண் தமிழ்ச் செஞ்சொல் மாலைகள்
சங்கை இன்றித் தரித்து உரைக்க வல்-
லார்கள் தஞ்சமதாகவே
வங்க மா கடல் வையம் காவலர்
ஆகி வான் உலகு ஆள்வரே. 1027

## திருவேங்கடம் – 2

தாயே தந்தை என்றும், தாரமே கிளை மக்கள் என்றும்,
நோயே பட்டொழிந்தேன்;நுன்னைக் காண்பது ஓர் ஆசையினால்-
வேய்ஏய் பூம்பொழில் சூழ் விரைஆர் திருவேங்கடவா !-
நாயேன்வந்து அடைந்தேன்; நல்கி ஆள் என்னைக் கொண்டருளே. 1028

மான்ஏய்கண் மடவார் மயக்கில்பட்டு மா நிலத்து
நானே நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்-
தேன்ஏய் பூம்பொழில் சூழ் திருவேங்கட மாமலை என்
ஆனாய்! வந்து அடைந்தேன்: அடியேனை ஆட் கொண்டருளே. 1029

கொன்றேன் பல் உயிரை, குறிக்கோள் ஒன்று இலாமையினால்;
என்றேனும் இரந்தார்க்கு இனிது ஆக உரைத்து அறியேன்-
குன்றுஏய் மேகம்அதிர் குளிர்மாமலை வேங்கடவா!
அன்றே வந்து அடைந்தேன்; அடியேனை ஆட்கொண்டருளே. 1030

குலம் தான் எத்தனையும் பிறந்தே இறந்து எய்த்தொழிந்தேன்;
நலம் தான் ஒன்றும் இலேன்; நல்லது ஓர் அறம் செய்தும் இலேன்-
நிலம் தோய் நீள் முகில் சேர் நெறி ஆர் திருவேங்கடவா:
அலைந்தேன் வந்து அடைந்தேன்;அடியேனை ஆட் கொண்டருளே. 1031

எப் பாவம் பலவும் இவையே செய்து, இளைத்தொழிந்தேன்;
துப்பா! நின் அடியே தொடர்ந்து ஏத்தவும் கற்கின்றிலேன்-
செப்பு ஆர் திண்வரைசூழ் திருவேங்கட மாமலை என்
அப்பா! வந்து அடைந்தேன்:அடியேனை ஆட்கொண்டருளே. 1032





மீன்கள் விளையாடும் சுனைகள் உள்ள திருவேங்கட மலையில் எழுந்தருளியவனைத் திருமங்கை மன்னர் கலிகன்றி அழகிய தமிழில் துதித்தார். சொல் மாலையான இப் பாசுரங்களை நெஞ்சிற்கொண்டு ஐயமின்றி உரைக்கவல்லவர். உலகாண்டு, பரமபதத்தையும் ஆளப் பெறுவர். 1027

## திருவேங்கடம் –2

மூங்கில்கள் நெருங்கிய, பூமணம் மிகுந்த சோலை சூழ்ந்த திருவேங்கட மலைப் பெருமானே! தாய், தந்தை, மனைவி, சுற்றத்தார், பிள்ளைகள் ஆகியோரின் உறவை மதித்துப் பயன் இன்றிக் கெட்டேன். நாயினும் தாழ்ந்த அடியேன் உம்மைக் காணும் ஆசையால் சரணடைந்தேன்; அடிமை கொள்ள வேண்டும். 1028

தேன் மிகுந்த பூஞ்சோலை சூழ்ந்த திருவேங்கட மலையில் யானைபோல் உள்ளவனே! நான் இதுவரை, மான் பார்வை கொண்ட பெண்களின் மயக்கத்திலே, இவ்வுலகில் பலவகையான நரகம் புகும்படியான பாவங்களைச் செய்தேன். இப்பொழுது வருந்தி, அடைக்கலம் புகும் அடியேனை, அடிமை கொண்டு அருள வேண்டும். 1029

ஆன்மப் பகுத்தறிவு இல்லாத நான், பல உயிரினங்களைக் கொன்றேன். இரந்தவர்களிடத்தே ஒருபொழுதும் இனிய சொல் பேசவில்லை. குளிர்ச்சி குறையாமல் சூழ்ந்த மேகங்கள், முழங்கும் திருவேங்கட மலைப் பெருமானே! உம்மை வந்தடைந்த அடியேனை ஆட் கொண்டு அருள வேண்டும். 1030

மேகங்கள் உலாவி நிலத்தில் படியும், பாதைகள் உள்ள திருவேங்கட மலைப்பெருமானே! எத்தனையோ குலங்களில் பிறந்து இறந்து, இளைத்த நான், நன்மை ஒன்றும் செய்யாதவன்; நலம் தரும் அறத்தையும் செய்யாது பிறவி தோறும் துன்புற்றேன். இப்பொழுது உம்மை அடைக்கலம் புகும் அடியானை ஆட்கொண்டருள வேண்டும். 1031

நான் எல்லாவகைப் பட்ட பாவங்களைச் செய்து, வருந்தி, இளைத்துவிட்டேன். உம் திருவடிகளைப் பின்பற்றிப் பக்தியுடன் துதிக்கவும் சக்தி அற்றவன் ஆனேன். திண்மையான மலைகள் சூழ்ந்த திருவேங்கடத்தில் எழுந்தருளிய என் அப்பனே! அடியேனைக் காப்பாற்றி ஆட்கொண்டருள வேண்டும். 1032

மண்ஆய் நீர்எரி கால்மஞ்சு உலாவும் ஆகாசமும் ஆம்
புண் ஆர் ஆக்கை தன்னுள் புலம்பித் தளர்ந்து எய்த்தொழிந்தேன்-
விண் ஆர் நீள் சிகர விரை ஆர் திருவேங்கடவா!
அண்ணா வந்து அடைந்தேன்; அடியேனை ஆட் கொண்டருளே. 1033

தெரியேன் பாலகனாய்ப் பல தீமைகள் செய்துமிட்டேன்;
பெரியேன் ஆயினபின், பிறர்க்கே உழைத்து ஏழை ஆனேன்-
கரி சேர் பூம் பொழில் சூழ் கன மா மலை வேங்கடவா!
அரியே! வந்து அடைந்தேன்: அடியேனை ஆட் கொண்டருளே. 1034

நோற்றேன் பல் பிறவி; நுன்னைக் காண்பது ஓர் ஆசையினால்,
ஏற்றேன்; இப் பிறப்பே இடர் உற்றனன்- எம் பெருமான்;
கோல் தேன் பாய்ந்து ஒழுகும் குளிர் சோலை சூழ் வேங்கடவா!
ஆற்றேன் வந்து அடைந்தேன்: அடியேனை ஆட் கொண்டருளே. 1035

பற்றேல் ஒன்றும் இலேன்; பாவமே செய்து பாவி ஆனேன்;
மற்றேல் ஒன்று அறியேன் மாயனே! எங்கள் மாதவனே!
கல்தேன் பாய்ந்து ஒழுகும் கமலச்சுனை வேங்கடவா!-
அற்றேன் வந்து அடைந்தேன் ; அடியேனை ஆட் கொண்டருளே. 1036

கண் ஆய், ஏழ்உலகுக்கு உயிர் ஆய எம் கார்வண்ணனை
விண்ணோர் தாம் பரவும் பொழில் வேங்கட வேதியனை,
திண்ஆர் மாடங்கள் சூழ் திரு மங்கையர் கோன் கலியன்,
பண்ஆர் பாடல் பத்தும் பயில்வார்க்கு இல்லை, பாவங்களே. 1037

## திருவேங்கடம் – 3

கண் ஆர் கடல் சூழ் இலங்கைக்கு இறைவன் தன்
திண் ஆகம் பிளக்கச் சரம் செல உய்த்தாய்!
விண்ணோர் தொழும் வேங்கட மா மலை மேய
அண்ணா! அடியேன் இடரைக் களையாயே. 1038

இலங்கைப் பதிக்கு அன்று இறை ஆய அரக்கர்
குலம் கெட்டு அவர் மாள, கொடிப் புள் திரித்தாய்!
விலங்கல் குடுமித் திருவேங்கடம் மேய
அலங்கல் துளப முடியாய் அருளாயே. 1039





*மணம்பரவும் வானளாவிய சிகரங்கள் உள்ள திருவேங்கட மலை அண்ணா! நிலம், நீர், நெருப்பு, காற்று, மேகம் உலாவும் வானம், ஆகிய ஐம்பூத மயமான இவ்வுடம்பில், நான் அகப்பட்டு, வருந்தி, மெலிந்து இளைத்தேன். அடியேனை ஆட்கொள்ள வேண்டும்.* **1033**

*நான் பிள்ளைப் பருவத்தில் அறிவின்றிப் பல தீமைகள் செய்தேன்; பெரியவன் ஆன பின்பு பிறர்க்கு உழைத்து வீணானேன். யானைகளும் பூஞ்சோலைகளும் சூழ்ந்த பெரிய வேங்கட மலையில் உள்ள, சிங்கம் போன்ற பெருமானே! இப்பொழுது அடியேனை ஆட்கொண்ட ருள வேண்டும்.* **1034**

*கொம்புத்தேன் வழிந்து குளிரும் சோலைகள் உள்ள திருமலையானே! பல பிறவிகளுக்கான வினைகள் செய்த நான், உம் அருளால், உம்மைக் காணும் ஆசைபெற்ற யோக்கியன் ஆனேன். பிறவித்துயருக்கு ஆற்றாத அடியேனை ஆட்கொள்ள வேண்டும்.* **1035**

*மாயனே! எங்கள் மாதவா! குகைத்தேன் ஓடிச் சுனைகளில் புகுந்து , தாமரை மலரும் திருவேங்கடமலையானே! பாவங்களே செய்த நான், நல்வினைப் பற்றில்லாமல் துணைகளும் அறியாமல், உன் திருவடி அடைந்தேன், அடியேனை ஆட்கொண்டருள வேண்டும்.* **1036**

*ஏழுலகங்களுக்கும் கண்ணாகவும் உயிராகவும் உள்ள மேக நிறப் பெருமான், நித்திய சூரிகள் வணங்கும்படி திருவேங்கட மலையில் எழுந்தருளினான். இவ்வேதப்பெருமானைப் பற்றித் திருமங்கை மன்னனான கலியன் அருளிய பத்து இசைப் பாடல்களைப் பயில்பவர்க்குப் பாவம் இல்லை.* **1037**

## திருவேங்கடம் –3

*அகன்ற கடல் சூழ்ந்த இலங்கை அரசன், இராவணனின் உடல், பிளக்கும்படி, அம்புகளை விட்டவனே! தேவர்கள் வந்து தொழவும் திருவேங்கட மலையில் எழுந்தருளிய அண்ணா! அடியேன் துன்பத்தைப் போக்கி அருள்க.* **1038**

*பெரிய திருவடி மேல், ஏறித் திரிந்து, இலங்கை மன்னர்களான மாலி முதலிய அரக்கர்களை அழித்தவனே! சூரிய சந்திரர் விலகிப்போகும்படி, உயர்ந்த சிகரங்கள் உள்ள திருமலையில் எழுந்தருளிய திருத்துழாய் முடியானே! அருள்செய்து அடியேனைக் காக்க வேண்டும்.* **1039**

நீர் ஆர் கடலும் நிலனும் முழுது உண்டு,
ஏர் ஆலம் இளந் தளிர்மேல் துயில் எந்தாய்!
சீர் ஆர் திருவேங்கட மா மலை மேய
ஆரா அமுதே அடியேற்கு அருளாயே. 1040

உண்டாய் உறிமேல் நறு நெய் அமுது ஆக:
கொண்டாய் குறள் ஆய் நிலம் ஈர் அடியாலே;
விண் தோய் சிகரத் திருவேங்கடம் மேய
அண்டா! அடியேனுக்கு அருள்புரியாயே. 1041

தூண் ஆய் அதனூடு அரியாய் வந்து தோன்றி
பேணா அவுணன் உடலம் பிளந்திட்டாய்!
சேண் ஆர் திருவேங்கட மா மலை மேய
கோள் நாகணையாய் குறிக்கோள் எனை நீயே. 1042

மன்னா இம் மனிசப் பிறவியை நீக்கி
தன் ஆக்கி தன் இன் அருள் செய்யும் தலைவன்
மின் ஆர் முகில் சேர் திருவேங்கடம் மேய
என் ஆனை என் அப்பன் என் நெஞ்சில் உளானே. 1043

மான் ஏய் மட நோக்கிதிறத்து எதிர் வந்த
ஆன் ஏழ் விடை செற்ற அணி வரைத் தோளா
தேனே திருவேங்கட மா மலை மேய
கோனே என் மனம் குடிகொண்டு இருந்தாயே. 1044

சேயன் அணியன் என் சிந்தையுள் நின்ற
மாயன், மணி வாள் ஒளி வெண் தரளங்கள்
வேய் விண்டு உதிர் வேங்கட மா மலை மேய
ஆயன் அடி அல்லது மற்று அறியேனே. 1045

வந்தாய்; என் மனம் புகுந்தாய்; மன்னி நின்றாய்
நந்தாத கொழுஞ் சுடரே எங்கள் நம்பீ!
சிந்தாமணியே திருவேங்கடம் மேய
எந்தாய் இனி யான் உனை என்றும் விடேனே. 1046





நீர்நிரம்பிய கடலையும் பூமியையும் மற்றெல்லாவற்றையும் முழுவதுமாய் விழுங்கி, இளைய ஆலந்தளிரில் பள்ளி கொண்டவனே! சீர்மை பொருந்திய திருவேங்கடமலை மேவிய ஆராவமுதனே; அடியேன் உய்வு பெற அருள்செய்ய வேண்டும். 1040

உறிகளிலே வைத்த மணமான நெய்யை அமுதமாக உண்டவனே! வாமனனாக வந்து பூமியை இரண்டு அடிகளாலே அளந்து கொண்டவனே! வான்அளாவும் சிகரங்கள் உள்ள திருவேங்கடமலையில் உள்ளவனே! அண்டங்களுக்குத் தலைவனே! அடியேனுக்கு அருள் புரிய வேண்டும். 1041

தூணிலிருந்து நரசிம்மமாக வெளிவந்து இரணியனின் மார்பைப் பிளந்தவனே! மிக உயர்ந்த திருவேங்கடமலை மேவியவனே! ஆதிசேஷனைப் படுக்கையாக உடையவனே! என்னைத் திருவுள்ளம் பற்றவேண்டும் 1042

மேகங்கள் நடுவே மின்னல் பளிச்சிடும் திருவேங்கட மலையில் உள்ள என் அப்பன், நிலையற்ற இம்மனிதப் பிறவியை விடுவித்து என்னைத் தனக்கு ஆளாக்கி அருள் செய்தான். யானை போன்ற அவ்வழகன் என் நெஞ்சில் வாழ்கிறான். 1043

மான் பார்வை பெற்ற மடப்பகுண நப்பின்னையைப்பெற, ஏழு எருதுகளைக் கொன்றவனே! மலைபோன்ற தோளுடைய என் அரசே! தேன்போல் இனியவனே! திருவேங்கடமலை மேவியவா! அடியேன் மனத்தில் நீ குடிகொண்டு நிலைபெற்ற, அருள்தான் என்னே! 1044

பற்றாதவர்க்குத் தூரத்தேயும் பற்றினவர்க்கு அருகிலேயும் உள்ள மாயன் ஆன பகவான் என் மனத்தில் உள்ளான். மூங்கில்கள் முற்றி வெடித்து ஒளியுள்ள வெண்முத்துக்களைச் சொரியும் திருவேங்கட மலையில் எழுந்தருளிய ஆயன் கண்ணனுடைய திருவடிகளை அன்றி மற்றவற்றை நான் அறியேன். 1045

அணையாத, நிறைந்த, ஒளி வடிவானவனே! எங்கள் நம்பீ! எண்ணியதெல்லாம் கொடுக்கும் மணியே! திருவேங்கடத்தில் உள்ள என் தந்தையே! நீயே வந்து, என் மனத்தில் புகுந்து நிலைத்து விட்டதால், இனிமேல் நான், பேரருளாளனான, உன்னை ஒருபொழுதும் விடமாட்டேன். 1046

வில்லார் மலி வேங்கட மா மலை மேய
மல் ஆர் திரள் தோள் மணி வண்ணன் அம்மானைக்
கல் ஆர் திரள் தோள் கலியன் சொன்ன மாலை
வல்லார் அவர் வானவர் ஆகுவர். தாமே. 1047

## திருவேங்கடம் – 4

வானவர் தங்கள் சிந்தை போல, என்
நெஞ்சமே இனிது உவந்து மாதவ
மானவர் தங்கள் சிந்தை அமர்ந்து உறைகின்ற எந்தை
கானவர் இடு கார் அகில் புகை
ஓங்கு வேங்கடம் மேவி மாண் குறள்
ஆன அந்தணற்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே. 1048

உறவு சுற்றம் என்று ஒன்று இலா ஒருவன்
உகந்தவர் தம்மை மண்மிசைப்
பிறவியே கெடுப்பான். அது கண்டு என் நெஞ்சம் என்பாய்!
குறவர் மாதர்களோடு வண்டு
குறிஞ்சி மருள் இசை பாடும் வேங்கடத்து
அறவன் நாயகற்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே. 1049

இண்டை ஆயின கொண்டு தொண்டர்கள்
ஏத்துவார் உறவோடும் வானிடைக்
கொண்டு போய் இடவும் அது கண்டு என் நெஞ்சம் என்பாய்!
வண்டு வாழ் வட வேங்கட மலை
கோயில் கொண்டு அதனோடும் மீமிசை
அண்டம் ஆண்டு இருப்பாற்கு அடிமைத் தொழில் பூண்டாயே. 1050

பாவியாது செய்தாய் என் நெஞ்சமே
பண்டு தொண்டு செய்தாரை மண்மிசை
மேவி ஆட்கொண்டு போய், விசும்பு ஏற வைக்கும் எந்தை
கோவி நாயகன் கொண்டல் உந்து உயர்
வேங்கட மலை ஆண்டு வானவர்
ஆவியாய் இருப்பாற்கு அடிமைத் தொழில் பூண்டாயே. 1051





வில் ஏந்திய வேடர்கள் மிகுந்துள்ள திருவேங்கடமலைப் பெருமானை, கல்லை ஒத்தை தோள்களுடைய கலியனான ஆழ்வார் இச்சொல் மாலையில் துதித்தார். திரண்ட தோள் களையும் மணி நீல நிறத்தையும் உடைய திருவேங்கடவன் பற்றிய இப் பாடல்களைப் பயில்பவர் நித்திய சூரிகள் ஆவர். **1047**

## திருவேங்கடம் – 4

மிக்க தவமுடைய மனிதர்கள் நெஞ்சில் வாழும் என் தந்தை, திருவேங்கட மலையிலும் எழுந்தருளி உள்ளான். அங்கே வேடர்கள் முற்றிய அகிற்கட்டைகளை நெருப்பில் இடும் புகை பரவும். அந்தணச் சிறுவனாய் வந்த வாமனப்பெருமான் நித்திய சூரிகள் இதயத்தில் இனிதாக இருப்பது போல என்னிடமும் உகந்து தங்கினானே! என் நெஞ்சமே! நீ அதனால் அவனுக்கு அடிமை செய்யப் பெற்றாயே! **1048**

கர்மம் அடியான உறவு முறைகள் இல்லாத எம்பெருமான் தனக்கு விருப்பமானவருக்குப் பூமியில் பிறக்கும் பாவத்தைப் போக்குவான். என் நெஞ்சமே! அவனுடைய இந்த அருளை நீயும் கண்டு கொண்டாயே; குறப்பெண்களுடன் வண்டுகள், குறிஞ்சிப் பண்பாடும் திருவேங்கட மலையில் அறமே வடிவாய் எழுந்தருளி யவனுக்கு அடிமை செய்யப் பெற்றாயே! **1049**

பூமாலை ஏந்தித் துதித்து வணங்கும் அடியார்களையும் அவர் சுற்றத்தார்களையும் எம்பெருமான், இவ்வுலகிலிருந்து பரமபதம் புகுமாறு அருள்செய்வான். என் நெஞ்சமே! அவன் நீர்மைக் குணத்தைக் கண்டு கொண்டாய் அன்றோ! பரமபதத்தை ஆண்டவாறே, வண்டுகள் வாழும் திருவேங்கட மலையில் கோயில் கொண்டுள்ள பெருமானுக்கு, நீ அடிமை செய்யப் பெற்றாயே! **1050**

என் நெஞ்சமே! நீ குழப்பம் அடையாமல் நல்லதான கைங்கரியம் செய்தால், தொண்டு செய்யும் அடியார்களின் உய்வுக்காக, எம்பெருமான் பூமியில் அவதரித்து, அவர்களை ஆட்கொண்டு, பரமபதம் புகச் செய்கிறான். கோபிகள் நாயகனான இப்பெருமான், மேகங்கள் உயர்ந்து பரவும் திருவேங்கட மலையில் எழுந்தருளி, நித்திய சூரிகளுக்கும் உயிராக விளங்கி ஆள்கிறான். இப்பகவானுக்கு நீ அடிமை செய்யப் பெற்றாய். **1051**

பொங்கு போதியும் பிண்டியும் உடைப்
    புத்தர் நோன்பியர் பள்ளியுள் உறை
தங்கள் தேவரும் தாங்களுமே ஆக என் நெஞ்சம் என்பாய்!
எங்கும் வானவர் தானவர் நிறைந்து
    ஏத்தும் வேங்கடம் மேவி நின்று அருள்
அம் கண் நாயகற்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே. 1052

துவரி ஆடையர் மட்டையர் சமண்
    தொண்டர்கள் மண்டி உண்டு பின்னரும்
தமரும் தாங்களுமே தடிக்க , என் நெஞ்சம் என்பாய்!
கவரி மாக் கணம் சேரும் வேங்கடம்
    கோயில் கொண்ட கண் ஆர் விசும்பிடை
அமர நாயகற்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே. 1053

தருக்கினால் சமண் செய்து சோறு தண்
    தயிரினால் திரளை மிடற்றிடை
நெருக்குவார் அலக்கண் அது கண்டு என் நெஞ்சம் என்பாய்
மருள்கள் வண்டுகள் பாடும் வேங்கடம்
    கோயில் கொண்டு அதனோடும் வானிடை
அருக்கன் மேவிநிற்பாற்கு அடிமைத் தொழில் பூண்டாயே. 1054

சேயன் அணியன் சிறியன் பெரியன்
    என்பதும் சிலர் பேசக் கேட்டிருந்
தே, என் நெஞ்சம் என்பாய் எனக்கு ஒன்றும் சொல்லாதே.
வேய்கள் நின்று வெண் முத்தமே சொரி
    வேங்கட மலை கோயில் மேவிய
ஆயர் நாயகற்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே. 1055

கூடி ஆடி உரைத்ததே உரைத்
    தாய் என் நெஞ்சம் என்பாய்! துணிந்து கேள்;
பாடி ஆடிப் பலரும் பணிந்து ஏத்திக் காண்கிலார்;
ஆடு தாமரையோனும் ஈசனும்
    அமரர் கோனும் நின்று ஏத்தும் வேங்கடத்து
ஆடு கூத்தனுக்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே. 1056





*பருத்து வளரும் அரச மரத்தையும் அசோக மரத்தையும் உரியனவாகக் கொண்ட பௌத்தரும் சமணரும் தங்கள் பள்ளிகளில் தங்கி, தங்கள் தேவதைகளுடன் ஒன்று படுவார்கள். என் நெஞ்சமே! இதனைக் கண்டும், ஈடுபடாமல் விலக்கி, அருளாளன் ஆன திருவேங்கட நாதனுக்கு அடிமை செய்யப் பெற்ற பேறுதான் என்னே! தேவர்களும் அசுரர்களும் நெருங்கி வணங்கும் திருமலையில் அவன் எழுந்தருளி உள்ளான்.* **1052**

*காவி ஆடையும் மொட்டைத் தலையும் உடைய சமணர் தங்களுக்குள் போட்டி இட்டவாறு, உறவினருடன் உண்டு, உடம்பு பருத்து வாழ்வார்கள். என் நெஞ்சமே; நீ இவர்களைப் புறக்கணித்து, கவரிமான்கள் கூடி ஓடும் திருவேங்கட மலையில் உள்ள, நித்திய சூரிகள் தலைவனான, பரமபதநாதனுக்கு அடிமை செய்யப் பெற்ற பேறுதான் என்னே!* **1053**

*வீண் தர்க்கம் செய்து தங்கள் மதம் நிறுவும் சமணர்கள் தயிர்ச் சோற்றைத் தொண்டைக்குள் திணித்து உண்ணும் பொழுது, கண் பிதுங்கும் துன்பத்தைக் கண்டால் பரிதாபமாக உள்ளது! என் அன்பு நெஞ்சே! நீ இவர்கள் வழி செல்லாமல் திருவேங்கட முடையானுக்கு அடிமை செய்யப்பேற்றாயே! வானத்துச் சூரியனுக்கும் உள் உறை இறைவன் ஆனவன், வண்டுகள் இசைபாடும் திருமலையில் எழுந்தருளி உள்ளான்.* **1054**

*சிலர், பரமபத நாதனோ தொலைவில் உள்ளான் என்பர்; திருக்கோவிலில், பெருமான் அருகில் இருப்பதாலேயே புறக்கணிப்பர். அவன் அவதாரச் சிறப்பையோ எளிமை என்று ஒதுக்குவர்; பெருமையை எண்ணி எட்டாதவன் என்று பின்வாங்குவர், என் நெஞ்சமே! இவ்வாறு பலர் பேசக் கேட்டும், என்னிடம் கூறாமல், நீ, மூங்கில்கள் வெடித்து முத்துக்களைச் சொரியும் வேங்கட மலையில் உள்ள ஆயர் தலைவனுக்கு அடிமை செய்யப் பெற்றாயே!* **1055**

*என் பாங்கான நெஞ்சமே! நீ நாட்டாருடன் கூடி, ஆடிப் பேசியதையே பேசியது, போதும்; என் சொல்லைத் துணிந்து கேள். பலரும் இறைவனைப் பாடி, ஆடித்துதித்து வணங்கியும் உள்ளபடி கண்டறியவில்லை. தாமரைப் பூவில் உள்ள பிரமனும், சிவனும், இந்திரனும் ஒன்றுபட்டு நின்று துதிக்கும் திருவேங்கட மலையில் எழுந்தருளியவனே, குரவைக் கூத்தாடிய கண்ணபிரான் ஆவான். இன்று நீ அவனுக்கு அடிமை செய்யப் பெற்றாய்.* **1056**

மின்னு மா முகில் மேவு தண் திரு
வேங்கட மலை கோயில் மேவிய
அன்னம் ஆய் நிகழ்ந்த அமரர் பெருமானைக்
கன்னி மா மதிள் மங்கையர் கலி-
கன்றி இன் தமிழால் உரைத்த இம்
மன்னு பாடல் வல்லார்க்கு இடம் ஆகும். வான் உலகே. 1057

## திருஎவ்வுளூர்

காசை ஆடை மூடி ஓடிக் காதல் செய் தானவன் ஊர்
நாசம் ஆக நம்ப வல்ல நம்பி நம் பெருமான்
வேயின் அன்ன தோள் மடவார் வெண்ணெய் உண்டான் இவன் என்று
ஏச நின்ற எம் பெருமான் - எவ்வுள் கிடந்தானே. 1058

தையலாள்மேல் காதல் செய்த தானவன் வாள் அரக்கன்
பொய்இலாத பொன் முடிகள் ஒன்பதோடு ஒன்றும் அன்று
செய்தவெம் போர் தன்னில் அங்கு ஓர் செஞ்சரத்தால் உருள
எய்தஎந்தை எம்பெருமான்- எவ்வுள் கிடந்தானே. 1059

முன் ஓர் தூது வானரத்தின் வாயில் மொழிந்து அரக்கன்
மன்ஊர் தன்னை வாளியினால் மாள முனிந்து அவனே
பின்ஓர் தூது ஆதி மன்னர்க்கு ஆகி பெரு நிலத்தார்
இன்னார் தூதன் என நின்றான் - எவ்வுள் கிடந்தானே. 1060

பந்து அணைந்த மெல் விரலாள் பாவை தன் காரணத்தால்
வெந் திறல் ஏறு ஏழும் வென்ற வேந்தன், விரி புகழ் சேர்
நந்தன் மைந்தன் ஆக ஆகும் நம்பி நம் பெருமான்.
எந்தை தந்தை தம் பெருமான்- எவ்வுள் கிடந்தானே. 1061

பாலன் ஆகி ஞாலம் ஏழும் உண்டு பண்டு ஆல் இலைமேல்
சால நாளும் பள்ளி கொள்ளும் தாமரைக் கண்ணன் எண்ணில்
நீலம் ஆர் வண்டு உண்டு வாழும் நெய்தல் அம் தண் கழனி
ஏலம் நாறும் பைம் புறவின் எவ்வுள் கிடந்தானே. 1062

சோத்தம் நம்பி என்று தொண்டர் மிண்டித் தொடர்ந்து அழைக்கும்
ஆத்தன் நம்பி செங்கண் நம்பி ஆகிலும் தேவர்க்கு எல்லாம்
மூத்த நம்பி முக்கண் நம்பி என்று முனிவர் தொழுது
ஏத்தும் நம்பி எம்பெருமான் -எவ்வுள் கிடந்தானே. 1063





*அன்னமாய் அவதரித்த நித்திய சூரிகள் தலைவன், மேகமோடு மின்னல் தோன்றும் வேங்கட மலையில் கோயில் கொண்டான். இப்பெருமானை, கல் மதிளுடைய திருமங்கைக்கு, மன்னரும், கலிபாவத்தைப் போக்கியவரும் ஆகிய, ஆழ்வார் துதித்த தமிழ்ப் பாடல்களைப் பயில்பவர்க்கு பரமபதம் இடம் ஆகும்.* **1057**

## திரு எவ்வுளூர்

*காவி ஆடைக்குள் மறைந்தவனாய், சீதைத் தாயிடம் காமம் கொண்ட இராவணனின் ஊரை அழித்த ஸ்ரீராமன் நம் சுவாமி ஆவார். அவரே மூங்கிலை ஒத்த தோள்களுடைய இடைச்சிகளின் வெண்ணெயைத் திருடி உண்டு, ஏச்சுக்கு ஆளான கண்ணன் ஆவார். திரு எவ்வுளூரில், இவர் பள்ளிகொண்டுள்ளார்.* **1058**

*தாயான சீதாதேவியிடம் காமம் கொண்ட, வாளேந்திய அசுரனான இராவணனின் உண்மையான பத்துத் தலைகளையும், போரிலே அம்பால் வீழ்த்திய ஸ்ரீராமன், என் தந்தை ஆவார். இவர் திரு எவ்வுளூரில் பள்ளி கொண்டுள்ளார்.* **1059**

*ஸ்ரீராமன், வானரனான அனுமன் வாயாலே தூது அனுப்பி, அரக்கனான இராவணன் ஊரை, அம்பால் அழித்தான். அவனே, கண்ணனாக அவதரித்தபொழுது, பாண்டவ மன்னர்களின் தூதனாகச் சென்று, உலகோர், 'பாண்டவதூதன்' எனப் புகழுமாறு நின்றான். இவனே, திருஎவ்வுளூரில் பள்ளி கொண்டுள்ளான்.* **1060**

*பந்து ஏந்திய மென்மை வாய்ந்த விரல்களுடைய நப்பின்னையைப் பெற, கொடிய ஏழு எருதுகளை வென்ற, நந்தகோபன் மகனான கண்ணன், மன்னனாகப் புகழ்பெற்ற, நம்பியான நம் தலைவன் ஆவான். தந்தை, பாட்டன், முப்பாட்டன் காலமாக, நம் பெருமான் ஆன, அவன், திருஎவ்வுளூரில் பள்ளி கொண்டுள்ளான்.* **1061**

*பிரளய காலத்தில், குழந்தையாய், ஏழுலகங்களையும் உண்டு ஆலந்தளிரில் பள்ளிகொண்ட தாமரைக் கண்ணன், திருஎவ்வுளூரில் பள்ளிகொண்டுள்ளான். நீல வண்டுகள் ஆம்பல் பூவில் படிந்து, தேன்பருகி வாழும் வயல்களும் மணம் வீசும் சோலைகளும் இங்கே உள்ளன.* **1062**

*அடியார்கள் நெருங்கி, 'உன்னை வணங்குகிறோம்' என்று துதிக்கும்படியானவன் நண்பனாகவும் உள்ளான். சிவந்த கண்ணழகுடைய இவனே தேவர்களுக்கெல்லாம் மூத்த முழு முதலோன். மூன்று கண்களுடைய சிவனும் முனிவரும் வணங்கும் பெருமையுடைய இந்நம்பி, திருஎவ்வுளூரில் பள்ளி கொண்டான்.* **1063**

திங்கள், அப்பு, வான், எரி, கால், ஆகி திசைமுகனார்
தங்கள் அப்பன் சாமி அப்பன் பாகத்து இருந்த வண்டுஉண்
தொங்கல் அப்புநீள் முடியான் சூழ்கழல் சூட நின்ற
எங்கள் அப்பன், பெருமான்-எவ்வுள் கிடந்தானே. 1064

முனிவன், மூர்த்தி மூவர் ஆகி வேதம் விரித்து உரைத்த
புனிதன் பூவை வண்ணன் அண்ணல் புண்ணியன் விண்ணவர் கோன்
தனியன், சேயன், தான் ஒருவன் ஆகிலும் தன் அடியார்க்கு
இனியன், எந்தை எம் பெருமான்-எவ்வுள் கிடந்தானே. 1065

பந்து இருக்கும் மெல் விரலாள் பாவை, பனி மலராள்,
வந்து இருக்கும் மார்வன் நீல மேனி மணி வண்ணன்,
அந்தரத்தில் வாழும் வானோர் நாயகன் ஆய் அமைந்த
இந்திரற்கும் தம் பெருமான்- எவ்வுள் கிடந்தானே. 1066

இண்டை கொண்டு தொண்டர் ஏத்த எவ்வுள் கிடந்தானை
வண்டு பாடும் பைம் புறவின் மங்கையர் கோன் கலியன்
கொண்ட சீரால் தண் தமிழ் செய் மாலை ஈர் ஐந்தும் வல்லார்
அண்டம் ஆள்வது ஆணை; அன்றேல் ஆள்வர் அமர் உலகே. 1067

## திருவல்லிக்கேணி

வில் பெரு விழவும் கஞ்சனும் மல்லும்
வேழமும் பாகனும் வீழச்
செற்றவன் தன்னைப் புரம் எரி செய்த
சிவன் உறுதுயர் களை தேவை
பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு
பார்த்தன் தன் தேர்முன் நின்றானை,
சிற்றவை பணியால் முடி துறந்தானைத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 1068

வேதத்தை வேதத்தின் சுவைப் பயனை
விழுமிய முனிவரர் விழுங்கும்
கோது இல் இன் கனியை நந்தனார் களிற்றைக்
குவலயத்தோர் தொழுது ஏத்தும்
ஆதியை அமுதை என்னை ஆள் உடை
அப்பனை-ஒப்பவர் இல்லா
மாதர்கள் வாழும் மாட மா மயிலைத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 1069





*சந்திரன், நீர், வானம், தீ, காற்று ஆகியவற்றின் ஆத்மாவாய் நான்முகன் தந்தையாய், ஸாமவேதப் பொருள் ஆனவன்; வண்டுகள் தேன் உண்ணும் கொன்றையுடன், கங்கையை முடியில் கொண்ட சிவன், தலையிலே சூடுகின்ற திருவடிகள் உடைய எந்தை திரு எவ்வுளூரில் கிடந்தான்.* 1064

*படைக்க எண்ணி மும்மூர்த்தி ஆனவன்; வேதப் பொருளைக் கீதையாக அருளிய புனிதன்; காயாம்பூ நிறமுடையவன்; நித்திய சூரிகள் தலைவன்; தனியனாய் யோகிகளால் அறியப்படாதவன் ஆனாலும் அடியார்க்கு இனியவன்; இத்தந்தை திருஎவ்வுளூரில் பள்ளி கொண்டான்.* 1065

*பந்து பிடித்த விரல்களை உடைய தாமரைச் செல்வி வாழும் மார்பு உடைய நீல நிற மேனியன், மேலுலகத் தேவர்கள் தலைவன் ஆன, இந்திரனுக்கும் தலைவன்; இப்பெருமான் திரு எவ்வுளூரில் கண் வளர்ந்தான்.* 1066

*அடியார்கள் பூமாலை இட்டுத் துதிக்கும்படி, திருஎவ்வுளூரில் பள்ளி கொண்டவனை, வண்டுபாடும் சோலைகள் உள்ள திருமங்கைக்கு மன்னரான கலியன் தமிழில் பாடினார். இப்பத்துப்பாடல்களையும் கற்பவர் உலகத்தை ஆள்வது உறுதி; அன்றேல் பரமபதத்தை ஆள்வர்.* 1067

## திருவல்லிக்கேணி

*பெரிய வில் விழாவும், கம்சனும், மல்லர்களும், யானையும் பாகனும் அழியும் படி செய்த கண்ணனான திருமால், திரிபுரம் எரித்த சிவனின் துயரத்தைப் போக்கினான். அர்ஜுனன் தேர்முன்னே, கோலேந்தி நின்று பகைவர்களை மாளச் செய்தான். சிறிய தாய் கைகேயியின் ஆணையால் அரச முடியைத் தியாகம் செய்த பெருமானைத் திருவல்லிக்கேணியில் கண்டேன்.* 1068

*வேதப் பொருளாய், வேதகர்மங்களின் பயனாய் விளங்குபவன், ஸனகாதி முனிவர்களுக்குக் கோதில்லாத இனியபழம் போல அனுபவிக்கத்தக்கவன். யானைக் குட்டி போன்ற கண்ணன். நந்தகோபனுக்கு இனியவன். உலகத்தார் தொழுது ஏத்தும் ஆதி காரணனான அவன் அமுதம் போன்றவன். என்னை அடிமை கொண்ட அவனை, ஒப்பற்ற பெண்கள் வாழும் மாடங்கள் உள்ள மயிலைத் திருவல்லிக்கேணியில் கண்டேன்.* 1069

வஞ்சனை செய்யத் தாய் உரு ஆகி
வந்த பேய் அலறி மண் சேர,
நஞ்சு அமர் முலைஊடு உயிர் செக உண்ட
நாதனை தானவர் கூற்றை
விஞ்சை வானவர் சாரணர் சித்தர்,
வியந்து துதி செய்யப் பெண் உரு ஆகி
அம் சுவை அமுதம் அன்று அளித்தானைத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 1070

இந்திரனுக்கு என்று ஆயர்கள் எடுத்த
எழில் விழவில் பழ நடைசெய்
மந்திர விதியில் பூசனை பெறாது
மழை பொழிந்திட தளர்ந்து ஆயர்
எந்தம்மோடு இன ஆநிரை தளராமல்,
எம் பெருமான் அருள் என்ன,
அந்தம் இல் வரையால் மழை தடுத்தானை-
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 1071

இன் துணைப் பதுமத்து அலர்மகள் தனக்கும்
இன்பன் நல் புவி தனக்கு இறைவன்,
தன் துணை ஆயர் பாவை நப்பின்னை -
தனக்கு இறை மற்றையோர்க்கு எல்லாம்
வன் துணை, பஞ்ச பாண்டவர்க்கு ஆகி,
வாய் உரை தூது சென்று இயங்கும்
என் துணை, எந்தை தந்தை தம்மானைத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 1072

அந்தகன் சிறுவன் அரசர் தம் அரசற்கு
இளையவன் அணி இழையைச் சென்று,
எந்தமக்கு உரிமை செய் என, தரியாது,
எம் பெருமான்: அருள் என்ன
சந்தம் அல் குழலாள் அலக்கண் நூற்றுவர் தம்
பெண்டிரும் எய்தி நூல் இழப்ப
இந்திரன் சிறுவன் தேர் முன் நின்றானை -
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 1073

பரதனும் தம்பி சத்துருக்கனனும்,
இலக்குமனோடு மைதிலியும்
இரவும் நன் பகலும் துதி செய்ய நின்ற
இராவணாந்தகனை எம்மானை
குரவமே கமழும் குளிர் பொழிலூடு
குயிலொடு மயில்கள் நின்று ஆல,
இரவியின் கதிர்கள் நுழைதல் செய்தறியாத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 1074





வஞ்சனையுடன் தாய்வடிவில் வந்த பூதனைப்பேய் பூமியில் கதறி விழும்படி, ஸ்ரீகிருஷ்ணன், நஞ்சு முலை வழியே உயிரைக் குடித்தான். இத்தலைவன் அசுரர்க்கு யமனாகப் பெண் வடிவம் கொண்டு, வித்தியாதரர், சாரணர், சித்தர் துதிசெய்ய, இன்னமுதத்தைத் தேவர்களுக்குக் கொடுத்தான். இப்பெருமானைத் திருவல்லிக் கேணியில் கண்டேன். **1070**

இந்திரனுக்கென்று இடையர்கள் நடத்திய அழகிய வேள்வியில் மரபு வழி மந்திரப் படியான பூஜையை அவன் பெற முடியாததால் மழையைப் பொழிவித்தான். "எம்பெருமானே! எம் பசுக்கூட்டத்தைக் காத்திடுக" என்று இடையர் வருந்தி வேண்டினர். கண்ணன் அளவற்ற பெரிய கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து, மழையிலிருந்து காத்தான். இப்பெருமானைத் திருவல்லிக் கேணியில் கண்டேன். **1071**

தாமரையில் தோன்றிய, இனிய துணையான, திருமகளுக்குத் திருமால் இன்பம் தரும் நாயகன்; பொறுமை உடைய பூமிதேவிக்கும் இறைவன்; நப்பின்னை ஆகிய இடைப் பெண்ணுக்கும் கேள்வன். மற்றவர்களுக்கோ வலிய துணைவன் ஆவான். பஞ்ச பாண்டவர்க்கு எல்லா உறவுமாகி அவர்கள் சொல்படி தூது சென்றான். எனக்குத் துணையாக உள்ள என் குலதெய்வத்தைத் திருவல்லிக்கேணியில் கண்டேன். **1072**

குருடன் திருதிராட்டிரனுடைய மகன் துரியோதன மன்னனுக்குத் தம்பியான துச்சாதனன், திரௌபதியிடம் சென்று, 'நீ எங்களுக்கு அடிமை செய்" என்றான். இதனைக் பொறாத அவள் கண்ணனின் அருளை வேண்டினாள். அவள் அடைந்த துன்பத்தைத் துரியோதனாதியர் மனைவியர் அடைந்து மங்கல நூல் இழக்குமாறு கண்ணன் அர்ஜுனன் தேர்முன்னே நின்று போர் நடத்தினான். இக்கண்ணனைத் திருவல்லிக்கேணியில் கண்டேன். **1073**

பரதனும் தம்பி சத்ருக்னனும் இலக்குவனும் சீதையும் இரவும் பகலும் துதிசெய்யும்படி எழுந்தருளிய, இராவணவதம் செய்த இராமனைத் திருவல்லிக்கேணியில் கண்டேன். இங்கு சூரிய கிரணங்கள் நுழையாத சோலைகளில் குரவ மலர்களின் மணம் வீசும், குயில்களுடன் மயில்கள் ஆடும். **1074**

பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன்
வாயில் ஓர் ஆயிரம் நாமம்
ஒள்ளிய ஆகிப் போத ஆங்கு அதனுக்கு
ஒன்றும் ஓர் பொறுப்பு இலன் ஆகி
பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண் புடைப்ப
பிறை எயிற்று அனல் விழிப் பேழ் வாய்
தெள்ளிய சிங்கம் ஆகிய தேவைத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே. 1075

மீன் அமர் பொய்கை நாள்மலர் கொய்வான்
வேட்கையினோடு சென்று இழிந்த
கான் அமர் வேழம் கைஎடுத்து அலறக்
கரா அதன் காலினைக் கதுவ
ஆனையின் துயரம் தீரப் புள் ஊர்ந்து
சென்று நின்று ஆழிதொட்டானை
தேன் அமர் சோலை மாட மா மயிலைத்
திருவல்லிக் கேணிக் கண்டேனே. 1076

மன்னு தண் பொழிலும் வாவியும் மதிளும்
மாட மாளிகையும் மண்டபமும்
தென்னன் தொண்டையர் கோன் செய்த நல் மயிலைத்
திருவல்லிக்கேணி நின்றானை,
கன்னி நல் மாட மங்கையர் தலைவன்
காமரு சீர்க் கலிகன்றி
சொன்ன சொல் மாலை பத்து உடன் வல்லார்
சுகம் இனிது ஆள்வர் வான் உலகே. 1077

## திருநீர்மலை

அன்று ஆயர் குலக் கொடியோடு அணி மா
மலர் மங்கையொடு அன்புஅளவி, அவுணர்க்கு
என்றானும் இரக்கம் இலாதவனுக்கு
உறையும் இடம் ஆவது இரும் பொழில் சூழ்
நன்றுஆய புனல்நறையூர், திருவாலி
குடந்தை தடம் திகழ் கோவல்நகர்;
நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தாற்கு
இடம் மா மலை ஆவது - நீர்மலையே. 1078





பள்ளியில் படித்து வந்த தன்மகன் வாயால் இறைவனின் ஆயிரம் திரு நாமங்களைக் கூறக் கேட்ட இரணியன் பொறுக்க முடியாமல், சினந்து, தூணை அடித்தான். அதிலிருந்து, பிறைச் சந்திரனைப் போன்ற பற்களுடன் நெருப்புப் பொறிசிந்தும் கண்களுடன் பெரிய வாயுடைய நரசிம்மன் தோன்றினான். இந்தத் தெளிந்த சிங்கப் பிரானைத் திருவல்லிக் கேணியில் கண்டேன். 1075

காட்டில் உலவி வந்த யானை, மீன்கள் வாழும் நீர்மடுவில் செவ்விய பூப்பறிக்க ஆசையுடன் இறங்கியதும் முதலை அதன் காலைக் கவ்விற்று. உடனே யானை, தன் கையைத் தூக்கிப் பிளிறிப் பகவானைச் சரண் அடைந்தது; பெரிய திருவடியின் மேலேறி விரைந்த திருமால், தன் சக்கரத்தை விடுத்து அக்கஜேந்திரனின் துன்பத்தைப் போக்கினான். தேன் மாறாத சோலைகளும் மாடங்களும் உள்ள மயிலைத் திருவல்லிக்கேணி யில் இப்பெருமானைக் கண்டேன். 1076

தொண்டை நாட்டு அரசன் ஆட்சிக்குட்பட்ட மயிலைத் திருவல்லிக்கேணியில் குளிர்ந்த சோலைகளும் குளங்களும் மதிளும், மாடங்களும் மாளிகைகளும் மண்டபங்களும் விளங்குவன. இத்தலத்தில் எழுந்தருளியுள்ள பெருமானைத் திருமங்கை மன்னரான கலிகன்றி, இப்பத்துப் பாசுரகங்களில் துதித்தார். இவற்றைக் கற்கவல்லார், இனிதே பரமபதத்தை அடையப்பெறுவர். 1077

## திருநீர்மலை

கண்ணபிரான் இடைக்குலக் கொடியான நப்பின்னை யுடனும் தாமரைச் செல்வியான ருக்மிணியுடனும் அன்பு கலந்து பரிமாறுபவன்; ஆயினும் அசுரர்க்கு என்றும் இரக்கம் காட்டாதவன். இப்பெருமான் சோலைகள் சூழ்ந்த நீர்வளம் உடைய திருநறையூரில் நின்றபடியும் திருவாலியில் அமர்ந்த நிலையிலும் திருக்குடந்தையில் பள்ளிகொண்டும், குளங்கள் உள்ள திருக்கோவலூரில் நடந்தும் காட்சி தருகிறான். எனினும் இவன் நிரந்தரமாக வாசம் செய்யும் திருத்தலமோ சிறந்த திருநீர்மலை ஆகும். 1078

காண்டாவனம் என்பது ஓர் காடு அமரர்க்கு
அரையன்அது, கண்டு அவன் நிற்க, முனே
மூண்டு ஆர் அழல் உண்ண முனிந்ததுவும்;
அது அன்றியும், முன்உலகம் பொறை தீர்த்து
ஆண்டான்,அவுணன் அவன் மார்பு அகலம்
உகிரால் வகிர் ஆக முனிந்து அரியாய்
நீண்டான், குறள் ஆகி நிமிர்ந்தவனுக்கு
இடம் மா மலை ஆவது -நீர்மலையே. 1079

அலம், மன்னும் அடல் சுரி சங்கம் எடுத்து,
அடல் ஆழியினால் அணி ஆர் உருவில்,
புலமன்னு வடம்புனை கொங்கையினாள்
பொறைதீர, முன்ஆள் அடுவாள் அமரில்
பல மன்னர் பட, சுடர் ஆழியினைப்
பகலோன் மறையப் பணிகொண்டு, அணி சேர்
நிலமன்னனும் ஆய், உலகு ஆண்டவனுக்கு
இடம் மா மலை ஆவது -நீர்மலையே. 1080

தாங்காதது ஓர் ஆள் அரி ஆய், அவுணன் -
தனை வீட முனிந்து அவனால் அமரும்
பூங்கோதையர் பொங்கு எரி மூழ்க விளைத்து,
அது அன்றியும், வென்றி கொள் வாள் அமரில்
பாங்கு ஆக முன் ஐவரொடு அன்பு அளவி,
பதிற்றைந்து இரட்டிப் படை வேந்தர் பட,
நீங்காச் செருவில் நிறை காத்தவனுக்கு
இடம் மா மலை ஆவது -நீர்மலையே. 1081

மாலும்கடல், ஆர, மலைக் குவடு இட்டு,
அணை கட்டி, வரம்பு உருவ, மதி சேர்
கோலமதிள் ஆய இலங்கை கெட,
படை தொட்டு, ஒருகால், அமரில் அதிர
காலம் இது என்று அயன் வாளியினால்
கதிர் நீள் முடி பத்தும் அறுத்தும் அமரும்
நீலமுகில் வண்ணன் எமக்கு இறைவற்கு
இடம் மா மலை ஆவது -நீர்மலையே. 1082

பார்ஆர் உலகும், பனி மால் வரையும்,
கடலும், சுடரும் இவை உண்டும் எனக்கு
ஆராது என நின்றவன்; எம் பெருமான்,
அலை நீர் உலகுக்கு அரசு ஆகிய அப்
பேரானை முனிந்த முனிக்கு அரையன்,
பிறர் இல்லை நுனக்கு எனும் எல்லையினான்,
நீர்ஆர் பெயரான்,நெடுமால் - அவனுக்கு
இடம் மா மலை ஆவது -நீர்மலையே. 1083





*கண்ணன் தேவேந்திரன் காணும்படி காண்டவ வனத்தைத் தீயால் விழுங்கச் செய்து அழித்தான்; பாரதப்போர் செய்வித்துப் பூமி பாரம் போக்கினான். நரசிம்மமாகத் தோன்றி இரணியாசுரன் மார்பை நகங்களால் பிளந்தான்; வாமன வடிவில் வந்து திரிவிக்கரமனாக நிமிர்ந்து உலகளந்தான். இப்பெருமான் திருத்தலம் திருநீர்மலை ஆகும்.* **1079**

*தன் அழகிய மேனியில், சக்கரம், சங்கு. கலப்பை ஆகிய போர்ப்படைகளைத் தாங்கிய கண்ணன், பாரதப் போரில் மன்னர்களை அழியச் செய்தான். அதனால், ஆரம் அணிந்த மார்பகங்களைப் பெற்ற பூமிதேவியின் பாரத்தைப் போக்கினான். ஒளியுடைய தன் சக்கரத்தால் சூரியனை மறையச் செய்தான். உலகாண்ட இந்நில மன்னனின் தலம் திருநீர்மலை ஆகும்.* **1080**

*நரசிம்மப்பிரான் தடுக்க இயலாதபடி சீறி எழுந்து, இரணியனைக் கொன்று, அவ்வசுரனின் மனைவியர், பொங்கி எரியும் நெருப்பில் விழும்படி செய்தான். பாண்டவர்களுடன் அன்புகொண்டு அளவளாவிப் பாரதப் போரில் துரியோதனாதியர் நூறுபேரும் அழியும்படி செய்து, திரௌபதியின் பெண்மை குலையாதபடி காத்தான். இப்பெருமான் இடம் திருநீர்மலை ஆகும்.* **1081**

*ஸ்ரீ ராமன், அலைபொங்கும் கடல்மீது, மலைச்சிகரங்களைக் கரைதட்டும்படி போடச்செய்து அணை கட்டினான்; சந்திரனைத்தொடும் மதிள் சூழ்ந்த இலங்கையை' ஆயுதங்களால் அழித்தான். 'இராவணன் அழியும்காலம் இதுவே' என முடிவு செய்தவாறு, இராமன், பிரம்மாஸ்திரத்தை ஏவி, அவன் பத்துத்தலைகளையும் அறுத்தான். இந்த நீலமேக நிறமுடைய இறைவன் திருத்தலம் திருநீர்மலை ஆகும்.* **1082**

*எம்பெருமான் பிரளய காலத்தில் பூமி, பனிமலைகள், கடல்கள், சந்திரசூரியர் ஆகிய எல்லாவற்றையும் உண்டு காப்பாற்றினான். அலைகடல் சூழ்ந்த உலகுக்கு அரசர்கள் என்னும் பெயரே இல்லாதபடி அரசர்குலத்தைச் சினந்து சாடிய முனிவன் பரசுராமன், இராமபிரானிடத்தே அடங்கி, "உனக்குப் புறம்பான பெரியவர் வேறிலர்; நீயே எல்லை இல்லாதவன்" என்று கூறினான். அன்புடன் கலந்து பரிமாறும் எளிமையே இயல்பாகக் கொண்ட நீர் வண்ணப்பெருமானின் இடம் திருநீர்மலை ஆகும்.* **1083**

புகர் ஆர் உரு ஆகி முனிந்தவனைப்
புகழ் வீட முனிந்து உயிர் உண்டு, அசுரன்
நகர் ஆயின பாழ் பட, நாமம் எறிந்து,
அது அன்றியும் வென்றி கொள் வாள் அவுணன்,
பகராதவன் ஆயிரம் நாமம், அடிப்
பணியாதவனை, பணியால், அமரில்
நிகர் ஆயவன் நெஞ்சு இடந்தான் அவனுக்கு
இடம் மா மலை ஆவது -நீர்மலையே. 1084

பிச்சச் சிறு பீலி பிடித்து, உலகில்
பிணம் தின் மடவார் அவர் போல், அங்ஙனே
அச்சம் இலர் நாண் இலர் ஆதன்மையால்,
அவர் செய்கை வெறுத்து, அணி மா மலர் தூய்,
நச்சி, நமனார் அடையாமை நமக்கு
அருள்செய் என உள் குழைந்து ஆர்வமொடு
நிச்சம் நினைவார்க்கு அருள்செய்யும் -அவற்கு
இடம் மா மலை ஆவது நீர்மலையே. 1085

பேசும் அளவு அன்று இது, வம்மின், நமர்!
பிறர் கேட்பதன் முன்; பணிவார் வினைகள்
நாசம் அது செய்திடும்; ஆதன்மையால்,
அதுவே நமது உய்விடம்; நாள்மலர்மேல்
வாசம் அணி வண்டு அறை பைம் புறவில்
மனம் ஐந்தொடு நைந்து உழல்வார் மதி இல்
நீசர்-அவர் சென்று அடையாதவனுக்கு
இடம் மா மலை ஆவது -நீர்மலையே. 1086

நெடுமால் அவன் மேவிய நீர்மலைமேல்
நிலவும் புகழ் மங்கையர்கோன், அமரில்
கட மா களி யானை வல்லான், கலியன்
ஒலி செய் தமிழ் மாலை வல்லார்க்கு உடனே
விடு மால் வினை; வேண்டிடில். மேல் உலகும்
எளிது ஆயிடும்; அன்றி, இலங்கு ஒலி சேர்
கொடு மா கடல் வையகம் ஆண்டு, மதிக்
குடை மன்னவர் ஆய், அடி கூடுவரே. 1087





ஒளியுடைய இரணியாட்சனை எம்பெருமான் சினந்து, அவன் புகழ் கெட, உயிரை முடித்தான்; அவ்வசுரனின் படை வீடுகளைப் பாழாக்கி, அவன் பெயர் அடியோடு தெரியாதபடி செய்தான். வாளையே வெற்றிக்குத்துணையாகக் கருதி, இறைவன் ஆயிரம் நாமங்களில் ஒன்றுகூடச் சொல்லாத வணங்கா முடியன் இரணியனைப் போரில் எதிர்த்து நெஞ்சைப் பிளந்தான். பிரகலாதாழ்வான் ஆணையை மேற்கொண்ட இப்பெருமானின் திருத்தலம் திருநீர்மலை ஆகும். 1084

சமணர் கைகளில் மயிலிறகுக் கொத்துக்களைப் பிடித்தவாறு, பிணம்தின்னும் பெண்பேய்களைப்போல, வெட்கமும் பயமும் இல்லாமல் ஆடையின்றிச் செல்வர். வேதமரியாதையும் இறைவழிபாடும் இல்லாத அவர் செய்கையை நீங்கள் வெறுத்து ஒதுக்குங்கள். இறைவனை விரும்பி மலர்களைத்தூவி, 'யமனார் வராதபடி அருள்க" என்று வேண்டி நெஞ்சு நெகிழ்ந்து, ஆர்வமுடன் தினமும் வழிபடுங்கள். இவ்வாறு எண்ணுபவர்க்கு அருள் செய்பவனின் திருத்தலம் திருநீர்மலை ஆகும். 1085

நம்மவர்களே! சொல்லில் அடங்காத இறைவன் சீர்மையைப் பிறர் கேட்பதற்கு முன்னே வந்து கேளுங்கள். அவனை வணங்கினால் நம் பாவங்கள் தொலையும்; அவனே நமக்கு உய்விடம் ஆவான். நெஞ்சம், ஒலி, ஊறு, வடிவம், சுவை, நாற்றம் ஆகியவற்றில் உழன்று அறிவு கேடு அடையும் தாழ்ந்தவர்களுக்கு அவன் கிட்ட அரியவன். இப்பெருமானின் தலமான திருநீர்மலையில் செவ்விய பூக்களின் மணம் வீசும்; வண்டொலிக்கும் சோலைகள் உண்டு. 1086

நிலையான புகழுடைய திருமங்கைமன்னர் திருநீர்மலைத் திருமாலைப் பற்றி இத்தமிழ்மாலையை அருளினார். போரில் மதயானையை நடத்தவல்ல கலியன் அருளிய இப்பாசுரங்களைப் பயில்பவர்களின் வினைகள் ஒழியும். வேண்டினால் மேல் உலகம் எளிதில் அடையலாம். கடல் சூழ்ந்த இவ்வுலகில் கொற்றக் குடைக்கீழ் மன்னராய் அரசாளப் பெற்றுப் பின்னர் இறைவன் திருவடிகளை அடையலாம். 1087

## திருக்கடல்மல்லை – 1

பார் ஆயது உண்டு உமிழ்ந்த பவளத் தூணை;
படு கடலில் அமுதத்தை; பரி வாய் கீண்ட
சீரானை; எம்மானை; தொண்டர் தங்கள்
சிந்தையுள்ளே முளைத்து எழுந்த தீம் கரும்பினை;
போர் ஆனைக் கொம்பு ஒசித்த போர் ஏற்றினை;
புணர் மருதம் இற நடந்த பொன் குன்றினை;
கார் ஆனை இடர் கடிந்த கற்பகத்தைக்
கண்டது நான்- கடல்மல்லைத் தலசயனத்தே. 1088

பூண்டு அவத்தம், பிறர்க்கு அடைந்து தொண்டு பட்டுப்
பொய்ந் நூலை மெய்ந் நூல் என்று என்றும் ஓதி,
மாண்டு அவத்தம் போகாதே வம்மின்: எந்தை;
என் வணங்கப்படுவானை; கணங்கள் ஏத்தும்
நீண்ட வத்தை; கரு முகிலை; எம்மான் தன்னை;
நின்றவூர் நித்திலத்தை; தொத்து ஆர் சோலைக்
காண்டவத்தைக் கனல் எரிவாய்ப் பெய்வித்தானைக்
கண்டது நான் -கடல்மல்லைத் தலசயனத்தே. 1089

உடம்பு உருவில் மூன்று ஒன்றாய், மூர்த்தி வேறு ஆய்,
உலகு உய்ய நின்றானை; அன்று, பேய்ச்சி
விடம் பருகு வித்தகனை; கன்று மேய்த்து
விளையாட வல்லானை; வரைமீ கானில்
தடம் பருகு கரு முகிலை; தஞ்சைக் கோயில்
தவ நெறிக்கு ஓர் பெரு நெறியை; வையம் காக்கும்
கடும் பரிமேல் கற்கியை நான் கண்டுகொண்டேன் -
கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. 1090

பேய்த் தாயை முலை உண்ட பிள்ளை தன்னை;
பிணை மருப்பின் கருங் களிற்றை; பிணை மான் நோக்கின்
ஆய்த் தாயர் தயிர் வெண்ணெய் அமர்ந்த கோவை;
அந்தணர் தம் அமுதத்தை; குரவை முன்னே
கோத்தானை; குடம் ஆடு கூத்தன் தன்னை;
கோகுலங்கள் தளராமல் குன்றம் ஏந்திக்
காத்தானை; எம்மானைக் கண்டுகொண்டேன் -
கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. 1091





## திருக்கடல் மல்லை – 1

*பூமியை உண்டு உமிழ்ந்து காத்த திருமால் பவளத்தூண் போலே பற்றுவதற்கு இனியவன்; பாற்கடலில் அமுதம் போன்றவன். குதிரையாய் வந்த கேசியின் வாயைக் கிழித்த என் தலைவன் அடியார்கள் நெஞ்சில் வளர்ந்த இனிய கரும்பு ஆவான். குவலயாபீட யானையின் கொம்பை ஒடித்த அப்போர்ச்சிங்கம் மருதமரங்கள் விழும்படி நடந்த மலைபோன்றவன். கஜேந்திரனின் ஆபத்தைப் போக்கிய கற்பகமான பெருமானை அடியேன் திருக்கடல் மல்லைத் தலசயனத்தில் கண்டேன்.* **1088**

*வீண் செயல்களை மேற்கொண்டு, தாழ்ந்தோர்க்கு அடிமை செய்யாதீர். பொய்யான நூல்களைக் கற்று, மெய் என நம்பி, வீணாகாமல், உய்வடைய வாருங்கள். ஞானிகளால் துதிக்கப்படும் தந்தையான மேகவண்ணன், திருநின்றவூரில் முத்துத் திரளாய் நிற்கிறான். பூஞ்சோலைக் காண்டவ வனத்தைத் தீயின் வாயில் இட்டு அழித்த எம்மானை, நான், கடல்மல்லைத் தலசயனத்தில் கண்டேன்.* **1089**

*திருமேனிகளில் மூவராய் ஒன்றுபட்டு, உலகைக் காப்பதில் விஷ்ணுவாய் வேறுபட்டு, எம்பெருமான் பிரமனுக்கும் சிவனுக்கும் உள்நின்று நியமிக்கிறான். பூதனையின் நஞ்சைக் குடித்தவன்; கன்றுகளை மேய்த்தவன்; மலைச்சுனையில் தானும் நீர்பருகுவது போல நடித்து, இளங்கன்றுகளை நீரூட்டுபவன். இம்மேக நிறப்பெருமான் தஞ்சைமாமணிக்கோவிலில் உள்ளான். தன்னை அடைய அடியார்களுக்குத் தானே உபாயம் ஆனவன். குதிரைமேலே கல்கியாக வரப்போகிறவனை நான் கடல்மல்லைத் தலசயனத்தில் கண்டேன்.* **1090**

*தாயாய் வந்த பூதனைப்பேயின் முலை உண்ட கண்ணன், பிணைந்த கொம்புகளுடைய யானை போன்றவன். மான் விழிகொண்ட இடைச்சிகளின் தயிரையும் வெண்ணெயையும் உண்டான். அந்தணர்களுக்கு அவன் அமுதம். குரவைக்கூத்தும் குடக்கூத்தும் ஆடிய கண்ணன், பசுக்கள் நோகாதபடி மலையைத் தூக்கிக் காத்தான். இந்த எம்மானை நான், மணம் வீசும் சோலைகள் சூழ்ந்த கடல்மல்லைத் தலசயனத்தில் கண்டேன்.* **1091**

பாய்ந்தானை, திரிசகடம் பாறி வீழப்
பாலகன் ஆய் ஆல்இலையில் பள்ளி இன்பம்
ஏய்ந்தானை; இலங்குஒளி சேர்மணிக் குன்று அன்ன
ஈர்இரண்டு மால்வரைத் தோள் எம்மான் தன்னை;
தோய்ந்தானை நிலமகள் தோள், தூதில் சென்று அப்
பொய் அறைவாய்ப் புகப் பெய்த மல்லர் மங்கக்
காய்ந்தானை; எம்மானைக் கண்டுகொண்டேன் -
கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. 1092

கிடந்தானை, தடங்கடலுள் பணங்கள் மேவிக்
கிளர் பொறிய மறி திரிய அதனின் பின்னே
படர்ந்தானை; படுமதத்த களிற்றின் கொம்பு
பறித்தானை; பார் இடத்தை எயிறு கீற
இடந்தானை, வளை மருப்பின் ஏனம் ஆகி;
இருநிலனும் பெருவிசும்பும் எய்தா வண்ணம்
கடந்தானை, எம்மானைக் கண்டுகொண்டேன் -
கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. 1093

பேணாத வலிஅரக்கர் மெலிய, அன்று
பெருவரைத் தோள் இற நெரித்து, அன்று அவுணர் கோனைப்
பூண்ஆகம் பிளவு எடுத்த போர் வல்லோனைப்
பொரு கடலுள் துயில் அமர்ந்த புள் ஊர்தியை;
ஊண்ஆகப் பேய் முலை நஞ்சு உண்டான் தன்னை;
உள்ளுவார் உள்ளத்தே உறைகின்றானைக்
காணாது திரிதருவேன் கண்டுகொண்டேன் -
கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. 1094

பெண்ஆகி இன் அமுதம் வஞ்சித்தானைப்
பிறை எயிற்று, அன்று அடல் அரியாய்ப் பெருகினானை;
தண்ஆர்ந்த வார் புனல் சூழ் மெய்யம் என்னும்
தட வரைமேல் கிடந்தானை, பணங்கள் மேவி;
எண்ணானை; எண் இறந்த புகழினானை;
இலங்கு ஒளி சேர் அரவிந்தம் போன்று நீண்ட
கண்ணானைக் கண் ஆரக் கண்டுகொண்டேன் -
கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. 1095

தொண்டு ஆயார் தாம் பரவும் அடியினானை;
படி கடந்த தாளாளற்கு ஆள் ஆய் உய்தல்
விண்டானை தென் இலங்கை அரக்கர் வேந்தை
விலங்கு உண்ண, வலங் கைவாய்ச் சரங்கள் ஆண்டு,
பண்டு ஆய வேதங்கள் நான்கும், ஐந்து
வேள்விகளும், வேள்வியோடு அங்கம் ஆறும்
கண்டானைத் தொண்டனேன் கண்டுகொண்டேன் -
கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே. 1096





சகடாசுரன் சிதறி விழும்படி உதைத்தவன்; ஆலந்தளிரில் பாலனாய்ப் பள்ளி கொண்டவன்; ஒளி வீசும் மணிக்குன்று போன்ற நான்கு தோள்களைக் கொண்ட எம் அம்மான், பூமி தேவியின் தோளை அணைத்தவன். பாண்டவர்க்காகத் தூதன் ஆனபொழுது, துரியோதனன் அமைத்த, பொய் இருக்கையான நிலவறையில் மல்லர்களை அழித்தவன். இந்த என் தலைவனைச் சோலை சூழ்ந்த கடல் மல்லைத் தலசயனத்தில் கண்டேன். 1092

அகன்ற பாற்கடலில் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டவனே. இராமனாகப் புள்ளிமான் பின்னே போனான். குவலயாபீட யானையின் கொம்பை ஒடித்த கண்ணனும் இவனே; வளைந்த கொம்புடைய வராஹமாய்ப் பூமியை எடுத்தான். நிலமும் வானும் உள்ளடக்கி அளந்த பெருமானைக் கடல்மல்லைத் தலசயனத்தில் நான் கண்டேன். 1093

இறைவனை உணராத, இராவணன் முதலான அரக்கர்களின் மலைத் தோள்கள் முறியும்படி, தன் படையாலே அழித்தவன். அசுரர் தலைவன் இரணியனின் மார்பைப் பிளந்தவன்; அலைகடலில் கண் வளர்ந்த கருடவாகனன். பூதனைப்பேயின் நஞ்சு முலையை உண்டவன். பூதனை வதத்தை எண்ணி வழிபடுவோரின் நெஞ்சில் நிறைகின்றவன். அடியேன் தேடித் திரிகின்ற இப்பெருமானைக் கடல்மல்லைத் தலசயனத்தில் கண்டு கொண்டேன். 1094

பெண் வடிவெடுத்து, இனிய அமுதத்தை அசுரர்கள் பெறாதவாறு வஞ்சித்தவன்; பிறைமதி போன்ற பற்களுடன், வலிமை கொண்ட நரசிம்மமாக வளர்ந்தவன்; நீர்வளம் உள்ள திருமெய்யம் என்னும் மலையிலே ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டவன். எல்லோராலும் எண்ணப்படும் அளவற்ற புகழ் உடையவன். ஒளிமிகுந்த, தாமரைப் பூப்போன்ற கண்களை உடைய இப்பெருமானை நான், கடல்மல்லைத் தலசயனத்தில் கண்டேன். 1095

தொண்டர்கள் துதிசெய்யும் திருவடிகளை உடையவன்; உலகளந்தவனின் திருவடிகளுக்கு ஆளாகாமல் வேறுபட்ட, தென்திசை இலங்கை அரசன் இராவணனை, அம்பால் துளைத்து விலங்குகள் தின்ன இரை ஆக்கியவன். நிலையான நான்கு வேதங்கள், ஐந்து வேள்விகள், குரு வழியாய்க்கற்கும் ஆறு அங்கங்கள் ஆகியவற்றால் காணப்படும் பகவானைத் தொண்டனான நான் கடல்மல்லைத்தலசயனத்தில் கண்டேன். 1096

பட நாகத்து அணைக் கிடந்து, அன்று அவுணர் கோனைப்
பட வெகுண்டு மருது இடை போய், பழன வேலித்
தடம் ஆர்ந்த கடல்மல்லைத் தலசயனத்துத்
தாமரைக்கண் துயில் அமர்ந்த தலைவன் தன்னைக்
கடம் ஆரும் கருங் களிறு வல்லான் வெல் போர்க்
கலிகன்றி ஒலிசெய்த இன்பப் பாடல்
திடம் ஆக இவை ஐந்தும் ஐந்தும் வல்லார்
தீவினையை முதல் அரிய வல்லார் தாமே. 1097

## திருக் கடல்மல்லை – 2

நண்ணாத வாள் அவுணர் இடைப் புக்கு, வானவரை,
பெண் ஆகி, அமுது ஊட்டும் பெருமானார், மருவினிய
தண் ஆர்ந்த கடல்மல்லைத் தலசயனத்து உறைவாரை
எண்ணாதே இருப்பாரை இறைப் பொழுதும் எண்ணோமே. 1098

பார் வண்ண மட மங்கை, பனி நல் மா மலர்க் கிழத்தி,
நீர்வண்ணன் மார்வத்தில் இருக்கையை முன் நினைந்து, அவன் ஊர்
கார்வண்ண முது முந்நீர்க் கடல்மல்லைத் தலசயனம்.
ஆர் எண்ணும் நெஞ்சு உடையார் அவர் எம்மை ஆள்வாரே. 1099

ஏனத்தின் உருவு ஆகி நில மங்கை எழில் கொண்டான்,
வானத்தில் அவர் முறையால் மகிழ்ந்து ஏத்தி வலம் கொள்ள,
கானத்தின் கடல்மல்லைத் தலசயனத்து உறைகின்ற
ஞானத்தின் ஒளி உருவை நினைவார் என் நாயகரே. 1100

விண்டாரை வென்று, ஆவி விலங்கு உண்ண, மெல் இயலார்
கொண்டாடும் மல் அகலம் அழல் ஏற, வெம் சமத்துக்
கண்டாரை; கடல்மல்லைத் தலசயனத்து உறைவாரைக்
கொண்டாடும் நெஞ்சு உடையார் அவர் எங்கள் குலதெய்வமே. 1101

பிச்சச் சிறு பீலிச் சமண் குண்டர் முதலாயோர்
விச்சைக்கு இறை என்னும்; அவ் இறையைப் பணியாதே
கச்சிக் கிடந்தவன் ஊர் கடல்மல்லைத் தலசயனம்
நச்சித் தொழுவாரை நச்சு, என் தன் நல் நெஞ்சே! 1102





படங்களுடைய ஆதிசேஷன் மீது பள்ளிகொண்ட பகவான், இரணியாசுரனை வதைத்தவன்; மருத மரங்களிடையே தவழ்ந்தவன். இத்தாமரைக் கண்ணன், நீர்வளம் மிகுந்த திருக்கடல் மல்லையில் பள்ளி கொண்டுள்ளான். இப்பெருமானைப் பற்றி, யானைப்போரில் வல்ல கலிகன்றியாகிய ஆழ்வார் பாடிய ஒலி மிகுந்த பத்துப்பாடல்களைக் கற்க வல்லவர், தங்கள் பாவங்களை அடியுடன் போக்க வல்லவர் ஆவர். 1097

## திருக்கடல் மல்லை – 2

தன்னை அணுகாத வாளேந்திய அசுரர்கள் நடுவே, பெண்ணாய் வந்து, பயன் ஒன்றையே கருதும் தேவர்களுக்கு அமுதம் ஊட்டிய பகவான் திருக்கடல்மல்லையில் பள்ளி கொண்டுள்ளான். அவன் தரையில் கிடப்பதைக்கண்டு பரிவு கொள்ளாமலும் நீர்மையை எண்ணாமலும் இங்கே வாழ்பவரை நாம் நொடிப்பொழுதும் நினைக்க மாட்டோம். 1098

ஆத்மகுணங்கள் நிறைந்த பூமிப்பிராட்டி இடது பக்கத்திலும், தாமரைச் செல்வியான பெரியபிராட்டி வலது மார்பிலும் விளங்க, மேகநிறப்பெருமான் திருக்கடல்மல்லையில் பள்ளி கொண்டுள்ளான். இவனை வழிபடும்நெஞ்சுடைய அடியார்களே, எங்களை அடிமை கொள்ளத்தக்கவர் ஆவார். 1099

வராஹப்பெருமான் பூமியை எடுத்துக் காத்து, நிலமங்கையின் அழகை அனுபவித்தான். தேவர்கள் மகிழ்ந்து முறையாகத் துதிசெய்யக் காட்டருகே திருக்கடல்மல்லையில் பள்ளிகொண்டவனின் ஞானஒளி வடிவத்தில் ஈடுபடுபவர்கள் எம் தலைவர் ஆவார். 1100

பகைவர்களைப் போரில் வென்று அவர்கள் உடல்களை விலங்குகள் தின்னும்படி செய்த பகவான், பெண்கள் விரும்பி அணைக்கும் இராவணன் மார்பைத் தீ உண்ணச்செய்தான். திருக்கடல் மல்லையில் பள்ளி கொண்டுள்ள இப்பெருமானை இதய பூர்வமாகக் கொண்டாடுபவர் எங்கள் குலதெய்வங்கள் ஆவர். 1101

மயிலிறகையும் தோகையையும் பிடித்துச் செல்லும் சமணர் முதலானோர் வேதக் கடவுளை நம்பாமல் வித்தைகளுக்குத் தலைவன் உண்டு என்பர். அத்தேவனை வணங்காமல், திருவெஃகாவில் பள்ளி கொண்டவனின் ஊரே, திருக்கடல்மல்லை என்று வணங்குபவர் களை, நெஞ்சமே! விரும்பித் தொழுவாயாக. 1102

புலன் கொள் நிதிக் குவையோடு புழைக் கைம் மா களிற்று இனமும்
நலம் கொள் நவமணிக் குவையும் சுமந்து, எங்கும் நான்று ஒசிந்து,
கலங்கள் இயங்கும் மல்லைக் கடல்மல்லைத் தலசயனம்
வலங்கொள் மனத்தார் அவரை வலங்கொள், என் மட நெஞ்சே! 1103

பஞ்சிச் சிறு கூழை உரு ஆகி, மருவாத
வஞ்சப் பெண் நஞ்சு உண்ட அண்ணல், முன் நண்ணாத
கஞ்சைக் கடந்தவன் ஊர் கடல்மல்லைத் தலசயனம்
நெஞ்சில் தொழுவாரைத் தொழுவாய், என் தூய நெஞ்சே! 1104

செழு நீர் மலர்க் கமலம், திரை உந்து வன் பகட்டால்
உழு நீர் வயல் உழவர் உழ, பின் முன் பிழைத்து எழுந்த
கழு நீர் கடி கமழும் கடல்மல்லைத் தலசயனம்
தொழு நீர் மனத்தவரைத் தொழுவாய் என் தூய நெஞ்சே! 1105

பிணங்கள் இடு காடு அதனுள் நடம் ஆடு பிஞ்ஞகனோடு
இணங்கு திருச் சக்கரத்து எம் பெருமானார்க்கு இடம், விசும்பில்
கணங்கள் இயங்கும் மல்லைக் கடல்மல்லைத் தலசயனம்
வணங்கும் மனத்தார் அவரை வணங்கு என்தன் மட நெஞ்சே! 1106

கடி கமழும் நெடு மறுகில் கடல்மல்லைத் தலசயனத்து
அடிகள் அடியே நினையும் அடியவர்கள் தம் அடியான்,
வடி கொள் நெடு வேல் வலவன், கலிகன்றி ஒலி வல்லார்
முடி கொள் நெடு மன்னவர் தம் முதல்வர் முதல் ஆவாரே. 1107

## திருவிடவெந்தை

### தலைவியின் ஆற்றாமையைக் கண்ட தாய் இரங்கல்

திவளும் வெண் மதிபோல் திரு முகத்து அரிவை
செழுங் கடல் அமுதினில் பிறந்த
அவளும் நின் ஆகத்து இருப்பதும் அறிந்தும்,
ஆகிலும் ஆசை விடாளால்;
குவளை அம் கண்ணி கொல்லி அம் பாவை-
சொல்லு; நின் தாள் நயந்திருந்த
இவளை, உன் மனத்தால் என் நினைந்து இருந்தாய் ?
இடவெந்தை எந்தை பிரானே! 1108





புலன்களைக் கவரும் பொன் குவியல்களையும், துளைத் துதிக்கையைப் பெற்ற யானைகளையும், நவமணிகளையும் ஏற்றிக்கொண்டு, உலவும் ஓடங்கள் கடல்மல்லையில் காணப்படும். இங்குள்ள தலசயனப் பெருமானை வலம் செய்யும் அடியார்களை, மனமே! நீ வலம் செய்வாய். 1103

கண்ணபிரான். பஞ்சைப்போன்ற கூழைமயிர் பெற்ற பூதனைப்பேயின் நஞ்சு முலையை உண்டான். தன்னை அடையாத கம்சனின் தீய எண்ணத்தைக் குலைத்து, வதைத்தான். நெஞ்சமே! கடல்மல்லைத் தலசயனத்தில் உள்ள இப்பெருமானைத் தொழுவாரை, நீ தொழுது உய்வாயாக. 1104

உழவர்கள் கடல்மல்லை வயல்களில் எருதுகளைப் பூட்டி, நீரும் தாமரையும் முன்பின்னாக தள்ளும்படி உழுவார்கள். அப்பொழுது தப்பி எழுந்த செங்கழுநீர்ப்பூக்களும் தாமரைகளும் மணம் வீசும். மனமே ! இத்தலத்தில் பள்ளி கொண்டவனைத் தொழுவாரை, நீ தொழுவாயாக. 1105

பிணங்களைச் சுடும் காட்டில் நடனம் செய்யும் சிவனுக்கும், திருச்சக்கரத்துப் பெருமான் தன் உடலில் ஒரு பகுதியைத் தந்துள்ளார். இப்பெருமானின் கடல்மல்லையில் தேவகணங்கள் வந்து வழிபடுவார்கள். மடநெஞ்சமே! இத்தல சயனப்பெருமானை வணங்குபவரை நீ வணங்குவாய். 1106

மணம் வீசும் தெருக்கள் உள்ள கடல்மல்லைத் தலசயனப் பெருமானை வழிபடும் அடியவர்கள் திருவடிகளையே திருமங்கை ஆழ்வார் எண்ணுவார். வடிவேல் ஏந்திய கலிகன்றியான இவர் பதிகத்தைப் பயில்வோர் முடிசூடும் அரசர்க்கும் அரசர் ஆவார். 1107

## திருவிடவெந்தை

### தலைவியின் ஆற்றாமையைக் கண்ட தாய் இரங்கல்

திருவிடவெந்தையில் உள்ள எம்பிரானே! பாற்கடல் அமுதத்திலும் மேலான அமுதானவளும், ஒளிவிடும் சந்திரனை ஒத்த முகம் உடையவளும், ஆகிய திருமகள் உமது மார்பில் வாழ்வதை அறிந்தும் எம்மகள் உம் மேல்வைத்த ஆசையை விடமுடியாமல் துன்புறுகிறாள். குவளைக் கண்ணுடைய இவள் கொல்லி மலையில் எழுதிவைத்த பாவை போன்ற அழகுடையவள். இவளைப்பற்றிய உமது திருவுள்ளம் என்னவென்று கூறி அருள வேண்டும். 1108

துளம் படு முறுவல் தோழியர்க்கு அருளாள்;
துணை முலை சாந்து கொண்டு அணியாள்;
குளம் படு குவளைக் கண் இணை எழுதாள்;
கோல நல் மலர் குழற்கு அணியாள்;
வளம் படு முந்நீர் வையம் முன் அளந்த
மால் என்னும்; மால் இன மொழியாள்,
இளம் படி இவளுக்கு என் நினைந்து இருந்தாய்?
இடவெந்தை எந்தை பிரானே! 1109

சாந்தமும், பூணும், சந்தனக் குழம்பும்
தட முலைக்கு அணியிலும் தழல் ஆம்;
போந்த வெண் திங்கள் கதிர் சுட, மெலியும்;
பொரு கடல் புலம்பிலும் புலம்பும்;
மாந் தளிர் மேனி வண்ணமும் பொன் ஆம்;
வளைகளும் இறை நில்லா என் தன்
ஏந்திழை இவளுக்கு என் நினைந்து இருந்தாய்?
இடவெந்தை எந்தை பிரானே! 1110

ஊழியின் பெரிதால் நாழிகை என்னும்;
ஒண் சுடர் துயின்றதால் என்னும்;
ஆழியும் புலம்பும் அன்றிலும் உறங்கா.
தென்றலும் தீயினில் கொடிது ஆம்,
தோழி ஓ! என்னும்; துணை முலை அரக்கும்;
சொல்லுமின் என் செய்கேன்? என்னும்;
ஏழை என் பொன்னுக்கு என் நினைந்து இருந்தாய்?
இடவெந்தை எந்தை பிரானே! 1111

ஓதிலும் உன் பேர் அன்றி, மற்று ஓதாள்;
உருகும் நின் திரு உரு நினைந்து ;
காதன்மை பெரிது; கையறவு உடையள்;
கயல் நெடுங் கண் துயில் மறந்தாள்;
பேதையேன் பேதை பிள்ளைமை பெரிது;
தெள்ளியள்; வள்ளி நுண் மருங்குல்
ஏதலர் முன்னா என் நினைந்து இருந்தாய்?-
இடவெந்தை எந்தை பிரானே! 1112

தன் குடிக்கு ஏதும் தக்கவா நினையாள்;
தடங் கடல் நுடங்கு எயில் இலங்கை
வன் குடி மடங்க வாள் அமர் தொலைத்த
வார்த்தை கேட்டு, இன்புறும்; மயங்கும்;
மின் கொடி மருங்குல் சுருங்க, மேல் நெருங்கி
மென் முலை பொன் பயந்திருந்த
என் கொடி இவளுக்கு என் நினைந்து இருந்தாய்?
இடவெந்தை எந்தை பிரானே! 1113





*மாதுளை விதையைத் தோற்கடிக்கும் பற்களுடைய என் மகள் தன் தோழிகள் முன் புன்னகை செய்யாள்; இணை முலைகளில் சந்தனம் பூசவில்லை. குளத்தில் மலரும் குவளைப் பூப்போன்ற கண்களில் மை எழுதவில்லை; குழலில் பூச்சூட வில்லை. 'கடல் சூழ்ந்த பூமியை அளந்த திருமாலே!' என்று மயங்குகிறாள். திருவிடவெந்தைப்பெருமானே! நீ மெல்லியல் புடைய என் இளம்பெண்பற்றி என்ன எண்ணுகிறாய்?* **1109**

*என்மகள் ஆறிக்குளிர்ந்த சந்தனக் கலவையும் குழம்பையும் முத்துமாலையையும் தன் மார்பில் அணிந்தால் அவை தீயாகச் சுடுகின்றன. சந்திரன் கதிர்கள் சுடுவதால் அவள் மெலிகிறாள்; கடல் ஓசை கேட்டுப் புலம்புகிறாள். மாந்தளிர் உடலோ வெளுத்துவிட்டது. கைவளையல்கள் கழல்கின்றன. திருவிடவெந்தைப் பிரானே! ஏந்திழையான என்மகள்பற்றி நீ நினைப்பது யாது?* **1110**

*"நாழிகைப்பொழுது ஊழிக்காலம் ஆகிறதே! சூரியன் மறைந்தானோ! கடல் புலம்புகிறதே! அன்றில் பறவைகள் உறங்கவில்லையா? தென்றல் தீயை விடவும் சுடுகிறதே! தோழி! நான் என் செய்வேன்?' என்று புலம்பும் என்மகள், பிரிவுத் துயரால், மார்பகங்களைத் தேய்த்துக் கொள்கிறாளே! இவள் சபலத்தை என் என்பேன்! திருவிடவெந்தைப்பிரானே! நீ இவளைப்பற்றி என்னதான் நினைக்கிறாய்?* **1111**

*திருவிடவெந்தைப்பிரானே! என் மகள் உன் பெயரை அன்றி வேறு சொல்லவில்லை. உன் வடிவழகை எண்ணி உருகுகிறாள்! உன்னிடத்தில் அவள் கொண்ட காதலோ பெரியது. கயல்மீன் போன்ற கண்ணுடைய இவள். எல்லாம் இழந்தவளாக வருந்துவதால் தூக்கத்தையே மறந்தாள். இப் பேதையின் பிள்ளைத்தன்மைபெரிது என்றாலும் உன்னைப் பற்றித் தெளிவுள்ளவள் .வள்ளிக்கொடி போன்ற இவளை, விரும்பாதார் முன் என் செய்ய எண்ணுகிறாய்?* **1112**

*என்மகள் தன் குலத்துக் கேற்றபடி நினைக்கவில்லை. கடலும் மதிளும் சூழ்ந்த இலங்கையையும் அரக்கர்குலத்தையும் அழித்த இராமனின் தீரச் செயலைக் கேட்டு மகிழ்ந்து, மயங்கு கிறாள். மின்னலையும் வஞ்சிக்கொடியையும் ஒத்த இடைபெற்ற என் மகள் மார்பில் பசலை படர்ந்து விட்டது. திருவிடவெந்தைப் பிரானே! இவளைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?* **1113**

உளம் கனிந்து இருக்கும்; உன்னையே பிதற்றும்;
உனக்கு அன்றி எனக்கு அன்பு ஒன்று இலளால்;
வளங் கனிப் பொழில் சூழ் மாலிருஞ்சோலை
மாயனே! என்று வாய்வெருவும்;
களங் கனி முறுவல் காரிகை, பெரிது
கவலையோடு அவலம் சேர்ந்திருந்த
இளங் கனி இவளுக்கு என் நினைந்து இருந்தாய்?
இடவெந்தை எந்தை பிரானே! 1114

அலம் கெழு தடக்கை ஆயன் வாய் ஆம்பற்கு
அழியுமால் என் உள்ளம் என்னும்;
புலம் கெழு பொரு நீர்ப் புட்குழி பாடும்;
போதுமோ நீர்மலைக்கு என்னும்;
குலம் கெழு கொல்லிக் கோமள வல்லி,
கொடி இடை நெடு மழைக் கண்ணி
இலங்கு எழில் தோளிக்கு என் நினைந்து இருந்தாய்?
இடவெந்தை எந்தை பிரானே! 1115

பொன் குலாம் பயலை பூத்தன மென் தோள்;
பொரு கயல் கண் துயில் மறந்தாள்;
அன்பினால் உன்மேல் ஆதரம் பெரிது; இவ்
அணங்கினுக்க உற்ற நோய் அறியேன்;
மின் குலாம் மருங்குல் சுருங்க, மேல் நெருங்கி
வீங்கிய வன முலையாளுக்கு
என்கொல் ஆம்? குறிப்பில் என் நினைந்து இருந்தாய்?
இடவெந்தை எந்தை பிரானே! 1116

அன்னமும், மீனும், ஆமையும் அரியும்
ஆய எம் மாயனே! அருளாய்
என்னும் இன் தொண்டர்க்கு இன் அருள் புரியும்
இடவெந்தை எந்தை பிரானை,
மன்னு மா மாட மங்கையர் தலைவன்
மானவேல் கலியன் வாய் ஒலிகள்
பன்னிய பனுவல் பாடுவார் நாளும்
பழவினை பற்று அறுப்பாரே. 1117





என்பெண் உன்னை எப்பொழுதும் எண்ணி மகிழ்கிறாள். உன்னைச் சேரவேண்டும் என்று பிதற்றுகிறாள். உன்னால், அவள் என்னிடம் அன்பில்லாதவள் ஆகிவிட்டாள். பழச்சோலைகள் சூழ்ந்த திருமாலிருஞ் சோலைமலை மாயனை எண்ணி வாயால் பிதற்றுகிறாள். களாப்பழம் போலே இனிமையாகச் சிரித்த இப்பெண்ணே, இப்பொழுது பெரிதாகக் கவலை கொண்டு, உடல் வெளுத்துப்போனாள். திருவிடவெந்தைப்பிரானே! இவளைப்பற்றிய உம் எண்ணம் தான் யாது? 1114

'கலப்பையைக் கையில் ஏந்திய கண்ணன் ஊதிய இலைக்குழல் ஓசையைக் கேட்டு மனம் அழிந்தேன்.' என்று என்மகள் கூறுகிறாள். புலன்களைக் கவரும் நீர்வளம் உள்ள திருப்புட்குழிப்பெருமானைப் பற்றிப்பாடுகிறாள். 'திருநீர்மலைக்குப் போவேனோ?' என்று பேசுகிறாள். கொல்லிமலைப் பாவை போன்ற அழகுள்ள என் பெண், வஞ்சிக்கொடி இடையாள்; கண்ணீர்த் தாரைகள் விடும் இவளைப்பற்றித் திருவிடவெந்தைப் பெருமானே! நீ என்ன எண்ணுகிறாய்? 1115

என் பெண்ணின் மெல்லிய தோள்களில் பொன்னிறப் பசலை பூத்தது. கயல்மீன் போன்ற கண்ணுடைய இவள் தூங்கவே இல்லை. உன் மேல் கொண்ட காதலோ மிகப்பெரிது. இவள் கொண்டுள்ள நோயை நான் அறியேன். மின்னல் இடையையும், நெருங்கி வளரும் மார்பகங்களையும் பெற்றுள்ள இப்பெண்ணுக்கு என்ன முடிவு ஏற்படுமோ? திருவிடயெந்தைப் பிரானே உன் திருவுள்ளக் குறிப்புத்தான் யாது! 1116

"அன்னம், மீன், ஆமை, சிங்கம் ஆகிய உருவங்களில் அவதாரம் செய்த மாயவனே! அருள்வாய்!' என்று வேண்டும் அடியவர்களுக்குத் திருவிடவெந்தைப்பிரான் அருள்செய்கிறான். மாடங்கள் ஓங்கிய திருமங்கை நகர்க்குத் தலைவரான வேலாயுதம் ஏந்திய கலியன், அருளிய, திருவிடவெந்தைப் பெருமானைப் பற்றிய பாசுரங்களைப் பாடுபவர். தங்கள் பழைய வினைகளின் தொடர்பு அறப்பெறுவர். 1117

## திருவட்டபுயகரம்

### தாயர், தோழியரிடத்தே, தலைவி, தலைவனைப் பற்றிக் கூறல்

திரிபுரம் மூன்று எரித்தானும் மற்றை
மலர்மிசைமேல் அயனும் வியப்ப,
முரிதிரை மா கடல் போல் முழங்கி
மூவுலகும் முறையால் வணங்க
எரிஅன கேசர வாள் எயிற்றோடு
இரணியன் ஆகம் இரண்டு கூறா
அரிஉரு ஆம் இவர் ஆர்கொல்? என்ன -
அட்டபுயகரத்தேன் என்றாரே. 1118

வெம்திறல் வீரரில் வீரர் ஒப்பார்,
வேதம் உரைத்து இமையோர் வணங்கும்,
செந்தமிழ் பாடுவார் - தாம் வணங்கும்
தேவர் இவர்கொல்? தெரிக்கமாட்டேன்;
வந்துகுறள் உருவாய் நிமிர்ந்து
மாவலி வேள்வியில் மண் அளந்த
அந்தணர் போன்றிவர் ஆர்கொல்? என்ன-
அட்டபுயகரத்தேன் என்றாரே. 1119

செம்பொன் இலங்கு வலங்கை வாளி,
திண் சிலை, தண்டொடு சங்கம் ஒள் வாள்,
உம்பர் இரு சுடர் ஆழியோடு
கேடகம் ஒண் மலர் பற்றி எற்றே!
வெம்பு சினத்து அடல் வேழம் வீழ
வெண் மருப்பு ஒன்று பறித்து இருண்ட
அம்புதம் போன்றிவர் ஆர்கொல் ? என்ன-
அட்டபுயகரத்தேன் என்றாரே. 1120

மஞ்சுஉயர் மா மணிக் குன்றம் ஏந்தி,
மா மழை காத்து, ஒரு மாய ஆனை
அஞ்சஅதன் மருப்பு அன்று வாங்கும்
ஆயர்கொல்? மாயம் அறியமாட்டேன்;
வெம்சுடர் ஆழியும் சங்கும் ஏந்தி,
வேதம் முன் ஓதுவர், நீதி வானத்து
அம்சுடர் போன்றிவர் ஆர்கொல்? என்ன-
அட்டபுயகரத்தேன் என்றாரே. 1121





## திருவட்ட புயகரம்

### தாயர், தோழியரிடத்தே, தலைவி, தலைவனைப் பற்றிக் கூறல்

வானில் தொங்கிய மூன்று புரங்களை எரித்த சிவனும், தாமரையில் தோன்றிய பிரமனும் வியக்குமாறு, திருமால் இரணியனைக் கொன்றான். "மூவுலகத்தவரும் முறையாக வணங்கவும், இரணியன் உடலை இருபகுதிகளாகப் பிளந்த, உளைமயிரும் பல்லும் உடைய நரசிம்மப்பிரான் யார்?" என்று கேட்டேன். உடனே என் தலைவர், "நானே அட்டபுயகரத்தான்" என்றார். **1118**

"பிரமன் முதலியோர் வேதம் ஓதி வணங்கும் பெருமை யுடைய இவர் யார், மிடுக்குடைய வீரர்களும் வியக்கும் பெருவீர முடைய இராமனா? செந்தமிழில் பாடிய முதலாழ்வார்களால் வணங்கப்படும் திருவேங்கடம் உடையானோ? இவர் யாரென்று அறியேனே! மாவலி வேள்வியில் வாமனனாகச் சென்று திரிவிக்கிரமனாய் உலகளந்தவனோ!" என்று கேட்டேன். என் தலைவர், 'நானே திருஅட்டபுயகரத்தில் உள்ளவன்' என்றார். **1119**

"பொன் போன்ற சிவந்த அம்புகளை வலக்கையிலும் வில்லைத் திண்ணிய தோளிலும் தாங்கி உள்ளார். கதை, பாஞ்சன்னியம், உடைவாள், எல்லாவற்றுக்கும் மேலாக ஒளி விடும் சக்கரம், கேடயம், அழகிய பூ ஆகியவற்றை அணிந்துள்ள அழகுதான் என்னே! கோபம்கொண்ட குவலயாபீட யானையின் வெண்மையான கொம்புகளை முறித்துக் கொன்ற கண்ணபிரானோ இவர்? இருண்ட மேகம் போல இருக்கிற இவர் யார்?" என்று கேட்டேன். அவரோ! நானே அட்டபுயகரத்தில் உள்ளவன்' என்றார். **1120**

"மேகமண்டலத்தளவு உயர்ந்த கோவர்த்தன மலையைத் தூக்கி மழையைத் தடுத்தவர் இவரோ? குவலயாபீடம் என்னும் யானை நடுங்க அதன் கொம்பைப் பறித்தவரோ? மாயங்கள் செய்த கண்ணபிரானோ இவர் என்றறியேன். ஒளிச் சக்கரத்தையும் சங்கையும் ஏந்தியபடி, நித்திய சூரிகள் வேதம் ஓதப் பரமபதத்தில் முறை தப்பாமல் விளங்கும் பரஞ்சோதியோ இவர்?' என்று கேட்டேன். 'நானே அட்டபுயகரத்தான்' என்றார். **1121**

கலைகளும், வேதமும், நீதி நூலும்
கற்பமும் சொல், பொருள் தானும், மற்றை
நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும்
நீர்மையினால் அருள்செய்து நீண்ட
மலைகளும், மா மணியும் மலர்மேல்
மங்கையும் சங்கமும் தங்குகின்ற
அலை கடல் போன்றிவர் ஆர்கொல் ? என்ன -
அட்டபுயகரத்தேன் என்றாரே. 1122

எங்ஙனும் நாம் இவர் வண்ணம் எண்ணில்,
ஏதும் அறிகிலம்; ஏந்திழையார்
சங்கும் மனமும் நிறையும் எல்லாம்
தம்மன ஆகப் புகுந்து தாமும்
பொங்கு கருங் கடல், பூவை, காயா,
போது அவிழ் நீலம், புனைந்த மேகம்
அங்ஙனம் போன்றிவர் ஆர்கொல்? என்ன-
அட்டபுயகரத்தேன் என்றாரே. 1123

முழுசி வண்டு ஆடிய தண் துழாயின்
மொய்ம் மலர்க் கண்ணியும், மேனி அம் சாந்து
இழுசிய கோலம் இருந்தவாறும்
எங்ஙனம் சொல்லுகேன்? ஓவி நல்லார்
எழுதிய தாமரை அன்ன கண்ணும்
ஏந்து எழில் ஆகமும், தோளும், வாயும்
அழகியதாம் இவர் ஆர்கொல்? என்ன-
அட்டபுயகரத்தேன் என்றாரே. 1124

மேவி எப்பாலும் விண்ணோர் வணங்க
வேதம் உரைப்பர்; முந்நீர் மடந்தை
தேவி; அப்பால் அதிர் சங்கம்; இப்பால்
சக்கரம்; மற்று இவர் வண்ணம் எண்ணில்,
காவி ஒப்பார்; கடலேயும் ஒப்பார்;
கண்ணும் வடிவும் நெடியர் ஆய், என்
ஆவி ஒப்பார்; இவர் ஆர்கொல்? என்ன-
அட்டபுயகரத்தேன் என்றாரே. 1125

தஞ்சம் இவர்க்கு என் வளையும் நில்லா;
நெஞ்சமும் தம்மதே. சிந்தித்தேற்கு
வஞ்சி மருங்குல் நெருங்க நோக்கி,
வாய் திறந்து ஒன்று பணித்தது உண்டு;
நஞ்சம் உடைத்து இவர் நோக்கும் நோக்கம்;
நான் இவர் தம்மை அறியமாட்டேன்;
அஞ்சுவன்; மற்று இவர் ஆர்கொல்? என்ன-
அட்டபுயகரத்தேன் என்றாரே. 1126





‘வேதம், வேதாந்த சூத்திரம், இதிகாசம், கல்பசூத்திரம், வியாகரணம், மீமாம்சை ஆகியவற்றையும் அவற்றின் பயன் களையும் தன் நீர்மைக் குணத்தால் தேவர்க்கும் மனிதர்க்கும் அருள் செய்தாரே! ‘மலைத்தோள்களையும் கௌத்துபத்தையும் சங்கையும் திருமகளையும் பெற்றுள்ள, கடல் போன்ற இவர் யார்?” என்று கேட்டேன்,’ நானே அட்டபுயகரத்தான்” என்றார். **1122**

‘நம்மால் இவர் வடிவை எவ்வாறு முயன்றும் அறியமுடியவில்லை. அணிகலன்கள் அணிந்த பெண்களின் வளை. மனம், நிறை இவற்றைக் கவர்ந்தார். பொங்கும் கடல், பூவை, காயாம்பூ, செவ்வியாய் மலரும் கருநெய்தல், மேகம், ஆகியவற்றை ஒத்த இவர் யார்!’ என்றேன். ‘நானே அட்டபுயகரத்தான் ‘ என்று பதில் உரைத்தார். **1123**

தேன் பருகி ஆடும் வண்டுகள் சூழ்ந்த திருத்துழாய் மாலையை, சந்தனம் பூசிய திருமேனியில் அணிந்துள்ள அழகுதான் என்னே! “நல்ல ஓவியர்கள் வரைந்த தாமரைப்பூப் போன்ற கண்களும் அகன்ற மார்பும் திருத்தோள்களும் பவளவாயும் உடைய அழகில் மிகுந்த இவர் யார்!” என்றேன்” அட்டபுயகரத்தில் உள்ளவனே நான்” என்றார். **1124**

“திக்கெல்லாம் நிற்கும் நித்திய சூரிகள் வேதம் ஓதி இவரை வணங்குவர்; பாற்கடலில் உதித்த திருமகள் மனைவியாவாள். வலப்புறத்தில் சக்கரமும் இடப் புறத்தில் சங்கும் கொண்டவர். நிறமோ, இவருக்குக் கருநெய்தல்பூ! எனினும் கடலையும் ஒத்தவர். கண்ணழகும் வடிவமும் என் உயிரை ஒத்ததாய் உடைய இவர் யார்?” என்றேன்! நான்தான் அட்டபுயகரத்தில் உள்ளவன்’ என்றுபதில் சொன்னார். **1125**

“என் வளையல்கள் அவருக்கு என்றாகிக் கையில் கழல்கின்றன. சிந்தித்துப் பார்த்தால், என்மனமும் அவருடைய தாகி விட்டது. வஞ்சிக் கொடிபோல், என் இடை துவள, அவர் தனிமையாய்த் தன் பவளவாய் திறந்து கூறிய அந்தரங்கம் ஒன்று உண்டு. அவர் பார்க்கிற பார்வையில் தான் நஞ்சுபோல ஒரு வீச்சு உள்ளதே! இவரை அறியவே முடியவில்லை. ஆகவே தான் நீர் யார்?” என்று கேட்டேன். அவரும் ‘நானே அட்டபுயகரத்தான்” என்றார். **1126**

மன்னவன் தொண்டையர்கோன் வணங்கும்
நீள் முடி மாலை வயிரமேகன்
தன் வலி தன் புகழ் சூழ்ந்த கச்சி
அட்ட புயகரத்து ஆதி தன்னை,
கன்னி நல் மா மதிள் மங்கை வேந்தன்
காமரு சீர்க் கலிகன்றி குன்றா
இன் இசையால் சொன்ன செஞ்சொல் மாலை
ஏத்த வல்லார்க்கு இடம் வைகுந்தமே. 1127

## திருப்பரமேச்சுரவிண்ணகரம்

சொல்லு, வன்சொல், பொருள்தான் அவைஆய்ச்
சுவை, ஊறு ஒலி, நாற்றமும் தோற்றமும் ஆய்,
நல் அரன் நாரணன் நான்முகனுக்கு
இடம்-தான் -தடம் சூழ்ந்து அழகு ஆய கச்சி
பல்லவன், வில்லவன் என்று உலகில்
பலராய்ப் பல வேந்தர் வணங்கு கழல்
பல்லவன், மல்லையர் கோன் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே. 1128

கார்மன்னு நீள் விசும்பும், கடலும்,
சுடரும் நிலனும் மலையும் தன் உந்தித்
தார்மன்னு தாமரைக்கண்ணன் இடம்-
தடம், மா மதிள் சூழ்ந்து அழகு ஆய கச்சி
தேர்மன்னு தென்னவனை முனையில்
செருவில் திறல் வாட்டிய திண் சிலையோன்,
பார்மன்னு பல்லவர் கோன் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே. 1129

உரம்தரு மெல் அணைப் பள்ளி கொண்டான்.
ஒருகால் முன்னம் மா உருவாய்க் கடலுள்
வரம்தரு மா மணிவண்ணன் இடம் -
மணி மாடங்கள் சூழ்ந்து அழகு ஆய கச்சி
நிரந்தவர் மண்ணையில் புண் நுகர் வேல்
நெடு வாயில் உக, செருவில் முன நாள்
பரந்தவன் பல்லவர் கோன் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே. 1130





*திருக்கச்சியில் அட்டபுயகரத்தில், நீண்டதிருமுடியுடன் மாலை அணிந்து காட்சிதரும் எம்பெருமான், வயிரமேகன் எனப்பெயர் பெற்ற தொண்டை நாட்டரசனால் வணங்கப் பெறுபவர். மதிள் சூழ்ந்த திருமங்கை நகர் மன்னரும் யாவராலும் விரும்பப்படும். கலிகன்றி என்பவரும் ஆகிய ஆழ்வார் இந்த இசைப்பாடலை அருளினார். இச்சொல் மாலையைப் பயில்பவர்கள் பரமபதம் அடைவர்.* **1127**

## திருப்பரமேச்சுர விண்ணகரம்

*சொல். வேதம், வேதப்பொருளாக விளங்கும் நாராயணன், சுவை, ஊறு, ஒலி, நாற்றம், தோற்றம் ஆகிய ஐந்திலும் நிறைந்தவன். அவனே சிவனாகவும் நான்முகனாகவும் ஆகி. அவர்களை நியமிக்கிறான். இப்பெருமான், குளங்கள் சூழ்ந்த கச்சி நகரில் பரமேச்சுர விண்ணகரத்தலத்தில் எழுந்தருளி உள்ளான். பல்லவன், வில்லவன் என்று பலரால் பாராட்டப் பட்டுப் பல மன்னர்கள் வணங்கும் வீரக்கழல் உடைய மல்லை நகர்ப் பேரரசன் பல்லவன் வணங்கிய தலம் இதுவே.* **1128**

*மேகம் தங்கும் வானம், கடல்கள், சூரியன், சந்திரன், பூமி, மலைகள், ஆகியவற்றைத் தன் கொப்பூழில் உண்டாக்கிய தாமரைக் கண்ணன் எழுந்தருளிய திருத்தலம் பரமேச்சுர விண்ணகரம் ஆகும். மதில்களும் குளங்களும் சூழ்ந்த கச்சி நகரில் உள்ள இத்தலத்தில். பாண்டியனைப்போரில் தோற்கடித்த வில்லேந்திய பல்லவன், பெருமானை வணங்கி வழிபட்டான்.* **1129**

*மிடுக்கும் மென்மையும் கொண்ட ஆதிசேஷன்மீது திருப்பாற்கடலில் முன்னாளில் பள்ளி கொண்ட பகவான். சிந்தாமணி போல, எல்லோர்க்கும் வரம் அருளும் வண்மை இயல்புடையவன். மணிமாடங்கள் சூழ்ந்த கச்சி நகரில் உள்ள பரமேச்சுர விண்ணகரத்தில் இப்பெருமான் எழுந்தருளி உள்ளான். மண்ணை என்னும் படைவீட்டில் நிகழ்ந்த போரில், பகைவர் களை வேலால் புண்ணாக்கிக் கொன்று வென்ற பல்லவப் பெருமன்னன் வணங்கிய திவ்விய தேசம் இதுவே.* **1130**

அண்டமும்,எண் திசையும், நிலனும்,
அலை நீரொடு வான், எரி, கால் முதலா
உண்டவன், எந்தை பிரானது இடம்-
ஒளி மாடங்கள் சூழ்ந்து அழகு ஆய கச்சி,
விண்டவர் இண்டைக் குழாமுடனே
விரைந்தார் இரிய, செருவில் முனிந்து,
பண்டு ஒருகால் வளைத்தான் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே. 1131

தூம்பு உடைத் திண் கை வன் தாள் களிற்றின்
துயர் தீர்த்து அரவம் வெருவ முன நாள்,
பூம் புனல் பொய்கை புக்கான் அவனுக்கு
இடம்-தான் - தடம் சூழ்ந்து அழகு ஆய கச்சி,
தேம் பொழில் குன்று எயில் தென்னவனைத்
திசைப்ப, செருமேல் வியந்து அன்று சென்ற
பாம்பு உடைப் பல்லவர் கோன் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே. 1132

திண் படைக் கோளரியின் உரு ஆய்,
திறலோன் அகலம் செருவில் முன நாள்,
புண் படப் போழ்ந்த பிரானது இடம் -
பொரு மாடங்கள் சூழ்ந்து அழகு ஆய கச்சி,
வெண் குடை நீழல் செங்கோல் நடப்ப
விடை வெல் கொடி வேல் படை முன் உயர்த்த
பண்பு உடைப் பல்லவர் கோன் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரம் - அதுவே. 1133

இலகிய நீள் முடி மாவலி தன்
பெரு வேள்வியில் மாண் உரு ஆய், முன நாள்,
சலமொடு மா நிலம் கொண்டவனுக்கு
இடம் தான்-தடம் சூழ்ந்து அழகு ஆய கச்சி,
உலகு உடை மன்னவன் தென்னவனைக்
கன்னி மா மதிள் சூழ் கருவூர் வெருவ,
பல படை சாய வென்றான் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே. 1134

குடைத் திறல் மன்னவன் ஆய், ஒருகால்
குரங்கைப் படையா, மலையால் கடலை
அடைத்தவன் எந்தை பிரானது இடம் -
அணி மாடங்கள் சூழ்ந்து அழகு ஆய கச்சி,
விடைத் திறல் வில்லவன் நென்மெலியில்
வெருவ, செரு வேல் வலங்கைப் பிடித்த
படைத் திறல் பல்லவர் கோன் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே. 1135





அண்டங்கள், எட்டுத்திசைகள், பூமி, அலைகடல், வானம், தீ, காற்று முதலானவற்றை உண்டு காத்த திருமாலின் திருத்தலம் பரமேச்சுர விண்ணகரம் ஆகும். பகைவர்கள் சிதறி ஓடும்படி போரில் வில்லை வளைத்த பல்லவமன்னன், மாடங்கள் விளங்கும் காஞ்சி நகரில் உள்ள இத்தலத்தில் பெருமானை வழிபட்டான். 1131

துளை உள்ள துதிக்கையையும் வன்மையான கால்களையும் பெற்ற கஜேந்திரனின் துன்பத்தைப் போக்கியவனும், காளியன் அஞ்ச, நீர்மடுவில் பாய்ந்தவனும் ஆன பகவானின் திருத்தலம் பரமேச்சுர விண்ணகரம் ஆகும். தேன் சோலைகளுக்கும் மலை போன்ற மதிள்களுக்கும் உரிமை உடைய பாண்டியன் கலங்கப் போர் செய்த, பாம்புக் கொடியோன் பல்லவன், பணிந்த இத்திருக்கோயில், குளங்கள் சூழும் காஞ்சி நகரில் உள்ளது. 1132

முன்னாளில் வலிமைபெற்ற இரணியனுடன் செய்த போரிலே, தன் நகங்களான ஆயுதத்தால் அவன் மார்பைப் புண்படுத்திப் பிளந்த நரசிம்மப்பிரானின் திருத்தலம் பரமேச்சுர விண்ணகரம் ஆகும். வெண் கொற்றக் குடைக்கீழ்ச் செங்கோல் செலுத்தி, வீரர்கள் முன்னே வேலேந்தி, உயர்ந்த பண்புடைய, பாம்புக் கொடியோன் பல்லவன், பணிந்து வணங்கிய இத்தலம், மாடங்கள் சூழ்ந்த அழகான காஞ்சி நகரில் உள்ளது. 1133

ஒளி மகுடம் சூடிய மாவலியின் வேள்வியில், வாமன வடிவில் வந்து, நீர் ஏற்று உலகளந்தபிரானின் திருத்தலம் பரமேச்சுர விண்ணகரம் ஆகும். இது, குளங்கள் சூழ்ந்த காஞ்சி நகரில் உள்ளது. மதிள் சூழ்ந்த கருவூரே நடுங்கும்படி, பாண்டியனுடன் போர் செய்து வென்ற பல்லவ அரசன் பணிந்து வணங்கிய திருக்கோயில் இதுவே. 1134

வாரைப்படையால் மலைகளை இட்டுக் கடலடைத்த, கொற்றக்குடையும் வீரமும் உடைய இராமபிரானின் திருத்தலம் பரமேச்சுர விண்ணகரம் ஆகும். காளையின் மிடுக்குடன் நெமிலி என்னும் படை வீட்டில், வில்லவன் என்னும் பகைவன் அஞ்சும்படி போர் செய்து வென்ற, வேலேந்திய பல்லவன் வணங்கிய கோயில் மாடங்கள் சூழ்ந்த காஞ்சிநகரில் உள்ளது. 1135

பிறை உடை வாள் நுதல் பின்னைதிறத்து
முன்னே ஒருகால் செருவில் உருமின்
மறை உடை மால் விடை ஏழ் அடர்த்தாற்கு
இடம்தான் தடம் சூழ்ந்து அழகு ஆய கச்சி
கறை உடை வாள் மற மன்னர் கெட,
கடல்போல முழங்கும் குரல் கடுவாய்ப்
பறை உடைப் பல்லவர் கோன் பணிந்த
பரமேச்சுரவிண்ணகரம் அதுவே. 1136

பார் மன்னு தொல் புகழ்ப் பல்லவர் கோன்
பணிந்த பரமேச்சுரவிண்ணகர்மேல்,
கார் மன்னு நீள் வயல் மங்கையர் தம்
தலைவன் கலிகன்றி குன்றாது உரைத்த
சீர் மன்னு செந்தமிழ் மாலை வல்லார்
திருமாமகள் தன் அருளால் உலகில்
தேர் மன்னராய் ஒலி மா கடல் சூழ்
செழு நீர் உலகு ஆண்டு திகழ்வர்களே. 1137

## திருக்கோவலூர்

மஞ்சுஆடு வரைஏழும், கடல்கள் ஏழும்,
வானகமும் மண்ணகமும், மற்றும் எல்லாம்
எஞ்சாமல் வயிற்று அடக்கி ஆலின்மேல் ஓர்
இளந் தளிரில் கண்வளர்ந்த ஈசன் தன்னை
துஞ்சா நீர் வளம் சுரக்கும் பெண்ணைத் தென்பால்
தூய நான்மறையாளர் சோமுச் செய்ய,
செஞ்சாலி விளை வயலுள் திகழ்ந்து தோன்றும்
திருக்கோவலூர்-அதனுள் - கண்டேன் நானே. 1138

கொந்து அலர்ந்த நறுந் துழாய், சாந்தம், தூபம்,
தீபம் கொண்டு அமரர் தொழப் பணம் கொள் பாம்பில்
சந்து அணி மென் முலை மலராள், தரணி மங்கை
தாம் இருவர் அடி வருடும் தன்மையானை
வந்தனை செய்து, இசை ஏழ் ஆறு அங்கம் ஐந்து
வளர் வேள்வி நால் மறைகள், மூன்று தீயும்
சிந்தனை செய்து இருபொழுதும் ஒன்றும் செல்வத்
திருக்கோவலூர்- அதனுள் -கண்டேன் நானே. 1139





*பிறைபோல் ஒளிவீசும் நெற்றி உடைய நப்பின்னையைப் பெற, இடி போல் முழங்கிய ஏழுமுரட்டுக் காளைகளையும் அடக்கிய கண்ணபெருமானின் திருத்தலம் பரமேச்சுர விண்ணகரம் ஆகும். கடல் ஒலிபோல் பறைகொட்ட, இரத்தக் கறையுடைய வாளேந்திய பகைமன்னர் அழியும்படி போர்செய்த பல்லவர் கோன் வணங்கிய திருத்தலம், குளங்கள் சூழ்ந்த காஞ்சி நகரில் உள்ளது.* **1136**

*உலகில் நிலையான புகழ்பெற்ற பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகர்மேல், நெல்வயல்கள் உடைய திருமங்கை நகர்க்கு அரசரான ஆழ்வார் பாடினார். சீர்மை உடைய இத்தமிழ்ப் பாசுரங்களைப் பயில்பவர் திருமகள் அருளால், கடல் சூழ்ந்த இவ்வுலகில், தேரில் பவனிவரும் மன்னர்களாய் விளங்குவார்கள்.* **1137**

## திருக்கோவலூர்

*மேகங்கள் தவழும் ஏழுமலைகள், ஏழுகடல்கள், மேல் உலகங்கள், பூமி மற்றுமுள்ளவைகள் யாவற்றையும் தன் வயிற்றில் வைத்து, ஆலந்தளிரில் கண் வளர்ந்த எம்பெருமானை நான் திருக்கோவலூரில் கண்டேன். பெண்ணை ஆற்றின் தென்கரையில் அமைந்த நீர்வளம் மிகுந்த இத்தலத்தில், பயனை எதிர்பாராது; நான்கு வேதங்களை ஓதுபவர் சோம யாகம் செய்வார்கள். செந்நெல் விளையும் வயல்கள் நிறைந்த அழகிய ஊர் இத்திருகோவலூர்.* **1138**

*சந்தனம் அணிந்த மார்புடைய திருமகளும், பூமிப்பிராட்டியும், படங்களை உடைய ஆதிசேஷன் மீது பாற்கடலில் பள்ளி கொண்ட பெருமானின் திருவடிகளை வருடுவார்கள். பிரமன் முதலியோர், கொத்தாக மலர்ந்த மணமுடைய திருத்துழாய், சந்தனம், தூபம், தீபம் ஆகியவற்றால், வழிபட்டுத்துதிப்பார்கள். இத்தகைய எம்பெருமானை நான் திருக்கோவலூரில் காணப்பெற்றேன். அங்கே, வேதியர்கள், ஏழிசை, ஆறுஅங்கம், ஐந்து வேள்வி, நான்கு வேதம், முத்தீ, இவற்றால் இரவும் பகலுமாகிய இருபொழுதுகளிலும் மனம் ஒன்றி, வழிபடும் சிறப்பு உள்ளது.* **1139**

கொழுந்து அலரும் மலர்ச் சோலைக் குழாம்கொள் பொய்கைக்
கோள் முதலை வாள் எயிற்றுக் கொண்டதற்கு எள்கி
அழுந்திய மா களிற்றினுக்கு அன்று ஆழி ஏந்தி,
அந்தரமே வரத் தோன்றி அருள் செய்தானை
எழுந்த மலர்க் கரு நீலம் இருந்தில் காட்ட,
இரும் புன்னை முத்து அரும்பிச் செம்பொன் காட்ட,
செழுந்தடநீர்க் கமலம் தீவிகை போல் காட்டும்
திருக்கோவலூர்-அதனுள்-கண்டேன் நானே. 1140

தாங்கு அரும் போர் மாலி படப் பறவை ஊர்ந்து,
தராதலத்தோர் குறை முடித்த தன்மையானை,
ஆங்கு அரும்பிக் கண் நீர் சோர்ந்து அன்பு கூரும்
அடியவர்கட்கு ஆர் அமுதம் ஆனான் தன்னை
கோங்கு அரும்பு சுரபுன்னை. குரவு ஆர் சோலைக்
குழாம் வரி வண்டு இசை பாடும் பாடல் கேட்டுத்
தீங் கரும்பு கண்வளரும் கழனி சூழ்ந்த
திருக்கோவலூர்-அதனுள் - கண்டேன் நானே. 1141

கறை வளர் வேல் கரன் முதலாக் கவந்தன், வாலி
கணை ஒன்றினால் மடிய இலங்கை தன்னுள்
பிறை எயிற்று வாள் அரக்கர் சேனை எல்லாம்
பெருந்தகையோடு உடன் துணித்த பெம்மான் தன்னை
மறை வளர, புகழ் வளர, மாடம்தோறும்
மண்டபம் ஒண் தொளி அனைத்தும் வாரம் ஓத,
சிறை அணைந்த பொழில் அணைந்த தென்றல் வீசும்
திருக்கோவலூர்-அதனுள் - கண்டேன் நானே. 1142

உறி ஆர்ந்த நறு வெண்ணெய் ஒளியால் சென்று அங்கு
உண்டானைக் கண்டு ஆயச்சி உரலோடு ஆர்க்க,
தறி ஆர்ந்த கருங் களிறே போல நின்று,
தடங் கண்கள் பனி மல்கும் தன்மையானை
வெறி ஆர்ந்த மலர்மகள் நா மங்கையோடு
வியன் கலை எண் தோளினாள் விளங்கு செல்வச்
செறி ஆர்ந்த மணி மாடம் திகழ்ந்து தோன்றும்
திருக்கோவலூர்- அதனுள் - கண்டேன் நானே. 1143

இருங் கை மா கரி முனிந்து பரியைக் கீறி
இன விடைகள் ஏழ் அடர்த்து மருதம் சாய்த்து
வரும் சகடம் இற உதைத்து மல்லை அட்டு
வஞ்சம் செய் கஞ்சனுக்கு நஞ்சு ஆனானை
கருங் கமுகு பசும் பாளை வெண் முத்து ஈன்று
காய் எல்லாம் மரகதம் ஆய் பவளம் காட்ட,
செருந்தி மிக மொட்டு அலர்த்தும் தேன் கொள் சோலைத்
திருக்கோவலூர்-அதனுள் - கண்டேன் நானே. 1144





தளிர்களும் பூக்களும் உள்ள சோலை சூழ்ந்த பொய்கையில் வலிய முதலையின் வாள் பற்களில் அகப்பட்ட யானைக்காக, வானில் சக்கரத்துடன் தோன்றி அருள் செய்தவனை நான் திருக்கோவலூரில் கண்டேன். கருநெய்தல் பூக்கள் கரிபோலவும் புன்னை மலர்கள் முத்தையும் பொன்னையும் போலவும் தாமரைகள் விளக்குகள் போலவும் விளங்குவதால் இத்தலம் பொன் வேலை செய்யப்படும் பட்டரையை ஒத்துள்ளது. 1140

கருடன் மீதேறி, மாலி முதலிய அரக்கர்களை அழித்து உலகினர் குறைகளை நீக்கிய அருளாளன், பக்திக் கண்ணீர் பெருக, வணங்கும் அடியார்களுக்கு அமுதம் போன்றவன். கோங்கு, சுரபுன்னை, குரவம் பூக்கும் சோலையில் உள்ள வண்டின் இசைகேட்டுக் கரும்புகள் வளரும் வயல்கள் உள்ள திருக்கோவலூரில் இப்பெருமானை நான் கண்டேன். 1141

கறைபட்ட வேலுடைய கரன், கவந்தன், வாலி முதலானோரை அம்பால் வதைத்து, பிறைப்பற்களைப் பெற்ற அரக்கர்களையும் இராவணனையும் இலங்கையில் அழித்தவனை நான் திருக்கோவலூரில் கண்டேன். இவ்வூரில். அந்தணர்கள், வீடுகளிலும் மண்டபங்களிலும் சாவடிகளிலும் வேதம் ஓதி, உருச்செய்யும் பொழுது நீர் அகழி அருகே உள்ள சோலையி லிருந்து வீசும் தென்றல், அவர்கள் மீது படும். 1142

உறியில் இருந்த வாசனை வெண்ணெய்யைச் சிரித்தபடியே, திருடித்தின்ற கண்ணனை, யசோதை உரலுடன் கட்டவும், யானை போன்ற அவன், கண்ணீர் அரும்பக் கட்டுப்பட்டானே! இப்பெருமானை, மணம் வீசும் தாமரையில் தோன்றிய திருமகள், நாமகள், மான்வாகனம் கொண்ட துர்க்கை ஆகிய மூவருடன் மாடங்கள் உயர்ந்த திருக்கோவலூரில் நான் கண்டேன். 1143

நீண்ட துதிக்கை பெற்ற குவலயாபீடத்தைக் கண்ணன் கொன்றான், குதிரையான கேசியின் வாயைப் பிளந்தான்; ஏழு எருதுகளைக் கொன்றான்; மருதமரத்தைச் சாய்த்தான்; சகடாசுரனை உதைத்தான்; மல்லரைப் போரிட்டு அழித்தான்; வஞ்சகன் கஞ்சனுக்கு நஞ்சான யமன் ஆனான். இப்பெருமானை நான் திருக் கோவலூரில் கண்டேன். இங்குக் கமுகு வெடித்துப் பாளையினின்று முத்துச் சிதறும். காய்கள் மரகதம் போலவும் பழங்கள் பவளம் போலவும் உள்ளன. சுரபுன்னை மொட்டுமலரும் சிறப்புடைய சோலையில் தேன் துளிர்க்கும். 1144

பார்ஏறு பெரும் பாரம் தீரப் பண்டு
பாரதத்துத் தூது இயங்கி பார்த்தன் செல்வத்
தேர்ஏறு சாரதி ஆய், எதிர்ந்தார் சேனை
செருக்களத்துத் திறல் அழியச் செற்றான் தன்னை
போர்ஏறு ஒன்று உடையானும், அளகைக் கோனும்
புரந்தரனும் நான்முகனும் பொருந்தும் ஊர்போல்
சீர்ஏறு மறையாளர் நிறைந்த செல்வத்
திருக்கோவலூர்-அதனுள் - கண்டேன் நானே. 1145

தூவடிவின் பார் மகள், பூ மங்கையோடு
சுடர் ஆழி சங்கு இருபால் பொலிந்து தோன்ற,
காவடிவின் கற்பகமே போல நின்று,
கலந்தவர்கட்கு அருள்புரியும் கருத்தினானை,
சேவடி கை திருவாய்,கண், சிவந்த ஆடை
செம் பொன் செய் திரு உருவம் ஆனான் தன்னை
தீவடிவின் சிவன் அயனே போல்வார் மன்னு
திருக்கோவலூர்-அதனுள்-கண்டேன் நானே. 1146

வாரணம்கொள் இடர்கடிந்த மாலை, நீல
மரகத்தை மழை முகிலே போல்வான் தன்னைச்
சீர்அணங்கு மறையாளர் நிறைந்த செல்வத்
திருக்கோவலூர் அதனுள் கண்டேன் என்று
வார்அணங்கு முலை மடவார் மங்கை வேந்தன்
வாட் கலியன் ஒலி ஐந்தும் ஐந்தும் வல்லார்
காரணங்களால் உலகம் கலந்து அங்கு ஏத்த,
கரந்து எங்கும் பரந்தானைக் காண்பர் தாமே. 1147

## திருவயிந்திரபுரம்

இருந்தண் மா நிலம் ஏனம் அது ஆய், வளை
மருப்பினில் அகத்து ஒடுக்கி,
கருந்தண்மா கடல்கண் துயின்றவன் இடம்-
கமலநல் மலர்த்தேறல்
அருந்தி இன் இசை முரன்றுஎழும் அளிகுலம்
பொதுளி அம் பொழிலூடே
செருந்தி நாள்மலர் சென்று அணைந்து உழிதரு
திருவயிந்திரபுரமே. 1148







பூமி பாரம் தீரப் பாரதப் போரிலே தூது போய், அர்ஜூனன் தேர்ப்பாகன் ஆகி, எதிரிகளை அழித்த பகவானை, நான் திருக்கோவலூரில் கண்டேன். காளை வாகனம் உடைய சிவனும் குபேரனும் இந்திரனும் பிரமனும் சேர்ந்திருக்கும் ஊர் போல, மிகுந்தகுணம் உடைய அந்தணர்கள் நிறைந்த சிறப்புடைய ஊர் இதுவே ஆகும். **1145**

கற்பகச் சோலை தனிக் கோப்பாய்ப் பூத்தது போல, பூமி தேவியும் திருமகளும் கூடி இருக்க, ஒளிச்சக்கரமும் சங்கும் விளங்க, எழுந்தருளியவன், தன்னையே உறவாகப் பற்றுபவர்க்கு அருள் செய்வான். சிவந்ததிருவடிகள், கைகள், வாய். கண்கள், பீதாம்பரம் யாவும் அழகே வடிவாய் விளங்கும் இப்பெருமானை நான் திருக்கோவலூரில் கண்டேன். அங்கே வாழும் மறையோர் நெருப்பின் நிறமுடைய சிவனையும் பிரமனையும் ஒத்தவர் ஆவர். **1146**

கஜேந்திரனின் துன்பத்தைப் போக்கிய திருமால், நெய்தல் பூ, மரகதம், மேகம் ஆகியவற்றின் நிறம் உடைய அழகன் ஆவான். இப்பெருமானை, ஆத்மகுணங்கள் நிறையப் பெற்ற அந்தணர் வாழும் திருக்கோவலூரில் காணப்பெற்றதாகத் திருமங்கை மன்னர் அருளினார். கலியன் ஆகிய இவ்வாழ்வார் அருளிய பத்துப் பாசுரங்களையும் கற்பவர், செல்வம் உறுதிப்பொருள்களுக்காகத் துதித்தாலும் மறைந்து எங்கும் பரந்த இறைவனைக் காணப்பெறுவர். **1147**

## திருவயிந்திரபுரம்

பிரளய காலத்தில் வராஹமாய்த் தோன்றிப் பூமியை. வளைந்த கொம்பால் தூக்கிக் காத்தவனே பாற்கடலில் கண் துயின்றான். இப்பெருமான் எழுந்தருளி உள்ள திருவயிந்திரபுரத்தில், தாமரைப்பூவில் தேனை அருந்தி இசைபாடும் வண்டினம், கூத்தாடும் சோலைகள் உள்ளன. இவ்வண்டுகள், மேலும் மது அருந்த எண்ணி, அங்குள்ள செருந்தி மரப்பூக்களில் திரண்டு சேரும். **1148**

மின்னும் ஆழி அங்கையவன், செய்யவள்
உறை தரு திரு மார்பன்,
பன்னு நான்மறைப் பல் பொருள் ஆகிய
பரன் இடம் -வரைச் சாரல்
பின்னும் மாதவிப் பந்தலில் பெடை வர,
பிணி அவிழ் கமலத்துத்
தென்ன என்று வண்டு இன் இசை முரல்தரு
திருவயிந்திரபுரமே. 1149

வையம் ஏழும் உண்டு ஆல் இலை வைகிய
மாயவன், அடியவர்க்கு
மெய்யன் ஆகிய தெய்வநாயகன் இடம் -
மெய்தகு வரைச் சாரல்
மொய் கொள் மாதவி சண்பகம் முயங்கிய
முல்லை அம் கொடி ஆட,
செய்ய தாமரைச் செழும் பணை திகழ்தரு
திருவயிந்திரபுரமே. 1150

மாறு கொண்டு உடன்று எதிர்ந்த வல் அவுணன் தன்
மார்பு அகம் இரு பிளவாக்
கூறு கொண்டு அவன் குலமகற்கு இன் அருள்
கொடுத்தவன் இடம் மிடைந்து
சாறு கொண்ட மென் கரும்பு இளங் கழை தகை
விசும்பு உற மணி நீழல்
சேறு கொண்ட தண் பழனம் அது எழில் திகழ்
திருவயிந்திரபுரமே. 1151

ஆங்கு மாவலி வேள்வியில் இரந்து சென்று
அகல் இடம் அளந்து, ஆயர்
பூங் கொடிக்கு இன விடை பொருதவன் இடம் -
பொன் மலர் திகழ் வேங்கை,
கோங்கு செண்பகக் கொம்பினில் குதிகொடு
குரக்கினம் இரைத்து ஓடி
தேன் கலந்த தண் பலங்கனி நுகர்தரு
திருவயிந்திரபுரமே. 1152

கூன் உலாவிய மடந்தை தன் கொடுஞ் சொலின்
திறத்து இளங் கொடியோடும்
கான் உலாவிய கரு முகில் திரு நிறத்தவன்
இடம் -கவின் ஆரும்
வான் உலாவிய மதி தவழ் மால் வரை
மா மதிள் புடை சூழ.
தேன் உலாவிய செழும் பொழில் தழுவிய
திருவயிந்திரபுரமே. 1153





மின்னும் சக்கரத்தைக் கையில் ஏந்தியவனாய்த் திருமகள் வாழும் மார்புடைய பரமன், நான்கு வேதங்களில் கூறப்படும் பல பொருள்கள் ஆனவன். இப்பெருமான் எழுந்தருளிய திருவயிந்திரபுரத்தில் மலைப்பகுதிகளில் நெருங்கிய குருக்கத்திப் பந்தலில் ஆண்வண்டுகள் தங்கள் பெடைகளின் வரவை நோக்கித் தென்னா தெனா என்று இனிய இசைபாடும். 1149

ஏழுலகங்களையும் உண்டு ஆலந்தளிரில் கண் வளர்ந்த மாயன், அடியார்களுக்குத் தன்னை உள்ளபடி காட்டும் தெய்வ நாயகன். இப்பகவானின் மென்மைக்குத் தக்க, திருவயிந்திரபுர மலைப்பகுதிகளில் குருக்கத்தி, செண்பக மரத்தைத் தழுவி வளரும்; முல்லைக் கொடி அசையும்; நீர்நிலைகளில் செந்தாமரை பூத்து ஒளிவீசும். இதுவே அவன் உகந்த இடம் ஆகும். 1150

எதிர்த்துப் போரிட்ட இரணியாசுரனின் மார்பு இருகூறுகள் ஆகுமாறு பிளந்து, அவன்மகன் பிரகலாதனுக்கு அருள் செய்த பகவானின் திவ்ய தேசம் திருவயிந்திரபுரம் ஆகும். இங்கே, சாறு நிறைந்த கரும்புகள் தம் குருத்துகள் விண்ணைத் தொடும் அளவு வளர்ந்து நிழல் தருவன. கரும்புச் சாற்றின் சேறு கலந்த நீர்நிலைகளின் அழகு ஒளிவிடும். 1151

மாவலியின் வேள்வியில் மண் வேண்டி, உலகளந்த பகவான் பூங்கொடி போன்ற நப்பின்னையைப் பெற ஏழு எருதுகளுடன் போரிட்டான். இப்பெருமான் எழுந்தருளிய திருவயிந்திரபுரத்தில், குரங்குக் கூட்டம் பொன் போன்ற பூக்களுடைய வேங்கை மரத்திலும் கோங்கு, செண்பக மரக் கொம்புகளிலும் குதித்து ஓடித் தேன் மிகுந்த பலாப் பழத்தைத் தின்று மகிழும். 1152

கூனல் உடைய மந்திரையின் கொடிய சொல்லால், இளங்கொடியான சீதையுடன் காடு சென்ற, கருத்த மேகம் போன்ற இராமபிரான் எழுந்தருளிய இடம் திருவயிந்திரபுரம் ஆகும். வானில் உலாவும் சந்திரன் தொடும் அளவு உயர்ந்த மலைகளும், பெரிய மதிள்களும் இங்குண்டு. தேனை அருந்தும் வண்டுகள் திரியும் சோலைகளால் இத்தலம் சூழப்பட்டது. 1153

மின்னின் நுண்இடை மடக்கொடி காரணம்,
விலங்கலின்மிசை இலங்கை
மன்னன் நீள் முடி பொடி செய்த மைந்தனது
இடம் -மணி வரை நீழல்
அன்னம் மாமலர் அரவிந்தத்து அமளியில்
பெடையொடும் இனிது அமர,
செந்நெல்ஆர் கவரிக் குலைவீசு தண்
திருவயிந்திரபுரமே. 1154

விரைகமழ்ந்த மென்கருங்குழல் காரணம்
வில் இறுத்து, அடல் மழைக்கு
நிரைகலங்கிட வரைகுடை எடுத்தவன்
நிலவிய இடம் - தடம் ஆர்
வரைவளம் திகழ் மதகரி மருப்பொடு
மலை வளர் அகில் உந்தித்
திரைகொணர்ந்து அணை செழுநதி வயல்புகு
திருவயிந்திரபுரமே. 1155

வேல்கொள் கைத்தலத்து அரசர் வெம் போரினில்
விசயனுக்கு ஆய், மணித்தேர்க்
கோல்கொள் கைத் தலத்து எந்தை பெம்மான் இடம் -
குலவு தண் வரைச் சாரல்
கால்கொள்கண் கொடிகைஎழக் கமுகு இளம்
பாளைகள் கமழ் சாரல்
சேல்கள் பாய்தரு செழு நதிவயல் புகு
திருவயிந்திரபுரமே. 1156

மூவர் ஆகிய ஒருவனை, மூவுலகு
உண்டு உமிழ்ந்து அளந்தானை,
தேவர் தானவர் சென்று சென்று இறைஞ்ச, தண்
திருவயிந்திரபுரத்து
மேவு சோதியை வேல் வலவன் கலி
கன்றி விரித்து உரைத்த
பாவு தண் தமிழ்ப் பத்து இவை பாடிடப்
பாவங்கள் பயிலாவே. 1157





*மின்னலை ஒத்த நுண்ணிய இடைபெற்ற மடக் கொடியான சீதைக்காக, இலங்கை மன்னன் இராவணனின் பத்துத்தலைகளையும் பொடியாக்கிய இராமனின் தலம் திருவயிந்திரபுரம் ஆகும். இங்குள்ள மணி மலை நிழலில் அன்னங்கள் தம் பெடைகளுடன் தாமரைப் பூப் படுக்கையில் இனிதே தங்கும். வயல்களில் செந்நெல் கதிர்கள் சாமரம் போலே வீசும்.* **1154**

*மணம் வீசும் கூந்தலுடைய சீதையைப் பெற இராமன் வில்லை முறித்தான். பெரு மழையில் பசுக்கள் நோவு படா திருக்கக் கண்ணன் மலையைக் குடையாக எடுத்தான். இவ்வாறு அவதரித்த எம்பெருமானின் திருத்தலம் திருவயிந்திரபுரம் ஆகும். இவ்வூரில் ஓடும் ஆறு, மலைகளுக்குச் சிறப்புத்தரும் யானையின் கொம்புகளையும் அகில் மரங்களையும் தள்ளிக் கொண்டு ஓடி, வயல்களில் பாயும்.* **1155**

*கைகளில் வேலேந்திய துரியோதனாதியருடன் ஏற்பட்ட போரில், அர்ஜுனனுக்காகத் தேர்முன்னே கையில் கோல் ஏந்தி நின்ற எம்பெருமானின் இடம் திருவயிந்திரபுரம் ஆகும். இங்குள்ள மலைப் பக்கங்களில் வெற்றிலைக் கொடிகள் வளர்ந்து இடம் மறைக்கும். கமுகுப் பாளைகளிலிருந்து மணம் பரவும் மீன்கள் பாய்ந்தோடும். அழகிய ஆறு வயல்களில் புகும்.* **1156**

*ஸ்ரீமந் நாராயணன், பிரமன், விஷ்ணு, சிவன் ஆகிய மூவர்க்கும் உள்ளுறைபவனாய், மூவுலகங்களையும் உண்டு, உமிழ்ந்து காத்து, தேவர்களும் அசுரர்களும் பலபடியாய்த் துதிக்கும் பெருமை உடையவன். திருவயிந்திரபுரத்தில் எழுந்தருளிய இத்தேவாதி தேவனை, வேலேந்திய கலிகன்றி என்னும் திருமங்கை ஆழ்வார் பாடிப் பரவினார். இப்பத்துப் பாசரங்களைப் பயில்பவரின் பாவங்கள் தொடராமல் தொலையும்.* **1157**

## தில்லைத் திருச்சித்திரகூடம் – 1

ஊன்வாட உண்ணாது உயிர் காவல் இட்டு,
உடலில் பிரியாப் புலன் ஐந்தும் நொந்து,
தாம்வாட வாடத் தவம் செய்ய வேண்டா-
தமதா இமையோர் உலகு ஆளகிற்பீர்!
கான்ஆட மஞ்ஞைக் கணம் ஆட, மாடே
கயல் ஆடு கால் நீர்ப் பழனம் புடைபோய்த்
தேன்ஆட, மாடக் கொடி ஆடு தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. 1158

காயோடு நீடு கனி உண்டு, வீசு
கடுங்கால் நுகர்ந்து நெடுங் காலம் ஐந்து
தீயோடு நின்று தவம் செய்ய வேண்டா-
திரு மார்பனைச் சிந்தையுள் வைத்தும் என்பீர்!
வாய் ஓது வேதம் மலிகின்ற தொல் சீர்
மறையாளர் நாளும் முறையால் வளர்த்த
தீஓங்க ஓங்கப் புகழ் ஓங்கு தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. 1159

வெம்பும் சினத்துப் புனக் கேழல் ஒன்று ஆய்,
விரி நீர் முது வெள்ளம் உள்புக்கு அழுந்த
வம்புஉண் பொழில் சூழ் உலகு அன்று எடுத்தான்
அடிப்போது அணைவான் விருப்போடு இருப்பீர்!
பைம்பொன்னும் முத்தும் மணியும் கொணர்ந்து
படை மன்னவன் பல்லவர் கோன் பணிந்த
செம்பொன் மணி மாடங்கள் சூழ்ந்த தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. 1160

அருமாநிலம் அன்று அளப்பான், குறள் ஆய்
அவுணன் பெரு வேள்வியில் சென்று இரந்த
பெருமான் திருநாமம் பிதற்றி, நும் தம்
பிறவித் துயர் நீங்குதும் என்னகிற்பீர்!
கருமா கடலுள் கிடந்தான் உவந்து,
கவை நா அரவின் அணைப் பள்ளியின்மேல்,
திருமால் திருமங்கையொடு ஆடு தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. 1161





## திருச்சித்திர கூடம் –1

*பரமபதம் பெற விரும்புவர்களே; நீங்கள் உம் உடல் சதை வற்றும் படி, உடலுடன் பிரியாத ஐம்புலன்களும் துன்புறும் விதம், உயிரைச் சிறை இட்டு, மேன்மேலும் தவம் செய்ய வேண்டாம். இதற்கும் மேலானது தில்லைத் திருச்சித்திரகூடம் சென்று சேர்வதே ஆகும். அத்தலத்தில் மயில்கள் ஆடுவதால் சோலை அசைய, அதனால் கலைந்து புறப்பட்ட வண்டுகள் நீரோடும் வாய்க்கால் அருகுள்ள வயல்களில் சென்று, வானில் பறக்கவும், மாடத்தின் மீதுள்ள கொடிகள் அசைந்தாடும்.* **1158**

*திருமகள் கேள்வனை நெஞ்சில் கொள்ள விரும்புவர்களே! நீங்கள் பலகாலம் ஐவகைத் தீ ஓம்பி, காய். கனி, உண்டு, காற்றையே சுவாசித்துத் தவம் செய்ய வேண்டாம். வேதியர் மரபு பிறழாமல் நாளும் ஆற்றும் வேள்வித் தீ ஓங்கும் புகழுடைய தில்லைத் திருச்சித்திரகூடம் சேருங்கள்.* **1159**

*பரந்த உலகு, கடலிலே அழுந்திய காலத்தே, புனத்தில் வாழும் சினமுடைய வராஹமாய்த் தோன்றி, உணவு தரும் சோலைகள் சூழ்ந்த பூமியை எடுத்துக் காத்தவனின் திருவடிகளை அடைய விரும்புவர்களே! பசும்பொன், முத்துக்கள், மணிகள் ஆகியவற்றுடன் பரிவாரம் சூழ, வந்த பல்லவ மன்னன் பணிந்த, செம்பொன் மணிமாடம் சூழ்ந்த தில்லை நகர்த் திருச்சித்திரகூடத்தை அடையுங்கள்.* **1160**

*அன்று, வாமனனாய், மாவலியின் வேள்விச் சாலையில் யாசித்து உலகளந்த பெருமானின் திரு நாமத்தைக் கூறிப் பிறவித் துன்பத்தை நீக்கவிரும்புவரே! தில்லை நகரிலுள்ள திருச்சித்திர கூடத்தை அடையுங்கள் அங்கே, திருமால், பெரிய பிராட்டியாருடன் பாற்கடலில், பிளவு நாக்கு உடைய ஆதிசேஷன் மீது படுத்த கோலத்தில் காட்சி தருகிறார்.* **1161**

கோ மங்க, வங்கக் கடல் வையம் உய்ய,
குல மன்னர் அங்கம் மழுவில் துணிய,
தாம் அங்கு அமருள் படை தொட்ட வென்றித்
தவ மா முனியைத் தமக்கு ஆக்ககிற்பீர்!
பூ மங்கை தங்கிப் புல மங்கை மன்னிப்
புகழ் மங்கை எங்கும் திகழ, புகழ் சேர்,
சேமம் கொள் பைம் பூம் பொழில் சூழ்ந்த தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. 1162

நெய்வாய் அழல் அம்பு துரந்து, முந்நீர்
துணியப் பணிகொண்டு அணி ஆர்ந்து இலங்கு
மைஆர் மணிவண்ணனை எண்ணி நும் தம்
மனத்தே இருத்தும்படி வாழவல்லீர்!
அவ்வாய் இள மங்கையர் பேசவும் தான்
அரு மா மறை அந்தணர் சிந்தை புக.
செவ்வாய்க் கிளி நான்மறை பாடு தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. 1163

மௌவல் குழல் ஆய்ச்சி மென் தோள் நயந்து,
மகரம் 5 ழலச் சுழல் நீர் பயந்த
தெய்வத் திரு மா மலர் மங்கை தங்கு
திருமார்பனைச் சிந்தையுள் வைத்தும் என்பீர்!
கௌவைக் களிற்றின் மருப்பும் பொருப்பில்
கமழ் சந்தும் உந்தி நிவா வலம் கொள்
தெய்வப் புனல் சூழ்ந்து அழகு ஆய தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. 1164

மா வாயின் அங்கம் மதியாது கீறி,
மழை மா முது குன்று எடுத்து ஆயர் தங்கள்
கோ ஆய், நிரை மேய்த்து, உலகு உண்ட மாயன்
குரை மா கழல் கூடும் குறிப்பு உடையீர்!
மூவாயிரம் நான்மறையாளர் நாளும்
முறையால் வணங்க அணங்கு ஆய சோதித்
தேவாதிதேவன் திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. 1165

செரு நீல வேல் கண் மடவார்திறத்துச்
சினத்தோடு நின்று மனத்தால் வளர்க்கும்
அரு நீல பாவம் அகல, புகழ் சேர்
அமரர்க்கும் எய்தாத அண்டத்து இருப்பீர்!
பெரு நீர் நிவா உந்தி முத்தம் கொணர்ந்து எங்கும்
வித்தும் வயலுள் கயல் பாய்ந்து உகள.
திரு நீலம் நின்று திகழ்கின்ற தில்லைத்
திருசித்ரகூடம் சென்று சேர்மின்களே. 1166





தவமா முனிவன் பரசுராமன், கடல்சூழ்ந்த உலகோர் உய்வடைய, குலமன்னர்களின் உடல்கள் மழுவால் அழிந்து அரசபரம்பரை தேயும்படி, ஆயுதம் எடுத்து வென்றான். இவ்வாறு ஆவேச அவதாரம் எடுத்தவனைப் பெற விரும்புகிறவர்களே! நீங்கள் காவல் அரண்களும் சோலைகளும் சூழ்ந்த தில்லைத்திருச்சித்திரகூடம் சேருங்கள். அங்கே, பெரிய பிராட்டியாரும் பூமிப் பிராட்டியாரும் பகவானுடன் நித்திய வாசம் செய்கின்றனர். **1162**

நெய் பூசப்பட்ட கூரிய அம்பால், கடலை வற்றச்செய்து அணைகட்டிய, மணிநிறக் கரிய, இராமனை மனத்தில் கொள்ள விரும்புவரே! தில்லை நகர்த் திருச்சித்திரகூடம் சேருங்கள். அங்கே ஓதப்படும் வேதத்தைக் கேட்கும் சிறுமியர், திரும்பக் கூறவும் அதனைக் கேட்ட சிவந்த வாயுடைய கிளிகள் நான்கு வேதங்களையும் பாடும். **1163**

கூந்தலில் முல்லைப் பூச்சூடிய நப்பின்னையின் தோள் தோய்ந்தவன். மீன்கள் சுழலும் கடலில் தோன்றிய திருமகளை மார்பில் கொண்டுள்ளான். இவனை நெஞ்சில் கொள்ள விரும்புபவரே! பிளிறுகிற யானையின் கொம்பையும் மணம் வீசும் மலைச் சந்தனத்தையும் இழுத்து வரும் வெள்ளாறு சூழ்ந்த தில்லைத் திருச் சித்திர கூடத்தை நீங்கள் சேருங்கள். **1164**

குதிரையாய் வந்த கேசியின் வாயையும் உடலையும் பிளந்த கண்ணன் மழையிலிருந்து பசுக்களைக் காக்க மலையைத் தூக்கினான். உலகம் உண்ட மாயனின் திருவடிகளைப் பெற விரும்புபவர்களே! மூவாயிரம் அந்தணர் தினமும் வணங்கி வழிபடும் தேவாதி தேவனின் சித்திர கூடத்தைச் சேருங்கள். **1165**

போர்வேல் போன்ற நீலக் கண்ணழகுடைய பெண்களின் இன்பம் அடையாததாலே கோபம் கொண்டு நெஞ்சில் வளரும் பாவம் தீரவேண்டுமானால் புகழுடைய பிரமன் முதலியோராலும் செல்ல அரிய பரமபதம் அடைய வேண்டும். இப்பரமபத விருப்பம் உடையோரே; முத்துக்களைத் தள்ளி ஓடும் வெள்ளாறு வயல்களில் புகுவதால் மீன் வளமும் நெய்தல் பூக்களும் மிகுந்துள்ள தில்லைத் திருச்சித்திர கூடத்தை நீங்கள் அடையுங்கள். **1166**

சீர் ஆர் பொழில் சூழ்ந்து அழகு ஆய தில்லைத்
திருச்சித்ரகூடத்து உறை செங் கண் மாலுக்கு
ஆராத உள்ளத்தவர் கேட்டு உவப்ப,
அலை நீர் உலகுக்கு அருளே புரியும்
கார் ஆர் புயல் கைக் கலிகன்றி குன்றா
ஒலி மாலை ஓர் ஒன்பதோடு ஒன்றும் வல்லார்
பார் ஆர் உலகம் அளந்தான் அடிக்கீழ்ப்
பலகாலம் நிற்கும்படி வாழ்வர் தாமே. 1167

## தில்லைத்திருச்சித்திரகூடம் – ۲

வாட மருது இடை போகி மல்லரைக் கொன்று ஒக்கலித்திட்டு
ஆடல் நல் மா உடைத்து ஆயர் ஆ நிரைக்கு அன்று இடர் தீர்ப்பான்
கூடிய மா மழை காத்த கூத்தன் என வருகின்றான்
சேடு உயர் பூம் பொழில் தில்லைச் சித்திரகூடத்து உள்ளானே. 1168

பேய்மகள் கொங்கை நஞ்சு உண்ட பிள்ளை பரிசு இது என்றால்,
மா நில மா மகள் மாதர் கேள்வன் இவன் என்றும் வண்டு உண்
பூ மகள் நாயகன் என்றும் புலன் கெழு கோவியர் பாடித்
தே மலர் தூவ, வருவான் - சித்திரகூடத்து உள்ளானே. 1169

பண்டு இவன் வெண்ணெய் உண்டான் என்று ஆய்ச்சியர் கூடி இழிப்ப,
எண் திசையோரும் வணங்க இணை மருது ஊடு நடந்திட்டு,
அண்டரும் வானத்தவரும் ஆயிரம் நாமங்களோடு
திண் திறல் பாட வருவான்- சித்திரகூடத்து உள்ளானே. 1170

வளைக் கை நெடுங் கண் மடவார் ஆய்ச்சியர் அஞ்சி அழைப்ப,
தளைத்து அவிழ் தாமரைப் பொய்கைத் தண் தடம் புக்கு அண்டர் காண,
முளைத்த எயிற்று அழல் நாகத்து உச்சியில் நின்று, அது வாடத்
திளைத்து, அமர் செய்து வருவான் -சித்திரகூடத்து உள்ளானே. 1171

பருவக் கரு முகில் ஒத்து முத்து உடை மா கடல் ஒத்து,
அருவித் திரள் திகழ்கின்ற ஆயிரம் பொன் மலை ஒத்து,
உருவக் கருங்குழல் ஆய்ச்சிதிறத்து இன மால் விடை செற்று,
தெருவில் திளைத்து வருவான் - சித்திரகூடத்து உள்ளானே. 1172





சோலைகள் சூழ்ந்த திருச்சித்திரகூடச் செங்கண் மாலைப் பற்றிய இப்பாசுரங்களைக் கேட்கும் அடியார்கள் ஆராத அன்புடன் மகிழ்வர். உலகத்தவர்க்கு அருளே புரியும் தன்மையும் மேகம் போன்ற வண்மையும் கொண்ட கலிகன்றி ஆழ்வார் அருளிய பாசுரங்களைப் பயில்பவர், உலகளந்த பகவானின் திருவடிகளில் அடிமை செய்யப் பெறுவர். 1167

## திருச்சித்திர கூடம் – ۲

இணை மருத மரங்களின் ஊடு போய் அவை வாடி விழச்செய்து, மல்லர்களைக் கொன்று, நடைபழகி ஆடி வந்த குதிரையைக் கொன்று, இடையர் பசுக்களின் துன்பத்தை நீக்க, மலையைத் தூக்கிக் கண்ணன் காத்தான். 'மனம் கவர்ந்த மாயன்' எனப் பலர் புகழ வருபவன் பூஞ்சோலைகள் உள்ள சித்திரகூடத்தில் உள்ளான். 1168

"இப்பிள்ளை, பூதனைப்பேயின் முலை நஞ்சை உண்ட ஆச்சரியம்தான் என்னே!" என்றால், புலன்களை ஈர்க்கும் அழகுடைய இடைச்சிகள், "இவன் பூமிப்பிராட்டியின் நாயகன்; தாமரைச் செல்வியின் கேள்வன்" என்று துதித்துப் பூக்களைச் சொறிவார்கள். இவ்வாறு வருபவன் சித்திர கூடத்தில் உள்ளான். 1169

'வெண்ணெய் திருடி உண்ட சிறுவன்" என்று இடைச்சிகள் பழிபேசக் கண்ணன் எட்டுத்திசையோரும் வணங்க, இணை மருதமரங்களிடையே போனான். நித்திய சூரிகளும் பிரமன் முதலியோரும் ஆயிரம் நாமங்களைக் கூறி இவன் ஆண்மையைப் பாடும்படி வருபவன். சித்திரகூடத்தில் உள்ளான். 1170

வளைகள் அணிந்த கைகளும் நீண்ட கண்களும் உடைய இடைச்சிகள் அஞ்சிக் கூப்பிட்டும், கேளாமல், தாமரைப் பொய்கைக் கரைசென்று, இடையர்கள் காண நஞ்சுப்பற்களுடைய காளிய நாகத்தின் தலையில் நின்று, அது இளைத்து வாடக் கண்ணன் களித்தாடினான். இப்படிப் பூசல் செய்து வருபவன் சித்திரகூடத்தில் உள்ளான். 1171

கார்கால மேகம், முத்துக்கடல், ஆயிரம் அருவிகள் உள்ள மலைகள் , ஆகியவற்றை ஒத்த அழகிய கண்ணன், கருங்கூந்தல் நப்பின்னையைப் பெறப் பெரிய காளைகளைப் போரில் வீழ்த்தினான். வீதியில் வெற்றி விளங்க வரும் இவனே, திருச்சித்திர கூடத்தில் எழுந்தருளி உள்ளான். 1172

எய்யச் சிதைந்தது இலங்கை; மலங்க வரு மழை காப்பான்,
உய்யப் பரு வரை தாங்கி, ஆ நிரை காத்தான், என்று ஏத்தி,
வையத்து எவரும் வணங்க அணங்கு எழு மா மலை போலே,
தெய்வப் புள் ஏறி வருவான்-சித்திரகூடத்து உள்ளானே. 1173

ஆவர் இவை செய்து அறிவார் ? அஞ்சன மாமலைபோல,
மேவு சினத்து அடல் வேழம் வீழ முனிந்து அழகு ஆய
காவி மலர் நெடுங் கண்ணார் கை தொழ வீதி வருவான் -
தேவர் வணங்கு தண் தில்லைச் சித்திரகூடத்து உள்ளானே. 1174

பொங்கி அமரில் ஒருகால் பொன்பெயரோனை வெருவ,
அங்கு அவன் ஆகம் அளைந்திட்டு ஆயிரம் தோள் எழுந்து ஆட,
பைங் கண் இரண்டு எரி கான்ற நீண்ட எயிற்றொடு பேழ் வாய்ச்
சிங்க உருவின் வருவான் - சித்திரகூடத்து உள்ளானே. 1175

கருமுகில் போல்வது ஓர் மேனி; கையன ஆழியும் சங்கும்;
பெருவிறல் வானவர்சூழ ஏழ்உலகும் தொழுது ஏத்த,
ஒருமகள் ஆயர் மடந்தை ஒருத்தி நிலமகள் , மற்றைத்
திருமகளோடும் வருவான் - சித்திரகூடத்து உள்ளானே. 1176

தேன்அமர் பூம் பொழில் தில்லைச் சித்திரகூடம் அமர்ந்த
வானவர் தங்கள் பிரானை மங்கையர் கோன் மருவார்
ஊன் அமர் வேல் கலிகன்றி ஒண் தமிழ் ஒன்பதோடு ஒன்றும்
தான் இவை கற்று வல்லார்மேல் சாரா. தீவினை-தானே. 1177

## திருக்காழிச் சீராமவிண்ணகரம்

ஒரு குறள் ஆய், இரு நிலம் மூவடி மண் வேண்டி,
உலகு அனைத்தும் ஈர் அடியால் ஒடுக்கி ஒன்றும்
தருக எனா. மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாள் அணைவீர்! தக்க கீர்த்தி
அரு மறையின் திரள் நான்கும் வேள்வி ஐந்தும்,
அங்கங்கள் அவை ஆறும் இசைகள் ஏழும்
தெருவில் மலி விழா வளமும் சிறக்கும் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. 1178





*"இராமன் எய்த அம்பால் இலங்கை அழிந்தது. மழையில் கலங்கிய பசுக்களைக் காக்கக் கண்ணன் பெரிய மலையைத் தூக்கினான்." என்று உலகோர் துதி செய்ய, தெய்வ மலையே வருவதெனப் பெரிய திருவடிமேல் ஏறிவருவபன் திருச்சித்திர கூடத்தில் உள்ளான்.* **1173**

*வலிமையுடன் சினந்து, அஞ்சனமலை போல் வந்த குவலயாபீட யானையை வீழ்த்திய கண்ணன் செயல்தான் என்னே! வேறு யார்தான் இவ்வாறு செய்ய வல்லார்!! குவளைக் கண்களை உடைய மாதர்கள் கைதொழ, வீதியில் வரும் இவன், தேவர்கள் வணங்கும் சித்திரகூடத்தில் உள்ளான்.* **1174**

*போரில் பண்டொரு சமயம், இரணியன் அஞ்சும்படி சீறி எழுந்து அவன் உடலைப் பிளந்து, தன் ஆயிரம் தோள்களும் புடைத்து ஆட, நெருப்பு உமிழும் கண்களுடனும், கோரைப் பற்கள் கொண்ட பெரிய வாயுடனும் நரசிம்மமாக வந்தவன் சித்திரகூடத்தில உள்ளான்.* **1175**

*கரு மேகம் ஒத்த திருமேனியுடன் கைகளில் சங்குசக்கரம் ஏந்தி, மிடுக்குடைய தேவர்கள் சூழ, ஏழுலகத்தவரும் துதிக்க, ஆய்ப்பெண் நப்பின்னை, பூமிப்பிராட்டி, திருமகள் ஆகிய மூன்று தேவிகளுடன் வருபவன் திருச்சித்திர கூடத்தில் உள்ளான்.* **1176**

*வண்டுகள் அமரும் சோலைகள் உள்ள திருச்சித்திர கூடத்தில் எழுந்தருளிய நித்திய சூரிகள் தலைவனைத் திருமங்கை மன்னர் துதித்தார். சதையில் பாயும் வேல் ஏந்திய கலிகன்றியின் இப்பத்துப் பாசுரங்களைப் பயில்பவரிடம் பாவங்கள் வந்து சேரா.* **1177**

## திருக்காழிச் சீராம விண்ணகரம்

*ஒப்பற்ற வாமனனாய் வந்து, அகன்ற பூமியில் மூன்றடி மண் வேண்டி, உலகங்களை எல்லாம் இரண்டு அடிகளில் அடக்கி, மூன்றாவது அடியையும் தரவேண்டும் என்று மாவலியைப் பாதாளச் சிறையில் வைத்த மேன்மையன் திருவடிகளை அணுகுங்கள். அவன் தகுதிப் பெருமைகளைக் கூறும் நான்கு வேதங்களும் ஐவகை வேள்விகளும் ஆறு அங்கங்களும் ஏழுஇசைகளும் மிகுந்து, விழாக் கோலம் பூணும், வீதிகள் உள்ள, சீர்காழியில் ஸ்ரீ ராம விண்ணகரத்தை நீங்கள் அடைந்து உய்யுங்கள்.* **1178**

நான்முகன் நாள் மிகைத் தருக்கை இருக்கு வாய்மை
நலம் மிகு சீர் உரோமசனால் நவிற்றி, நக்கன்
ஊன்முகம் ஆர் தலை ஓட்டு ஊண் ஒழித்த எந்தை
ஒளி மலர்ச் சேவடி அணைவீர்! உழு சே ஓடச்
சூல்முகம் ஆர் வளை அளைவாய் உகுத்த முத்தைத்
தொல் குருகு சினை என்னச் சூழ்ந்து இயங்க, எங்கும்
தேன்முகம் ஆர் கமல வயல் சேல் பாய் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. 1179

வைஅணைந்த நுதிக் கோட்டு வராகம் ஒன்று ஆய்,
மண் எல்லாம் இடந்து எடுத்து, மதங்கள் செய்து
நெய்அணைந்த திகிரியினால் வாணன் திண் தோள்
நேர்ந்தவன் தாள் அணைகிற்பீர்! நெய்தலோடு
மைஅணைந்த குவளைகள் தம் கண்கள் என்றும்
மலர்க் குமுதம் வாய் என்றும் கடைசிமார்கள்
செய்அணைந்து களை களையாது ஏறும் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. 1180

பஞ்சிய மெல் அடிப் பின்னைதிறத்து முன் நாள்
பாய் விடைகள் ஏழ் அடர்த்து பொன்னன் பைம் பூண்
நெஞ்சு இடந்து, குருதி உக, உகிர் வேல் ஆண்ட
நின்மலன் தாள் அணைகிற்பீர்! நீல மாலைத்
தஞ்சுஉடைய இருள் தழைப்ப தரளம் ஆங்கே
தண் மதியின் நிலாக் காட்ட பவளம் தன்னால்
செஞ்சுடர் வெயில் விரிக்கும் அழகு ஆர் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. 1181

தெவ்ஆய மற மன்னர் குருதி கொண்டு
திருக் குலத்தில் இறந்தோர்க்குத் திருத்திசெய்து
வெவ்வாய மா கீண்டு வேழம் அட்ட
விண்ணவர் கோன் தாள் அணைவீர்! விகிர்த மாதர்
அவ்ஆய வாள் நெடுங் கண் குவளை காட்ட,
அரவிந்தம் முகம் காட்ட அருகே ஆம்பல்
செவ்வாயின் திரள் காட்டும் வயல் சூழ் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. 1182

பைங்கண் விறல் செம்முகத்து வாலி மாள,
படர்வனத்துக் கவந்தனொடும் படை ஆர் திண் கை
வெம் கண் விறல் விராதன் உக வில் குனித்த
விண்ணவர் கோன் தாள் அணைவீர்! வெற்புப் போலும்
துங்கமுக மாளிகை மேல் ஆயம் கூறும்
துடி இடையார் முகக் கமலச் சோதி தன்னால்
திங்கள்முகம் பனி படைக்கும் அழகு ஆர் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. 1183





*பிரமனின் ஆயுள் மிகுதிக் கர்வத்தை, வேதம் ஓதிய உரோமச முனிவரால் போக்குவித்தவனும், ஊனுடைய பிரம கபாலத்தில் சிவன் பிச்சை எடுப்பதை நீக்குவித்தவனும் ஆன எந்தையின் திருவடிகளைச் சேர்பவர்களே! தேன் சொரியும் தாமரையும் துள்ளும் மீன்களும் உள்ள காழிச்சீராம விண்ணகரம் சேருங்கள். இவ்வூர் வயல்களில் எருதுகள் உழும் பொழுது, சூலுடைய சங்குகள் முத்துக்களை ஈனவும், குருகுகள் தம் முட்டைகள் என்றெண்ணி மேலே பறக்கும்.* **1179**

*வராஹமாய்க் கொம்பு முனையில் பூமியைத் தூக்கிக் காத்தவனும், வாணனின் தோள்களைச் சக்கரத்தால் துணித்தவனும் ஆன பெருமானின் திருவடிகளைச் சேர்பவர்களே! காழிச்சீராம விண்ணகரம் சேருங்கள். இவ்வூர் வயல்களில் உள்ள நெய்தல், குவளைப் பூக்கள், தம் கண்களைப் போலவும், ஆம்பல் வாய் போன்றும் உள்ளதால், உழத்தியர்களை பறியாமல் கரை ஏறுவர்.* **1180**

*செம்பஞ்சு போன்ற அடிகளை உடைய நப்பினையைப் பெற ஏழு எருதுகளுடன் போரிட்டவனும் இரணியன் மார்பைக் கீறி இரத்தம் பீறிடச் செய்தவனும் ஆன தூயவன் திருவடி சேர்பவரே! காழிச்சீராமவிண்ணகரம் சேருங்கள். இவ்வூர் மாடங்களில் பதிக்கப்பட்ட மணிகள் மாலை இருளைக் காட்டும்; முத்துக்கள் நிலவொளியை வீசும்; பவளங்கள் சூரியன் வெயிலைப் பரப்பும்.* **1181**

*பகை மன்னர் இரத்தத்தால் பரசுராமன் தன் முன்னோர்க்கு நீர்க்கடன் செய்தான்; கண்ணன் கேசியின் வாயைக் கிழித்துக் குவலயாபீட யானையைக் கொன்றான். இந்த பகவான் திருவடிகளைச் சேர்பவரே! காழிச்சீராமவிண்ணகரம் சேருங்கள். இவ்வூர் வயல்களில் மலர்ந்த குவளைகள் பலவகை மாதர்களின் கண்களைப் போன்றன; தாமரைகள் முகம் ஒத்து ஆம்பல்கள் வாய் ஒத்தன.* **1182**

*பசுங்கண்களும் சிவந்த முகமும் கொண்ட வாலியையும், காட்டில் கவந்தனையும், ஆயுதக் கைகளும் கொடிய கண்களும் உடைய விராதனையும், தன் வில்லை வளைத்துக் கொன்ற தேவ தேவன் திருவடிகளைச் சேர்பவரே! காழிச்சீராம விண்ணகரம் சேருங்கள். இவ்வூரில் மலை போல் உயர்ந்த மாளிகை மேல் கூடும் மாதர்களின் முகத்தாமரை ஒளிக்குத் தோற்ற சந்திரன் முகம் வருந்திக் கண்ணீராகிய பனியைச் சொரியும்.* **1183**

பொருஇல் வலம்புரி அரக்கன் முடிகள் பத்தும்
புற்று மறிந்தன போலப் புவிமேல் சிந்த,
செருவில் வலம் புரி சிலைக் கை மலைத் தோள் வேந்தன்
திருவடி சேர்ந்து உய்கிற்பீர்! திரை நீர்த் தெள்கி
மருவி வலம்புரி கைதைக் கழி ஊடு ஆடி
வயல் நண்ணி மழை தரு நீர் தவழ் கால் மன்னி,
தெருவில் வலம்புரி தரளம் ஈனும் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. 1184

பட்டுஅரவு ஏர் அகல் அல்குல் பவளச் செவ் வாய்,
பணை நெடுந் தோள், பிணை நெடுங் கண், பால் ஆம் இன்சொல்,
மட்டுஅவிழும் குழலிக்கா, வானோர் காவில்
மரம் கொணர்ந்தான் அடி அணைவீர்! அணில்கள் தாவ,
நெட்டுஇலைய கருங் கமுகின் செங் காய் வீழ,
நீள் பலவின் தாழ் சினையில் நெருங்கு பீனத்
தெட்டபழம் சிதைந்து மதுச் சொரியும் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. 1185

பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து,
பிரமனைத் தன் உந்தியிலே தோற்றுவித்து
கறைதங்கு வேல் தடங் கண் திருவை மார்பில்
கலந்தவன் தாள் அணைகிற்பீர்! கழுநீர் கூடித்
துறைதங்கு கமலத்துத் துயின்று கைதைத்
தோடு ஆரும் பொதி சோற்றுச் சுண்ணம் நண்ணி
சிறைவண்டு களி பாடும் வயல் சூழ் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. 1186

செங்கமலத்து அயன் அனைய மறையோர் காழிச்
சீராமவிண்ணகர் என் செங் கண் மாலை
அம்கமலத் தட வயல் சூழ் ஆலி நாடன்,
அருள் மாரி, அரட்டு அமுக்கி அடையார் சீயம்,
கொங்குமலர்க் குழலியர் வேள், மங்கை வேந்தன்,
கொற்ற வேல் பரகாலன், கலியன் சொன்ன
சங்கமுகத் தமிழ் மாலை பத்தும் வல்லார்
தடங்கடல்சூழ் உலகுக்குத் தலைவர் தாமே. 1187





போரில் வெற்றியைத் தரும் வில்லையும் மலை போன்ற தோள்களையும் பெற்ற இராமன் ஒப்பற்ற வலிமை உடைய இராவணனின் பத்துத் தலைகளையும் புற்றின் புரைகள் போல பூமியிலே சிதறச் செய்தான். இவ்விறைவனின் திருவடிகளைச் சேர்பவர்களே! கடல் அலையால் தள்ளப்பட்ட வலம்புரிச் சங்குகள் தாழைக் கழிகளில் புகுந்து வயல்களில் நுழைந்து மழைநீர் ஓடும் கால்வாய் வழியே தெருவில் முத்துக்களை ஈனும் காழிச்சீராம விண்ணகரைச் சேருங்கள். **1184**

பாம்புப் படம் போன்ற இடையும் பவளவாயும் மூங்கில் தோள்களும் மான்பார்வையும் பாலினும் இனிய பேச்சும் தேன் சொட்டும் பூச்சூடிய கூந்தலும் உடைய சத்திய பாமைக்காகக் கண்ணன் தேவர்கள் சோலையிலிருந்து பாரிஜாத மரத்தைக் கொண்டுவந்தான். இவன் திருவடி சேர்பவர்களே! நீங்கள் காழிச்சீராம விண்ணகரம் சேருங்கள். இங்கு கமுக மரங்களில் அணில்கள் தாவுவதால் காய்கள் உதிர்ந்து பலாமரத்தில் விழப் பலாப்பழங்கள் சிதைந்து தேனைப் பெருக்கும். **1185**

சந்திரனைச் சூடிய சிவனைத் தன் வலப்பாகத்தில் வைத்துப் பிரமனைக் கொப்பூழில் உண்டாக்கி வேலினும் கூரியப் பார்வை உடைய திருமகளை மார்பிலே கொண்ட திருமாலின் திருவடி சேர்பவர்களே! காழிச்சீராம விண்ணகரம் சேருங்கள். இவ்வூரில் சிறகுடைய வண்டுகள் செங்கழு நீர்ப் பூவில் அமர்ந்து பின் தாமரையில் படுத்துத் தாழம்பூவின் பொடிகளில் புரண்டு இசைபாடும். **1186**

தாமரையில் தோன்றிய பிரமனை ஒத்த அந்தணர் வாழும் காழிச்சீராம விண்ணகரப் பெருமானைப் பற்றியன இப்பாசுரங்கள். குளங்களும் வயல்களும் சூழ்ந்த திருவாலி நாட்டுத் தலைவராய் அருள் பொழியும் மேகமாய் பகைவரை அடக்கும் சிங்கமாய் மாதர்களுக்கு மன்மதனாய்த் திருமங்கை நகர்க்கு மன்னனான பரகாலன் அருளிய சங்கத் தமிழ்ப் பாசுரங்களைப் பயில்பவர் கடல் சூழ் உலகுக்கு மன்னர் ஆவர். **1187**

திருவாலி – 1

வந்து உனது அடியேன் மனம் புகுந்தாய்;
புகுந்ததற்பின் வணங்கும் என்
சிந்தனைக்கு இனியாய் -திருவே! என் ஆர் உயிரே!
அம் தளிர் அணி ஆர் அசோகின் இளந்
தளிர்கள் கலந்து அவை எங்கும்
செந் தழல் புரையும் திருவாலி அம்மானே! 1188

நீலத் தட வரை மா மணி நிகழக்
கிடந்ததுபோல், அரவு அணை
வேலைத்தலைக் கிடந்தாய்; அடியேன் மனத்து இருந்தாய்
சோலைத்தலைக் கண மா மயில் நடம் ஆட
மழை முகில் போன்று எழுந்து, எங்கும்
ஆலைப் புகை கமழும் அணி ஆலி அம்மானே! 1189

நென்னல் போய், வரும் என்று என்று எண்ணி
இராமை என் மனத்தே புகுந்தது
இம்மைக்கு என்று இருந்தேன் -எறி நீர் வளஞ் செறுவில்
செந்நெல் கூழை வரம்பு ஒரீஇ. அரிவார்
முகத்து எழு வாளை போய், கரும்பு
அந் நல் காடு அணையும் அணி ஆலி அம்மானே! 1190

மின்னின் மன்னும் நுடங்கு இடை மடவார் தம்
சிந்தை மறந்து வந்து நின்
மன்னு சேவடிக்கே மறவாமை வைத்தாயால்
புன்னை மன்னு செருந்தி வண் பொழில்
வாய் அகன் பணைகள் கலந்து எங்கும்
அன்னம் மன்னும் வயல் அணி ஆலி அம்மானே! 1191

நீடு பல்மலர் மாலை இட்டுநின்
இணை அடி தொழுது ஏத்தும் என் மனம்
வாட, நீநினையேல் மரம்எய்த மா முனிவா!
பாடல் இன் ஒலி சங்கின் ஓசை
பரந்து பல் பணையால் மலிந்து எங்கும்
ஆடல்ஓசை அறாஅணி ஆலி அம்மானே! 1192





திருவாலி –1

அழகு மிகுந்த அசோகமரத்தின் இளந்தளிர்கள் எங்கும் பரந்து, சிவந்த நெருப்புப் போல் விளங்கும் திருவாலி நகரில் எழுந்தருளிய என் திருவே! எனக்கு உயிரானவனே! நானே வந்து உன்னை அடைய வேண்டி இருக்கே நீயே வந்து உன் அடிமை பூண்ட என் மனம் புகுந்தாய். ஆதலின் உன்னை வணங்கும் என் இதயம், விடமுடியாத அன்பு இனிமை ஆயிற்று. 1188

கரும்பாலைப் புகை மேலே பரவுவதால், சோலை மயில்கள் மழைக்கால மேகம் என, எண்ணி ஆடும் அழகுடைய திருவாலியில் உள்ளவனே! மாணிக்கம் பதித்த நீலமலை சாய்ந்தது போல, மார்பில் கௌத்துபம் விளங்க தேவரீர் திருப்பாற்கடலில் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டீர். அதை விட்டு இப்பொழுது அடியேன் மனத்தில் புகுந்த நீர்மை தான் என்னே! 1189

திருவாலியில் நீர் நிரம்பிய வயல்களில் வளர்ந்த செந்நெற்கதிர்களின் நுனிகளை வரப்புகளில் சேர்த்து, அறுப்பவரின் முகத்தில் பாயும் வாளை மீன்கள் குதித்தோடி, செடிமிக்க கருப்பங்காட்டில் புகும். இங்குள்ள அம்மானே! "நேற்றுப் போயிற்று; இன்று ஆயிற்று; நாளை வரும்" என்றெல்லாம் மனம் கலங்கி எதிர்பாராமல் அடியேன் மனம் புகுந்தது மிக இனிமை அன்றோ! 1190

புன்னை, செருந்தி மரங்கள் நிறைந்த சோலைப் பொய்கையில் அன்னங்கள் கூடிக் கலந்து மகிழும் சிறப்பும், வயல் வளமும் உள்ள திருவாலி அம்மானே! மின்னல் இடைப் பெண்களிடத்தே உண்டான ஆசையை மறந்து, எப்பொழுதும் ஒரே வடிவான உன் திருவடிகளை நான் மறவாதபடி செய்த அருள்தான் என்னே! 1191

பக்தி மிளிரும் இசையும், சங்கொலியும், பலவகை வாத்திய நாதத்துடன் ஆடுபவரின் ஓசையும், பார்த்த இடமெங்கும் மாறாத திருவாலியில் உள்ள அம்மானே! மராமரங்கள் ஏழினையும் ஒன்றுபட, எய்த முனிவனே! உன் இரு திருவடிகளிலும் பலவகை மலர்களாலான மாலையை இட்டு வணங்கித் துதிக்கும் அடியேன் மனம், உன் பிரிவால் வாடும் நிலையை நீ, நினையாதிருக்க வேண்டும். 1192

கந்த மாமலர் எட்டும் இட்டு, நின்
காமர் சேவடி கைதொழுது எழும்
புந்தியேன் மனத்தே புகுந்தாயைப் போகலொட்டேன்
சந்தி வேள்வி சடங்கு நான்மறை
ஓதி ஓதுவித்து ஆதியாய் வரும்
அந்தணாளர் அறா அணி ஆலி அம்மானே! 1193

உலவு திரைக்கடல் பள்ளிகொண்டு வந்து
உன் அடியேன் மனம் புகுந்த அப்
புலவ! புண்ணியனே! புகுந்தாயைப் போகலொட்டேன்
நிலவு மலர்ப் புன்னை, நாழல் நீழல் தண்
தாமரை மலரின்மிசை, மலி
அலவன் கண்படுக்கும் அணி ஆலி அம்மானே! 1194

சங்கு தங்கு தடங்கடல், கடல்
மல்லையுள் கிடந்தாய்; அருள்புரிந்து
இங்கு என்னுள் புகுந்தாய்; இனிப் போயினால் அறையோ!
கொங்கு செண்பகம் மல்லிகை மலர்
புல்கி, இன் இள வண்டு போய், இளந்
தெங்கின் தாது அளையும் திருவாலி அம்மானே! 1195

ஓதி ஆயிர நாமமும் பணிந்து,
ஏத்தி, நின் அடைந்தேற்கு ஒரு பொருள்,
வேதியா! அரையா! உரையாய், ஒரு மாற்றம் -எந்தாய்!
நீதி ஆகிய வேத மா முனி
யாளர் தோற்றம் உரைத்து மற்றவர்க்கு
ஆதி ஆய் இருந்தாய்! அணி ஆலி அம்மானே! 1196

புல்லி வண்டு அறையும் பொழில் புடை சூழ்
தென் ஆலி இருந்த மாயனை,
கல்லின் மன்னு திண் தோள் கலியன் ஒலிசெய்த
நல்ல இன் இசை மாலை நாலும் ஓர்
ஐந்தும் ஒன்றும் நவின்று தாம் உடன்
வல்லர் ஆய் உரைப்பார்க்கு இடம் ஆகும் வான் உலகே. 1197





சந்தியாவந்தனம், வேள்விகள், சடங்குகள், வேதங்கள் ஆகியவற்றை ஓதியும் ஓதுவித்தும், மாறாத பழைய மரபை நிலை நாட்டும் அந்தணர் வாழும் திருவாலியில் உள்ள அம்மானே! எட்டுவகை வாசனைப் பூக்களை உன் திருவடிகளில் இட்டுக் கைதொழுது துதிக்க விரும்பும் என் மனத்துள்ளே, நீயே வந்து புகுந்த பிறகு, இனி நான் உன்னை, என்னை விட்டுப் போக ஒட்டேன். 1193

பூக்கள் நிறைந்த புன்னை,ஞாழல் மரங்களின் நிழலில், தாமரைப்பூ மேல் பெரிய ஆண் நண்டுகள் உறங்கும் சிறப்புடைய திருவாலியில் உள்ளவனே! அலை பொங்கும் பாற்கடலில் பள்ளி கொண்ட, நீ அடியவன் நெஞ்சில் புகுந்தாய். எல்லாம் அறிந்தவனே! கைம்முதல் இல்லா அடியேனுக்கு அருள் செய்த புண்ணியா! இனி உன்னை நான் போகவொட்டேன். 1194

மணம் வீசும் செண்பகம், மல்லிகைப் பூக்களைத் தழுவி மது அருந்திய வண்டுகள் தம் வெம்மையைப் போக்க, இளந்தெங்கில் புகுந்து அளையும் சிறப்புடைய திருவாலியில் உள்ள பெருமானே! திருப்பாற்கடலிலும் திருக்கடல் மல்லையிலும் பள்ளி கொண்டவனே! அடியேன் நெஞ்சு புகுந்து அருள் செய்தாய். நீயே என்னைப் பிரிந்தாலும் பிரிவுதாளாமல், நீ மறுபடி வருவாய் ஆகையால், எவ்விதத்திலும் எனக்கே வெற்றி ஆயிற்று. ஆகவே 'அறையோ! அறை! என்கிறேன். 1195

விதிமுறை வகுக்கும் வேதம், அதன் மந்திரங்களால் கூறப்படும் பிரமன் முதலிய முனிவரின் தோற்றம், ஆகியவற்றைக் கூறி, யாவர்க்கும் ஆதிகாரணன் ஆக உள்ள திருவாலி அம்மானே! வேதத்தால் விவரிக்கப் படுபவனே! என் குறும்புகளை அறுத்து ஆண்டவனே! உன் ஆயிர நாமங்களையும் ஓதி வணங்கும் அடியேனுக்கு நீயே நெறியாக இருக்கும் உயர்ந்த சொல்லைக் கூறி அருள வேண்டும். 1196

ஒன்றை ஒன்று தழுவிக் கொண்டு வண்டுகள் இசை பாடும் சோலைகள் உள்ள அழகிய திருவாலியில் எழுந்தருளிய மாயனைப் பற்றி மலை போன்ற தோளுடைய கலிகன்றி ஆழ்வார் அருளிய இப்பத்துப் பாசுரங்களையும் பொருள் உணர்ந்து பாடிப் பயில்பவர்க்கு பரமபதமே இடம் ஆகும். 1197

## திருவாலி – ௨

### தலைவனைப் பிரிந்த தலைவி இரங்கிக் கூறுயது.

தூவிரிய மலர்உழக்கி, துணையோடும் பிரியாதே.
பூவிரிய மதுநுகரும் பொறி வரிய சிறு வண்டே!
தீவிரிய மறைவளர்க்கும் புகழ் ஆளர் திருவாலி
ஏவரி வெம்சிலையானுக்கு என் நிலைமை உரையாயே. 1198

பிணிஅவிழும் நறு நீல மலர் கிழிய, பெடையோடும்
அணிமலர்மேல் மது நுகரும் அறு கால சிறு வண்டே!
மணிகழுநீர் மருங்கு அலரும் வயல் ஆலி மணவாளன்
பணிஅறியேன்; நீ சென்று என் பயலை நோய் உரையாயே. 1199

நீர், வானம், மண், எரி,கால் ஆய்நின்ற நெடுமால் தன்
தார் ஆய நறுந் துளவம் பெறும் தகையேற்கு அருளானே;
சீர்ஆரும் வளர் பொழில் சூழ் திருவாலி வயல் வாழும்
கூர்வாய சிறு குருகே! குறிப்பு அறிந்து கூறாயே. 1200

தானாக நினையானேல் தன் நினைந்து நைவேற்கு ஓர்
மீன்ஆய கொடி நெடு வேள் வலி செய்ய மெலிவேனோ?
தேன்வாய வரி வண்டே! திருவாலி நகர் ஆளும்
ஆன் ஆயற்கு என் உறு நோய் அறிய, சென்று உரையாயே. 1201

வாள்ஆய கண் பனிப்ப மென் முலைகள் பொன்அரும்ப,
நாள்நாளும் நின் நினைந்து நைவேற்கு ஓ! மண் அளந்த
தாளாளா! தண் குடந்தை நகராளா ! வரை எடுத்த
தோளாளா! என் தனக்கு ஓர் துணையாளன் ஆகாயே. 1202

தார் ஆய தண் துளவ வண்டு உழுத வரைமார்பன்,
போர்ஆனைக் கொம்பு ஒசித்தபுட் பாகன், என் அம்மான்,
தேர்ஆரும் நெடு வீதித் திருவாலி நகர் ஆளும்
கார்ஆயன் என்னுடைய கன வளையும் கவர்வானோ? 1203





## திருவாலி –௨

### தலைவனைப் பிரிந்த தலைவி இரங்கிக் கூறியது.

*பூக்களில் சிறகு விரியும்படி மிதித்துத் தேனைப் பருகும், துணையைப் பிரியாத, புள்ளிகளும் வரிகளும் உடைய சிறிய வண்டே! தீக்கொழுந்துமேல் நோக்க, வேதமுறைப்படி வேள்வி செய்யும் புகமுடையவர் வாழும் திருவாலியில் எழுந்தருளிய, அம்புடன் வில்லேந்திய பெருமானிடம் என் நிலைமையைக் கூறு.* **1198**

*பாதி மலர்ந்த செவ்விஉடைய நீலப் பூ இதழ் கிழிய, பெடையுடன் அமர்ந்து தேன் அருந்தும் ஆறுகால்களை உடைய சிறிய வண்டே! செங்கழுநீர்ப் பூக்கள் மலரும் வயல்கள் சூழ்ந்த திருவாலியில் எழுந்தருளிய மணவாளனின் செயலை நான் அறியேன். நீ அங்கே போய் என் பசலை நோய் பற்றிக்கூறு.* **1199**

*நிலம், நீர், தீ, காற்று, வானம் ஆகியவற்றின் உள்ளே உறைபவனான நெடிய திருமால் தன் திருத்துழாய் மாலையை, நான் உயிர்வாழும்படி தரவில்லையே! சீர்மிகுந்த சோலைகள் சூழ்ந்த திருவாலி வயல்களில் வாழும் கூரிய வாயுடைய குருகே! பெருமான் கருத்தறிந்து வந்து, நீ எனக்குக் கூறவேண்டும்.* **1200**

*பெருமான் தானாக என்னை நினையாவிடிலும், நான் அவனை எண்ணி உருகுகிறேன். மீன்கொடிகொண்ட மன்மதனால் நலியப்பட்டு நான் மெலியலாமா? இனிமையாகப் பேசும் வரி வண்டே! நீ, திருவாலியில் எழுந்தருளி உள்ள கண்ணபிரானிடத்தே என் நோயை அறிவித்து உதவ வேண்டும்.* **1201**

*உலகளந்த திருவடிகளை உடையவனே! திருக்குடந்தைப் பெருமானே! கோவர்த்தன மலையைத் தூக்கிய தோள்களை உடையவனே' வாள் போன்ற என் கண்களிலிருந்து கண்ணீர் பெருகுகிறது; மென் முலைகளில் பொன்போல் பசலை படர்கிறது; தினமும் உன்னை எண்ணி வருந்துகிறேன். எனக்கு நீ ஒப்பற்ற துணை ஆக வேண்டும்.* **1202**

*வண்டுகள் உழுததால், தேனும் மணப்பொடியும் கலந்து சேறான திருத்துழாய் மாலையை மார்பில் அணிந்தவன்; போரிட வந்த குவலயாபீட யானையின் கொம்பை ஒடித்த கருடவாகனன் என் அம்மான், தேரோடும் வீதிகள் உள்ள திருவாலியில் உறையும் மேகநிறமுடையவன். என் கையில் அணிந்த பொன் வளையைக் கவர்வானோ?* **1203**

கொண்டு அரவத் திரை உலவு குரை கடல்மேல் குலவரைபோல்
பண்டு அரவின் அணைக் கிடந்து பார் அளந்த பண்பாளா!
வண்டு அமரும் வளர் பொழில் சூழ் வயல் ஆலி மைந்தா! என்
கண் துயில் நீ கொண்டாய்க்கு என் கன வளையும் கடவேனோ? 1204

குயில் ஆலும் வளர் பொழில் சூழ் தண் குடந்தைக் குடம் ஆடி
துயிலாத கண் இணையேன் நின் நினைந்து துயர்வேனோ?
முயல் ஆலும் இள மதிக்கே வளை இழந்தேற்கு இது நடுவே,
வயல் ஆலி மணவாளா! கொள்வாயோ மணி நிறமே ? 1205

நிலைஆளா நின் வணங்க வேண்டாயே ஆகிலும் என்
முலைஆள ஒருநாள் உன் அகலத்தால் ஆளாயே;
சிலையாளா! மரம் எய்த திறல்ஆளா! திருமெய்ய
மலையாளா! நீ ஆள வளைஆள மாட்டோமே. 1206

மைஇலங்கு கருங்குவளை மருங்கஅலரும் வயல் ஆலி
நெய்இலங்கு சுடர்ஆழிப் படையானை நெடுமாலை,
கைஇலங்கு வேல்கலியன் கண்டு உரைத்த தமிழ் மாலை
ஐ இரண்டும் இவை வல்லார்க்கு அரு வினைகள் அடையாவே. 1207

திருவாலி – 3

**தலைவனுடன் சென்ற தம்மகளை நினைத்துத் தாய் இரங்குதல்**

கள்வன்கொல்? யான் அறியேன்-கரியான் ஒரு காளை வந்து,
வள்ளி மருங்குல் என் தன் மட மானினைப் போத என்று,
வெள்ளி வளைக் கைப் பற்றப் பெற்ற தாயரை விட்டு அகன்று
அள்ளல் அம் பூங் கழனி அணி ஆலி புகுவர்கொலோ ? 1208

பண்டு இவன் ஆயன், நங்காய்! படிறன்; புகுந்து என் மகள் தன்
தொண்டை அம் செங் கனி வாய் நுகர்ந்தானை உகந்து அவன்பின்
கெண்டை ஒண் கண் மிளிரக் கிளிபோல் மிழற்றி, நடந்து,
வண்டு அமர் கானல் மல்கும் வயல் ஆலி புகுவர்கொலோ? 1209





*ஆதிகாலத்தில் அலையோசை மிகுந்த பாற்கடலில், ஆதிசேஷன் மீது பெரிய மலை கிடந்தது போல், பள்ளி கொண்டவனே! உலகளந்த நீர்மைக் குணவானே! வண்டுகள் வாழும் சோலைகளும் வயல்களும் உள்ள திருவாலி வீரனே! நீ என் தூக்கத்தைக் கவர்ந்தது போதாதா? கைவளையையுமா நான் இழப்பேன்?* **1204**

*குயில்கள் பாடும் வளம் மிகு சோலைகள் உள்ள திருக்குடந்தைப் பெருமானே! குடக்கூத்து ஆடியவனே; நான் உன்னையே எண்ணி உறங்கவில்லை. முயல்கறை உள்ள சந்திரனால், என் வளை இழந்தேன். வயல்கள் சூழ்ந்த திருவாலி மணவாளனே; என்னை நலியும் பாதகர் நடுவே நீயும் வந்து என் அழகிய நிறத்தைக் கவர்ந்து துன்புறுத்தலாமா?* **1205**

*வில் ஏந்தியவனே! ஏழு மராமரங்களைத் துளைத்தவனே! திருமெய்யத்தில் எழுந்தருளியவனே! நான் உன்னைப் பயன் கருதாது பற்ற, நீ விரும்பா விடிலும் ஒருநாளாவது உன் அகன்ற மார்புடன் நான் தழுவும்படி என்னை நீ ஆளவேண்டும். இவ்வாறு ஆண்டால், நான் என் வளையைப் பற்றிக் கவலைப் படேன்.* **1206**

*மை போன்ற குவளைகள் மலர்ந்த வயல்களுடைய திருவாலியில் உள்ள கூரிய சக்கரம் ஏந்திய திருமாலைப் பற்றிக் கையில் வேலேந்திய கலியன் ஆன ஆழ்வார் அருளிய பத்துப் பாசுரங்களைப் பயில்பவரிடத்தே வினைகள் சேரா.* **1207**

திருவாலி –3

**தலைவனுடன் சென்ற தம்மகளை நினைத்துத் தாய் இரங்குதல்**

*காளை போன்ற கரிய இளைஞன் ஒருவன் வந்து நுண்ணிய இடை உடைய மான் போன்ற என் பெண்ணின்,வெள்ளிவளை அணிந்த கையைப் பிடித்து 'வா!வா!' என்றழைத்துக் கொண்டு போனான். இவன் திருடனோ? அறியன், என்மகளும் என்னை விட்டுப் போனாளே! சேறு நிறைந்த வயலில் பூக்கள் மலரும் திருவாலித் தலத்தை இருவரும் அடைந்தார்களோ?* **1208**

*அயல்பெண்களே! இந்த இளைஞனோ ஆயிர்பாடியில் திருடியவன். இப்பொழுது என் வீடு புகுந்து என்மகளின் கொவ்வைப் பழம் போன்ற உதட்டின் சுவை பருகினானே! கெண்டை மீன் போன்ற கண்ணுடைய என் மகளும், கிளி போலக் கொஞ்சியபடி, அவன் பின் போனாளே! இருவரும் வண்டமரும் சோலை வயல்கள் உள்ள திருவாலியில் புகுவார்களோ?* **1209**

அஞ்சுவன் வெம் சொல்; நங்காய்! அரக்கர் குலப் பாவை தன்னை
வெம் சின மூக்கு அரிந்த விறலோன் திறம் கேட்கில் மெய்யே
பஞ்சிய மெல் அடி எம் பணைத் தோளி பரக்கழிந்து
வஞ்சி அம் தண் பணை சூழ் வயல் ஆலி புகுவர்கொலோ? 1210

ஏது அவன் தொல் பிறப்பு ? இளையவன், வளை ஊதி மன்னர்
தூதுவன் ஆயவன் ஊர் சொல்வீர்கள்! சொலீர்: அறியேன்
மாதவன் தன் துணையா நடந்தாள்; தடம் சூழ் புறவில்
போது வண்டு ஆடு செம்மல் புனல் ஆலி புகுவர்கொலோ? 1211

தாய் எனை என்று இரங்காள். தடந் தோளி; தனக்கு அமைந்த
மாயனை மாதவனை மதித்து என்னை அகன்ற இவள்;
வேய் அன தோள் விசிறி பெடை அன்னம் என நடந்து
போயின பூங் கொடியாள் புனல் ஆலி புகுவர்கொலே? 1212

என் துணை என்று எடுத்தேற்கு இறையேனும் இரங்கிற்றிலள்;
தன் துணை ஆய என் தன் தனிமைக்கும் இரங்கிற்றிலள்;
வன் துணை வானவர்க்கு ஆய், வரம் செற்று அரங்கத்து உறையும்
இன் துணைவனொடும் போய், எழில் ஆலி புகுவர்கொலோ? 1213

அன்னையும் அத்தனும் என்று அடியோமுக்கு இரங்கிற்றிலள்;
பின்னை தன் காதலன் தன் பெருந் தோள் நலம் பேணினளால்;
மின்னையும் வஞ்சியையும் வென்று இலங்கும் இடையாள் நடந்து
புன்னையும் அன்னமும் சூழ்புனல் ஆலி புகுவர்கொலோ? 1214

முற்றிலும் பைங் கிளியும் பந்தும், ஊசலும் பேசுகின்ற
சிற்றில் மென் பூவையும் விட்டு அகன்ற செழுங் கோதை தன்னைப்
பெற்றிலேன் முற்று இழையை; பிறப்பிலி பின்னே நடந்து
மற்று எல்லாம் கை தொழப் போய், வயல் ஆலி புகுவர்கொலோ? 1215

காவி அம் கண்ணி எண்ணில் கடி மா மலர்ப் பாவை ஒப்பாள்;
பாவியேன் பெற்றமையால், பணைத் தோளி பரக்கழிந்து
தூவி சேர் அன்னம் அன்ன நடையாள் நெடுமாலொடும் போய்,
வாவி அம் தண் பணை சூழ் வயல் ஆலி புகுவர்கொலோ? 1216





நங்கையே! இது என்ன கொடுஞ்சொல்! மிடுக்குடைய இராமன் கோபத்துடன் அரக்கி சூர்ப்பநகையின் மூக்கறுத்ததைக் கேட்டு அஞ்சுகிறேன். செம்பஞ்சு எழுதிய பாதமும் மூங்கில் தோளும் உடைய என் மகளும் பெருமானும், கொடிகளும் மூங்கில்களும் சூழ்ந்த வயல்களுடைய திருவாலியை எவ்வித ஆபத்துமின்றி அடைவார்களோ? 1210

அவன் பிறப்புப் பற்றி எதுவும் அறியேன்; அவனோ இளையவன்; மன்னர்க்குத் தூது சென்று சங்கு ஊதியவனின் பிறப்பு எதுவென்று கூறுவீர்களா? அத்திருமகள் கேள்வனைத் துணையாகக் கொண்டு என் மகள் போனாள். பொய்கைப் பக்கத்துப் பூக்களில் வண்டுகள் தேன் பருகும் திருவாலியில் இருவரும் புகுவார்களோ? 1211

அகன்ற தோள்களை உடைய என் மகள், பெற்றதாயான எனக்கு இரங்கவில்லை. மாயவனான மாதவனே தனக்கு ஏற்றவன் என மதித்து, அன்னப்பெடைபோலத் தோள்களை வீசியபடி அவனுடன் நடந்தாள். என்னைப் பிரிந்த அப்பூங்கொடியும் அவனும் நீர்வளம் மிகுந்த திருவாலியைச் சேர்வார்களா? 1212

பெற்ற எனக்கு என்மகள் துணையாக இல்லை; அவளுக்குத் துணையான என்னிடம் இரங்காமல் என்னைத் தனி ஆக்கினாள். தேவர்களுக்குத் துணையாக, அரக்கர் வரங்களைத் தொலைத் தவனும் திருவரங்கத்தில் உள்ளவனுமான இனிய துணைவனுடன் போனாள். இருவரும் அழகிய திருவாலி புகுவார்களோ? 1213

எம்மகள் எங்களிடத்தே தந்தை தாய் என்று இரங்க வில்லை; நப்பின்னை நாயகனின் தோளைத் தழுவ விரும்பினாள். மின்னலையும் வஞ்சிக்கொடியையும் போன்ற இடை உடைய அவள் அவனுடன் நடந்தாள். புன்னைமரச் சோலைகளும் அன்னங்களும் உள்ள நீர்வளமுடைய திருவாலியைச் சேர்வார்களோ? 1214

சிறுமுறம், கிளி, பந்து, ஊஞ்சல், கூட்டிலிருந்து பேசும் நாகணபாய்ப் பறவை, ஆகியவற்றை விட்டு நீங்கிப் போனாள். அணி கள் பூண்ட கோதையான என் மகளை நான் காணவில்லை. யாவ ராலும் தொழப்பெறும் பிறப்பற்ற இறைவன் பின்னே நடந்தாள். அவ் விருவரும் வயல்கள் உள்ள திருவாலியில் புகுவார்களோ? 1215

குவளைக் கண்களுடைய என் மகள் பூமகளான பெரிய பிராட்டியை ஒத்தவள்; நடையில் இறகுடை அன்னத்தைப் போன்றவள்; மூங்கில் போல் தோள் கொண்டவள். இவளை நான் பெற்றது தான் குற்றம். நெடிய திருமாலுடன் இவள் நடந்து போனாள். இருவரும் வயல்கள் குளங்கள் உள்ள திருவாலி புகுவார்களோ? 1216

தாய் மனம் நின்று இரங்க, தனியே நெடுமால் துணையா.
போயின பூங் கொடியாள் புனல் ஆலி புகுவர் என்று
காய்சின வேல் கலியன் ஒலிசெய் தமிழ் மாலை பத்தும்
மேவிய நெஞ்சு உடையார் தஞ்சம் ஆவது விண் உலகே. 1217

## திருநாங்கூர் மணிமாடக்கோயில்

நந்தா விளக்கே! அளத்தற்கு அரியாய்
நர நாரணனே! கரு மா முகில்போல்
எந்தாய்! எமக்கே அருளாய் என நின்று
இமையோர் பரவும் இடம் எத் திசையும்
கந்தாரம் அம் தேன் இசை பாட மாடே,
களி வண்டு மிழற்ற நிழல் துதைந்து
மந்தாரம் நின்று மணம் மல்கும் நாங்கூர்
மணிமாடக்கோயில் - வணங்கு என் மனனே! 1218

முதலைத் தனி மா முரண்தீர அன்று
முது நீர்த் தடத்துச் செங் கண் வேழம் உய்ய,
விதலைத்தலைச் சென்று அதற்கே உதவி
வினை தீர்த்த அம்மான் இடம் விண் அணவும்
பதலைக் கபோதத்து ஒளி மாட நெற்றிப்
பவளக் கொழுங் கால பைங் கால் புறவம்
மதலைத் தலை மென் பெடை கூடும் நாங்கூர்
மணிமாடக்கோயில் - வணங்கு என் மனனே! 1219

கொலைப் புண் தலைக் குன்றம் ஒன்று உய்ய, அன்று
கொடு மா முதலைக்கு இடர்செய்து கொங்கு ஆர்
இலைப் புண்டரீகத்தவள் இன்பம் அன்போடு
அணைந்திட்ட அம்மான் இடம் ஆள் அரியால்
அலைப்புண்ட யானை மருப்பும் அகிலும்
அணி முத்து வெண் சாமரையோடு பொன்னி
மலைப் பண்டம் அண்டத் திரை உந்தும் நாங்கூர்
மணிமாடக்கோயில் -வணங்கு என் மனனே! 1220

சிறை ஆர் உவணப் புள் ஒன்று ஏறி, அன்று,
திசை நான்கும் நான்கும் இரிய செருவில்
கறை ஆர் நெடு வேல் அரக்கர் மடிய,
கடல் சூழ் இலங்கை கடந்தான் இடம் தான்
முறையால் வளர்க்கின்ற முத் தீயர்,நால் வேதர்,
ஐ வேள்வி ஆறு அங்கர் ஏழின் இசையோர்,
மறையோர் வணங்கப் புகழ் எய்தும் நாங்கூர்
மணிமாடக்கோயில் -வணங்கு என் மனனே! 1221





பூங்கொடி போன்ற தன் மகள் திருமாலைக் காதலித்து உடன் போனாள் என்றும் இருவரும் நீர்வளம் உடைய திருவாலி புகுவரோ என்றும் மனம் இரங்கித் தாயார் பேசியதாக உள்ளது இப்பதிகம். பகைவர் மீது சீறும் வேலேந்திய கலியன் ஆகிய ஆழ்வார் அருளிய இப்பாசுரங்களை நெஞ்சிற்கொள்வோர் பரமபதமே தஞ்சமாக அடைவர். **1217**

## திருநாங்கூர் – மணிமாடக் கோயில்

பிரமன் முதலியோர் திரு நாங்கூர் மணிமாடக் கோயிலில் வந்து, "நித்திய ஞான விளக்கே! அளவில் அடங்காதவனே! நர, நாராயணனாக நின்ற மேக வண்ணனே!' எங்களுக்கு அருள்க" என்று வேண்டுவர். இவ்வூரில் நிழல்தரும் மந்தாரமரங்கள் மணம்வீசும்; அங்கு வண்டுகள் கூடி எங்கும் காந்தாரப்பண் பாடிக் கொஞ்சும். **1218**

அன்று நீர்ப்பொய்கையில் இருந்த முதலையின் வலிமையை அழித்துச் செங்கண் யானையைக் காத்தவனின் இடம் திருநாங்கூர் மணிமாடக் கோயில் ஆகும். இவ்வூரில் மணி ஒளி வீசும் மாடங்களில் வான் அளாவும் கலசங்களும் கொடுங்கை களும் உண்டு. தூண்களின் உச்சிகளில் பவளக் கால்களுடைய புறாக்கள் தம் பேடைகளுடன் அமரும். மனமே! நீ இக் கோவிலுக்குச் சென்று வணங்கு. **1219**

புண்ணான தலை உடைய மலை போன்ற கஜேந்திரன் உய்வடைய, முதலையைக் கொன்ற பெருமான் தேன் சொட்டும் தாமரையில் உள்ள திருமகள் மகிழ, அன்புடன் கூடி இருக்கும் இடம் திரு நாங்கூர் மணிமாடக் கோயில் ஆகும். மனமே! நீ இங்குச் சென்று வணங்கு. இவ்வூரில், காவிரி ஆற்றில், சிங்கங்களால் கொல்லப்பட்ட யானைத் தந்தங்களும் அகிலும் முத்தும் சாமரை களும், மலைப்பொருள்களும் அலையுடன் வரும். **1220**

சிறகுடைய கருடன் மீதேறிப்போர் செய்து, கறை உடைய வேல் ஏந்திய அரக்கர்களை எட்டுத்திக்குகளிலும் ஓடச்செய்து, கடல் சூழ்ந்த இலங்கையை வென்றவன், திருநாங்கூர் மணிமாடக் கோயிலில் உள்ளான். மனமே! இங்குச் சென்று வணங்கு. இவ்வூரில் வேதியர்கள் முறையாக முத்தீ வளர்த்து, நான்கு வேதங்கள் ஓதி, ஐவகை வேள்விகளைச் செய்வர்; ஏழிசை வல்லவரான இவர்கள் பெருமானை வணங்குவதால் புகழ் பெற்றது இத்தலம். **1221**

இழை ஆடு கொங்கைத் தலை நஞ்சம் உண்டிட்டு,
இளங் கன்று கொண்டு விளங்காய் எறிந்து,
தழை வாட வன் தாள் குருந்தம் ஒசித்து,
தடந் தாமரைப் பொய்கை புக்கான் இடம் தான்
குழை ஆட, வல்லிக் குலம் ஆட, மாடே
குயில் கூவ, நீடு கொடி மாடம் மல்கு
மழை ஆடு சோலை மயில் ஆலும் நாங்கூர்
மணிமாடக்கோயில் -வணங்கு என் மனனே! 1222

பண் நேர் மொழி ஆய்ச்சியர் அஞ்ச, வஞ்சப்
பகு வாய்க் கழுதுக்கு இரங்காது அவள் தன்
உண்ணா முலை மற்று அவள் ஆவியோடும்
உடனே சுவைத்தான் இடம் ஓங்கு பைந் தாள்
கண் ஆர் கரும்பின் கழை தின்று வைகி,
கழுநீரில் மூழ்கி செழு நீர்த் தடத்து
மண் ஏந்து இள மேதிகள் வைகு நாங்கூர்
மணிமாடக்கோயில் - வணங்கு, என் மனனே! 1223

தளைக் கட்டு அவிழ் தாமரை வைகு பொய்கைத்
தடம் புக்கு அடங்கா விடம் கால் அரவம்
இளைக்கத் திளைத்திட்டு அதன் உச்சி தன்மேல்
அடி வைத்த அம்மான் இடம் மா மதியம்
திளைக்கும் கொடி மாளிகை சூழ் தெருவில்
செழு முத்து வெண்ணெற்கு எனச் சென்று முன்றில்
வளைக்கை நுளைப் பாவையர் மாறும் நாங்கூர்
மணிமாடக்கோயில்- வணங்கு என் மனனே! 1224

துளை ஆர் கரு மென் குழல் ஆய்ச்சியர் தம்
துகில் வாரியும் சிற்றில் சிதைத்தும் முற்றா
இளையார் விளையாட்டொடு காதல் வெள்ளம்
விளைவித்த அம்மான் இடம் வேல் நெடுங் கண்
முளை வாள் எயிற்று மடவார் பயிற்று
மொழி கேட்டிருந்து முதிராத இன் சொல்
வளை வாய கிள்ளை மறை பாடும் நாங்கூர்
மணிமாடக்கோயில் - வணங்கு என் மனனே! 1225

விடை ஓட வென்று ஆய்ச்சி மென் தோள் நயந்த
விகிர்தா! விளங்கு சுடர் ஆழி என்னும்
படையோடு சங்கு ஒன்று உடையாய் என நின்று
இமையோர் பரவும் இடம் பைந் தடத்துப்
பெடையோடு செங் கால அன்னம் துகைப்ப,
தொகைப் புண்டரீகத்திடைச் செங்கழுநீர்
மடை ஓட நின்று மது விம்மும் நாங்கூர்
மணிமாடக்கோயில் - வணங்கு என் மனனே! 1226





அணிகள் அசையும் மார்புடைய பூதனையின் நஞ்சை உண்ட கண்ணன், விளாமரத்தில் கன்றை வீசி அசுரர்களைக் கொன்றான். தழைகள் வாடக் குருந்த மரத்தை முறித்தான்; தாமரைப்பொய்கையில் பாய்ந்தான். மனமே! இவனைத் திருநாங்கூர் மணிமாடக் கோவில் சென்று வணங்கு. இங்கே மரங்களில் கொடிகள் படரத்தளிர்கள் ஆடும்; குயில் கூவும்; சோலை மேகத்தைக் கண்டு மயில்கள் ஆடும். 1222

பாட்டினும் இனிய பேச்சுடைய இடைச்சிகள் அஞ்சவும், பெரிய வாயுடைய வஞ்சகியான பூதனையிடம் துன்புறாமல், விஷப்பாலுடன் அவள் உயிரையும் குடித்தவனின் தலம் திருநாங்கூர் மணிமாடக் கோயில் ஆகும். மனமே! இங்குச் சென்று வணங்கு. இங்கே எருமைக் கன்றுகள் கணு உள்ள கரும்புக் குருத்துக்களைத் தின்று, செங்கழு நீர்ப்பூத்தலத்தில் புரண்டு, பொய்கையில் முழுகித் தம் கொம்புகளில் மண்ணை ஏந்தியபடி, கரை ஏறிக்கிடக்கும். 1223

மனமே! தாமரை பூக்கும் மடுவில் குதித்து, நஞ்சைக் கக்கிய காளிய நாகம் இளைக்க, அதன் தலைமேல் கால் மிதித்து அடக்கிய கண்ணனின் திருநாங்கூர் மணிமாடக் கோவிலிற் சென்று வணங்கு. இவ்வூரில், சந்திரனைத் தொடும்கொடிகளுடைய மாளிகை வீதியில், முற்றத்தில், வளைக்கைப் பரதவப்பெண்கள், முத்துக்களை நெல்லுக்குப் பண்ட மாற்றுச் செய்வார்கள். 1224

மனமே! கறுத்துச் சுருண்ட கூந்தலை உடைய ஆய்ச்சிகளின் சேலைகளை வாரியும், சிற்றிலை அழித்தும், விளையாடிக் காதலை வளர்த்த கண்ணனின் திருநாங்கூர் மணிமாடக் கோவிலிற் சென்று வணங்கு. இவ்வூரில். நீண்ட கண்களும் ஒளிப்பற்களும் உடைய பெண்கள் பயிலும் வேதத்தைக் கேட்கும் கிளிகள், தங்கள் மழலைச் சொற்களால், திரும்பவும் அதனைப் பாடும். 1225

"நப்பின்னையைப் பெறக் காளைகளை அடக்கியவனே! ஒளிவீசும் சங்கு, சக்கரம் ஏந்தியவனே!" என்று தேவர்கள் துதித்துத் திருநாங்கூர் மணிமாடக் கோவிலில் வணங்குவர். மனமே! இங்குச் சென்று நீயும் வணங்கு. இவ்வூரில் அன்னங்கள் தம் பேடைகளுடன் தாமரைப் பூக்களை மிதித்துத் துகைக்கவும், நடுவில் பூத்த செங்கழு நீர்ப்பூக்கள், மடை வெள்ளம்போல், தேனைப் பெருக்கித் தேங்கச் செய்யும். 1226

வண்டு ஆர் பொழில் சூழ்ந்து அழகு ஆய நாங்கூர்
மணிமாடக்கோயில் நெடுமாலுக்கு என்றும்
தொண்டு ஆய தொல் சீர் வயல் மங்கையர் கோன்
கலியன் ஒலிசெய் தமிழ் மாலை வல்லார்
கண்டார் வணங்கக் களி யானை மீதே
கடல் சூழ் உலகுக்கு ஒரு காவலர் ஆய்.
விண் தோய் நெடு வெண் குடை நீழலின் கீழ்
விரி நீர் உலகு ஆண்டு விரும்புவரே 1227

## திருநாங்கூர் – வைகுந்தவிண்ணகரம்

சலம்கொண்ட இரணியனது அகல் மார்வம் கீண்டு
தடங் கடலைக் கடைந்து அமுதம் கொண்டு உகந்த காளை,
நலம்கொண்ட கரு முகில் போல் திருமேனி அம்மான்
நாள்தோறும் மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்
சலம்கொண்டு மலர் சொரியும் மல்லிகை ஒண் செருந்தி,
சண்பகங்கள் மணம் நாறும் வண் பொழிலினூடே,
வலம்கொண்டு கயல் ஓடி விளையாடும் நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே. 1228

திண்ணியது ஓர் அரிய உருவாய், திசை அனைத்தும் நடுங்க,
தேவரொடு தானவர்கள் திகைப்ப இரணியனை
நண்ணி, அவன் மார்வு அகலத்து உகிர் மடுத்த நாதன்
நாள்தோறும் மகிழ்ந்து இனிது மருவி, உறை கோயில்
எண் இல் மிகு பெருஞ் செல்வத்து எழில் விளங்கு மறையும்
ஏழ் இசையும் கேள்விகளும் இயன்ற பெருங் குணத்தோர்
மண்ணில் மிகு மறையவர்கள் மலிவு எய்தும் நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே ! 1229

அண்டமும், இவ் அலை கடலும், அவனிகளும் எல்லாம்
அமுது செய்த திரு வயிற்றின் அரன் கொண்டு திரியும்
முண்டம் அது நிறைத்து அவன்கண் சாபம் அது நீக்கும்
முதல்வன் அவன் மகிழ்ந்து இனிது மருவி, உறை கோயில்
எண் திசையும் பெருஞ் செந்நெல் இளந் தெங்கு கதலி
இலைக்கொடி ஒண் குலைக் கமுகோடு இசலி வளம் சொரிய,
வண்டு பல இசை பாட, மயில் ஆலும் நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்-வணங்கு மட நெஞ்சே! 1230





வண்டொலிக்கும் சோலைகள் உள்ள திருநாங்கூர் மணிமாடக்கோயில் திருமாலுக்கு என்றும் தொண்டு பூண்ட திருமங்கை மன்னர் இப்பத்துப் பாசுரங்களை அருளினார். இவற்றைப் பயில்பவர் கண்டார் வணங்கும்படி யானை மீதேறி வலம் வரும் மன்னர் ஆவர்; வெண்கொற்றக் குடைக்கீழ் கடல் சூழ்ந்த உலகை ஆளும் பேறு பெறுவார்கள். 1227

## திருநாங்கூர் – வைகுந்த விண்ணகரம்

கோபம் கொண்ட இரணியனின் அகன்ற மார்பைக் கிழித்த திருமால், பாற்கடலைக் கடைந்து அமுதம் ஈந்து மகிழ்ந்தான். கருமேக நிறமுடைய திருமேனி உடைய காளை போன்ற என் தலைவன் எப்பொழுதும் உகந்து தங்கும் திருக்கோவில் திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம் ஆகும். இவ்வூர்ச் சோலைகளில் மல்லிகை, செருந்தி, செண்பக மரங்கள் மணம் வீசும் பூக்களைச் சொரியும்; நீரில் கயல்மீன்கள் ஓடும். மனமே! இத்திருக் கோயிலுக்குச் சென்று வணங்கு. 1228

எல்லாத்திசைகளில் உள்ளோர் நடுங்கவும், தேவர்களும் அசுரர்களும் கலங்கவும், இரணியன் மார்பில், நகங்களை ஊன்றிக் கிழித்த, நரசிம்மப்பிரான் திருநாங்கூர் வைகுந்த விண்ணகரில் என்றும் விரும்பித் தங்குகிறான். இங்கு நெருங்கி வாழும் வேதியர்கள் ஆத்ம குணம் மிகுந்தவர். எண்ணற்ற செல்வ மான வேதம், ஏழிசை, வேதாங்கங்களில் கேள்வி அறிவுடையவர்; பூவுலகத் தேவர்கள் இவரே, மனமே! இத்திருக்கோவிலுக்குச் சென்று வணங்குவாய். 1229

அண்டங்கள், அலைகடல்கள், ஏழுலகங்கள் யாவற்றையும் உண்டு, வயிற்றில் வைத்துக் காத்த திருமால், சிவன் ஏந்திய தலை ஓட்டை நிறைத்துச் சாபம் நீக்கினான். எல்லோரையும் ஆளும் முதல்வனான இப்பெருமான், மகிழ்ந்து தங்கும் திருக்கோயில் திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம் ஆகும். இவ்வூரில் நெற்பயிரும், தென்னை, வாழை, கமுகு மரங்களும் வெற்றிலைக் கொடிகளும் போட்டி இட்டவாறு வளம் பெருக்கும். வண்டுகள் இசைபாட, மயில்கள் ஆடும். மனமே! இக் கோவிலுக்குச் சென்று வணங்கு. 1230

கலைஇலங்கும் அகல்அல்குல் அரக்கர் குலக் கொடியைக்
காதொடு மூக்கு உடன் அரிய, கதறி அவள்,ஓடி
தலையில் அங்கை வைத்து மலை இலங்கை புகச் செய்த
தடந்தோளன் மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்
சிலைஇலங்கு மணி மாடத்து உச்சிமிசைச் சூலம்
செழுங் கொண்டல் அகடு இரிய, சொரிந்த செழு முத்தம்
மலைஇலங்கு மாளிகைமேல் மலிவு எய்து நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்- வணங்கு மட நெஞ்சே! 1231

மின்அனைய நுண்மருங்குல் மெல்லியற்கா, இலங்கை
வேந்தன் முடிஒருபதும் தோள் இருபதும் போய் உதிர,
தன்நிகர் இல்சிலை வளைத்து அன்று இலங்கை பொடி செய்த
தடந் தோளன் மகிழ்ந்து இனிது மருவி , உறை கோயில்
செந்நெலொடு செங்கமலம், சேல், கயல்கள், வாளை
செங்கழுநீரொடு மிடைந்து கழனி திகழ்ந்து எங்கும்,
மன்னுபுகழ் வேதியர்கள் மலிவு எய்து நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே. 1232

பெண்மை மிகு வடிவு கொடு வந்தவளைப் பெரிய
பேயினது உருவு கொடு மாள, உயிர் உண்டு,
திண்மை மிகு மருதொடு நல் சகடம் இறுத்தருளும்
தேவன் அவன் மகிழ்ந்து இனிது மருவி, உறை கோயில்
உண்மை மிகு மறையொடு நல் கலைகள், நிறை பொறைகள்,
உதவு கொடை என்று இவற்றின் ஒழிவு இல்லாப் பெரிய
வண்மை மிகு மறையவர்கள் மலிவு எய்து நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்- வணங்கு மட நெஞ்சே! 1233

விளங்கனியை இளங்கன்று கொண்டு உதிர எறிந்து
வேல் நெடுங் கண் ஆய்ச்சியர்கள் வைத்த தயிர் வெண்ணெய்
உளம்குளிர அமுது செய்து, இவ் உலகு உண்ட காளை
உகந்து இனிது நாள்தோறும் மருவி உறை கோயில்
இளம்படிநல் கமுகு குலைத் தெங்கு கொடி செந்நெல்,
ஈன் கரும்பு கண்வளரக் கால் தடவும் புனலால்
வளம்கொண்ட பெருஞ் செல்வம் வளரும் அணி நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்- வணங்கு மட நெஞ்சே! 1234

ஆறாத சினத்தின் மிகுநரகன் உரம் அழித்த
அடல்ஆழித் தடக்கையன் அலர் மகட்கும் அரற்கும்
கூறாகக் கொடுத்தருளும் திரு உடம்பன், இமையோர்
குல முதல்வன் மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்
மாறாத மலர்க் கமலம் செங்கழுநீர் ததும்பி
மதுவெள்ளம் ஒழுக, வயல் உழவர் மடை அடைப்ப,
மாறாத பெருஞ் செல்வம் வளரும் அணி நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே! 1235





மேகலை விளங்கும் இடையுடைய அரக்கர் குலக்கொடி சூர்ப்பனகையின் காதையும் மூக்கையும் அரிந்த இராமன், அவள் கதறியவாறு, தலைமேல் கைவைத்து, மலை மேலுள்ள இலங்கை புகச் செய்தான். மனமே! இப்பெருமானின் திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம் சென்று வணங்கு. இவ்வூர் மாடங்கள் மேலுள்ள சூலங்கள் மேகங்களைக் கிழிப்பதால், விழுந்த முத்துக்கள் மலைபோல மாளிகைகள் மீது குவிந்து கிடக்கும். **1231**

மனமே! மின்னல் இடைச் சீதைக்காக. இலங்கை அரசனின் பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் உதிரும்படி செய்ததுடன், வில்லை வளைத்து இலங்கையைப் பொடியாக்கிய இராமன் எழுந்தருளிய திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம் சென்று வணங்கு! இங்கு நெற்பயிர்களுடன் தாமரை மலரும்; செங்கழு நீர்ப்பூக்களிடை வாளை, கயல்மீன்கள் துள்ளும்; வேதியர் புகழுடன் வாழ்வர். **1232**

மனமே! பெண்மையுடைய யசோதை வடிவில் வந்த பூதனை, தன் பேய்வடிவில் விழுந்து மாளும்படி உயிரை உண்டு, மருதம், சகடம் ஆகியவற்றை இறுத்த கண்ணன் எழுந்தருளிய திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம் சென்று வணங்கு, இங்கு, சத்திய வாசகமான வேதங்களையும் ஆறங்கங்களையும் ஓதும் அந்தணர், பொறுமை, கொடைத் தன்மைப் பண்புகள் நிறைந்தவராய் வாழ்கிறார்கள். **1233**

கன்றை விளாமரத்தின் மீது வீசி, மறைந்திருந்த அசுரர்களைக் கொன்ற கண்ணன். வேல்கண்களுடைய இடைச்சிகள் வைத்த தயிரையும் வெண்ணெய்யையும் மனம் மகிழ உண்டான். மனமே! உலகங்களை உண்டு காத்த இப்பெருமானின் திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம் சென்று வணங்குவாய். இங்கே, கமுகு, தென்னை, வெற்றிலை, நெல், கரும்பு, ஆகியவை வளரும்படி, அவற்றின் அடிகளி ல் பாயும் நீர்வளம் நிறைந்து காணப்படும். **1234**

கண்ணபிரான் தன் கையில் ஏந்திய சக்கரத்தால், தணியாத கோபம் கொண்ட நரகாசுரனின் வலிமையை அழித்துக் கொன்றான். மனமே! தன் திருமேனியில் திருமகளுக்கும் சிவனுக்கும் இடம் கொடுத்த நித்திய சூரிகள் தலைவன் எழுந்தருளிய திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம் சென்று வணங்கு. இத்தலத்தில், எப்பொழுதும் மலரும் தாமரை, செங்கழு நீர்ப் பூக்கள் சொரிந்த தேன் வெள்ளம், நீருடன் ஓடிவர, உழவர்கள் மடைகளை அடைப்பார்கள். நீர் வளத்தில் செல்வம் செழிக்கும் தலம் இது. **1235**

வங்கமலி தடங் கடலுள் வானவர்களோடு
மா முனிவர் பலர் கூடி மா மலர்கள் தூவி,
எங்கள் தனி நாயகனே! எமக்கு அருளாய் என்னும்
ஈசன் அவன் மகிழ்ந்து, இனிது மருவி உறை கோயில்
செங் கயலும் வாளைகளும் செந்நெலிடைக் குதிப்ப,
சேல் உகளும் செழும் பணை சூழ் வீதிதொறும் மிடைந்து,
மங்குல் மதி அகடு உரிஞ்சு மணி மாட நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே! 1236

சங்கு மலி தண்டு முதல் சக்கரம் முன் ஏந்தும்
தாமரைக் கண் நெடிய பிரான் தான் அமரும் கோயில்,
வங்கம் மலி கடல் உலகில் மலிவு எய்தும் நாங்கூர்
வைகுந்தவிண்ணகர்மேல், வண்டு அறையும் பொழில் சூழ்
மங்கையர் தம் தலைவன் மருவலர் தம் உடல் துணிய
வாள் வீசும் பரகாலன், கலிகன்றி சொன்ன
சங்கம் மலி தமிழ் மாலை பத்து இவை வல்லார்கள்
தரணியொடு விசும்பு ஆளும் தன்மை பெறுவாரே. 1237

## திருநாங்கூர் – அரிமேயவிண்ணகரம்

திரு மடந்தை மண் மடந்தை இருபாலும் திகழத்
தீவினைகள் போய அகல, அடியவர்கட்கு என்றும்
அருள் நடந்து இவ் ஏழ் உலகத்தவர் பணிய, வானோர்
அமர்ந்து ஏத்த, இருந்த இடம் பெரும் புகழ் வேதியர் வாழ்
தரும் இடங்கள், மலர்கள் மிகு கைதைகள், செங்கழுநீர்,
தாமரைகள், தடங்கள்தொறும் இடங்கள்தொறும் திகழ
அரு இடங்கள் பொழில் தழுவி, எழில் திகழும் நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே! 1238

வென்றி மிகு நரகன் உரம் அது அழிய விசிறும்
விறல் ஆழித் தடக் கையன், விண்ணவர்கட்கு அன்று,
குன்று கொடு குரை கடலைக் கடைந்து அமுதம் அளிக்கும்
குருமணி என் ஆர் அமுதம் குலவி உறை கோயில்
என்றும் மிகு பெருஞ் செல்வத்து எழில் விளங்கு மறையோர்,
ஏழ் இசையும் கேள்விகளும் இயன்ற பெருங் குணத்தோர்,
அன்று உலகம் படைத்தவனை அனையவர்கள் நாங்கூர்
அரியமேயவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே! 1239





தேவர்கள், முனிவர்கள் முதலியோர் பாற்கடலில் பள்ளி கொண்ட இறைவனை மலர் தூவித் தொழுது, "எங்கள் தனி நாயகனே! அருள் செய்க!" என்று வேண்டுவர். மனமே! இப்பெருமானின் இடமான திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம் சென்று வணங்கு. கயல், வாளை மீன்கள், இவ்வூரில் நெற்பயிரிடையே துள்ளும் மருதவளம் ஓங்கும்! தெருக்களில் உள்ள வீட்டு மாடங்கள் வானத்துச் சந்திரனைத் தொடும்அளவு உயர்ந்துள்ளன. 1236

சங்கு, சக்கரம், கதை தரித்த தாமரைக் கண்ணன் எழுந்தருளிய திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம் பற்றியது இப்பதிகம் ஆகும். "வண்டுகள் ஒலிக்கும் வயல்கள் சூழ்ந்த திருமங்கை நாட்டு அரசன், வாள் வலிமை உடைய பரகாலன், கலிகன்றி" என்று சிறப்பிக்கப்படும் ஆழ்வார் அருளிய இப்பாசுரங்களைப் பயில்பவர் உலகத்தையும் பரமபதத்தையும் ஆளும் சிறப்புப் பெறுவர். 1237

## திருநாங்கூர் – அரிமேய விண்ணகரம்

அடியார்களின் பாவங்களைப் போக்கி அருள் செய்யும் திருமால், திருநாங்கூர் அரிமேய விண்ணகரில், திருமகளும் பூமாதேவியும் இருபுறமும் விளங்க, எழுந்தருளி உள்ளான். ஏழுலகத்தவரும் நித்திய சூரிகளும் வந்து வணங்கும் இத்திருப்பதியில், புகழுடைய அந்தணர்கள் வாழ்கிறார்கள். தாழை, தாமரை, செங்கழு நீர் ஆகிய பூக்கள் மலரும் குளங்கள் உள்ளன; சோலைகள் வானைத் தொடும்படி வளர்ந்து அழகு சேர்க்கும். மடநெஞ்சே! இங்குச் சென்று வணங்கு. 1238

கையில் ஏந்திய சக்கரத்தால் திருமால், வெற்றி மிகுந்த நரகாசுரனின் பலம் கெடச் செய்து வதைத்தான்; கடலில் மந்தரமலையை நட்டுக் கடைந்து அமுதத்தைத் தேவர்களுக்குக் கொடுத்தான். மணியையும் அமுதத்தையும் போன்ற எம்பெருமான் திருநாங்கூர் அரிமேய விண்ணகரில் விரும்பி எழுந்தருளி உள்ளான். செல்வமும் அழகும் சிறந்த அந்தணர் இங்கு ஏழிசை வல்லவராய் வேதங்களில் கேள்வி அறிவு பெற்று, ஆத்ம குணம் மேலோங்கி இருப்பர். மடநெஞ்சே! இங்குச் சென்று பெருமானை வணங்கு. 1239

உம்பரும் இவ் ஏழ் உலகும் ஏழ் கடலும் எல்லாம்
உண்ட பிரான், அண்டர்கள் முன் கண்டு மகிழ்வு எய்தக்
கும்பம் மிகு மத யானை மருப்பு ஒசித்து, கஞ்சன்
குஞ்சி பிடித்து அடித்த பிரான் கோயில் மருங்கு எங்கும்
பைம்பொனொடு வெண் முத்தம் பல புன்னை காட்ட,
பலங்கனிகள் தேன் காட்ட, பட அரவு ஏர் அல்குல்
அம்புஅனைய கண் மடவார் மகிழ்வு எய்தும் நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் - வணங்கு, மட நெஞ்சே! 1240

ஓடாதஆள் அரியின் உருவம் அது கொண்டு அன்று,
உலப்பில் மிகு பெரு வரத்த இரணியனைப் பற்றி,
வாடாத வள் உகிரால் பிளந்து அவன் தன் மகனுக்கு
அருள்செய்தான் வாழும் இடம் - மல்லிகை செங்கழுநீர்,
சேடுஏறு மலர்ச் செருந்தி செழுங் கமுகம் பாளை,
செண்பகங்கள் மணம் நாறும் வண் பொழிலின் ஊடே
ஆடுஏறு வயல் ஆலைப் புகை கமழும் நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே! 1241

கண்டவர் தம் மனம் மகிழ மாவலி தன் வேள்விக்
களவு இல் மிகு சிறு குறள் ஆய் மூவடி என்று இரந்திட்டு,
அண்டமும் இவ் அலை கடலும் அவனிகளும் எல்லாம்
அளந்த பிரான் அமரும் இடம்- வளங்கொள் பொழில் அயலே
அண்டம் உறு முழவு ஒலியும் வண்டு இனங்கள் ஒலியும்
அருமறையின் ஒலியும் மடவார் சிலம்பின் ஒலியும்,
அண்டம் உறும் அலை கடலின் ஒலி திகழும் நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே! 1242

வாள்நெடுங் கண் மலர்க் கூந்தல் மைதிலிக்கா, இலங்கை
மன்னன் முடி ஒருபதும் தோள் இருபதும் போய் உதிரத்
தாள்நெடுந் திண்சிலை வளைத்த தயரதன் சேய், என் தன்
தனிச் சரண், வானவர்க்கு அரசு கருதும் இடம் தடம் ஆர்
சேண் இடம் கொள் மலர்க் கமலம் சேல், கயல்கள், வாளை,
செந்நெலொடும் அடுத்து அரிய, உதிர்ந்த செழு முத்தம்,
வாள்நெடுங் கண் கடைசியர்கள் வாரும் அணி நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே! 1243

தீமனத்தான் கஞ்சனது வஞ்சனையில் திரியும்
தேனுகனும் பூதனை தன் ஆர் உயிரும் செகுத்தான்,
காமனைத்தான் பயந்த கரு மேனி உடை அம்மான்
கருதும் இடம்-பொருது புனல் துறை துறை முத்து உந்தி,
நாமனத்தால் மந்திரங்கள் நால் வேதம் , ஐந்து
வேள்வியோடு ஆறு அங்கம் நவின்று கலை பயின்று அங்கு
ஆ மனத்து மறையவர்கள் பயிலும் அணி நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே! 1244





தேவர்கள், ஏழுலகங்கள், ஏழுகடல்கள் ஆகியவற்றை உண்டு காத்த இறைவன், ஆயர்கள் மகிழும்படி, குடம் போன்ற மத்தகம் பெற்ற குவலயாபீட யானையின் கொம்பை ஒடித்தான். கம்சனின் குடுமியைப் பிடித்து இழுத்துக் கொன்றான். மனமே! இப்பெருமானின் திருநாங்கூர் அரிமேய விண்ணகரம் சென்று வணங்கு. இங்கு, சுரபுன்னை மரங்கள் பொன்னையும் முத்துக்களையும் பூக்கும்; பலாப்பழங்கள் தேன் சொரியும், மாதர்கள் மகிழ்ச்சியுடன் வாழ்வார்கள். 1240

முதுகு காட்டி ஓடாத வலிமை உடைய நரசிம்மப்பிரான், எண்ணற்ற வரங்கள் பெற்ற இரணியனைத் தன் நகங்களால் பிளந்து, பிரகலாதனுக்கு அருள் செய்தான். நெஞ்சே! இப்பெருமானின் திருநாங்கூர் அரிமேய விண்ணகரம் சென்று வணங்கு. இங்கே, மல்லிகை, செங்கழுநீர், செருந்தி, கமுகு செண்பகம் ஆகியன பூத்து மணம் வீசும் சோலை நடுவே வயலில், கரும்பாலைப் புகை மணக்கும். 1241

கள்ளமில்லாத வாமனன் காண்பவர் மகிழ, மாவலி வேள்விச் சாலை சென்றான்; மூவடி மண் வேண்டி, வானம், கடல், ஏழுலங் களை அளந்தான். மனமே! இவன் இடமான திருநாங்கூர் அரிமேய விண்ணகரம் சென்று வணங்கு. இவ்வூரில், வளமுடைய சோலைப் புறத்தே, வாத்திய இசையும், வண்டுகளின் ரீங்காரமும், வேதஒலியும், நடனமாதர் சிலம்பொலியும் கடல் ஒலிபோல் வான் அளாவும். 1242

வாள் போன்ற கண்களும் மலர்க்கூந்தலும் உடைய சீதையை மீட்க, தசரதபுத்திரனான இராமன் வில்லை வளைத்து, இலங்கை மன்னனின் பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் உதிரச் செய்தான். மட நெஞ்சே! என் காவலனான நித்திய சூரிகள் தலைவன் எழுந்தருளிய நாங்கூர் அரிமேய விண்ணகரம் சென்று வணங்கு. பொய்கைகள் நிறைந்த இவ்வூர் வயல்களில் நெற்கதிர்கள் அறுக்கும் பொழுது, தாமரையும், சேல், கடல், வாளை மீன்களும் அறுபட்டு முத்துக்கள் சிதறும். அவற்றை உழத்தியர் திரட்டி எடுப்பார்கள். 1243

தீய நெஞ்சுடைய கம்சன் ஏவலால் வஞ்சகமுடன் வந்த தேனுகாசுரனையும் பூதனையையும் கண்ணன் கொன்றான். மனமே! மன்மதனைப் பெற்ற கருமேனித் திருமாலின் இடமான திருநாங்கூர் அரிமேய விண்ணகரத்தை வணங்கு. இங்கே நீர்த்துறைகளில் அலைகள் முத்துக்களைத்தள்ளும். தூய மனம் உடைய அந்தணர், நான்கு, வேதங்கள், ஐந்து வேள்விகள், ஆறங்கங்கள் ஆகியவைகளை மனத்தாலும் நாவாலும் பயில்வார்கள். 1244

கன்று அதனால் விளவு எறிந்து கனி உதிர்த்த காளை,
காமரு சீர் முகில் வண்ணன், காலிகள் முன் காப்பான்
குன்று அதனால் மழை தடுத்து, குடம் ஆடு கூத்தன்
குலவும் இடம்-கொடி மதிள்கள், மாளிகை கோபுரங்கள்,
துன்று மணி மண்டபங்கள், சாலைகள், தூ மறையோர்
தொக்கு ஈண்டித் தொழுதியொடு மிகப் பயிலும் சோலை
அன்று அலர்வாய் மது உண்டு அங்கு அளி முரலும் நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே! 1245

வஞ்சனையால் வந்தவள் தன் உயிர் உண்டு, வாய்த்த
தயிர் உண்டு, வெண்ணெய் அமுது உண்டு வலி மிக்க
கஞ்சன் உயிர் அது உண்டு இவ் உலகு உண்ட காளை
கருதும் இடம் - காவிரி சந்து அகில், கனகம் உந்தி,
மஞ்சு உலவு பொழிலூடும் வயலூடும் வந்து
வளம் கொடுப்ப, மா மறையோர் மா மலர்கள் தூவி
அஞ்சலித்து அங்கு அரி சரண் என்று இறைஞ்சும் அணி நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் - வணங்கு மட நெஞ்சே! 1246

சென்று சின விடை ஏழும் பட அடர்த்துப் பின்னை
செவ்வித் தோள் புணர்ந்து உகந்த திருமால் தன் கோயில்,
அன்று அயனும், அரன் சேயும் அனையவர்கள் நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் அமர்ந்த செழுங் குன்றை.
கன்றி நெடு வேல் வலவன் மங்கையர் தம் கோமான்,
கலிகன்றி ஒலி மாலை ஐந்தினொடு மூன்றும்
ஒன்றினொடும் ஒன்றும் இவை கற்று வல்லார் உலகத்து
உத்தமர்கட்கு உத்தமர் ஆய், உம்பரும் ஆவர்களே. 1247

## திருநாங்கூர் – திருத்தேவனார் தொகை

போது அலர்ந்த பொழில் சோலைப் புறம் எங்கும், பொரு திரைகள்
தாது உதிர வந்து அலைக்கும் தட மண்ணித் தென் கரைமேல்
மாதவன் தான் உறையும் இடம்,வயல்நாங்கை வரி வண்டு
தேதென என்று இசை பாடும் திருத்தேவனார் தொகையே. 1248

யாவரும் ஆய், யாவையும் ஆய், எழில் வேதப் பொருள்களும் ஆய்,
மூவரும் ஆய், முதல் ஆய மூர்த்தி அமர்ந்து உறையும் இடம்,
மா வரும் திண் படை மன்னை வென்றி கொள்வார் மன்னு நாங்கை-
தேவரும் சென்று இறைஞ்சு பொழில்- திருத்தேவனார் தொகையே. 1249





கன்றை விளாமரம் மீது வீசி அசுரர்களைக் கொன்ற கண்ணன், கண்டோர் விரும்பும் மேக நிறத்தன்; மலையைத் தூக்கி மழையைத் தடுத்துப் பசுக்களைக் காத்தான். மனமே! குடக் கூத்தாடிய இப்பெருமானின் திருநாங்கூர் அரிமேய விண்ணகரை வணங்கு. இங்கே கொடி உடைய மதிள்கள், மாளிகைகள், மணிமண்டபங்கள், வேள்விச் சாலைகள் உள்ளன. அந்தணர் ஆரவாரம் கேட்கும், சோலைப்பூக்களில் வண்டுகள் மது அருந்திப் பாடும். 1245

வஞ்சகியான பூதனையின் உயிர்குடித்த கண்ணன், தயிர், வெண்ணெய் உண்டதுடன் கம்சனின் உயிரையும் உண்டான். மட நெஞ்சே! உலகங்களை உண்டு காத்தவன் எழுந்தருளிய திரு நாங்கூர் அரிமேய விண்ணகரம் சென்று வணங்கு. காவிரி ஆறு இங்கே, சந்தனம், அகில், பொன் ஆகியவற்றைத் தள்ளியவாறு மேகம் தவழும் சோலைகளிலும் வயல்களிலும் பாய்ந்து வளம் பெருக்கும். அந்தணர்கள், 'ஹரி! சரணம்!" என்று வணங்கி மலர் தூவி வழி படுவர். 1246

ஏழுகாளைகளுடன் போரிட்டு, நப்பின்னை தோள் தழுவிய திருமாலின் திருத்தலம் திருநாங்கூர் அரிமேய விண்ணகரம் ஆகும். பிரமனையும் முருகனையும் போன்றவர் வாழும் இவ்வூரில் உறையும் பெருமானை, வேல் ஏந்திய திருமங்கை மன்னர் துதித்தார். கலிகன்றியின் இப்பத்துப் பாசுரங்களைப் பயில்பவர் இவ்வுலகில் வைணவத் தலைவர்களாய் வாழ்ந்து முடிவில் நித்திய சூரிகள் ஆவர். 1247

## திருநாங்கூர் – திருத்தேவனார் தொகை

பூந்தாதுக்களை நீர்அலைகள் தள்ளி ஓடும் மண்ணி ஆற்றின் தென்கரையில் திருநாங்கூர் உள்ளது. பூக்கள் மலரும் தோட்டங் களும் வயல்களும் சூழ்ந்த இவ்வூரில் வண்டுகள் 'தென்னத் தென' என்று பாடும். இங்கே, திருத்தேவனார் தொகைத் திருத்தலத்தில் திருமகள் கேள்வன் எழுந்தருளி உள்ளான். 1248

அறிவில்லா அசித்துப்பொருள்களையும் அறிவுள்ள சித்தாகிய ஆத்மாக்களையும் தன் பகுதிகளாக உடைய எல்லாம் வல்ல இறைவன் வேதப்பொருள் ஆனவன். அவனே மும்மூர்த்திகளாகி, சிவனுக்கும் பிரமனுக்கும் உள்ளே உறைகின்ற மூலகாரணன் ஆவான். சோலைகள் உள்ள திருநாங்கூர் திருத்தேவனார் தொகைத் தலத்தில் இப் பெருமானைத் தேவர்கள் வணங்குவர். குதிரைப்போரில் வல்ல மன்னர்களைத் தங்கள் அந்தணமையால் வெல்லும் வேதியர்கள் இங்கு வாழ்கிறார்கள். 1249

வான் நாடும், மண் நாடும், மற்று உள்ள பல் உயிரும்
தான் ஆய எம் பெருமான், தலைவன் அமர்ந்து உறையும் இடம்.
ஆனாத பெருஞ் செல்வத்து அரு மறையோர் நாங்கை தன்னுள்
தேன் ஆரும் மலர்ப் பொழில் சூழ்-திருத்தேவனார்தொகையே. 1250

இந்திரனும், இமையவரும், முனிவர்களும் எழில் அமைந்த
சந்த மலர்ச் சதுமுகனும், கதிரவனும், சந்திரனும்,
எந்தை! எமக்கு அருள் என நின்றருளும் இடம் எழில் நாங்கை
சுந்தர நல் பொழில் புடை சூழ்- திருத்தேவனார்தொகையே. 1251

அண்டமும், இவ் அலைகடலும், அவனிகளும், குல வரையும்
உண்ட பிரான் உறையும் இடம், ஒளி மணி, சந்து அகில் கனகம்
தெண் திரைகள் வரத் திரட்டும் திகழ் மண்ணித் தென் கரைமேல்
திண்திறலார் பயில்- நாங்கைத் திருத்தேவனார்தொகையே. 1252

ஞாலம் எல்லாம் அமுது செய்து, நான்மறையும் தொடராத
பாலகன் ஆய், ஆல்இலையில் பள்ளிகொள்ளும் பரமன் இடம்,
சாலி வளம் பெருகி வரும் தட மண்ணித் தென் கரைமேல்
சேல் உகளும் வயல் - நாங்கைத் திருத்தேவனார்தொகையே. 1253

ஓடாத ஆளரியின் உரு ஆகி, இரணியனை
வாடாத வள் உகிரால் பிளந்து அளைந்த மாலது இடம்,
ஏடுஏறு பெருஞ் செல்வத்து எழில் மறையோர் நாங்கை தன்னுள்
சேடு ஏறு பொழில் தழுவு - திருத்தேவனார்தொகையே. 1254

வார் ஆரும் இளங் கொங்கை மைதிலியை மணம் புணர்வான்.
கார் ஆர் திண் சிலை இறுத்த தனிக் காளை கருதும் இடம்,
ஏர் ஆரும் பெருஞ்செல்வத்து எழில் மறையோர் நாங்கை தன்னுள்
சீர் ஆரும் மலர்ப் பொழில் சூழ்-திருத்தேவனார்தொகையே. 1255

கும்ப மிகு மத யானை பாகனொடும் குலைந்து வீழ,
கொம்பு அதனைப் பறித்து எறிந்த கூத்தன் அமர்ந்து உறையும் இடம்,
வம்பு அவிழும் செண்பகத்தின் மணம் கமழும் நாங்கை தன்னுள்
செம் பொன் மதிள் பொழில் புடை சூழ்-திருத்தேவனார் தொகையே. 1256





பரமபதம், பூவுலகம் மற்றும் பல்லுயிர்களுக்குள்ளே இருப்பவனாய் அவற்றை நியமிக்கும் இறைவன் திருநாங்கூரில் உள்ள திருத்தேவனார் தொகையில் எழுந்தருளி உள்ளான். தேன் பாயும் சோலைகள் உள்ள இங்கே வேதியர்கள் அழிவில்லாத செல்வத்துடன் வாழ்கிறார்கள். 1250

திருநாங்கூர் திருத்தேவனார் தொகையில், இந்திரன், தேவர்கள், முனிவர்கள் தாமரையில் தோன்றிய வேதம் வல்ல பிரமன், சூரியன், சந்திரன் ஆகியோர், "எங்களுக்கு அருள்க" என்று பகவானைத் துதிப்பர். இங்கே சோலைகள் உள்ளன. 1251

திருநாங்கூரிலுள்ள திருத்தேவனார் தொகையில் வானம், கடல்கள், உலகுகள் மலைகள் ஆகியவற்றை உண்டு காத்த இறைவன் உள்ளான். ஒளி வீசும் மணிகளையும், சந்தனம், அகில், பொன் முதலியவற்றையு ம் இழுத்து ஓடும் மண்ணி ஆற்றின் தென் கரையில் உள்ள இங்கே பலம் மிகுந்த மக்கள் வாழ்கிறார்கள். 1252

நான்கு வேதங்களாலும் தொடர முடியாத பெருமை உடைய இறைவன், குழந்தையாய் ஆலந்தளிரில் பள்ளி கொண்டான். உலகங்களை விழுங்கிக் காத்த இப்பரமனின் திருநாங்கூர் திருத்தேவனார் தொகை மண்ணி ஆற்றின் தென்கரையில் உள்ளது. செந்நெல் வளரும் வயல்களில் இங்கே சேல் மீன்கள் துள்ளி ஓடும். 1253

முதுகு காட்டாத வலிமை பெற்ற நரசிம்மப்பிரான் நகங்களால் இரணியனைக் கிழித்துக் கொன்றான். இத்திருமாலின் இடமான திருநாங்கூர் திருத்தேவனார் தொகையில் பெரும் செல்வமுடைய வேதியர்கள் வாழ்கிறார்கள். பூஞ்சோலைகள் இங்கு உண்டு. 1254

கச்சணிந்த சீதாப்பிராட்டியை மணம் செய்யக் கருத்த திண்மையான வில்லை வளைத்த இராமபிரான் எழுந்தருளிய திருநாங்கூர் திருத்தேவனார் தொகையில், வேதியர் அழகும் செல்வமும் நிறைந்து வாழ்கிறார்கள். 1255

குடம் போன்ற மத்தகம் பெற்ற குவலயாபீட யானையின் கொம்பைப் பறித்துப் பாகனை வீழ்த்திய கண்ணபிரான் எழுந் தருளிய திருநாங்கூர் திருத்தேவனார் தொகையில் செண்பகப் பூ மலர்ந்து மணம் வீசும்; பொன் மிளிரும் மதிள்களும் தோப்புகளும் இவ்வூரைச் சூழ்ந்துள்ளன. 1256

கார் ஆர்ந்த திருமேனிக் கண்ணன் அமர்ந்து உறையும் இடம்
சீர் ஆர்ந்த பொழில் நாங்கைத் திருத்தேவனார்தொகைமேல்
கூர் ஆர்ந்த வேற் கலியன் கூறு தமிழ்ப் பத்தும் வல்லார்
ஏர் ஆர்ந்த வைகுந்தத்து இமையவரோடு இருப்பாரே. 1257

## திருநாங்கூர் – வண்புருடோத்தமம்

கம்ப மா கடல் அடைத்து, இலங்கைக்கு மன்
கதிர் முடி அவை பத்தும்
அம்பினால் அறுத்து அரசு அவன் தம்பிக்கு
அளித்தவன் உறை கோயில்
செம் பலா நிரை, செண்பகம், மாதவி,
சூதகம் வாழைகள் சூழ்
வம்பு உலாம் கமுகு ஓங்கிய நாங்கூர்-
வண்புருடோத்தமமே. 1258

பல்லவம் திகழ் பூங் கடம்பு ஏறி அக்
காளியன் பண அரங்கில்
ஒல்லை வந்து உறப் பாய்ந்து அரு நடம்செய்த
உம்பர் கோன் உறை கோயில்
நல்ல வெம் தழல் மூன்று நால் வேதம், ஐ
வேள்வியோடு, ஆறு அங்கம்
வல்ல அந்தணர் மல்கிய நாங்கூர்-
வண்புருடோத்தமமே. 1259

அண்டர் ஆனவர் வானவர் கோனுக்கு என்று
அமைத்த சோறு அது எல்லாம்
உண்டு கோ நிரை மேய்த்து அவை காத்தவன்
உகந்து இனிது உறை கோயில் -
கொண்டல் ஆர் முழவின் குளிர் வார் பொழில்
குல மயில் நடம் ஆட,
வண்டு தான் இசை பாடிடும் நாங்கூர்-
வண்புருடோத்தமமே. 1260

பருங் கை யானையின் கொம்பினைப் பறித்து அதன்
பாகனைச் சாடிப் புக்கு,
ஒருங்க மல்லரைக் கொன்று பின் கஞ்சனை
உதைத்தவன் உறை கோயில் -
கரும்பினூடு உயர் சாலிகள் விளைதரு
கழனியில் மலி வாவி
மருங்கு எலாம் பொழில் ஓங்கிய நாங்கூர்-
வண்புருடோத்தமமே. 1261





*சீர்மிகுந்த சோலைகள் சூழ்ந்த திருநாங்கூரில் திருத்தேவனார் தொகையில் உள்ள கார்மேனிக் கண்ணபிரானை, வேல் ஏந்திய கலியன் துதித்த இப்பத்துப் பாசுரங்களைக் கற்பவர் வைகுண்டத்தில் நித்திய சூரிகளுடன் கூடி வாழ்வார்கள்.* 1257

## திருநாங்கூர் – திருவண்புருடோத்தமம்

*அலை வீசும் கடலில் அணைகட்டி, இலங்கை, மன்னனின் தலைகள் பத்தையும் அம்பினால் அறுத்து அவன் தம்பி வீடணனுக்கு அரசாட்சி அளித்த இராமபிரான் எழுந்தருளிய திருவண்புருடேத்தமம் திருநாங்கூரில் உள்ளது. இங்கே பலா மரவரிசைகளும், செண்பகம், மாதவி, மா, வாழை, மரங்களும் சூழ்ந்து மணம் பரப்பும்; பாக்கு மரங்களும் ஓங்கி வளர்ந்துள்ளன.* 1258

*தளிர்களும் பூக்களும் தழைத்த கடம்ப மரம் ஏறிக் காளிய நாகத்தின், உச்சியில் படங்களில் நடனம் ஆடிய கண்ணன் எழுந்தருளிய திவ்விய தேசம் திருநாங்கூரில் உள்ள வண் புருடோத்தமம் ஆகும். இங்கு வாழும் அந்தணர்கள், மூவகைத் தீயால், நான்கு வேதங்களை ஓதி, ஐந்து வேள்விகளைச் செய்து வேதாங்கங்கள் ஆறினையும் கற்பிப்பார்கள்.* 1259

*இடையர்கள் தேவேந்திரனுக்கு இடவேண்டாமென்று தயாரித்த சோற்றை எல்லாம், உண்டு, பசு நிரைகளை மேய்த்துக் காத்த கண்ணன், உகந்து எழுந்தருளிய வண்புருடோத்தமம் திருநாங்கூரில் உள்ளது. இங்கே, மேகங்களின் இடி முழக்கத்தை மிருதங்க ஒலியாகவும், வண்டுகளின் ரீங்காரத்தை வாய்ப் பாட்டாகவும் கொண்டு, சோலையிலுள்ள மயில் கூட்டங்கள் அவற்றுக்கேற்ப நடனமாடும்.* 1260

*பருத்த துதிக்கை உடைய குவலயாபீட யானையின் கொம்புகளைப் பிடுங்கி. யானைப் பாகனை வீழ்த்தி, மல்லர்களுடன் சாடி அவர்களை அழித்து, முடிவில் கம்சனைக் கொன்ற கண்ணபிரானின் கோவில் வண்புருடோத்தமம் ஆகும். திருநாங்கூரில் உள்ள இத்தலத்தில் கரும்பும் நெல்லும் போட்டியிட்டு ஓங்கி வளரும் வயல்கள் உள்ளன. பொய்கைகள் சூழ்ந்த சோலைகள் ஓங்கி உள்ளன.* 1261

சாடு போய் விழத் தாள் நிமிர்த்து, ஈசன் தன்
படையோடும் கிளையோடும்
ஓட, வாணனை ஆயிரம் தோள்களும்
துணித்தவன் உறை கோயில் -
ஆடு வான் கொடி அகல் விசும்பு அணவிப் போய்ப்
பகலவன் ஒளி மறைக்கும்
மாட மாளிகை சூழ்தரு நாங்கூர்-
வண்புருடோத்தமமே. 1262

அங்கையால் அடி மூன்று நீர் ஏற்று, அயன்
அவர் கொடு தொழுது ஏத்த,
கங்கை போதரக் கால் நிமிர்த்தருளிய
கண்ணன் வந்து உறை கோயில் -
கொங்கை கோங்கு அவை காட்ட வாய் குமுதங்கள்
காட்ட மா பதுமங்கள்
மங்கைமார் முகம் காட்டிடும் நாங்கூர் -
வண்புருடோத்தமமே. 1263

உளைய ஒண் திறல் பொன்பெயரோன் தனது
உரம் பிளந்து உதிரத்தை
அளையும் வெம் சினத்து அரி பரி கீறிய
அப்பன் வந்து உறை கோயில் -
இளைய மங்கையர் இணை-அடிச் சிலம்பினோடு
எழில் கொள் பந்து அடிப்போர் கை
வளையின் நின்று ஒலி மல்கிய நாங்கூர் -
வண்புருடோத்தமமே. 1264

வாளை ஆர் தடங் கண் உமை பங்கன் வன்
சாபம் அற்று அது நீங்க,
மூளை ஆர் சிரத்து ஐயம் முன் அளித்த எம்
முகில் வண்ணன் உறை கோயில்-
பாளை வான் கமுகு ஊடு உயர் தெங்கின் வண்
பழம் விழ, வெருவிப் போய்,
வாளை பாய் தடம் சூழ்தரு நாங்கூர் -
வண்புருடோத்தமமே. 1265

இந்து வார் சடை ஈசனைப் பயந்த நான் -
முகனைத் தன் எழில் ஆரும்
உந்தி மா மலர்மீமிசைப் படைத்தவன்
உகந்து இனிது உறை கோயில் -
குந்தி, வாழையின் கொழுங் கனி நுகர்ந்து, தன்
குருளையைத் தழுவிப் போய்,
மந்தி மாம்பணைமேல் வைகு நாங்கூர்-
வண்புருடோத்தமமே. 1266





கண்ணன் தன் திருவடிகளால் வண்டியை உதைத்துச் சகடாசுரனைக் கொன்றான்; சிவனைச் சுற்றத்தாருடன் தோற்றோடச் செய்து, வாணாசுரனின் ஆயிரம் தோள்களை வெட்டினான். இப்பெருமானின் திருத்தலம் திருநாங்கூர் வண்புருடோத்தமம் ஆகும். இங்குள்ள மாளிகை மாடங்களில் உயர்த்திய கொடிகள் வானளாவி வளர்ந்து சூரிய ஒளியை மறைக்கும். 1262

மூன்றடி மண்பெறக் கையில் நீர் ஏற்ற வாமனின் திருவடிகளில், பிரமன் மலரிட்டு வணங்கும் பொழுது. கங்கை ஆறு புறப்படும்படி பெருமான் தன் பாதங்களை நீட்டினான். இத் திருவிக்கிரமன் எழுந்தருளிய திரு நாங்கூர் வண்புருடோத்தமத்தில் கோங்குப் பூக்கள் பெண்கள் மார்புகளைப் போன்று மலரும்; செவ்வாம்பல் அவர்கள் உதடுகளை ஒத்தவை; தாமரைப் பூக்கள் அவர்கள் முகங்களைப் போல விரியும். 1263

பலம் பெற்ற இரணியனின் மார்பைக் கிழித்த நரசிம்மப்பிரான், மிகுந்த கோபத்துடன் இரத்தத்தைக் கைகளால் அளைந்தான். குதிரையாய் வந்த கேசியின் வாயைப் பிளந்த இந்த என் அப்பன், திருநாங்கூர் வண்புருடோத்தமத்தில் கோயில் கொண்டுள்ளான். இவ்வூரில் இளம்பெண்கள் பந்தடித்து விளையாடும் பொழுது அவர்களின் பாதச்சிலப் பொலியும், கைவளையல்களின் ஓசையும் சேர்ந்து கேட்கும். 1264

ஒளி வீசும் கண்களை உடைய பார்வதியைத் தன் உடலில் பாதியாகப் பெற்ற சிவனின் சாபம் நீங்கும்படி மண்டை ஓட்டில் பிச்சை இட்டுக் காத்த மேகவண்ணன், திருநாங்கூர் வண்புருடோத்தமத்தில் உள்ளான். இவ்வூரில் பாளைகள் வளர்ந்த பாக்கு மரங்களின் நடுவே உள்ள தென்னைகளிலிருந்து தேங்காய்கள் குளத்தில் விழவும், அங்குள்ள மீன்கள் பயந்து குதித்தோடும். 1265

பிரமன் சந்திரனைச் சூடிய சிவனைப்படைத்தான். அப்பிரமனைத் திருமால் தன் கொப்பூழ்த் தாமரையில் படைத்தான். இத்திருமால் திருநாங்கூர் வண்புருடோத்தமத்தில் எழுந்தருளி உள்ளான். இங்குப் பெண்குரங்குகள் வாழை மரத்தில் குந்தியவாறு பழங்களைத் தின்று விட்டுத் தம் குட்டிகளை அணைத்தபடி, மாமரக்கிளைகள்மேல் உறங்கும். 1266

மண்ணுளார் புகழ் வேதியர் நாங்கூர்
வண்புருடோத்தமத்துள்
அண்ணல் சேவடிக்கீழ் அடைந்து உய்ந்தவன்.
ஆலி மன், அருள் மாரி
பண்ணுள ஆர்தரப் பாடிய பாடல் இப்
பத்தும் வல்லார் உலகில்
எண் இலாத பேர் இன்பம் உற்று, இமையவ-
ரோடும் கூடுவரே. 1267

## திருநாங்கூர் – செம்பொன் செய்கோயில்

பேர் அணிந்து உலகத்தவர் தொழுது ஏத்தும்
பேர்அருளாளன் எம் பிரானை,
வார் அணி முலையாள் மலர் மகளோடு
மண் மகளும் உடன் நிற்ப,
சீர் அணி மாட நாங்கை நல் நடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
கார் அணி மேகம் நின்றது ஒப்பானை -
கண்டுகொண்டு, உய்ந்தொழிந்தேனே. 1268

பிறப்பொடு மூப்பு ஒன்று இல்லவன் தன்னை,
பேதியா இன்ப வெள்ளத்தை,
இறப்பு எதிர் காலம் கழிவும் ஆனானை,
ஏழ் இசையின் சுவை தன்னை,
சிறப்பு உடை மறையோர் நாங்கை நல் நடுவுள்
செம்பொன்செய்கோயிலுனுள்ளே
மறைப் பெரும் பொருளை, வானவர் கோனை -
கண்டு நான் வாழ்ந்தொழிந்தேனே. 1269

திட விசும்பு எரி, நீர், திங்களும், சுடரும்,
செழு நிலத்து உயிர்களும் மற்றும்
படர் பொருள்களும் ஆய் நின்றவன் தன்னை,
பங்கயத்து அயன் அவன் அனைய
திட மொழி மறையோர் நாங்கை நல் நடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
கடல் நிற வண்ணன் தன்னை நான் அடியேன்
கண்டுகொண்டு, உய்ந்தொழிந்தேனே. 1270

வசை அறு குறள் ஆய், மாவலி வேள்வி
மண் அளவிட்டவன் தன்னை,
அசைவு அறும் அமரர் அடி இணை வணங்க
அலை கடல் துயின்ற அம்மானை,
திசைமுகன் அனையோர் நாங்கை நல் நடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
உயர் மணி மகுடம் சூடி நின்றானை -
கண்டுகொண்டு உய்ந்தொழிந்தேனே. 1271





பூவுலகில் புகழுடைய அந்தணர்கள் வாழும் திருநாங்கூர் வண்புருடோத்தமப் பெருமானின் திருவடிகளில், திருமங்கை ஆழ்வார் உய்வு பெற்றார். மழைபோல் அருளும். திருவாலி மன்னர் பாடிய, இப்பத்துப் பாசுரங்களைப் பயில்பவர் எண்ணற்ற இன்பம் பெற்றுப்பின் நித்திய சூரிகளுடன் சேருவர். 1167

## திருநாங்கூர் – திருச்செம்பொன் செய்கோயில்

உலகத்தவர் கூடி வணங்கித்துதிக்கும் படியான கார்மேகப் பெருமான் அளவற்ற அருள்புரிபவன். அழகிய மாடங்கள் உள்ள திருநாங்கூர் நடுவே, செம்பொன்செய்கோயிலிலே, அப்பெருமானைத் திருமகளும் பூமாதேவியும் உடன் அமர்ந்து விளங்கக் காணப் பெற்று அடியேன் உய்வடைந்தேன். 1268

இறைவன், பிறவி, கிழத்தனம் ஆகியவை சிறிதும் இல்லாதவன்; எப்பொழுதும் ஒருபடிப்பட்ட ஆனந்தக் கடல் ஆனவன்; இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்றிலும் நிலையாக இருப்பவன். ஏழிசையின் சுவை ஆனவன்; வேதப்பொருளாய் நித்திய சூரிகள் தலைவனாய் விளங்குபவன். சிறப்புடைய அந்தணர்கள் வாழும் திருநாங்கூர் நடுவே செம்பொன் செய்கோயிலில், இப் பெருமானைக் கண்டபயனால் உய்வு பெற்றேன். 1269

பகவான், திடமான வானம், தீ, நீர், சந்திரன், சூரியன், வளம் மிகுந்த உலகத்துயிர்கள் ஆகியவற்றிலும் படர்ந்த பலவற்றிலும் தானே நின்று நியமிக்கிறான். பிரமனைப் போன்ற சொல்வளம் பெற்ற அந்தணர்கள் வாழும் திருநாங்கூர் நடுவில், செம்பொன் செய் கோயில் உள்ளது. இங்கே அடியேன் கடல் நிறத்திருமேனிப் பெருமானைக் கண்டு சேவித்து உய்வு பெற்றேன். 1270

குற்றமற்ற வாமனன், மாவலி வேள்விச் சாலை சென்று பூமியை அளந்தான். நிலையான மனம் உடைய நித்திய சூரிகள் திருவடிகளை வணங்கும்படியாய்த் திருமால் திருப்பாற்கடலில் கண் வளர்ந்தான். இப்பெருமான், திருநாங்கூர் நடுவில் உள்ள செம்பொன் செய் கோயிலில், மணிமகுடம் சூடியவனாய் எழுந்தருளி உள்ளான். பிரமனை ஒத்த அந்தணர்கள் வாழும் இங்கே, அடியேன் பெருமானைக் கண்டு சேவித்து உய்வடைந்தேன். 1271

தீமனத்து அரக்கர் திறல் அழித்தவனே!
என்று சென்று அடைந்தவர் தமக்குத்
தாய்மனத்து இரங்கி அருளினைக் கொடுக்கும்
தயரதன் மதலையை, சயமே,
தேமலர்ப் பொழில் சூழ் நாங்கை நல் நடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
காமனைப் பயந்தான் தன்னை நான் அடியேன்
கண்டு கொண்டு உய்ந்தொழிந்தேனே. 1272

மல்லைமா முந்நீர் அதர்பட மலையால்
அணை செய்து மகிழ்ந்தவன் தன்னை,
கல்லின் மீது இயன்ற கடி மதிள் இலங்கை
கலங்க ஓர் வாளி தொட்டானை -
செல்வ நான்மறையோர் நாங்கை நல் நடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
அல்லிமா மலராள் தன்னொடும் அடியேன்
கண்டுகொண்டு அல்லல் தீர்ந்தேனே. 1273

வெம்சினக் களிறும் வில்லொடு மல்லும்,
வெகுண்டு இறுத்து அடர்த்தவன் தன்னை,
கஞ்சனைக் காய்ந்த காளை அம்மானை,
கரு முகில் திரு நிறத்தவனை,
செஞ்சொல் நான்மறையோர் நாங்கை நல் நடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
அஞ்சனக் குன்றம் நின்றது ஒப்பானை -
கண்டுகொண்டு, அல்லல் தீர்ந்தேனே. 1274

அன்றிய வாணன் ஆயிரம் தோளும்
துணிய அன்று ஆழி தொட்டானை,
மின்திகழ் குடுமி வேங்கட மலைமேல்
மேவிய வேத நல் விளக்கை,
தென்திசைத் திலதம் அனையவர் நாங்கைச்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
மன்று அது பொலிய மகிழ்ந்து நின்றானை -
வணங்கி, நான் வாழ்ந்தொழிந்தேனே. 1275

களங்கனி வண்ணா! கண்ணனே! என் தன்
கார் முகிலே! என நினைந்திட்டு
உளம் கனிந்திருக்கும் அடியவர் தங்கள்
உள்ளத்துள் ஊறிய தேனை,
தெளிந்த நான்மறையோர் நாங்கை நல் நடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
வளம் கொள் பேர் இன்பம் மன்னி நின்றானை -
வணங்கி, நான் வாழ்ந்தொழிந்தேனே. 1276





*"தீய நெஞ்சுடைய அரக்கர் பலத்தை அழித்தவனே!" என்று கூறி அடைக்கலம் அடைந்தவர்களிடத்தே ஸ்ரீராமன் தாய்போல் அன்புடன் அருள் செய்வான். மன்மதனைப் பெற்ற அத்திருமால், தேன்நிறைந்த மலர்ச்சோலை சூழ்ந்த திருநாங்கூரின் நடுவில் உள்ள செம்பொன்செய்கோயிலில் உள்ளான். அடியேன் அப் பெருமானைக் கண்டு உய்வு பெற்றேன்.* **1272**

*ஸ்ரீராமன் வளம் மிகுந்த கடலில் நடைபாதை உண்டாகும்படி மலைகளால் அணைகட்டி மகிழ்ந்து, திரிகூட மலையை மதிலாக உடைய இலங்கை கலங்கும்படி அம்புகள் தொடுத்தான். இப் பெருமான் நான்கு வேதங்களில் வல்ல செல்வமுடைய அந்தணர்கள் வாழும் திருநாங்கூர் நடுவிலுள்ள செம்பொன் செய் கோயிலில் உள்ளான். தாமரைச் செல்வியுடன் பெருமானைக் கண்டு கொண்டபின் அடியேன் துயர் தீர்ந்து உய்ந்தேன்.* **1273**

*கடுஞ்சினம் கொண்ட குவலயாபீடத்தைச் சீறி, வில்லை முறித்து, மல்லர்களுடன் போரிட்டுக் கம்சனைக் கொன்ற கண்ணன் காளை போன்றவன். மேகநிறமுடைய இந்த என் சுவாமி, நா நலம் வாய்ந்த வேதியர்கள் வாழும் திருநாங்கூர் நடுவில் உள்ள செம்பொன் செய் கோயிலில் மையே மலை யானாற் போல் நிற்கின்றான். இப்பெருமானைச் சேவித்துத் துயர் தீர்ந்தேன்.* **1274**

*கோபத்துடன் வந்த வாணாசுரனின் ஆயிரம் தோள்களை வெட்டிய சக்கரப்படை கொண்ட திருமால் மின்னல் வீசும் திருவேங்கட மலையில் உள்ளான். வேதப்பொருளானவன்; இயல்பான ஒளி வடிவானவன்; அடியார்கள் கூட்டம் பொலிவு பெற எழுந்தருளுபவன். தென் திசைத்திலகம் போன்றதும் அந்தணர் வாழ்வதுமான திருநாங்கூரின் நடுவில் உள்ள செம்பொன் செய் கோயிலில் பெருமானைக் கண்டு வணங்கிய அடியேன் வாழ்ச்சி பெற்று உய்ந்தேன்.* **1275**

*"களாப்பழ நிறத்தோனே! கண்ணா! மேகவண்ணா," என்று தியானித்து மனம் உருகும் அடியார்களின் நெஞ்சில், பகவான் தேன்போல ஊற்றெடுத்து, இனிக்கிறான். பேரின்பப் பொருளாய், அழகிய இப்பெருமான், தெளிந்த அறிவுடைய அந்தணர் வாழும், திருநாங்கூர் நடுவே உள்ள செம்பொன் செய் கோயிலில் உள்ளான். அடியேன் அவனை வணங்கி வாழ்வு பெற்றுய்ந்தேன்.* **1276**

தேன்அமர் சோலை நாங்கை நல் நடுவுள்
செம்பொன் செய் கோயிலினுள்ளே
வானவர் கோனைக் கண்டமை சொல்லும்
மங்கையார் வாட் கலிகன்றி
ஊனம்இல் பாடல் ஒன்பதோடு ஒன்றும்
ஒழிவு இன்றிக் கற்றுவல்லார்கள்
மானவெண் குடைக்கீழ் வையகம் ஆண்டு,
வானவர் ஆகுவர். மகிழ்ந்தே. 1277

## திருநாங்கூர் – திருத்தெற்றியம்பலம்

மாற்றரசர் மணி முடியும், திறலும், தேசும்
மற்று அவர் தம் காதலிமார் குழையும் தந்தை
கால்தளையும் உடன் சுழல வந்து தோன்றி,
கத நாகம் காத்து அளித்த கண்ணர் கண்டீர் -
நூற்றிதழ் கொள் அரவிந்தம் நுழைந்த பள்ளத்து
இளங் கமுகின் முது பாளை பகு வாய் நண்டின்
சேற்றுஅளையில் வெண் முத்தம் சிந்தும் நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்து என் செங்கண் மாலே. 1278

பொற்றொடித் தோள் மட மகள் தன் வடிவு கொண்ட
பொல்லாத வன் பேய்ச்சி கொங்கை வாங்கி,
பெற்றுஎடுத்த தாய்போல மடுப்ப, ஆரும்
பேணா நஞ்சு உண்டு உகந்த பிள்ளை கண்டீர் -
நெல்தொடுத்த மலர் நீலம் நிறைந்த சூழல்
இருஞ் சிறைய வண்டு ஒலியும் நெடுங் கணார் தம்
சிற்றடிமேல் சிலம்பு ஒலியும் மிழற்றும் நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்து என் செங் கண் மாலே. 1279

படல்அடைத்த சிறு குரம்பை நுழைந்து புக்கு,
பசு வெண்ணெய் பதம் ஆர, பண்ணை முற்றும்
அடல்அடர்த்த வேற் கண்ணார் தோக்கை பற்றி,
அலந்தலைமை செய்து உழலும் ஐயன் கண்டீர் -
மடல்எடுத்த நெடுந் தெங்கின் பழங்கள் வீழ,
மாங்கனிகள் திரட்டு உருட்டா வருநீர்ப் பொன்னி,
திடல்எடுத்து மலர் சுமந்து அங்கு இழியும் நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்து என் செங் கண் மாலே. 1280





வண்டுகள் வாழும் சோலைகள் உள்ள திருநாங்கூர் நடுவுள் செம்பொன் செய் கோயிலில் நித்திய சூரிகள் தலைவனான இறைவனைக் கண்டதை, திருமங்கை மன்னர் இப்பதிகத்தில் பாடினார். கலிகன்றி அருளிய இப்பத்துப் பாசுரங்களைப் பயில்பவர், கொற்றக்குடைக்கீழ் உலகாண்டு, முடிவில் நித்திய சூரிகளுடன் சேர்வர். **1277**

## திருநாங்கூர் –திருத்தெற்றியம் பலம்

கண்ணபிரான் அவதரித்ததால் பகைவரான துரியோதனாதியரின் பலம், புகழ், மணி மகுடங்கள் அழிந்தன; அவர்கள் மனைவிகளின் காதணிகளுடன் மங்கல நாண்களும் வீழ்ந்தன. தந்தையான வசுதேவரின் கால்விலங்கும் கழன்றது. கஜேந்திரனைக் காத்த செங்கண் மாலே, திருநாங்கூரில் உள்ள திருத்தெற்றியம் பலத்தில் உள்ளான். இங்கே பள்ளத்தில் முளைத்த பல்லிதழ்த் தாமரையில் புகுந்த நண்டுகளின் சேற்று வளையில், பாக்குமரப் பாளை வெடித்து வெண் முத்துக்ளைச் சிந்தும். **1278**

பொல்லாத பூதனைப்பேய், முன்கையில் பொன் வளை அணிந்த தோளுடைய யசோதை வடிவில், பெற்ற தாயே போலப் பால் கொடுக்கவும், கண்ணன், யாரும் விரும்பா நஞ்சை உண்டு மகிழ்ந்தான். இச்செங்கண்மால் திருநாங்கூர்த்திருத்தெற்றியம் பலத்தில் உள்ளான். இங்கு வளர்ந்த நெற்கதிர்களின் மேலே பூத்த, குவளை மலர்ச் சூழலில், வண்டுகளின் ரீங்காரமும் நீண்ட கண்களுடைய பெண்களின் பாதச் சிலம்பொலியும் சேர்ந்து மழலை போலக் கேட்கும். **1279**

கடையப்பட்ட பதமான வெண்ணெய்யை உண்பதற்காகத் தட்டிகள் அடைத்த குடிசைகளில் புகுந்த கண்ணன், வேற் கண்களுடைய இடைச்சிகளின் முன்தானைச் சேலையை இழுத்துத் துன்புறுத்தி இடைச்சேரி எங்கும் திரிந்தான். இச் செங்கண்மால் திருநாங்கூர் திருத்தெற்றி அம்பலத்தில் கோயில் கொண்டுள்ளான். இவ்வூரில் உயர்ந்த தென்னை மரப் பாளைகளிலிருந்து தெங்குப் பழங்கள் மாமரங்கள் மீது விழுந்து மாம்பழங்களைக் காவிரி நதியில் உதிரச்செய்யும். இப்பழங் களுடன் ஓடும் ஆறு. மணல் மேடுகளைக் கரைத்துப் பூக்களை இழுத்துச் செல்லும். **1280**

வார் ஆரும் முலை மடவாள் பின்னைக்கு ஆகி,
வளை மருப்பின் கடுஞ் சினத்து வன் தாள் ஆர்ந்த
கார் ஆர் திண் விடை அடர்த்து வதுவை ஆண்ட
கரு முகில்போல் திரு நிறத்து என் கண்ணர் கண்டீர்-
ஏர் ஆரும் மலர்ப் பொழில்கள் தழுவி எங்கும்
எழில் மதியைக் கால் தொடர, விளங்கு சோதிச்
சீர் ஆரும் மணி மாடம் திகழும் நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்து என் செங் கண் மாலே. 1281

கலை இலங்கும் அகல் அல்குல் கமலப் பாவை,
கதிர் முத்த வெண் நகையாள், கருங் கண் ஆய்ச்சி
முலை இலங்கு ஒளி மணிப் பூண் வடமும் தேய்ப்ப,
மூவாத வரை நெடுந் தோள் மூர்த்தி கண்டீர் -
மலை இலங்கு நிரைச் சந்தி மாட வீதி
ஆடவரை, மட மொழியார் முகத்து இரண்டு
சிலை விலங்கி மனம் சிறை கொண்டு இருக்கும் நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்து என் செங் கண் மாலே. 1282

தான்போலும் என்று எழுந்தான் தரணியாளன்;
அது கண்டு தரித்திருப்பான் அரக்கர் தங்கள்
கோன்போலும் ஏன்று எழுந்தான் குன்றம் அன்ன
இருபது தோள் உடன் துணித்த ஒருவன் கண்டீர் -
மான்போலும் மென் நோக்கின் செய்ய வாயார்,
மரகதம்போல் மடக் கிளியைக் கைமேல் கொண்டு
தேன்போலும் மென் மழலை பயிற்றும் நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்து என் செங் கண் மாலே. 1283

பொங்கு இலங்கு புரி நூலும் தோலும் தாழப்
பொல்லாத குறள் உரு ஆய் பொருந்தா வாணன்
மங்கலம் சேர் மறை வேள்வி அதனுள் புக்கு,
மண் அகலம் குறை இரந்த மைந்தன் கண்டீர் -
கொங்கு அலர்ந்த மலர்க் குழலார் கொங்கை தோய்ந்த
குங்குமத்தின் குழம்பு அளைந்த கோலம் தன்னால்
செங் கலங்கல் வெண் மணல்மேல் தவழும் நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்து என் செங் கண் மாலே. 1284

சிலம்பின் இடைச் சிறு பரல்போல், பெரிய மேரு
திருக் குளம்பில் கணகணப்ப, திரு ஆகாரம்
குலுங்க நில மடந்தை தனை இடந்து புல்கிக்
கோட்டிடை வைத்தருளிய எம் கோமான் கண்டீர்-
இலங்கிய நான் மறை அனைத்தும், அங்கம் ஆறும்,
ஏழ் இசையும் கேள்விகளும் எண் திக்கு எங்கும்
சிலம்பிய நல் பெருஞ் செல்வம் திகழும் நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்து என் செங் கண் மாலே. 1285





வளைந்த கொம்புகளை உடைய சினம்கொண்ட காளைகளை நெரித்துக் கண்ணன், கச்சணிந்த மார்பகங்களைப் பெற்ற மடப்பகுணமுடைய நப்பின்னையை மணந்தான். இக்காள மேகப் பெருமான் எழுந்தருளிய திருநாங்கர் திருத்தெற்றியம் பலத்தில் மணிமாடங்கள் உள்ளன. மலர் சோலைகளில் மேல் எழுந்து வீசும் காற்று, சந்திரனை போக ஒட்டாமல் தடுக்கும். 1281

முத்துப்பற்களையும் மேகலை இடையையும் உடையவள் திருமகள்; கரிய கண்களை உடையவள் நப்பின்னை. இவர்களின் முத்து மணி மாலைகள் மார்பில் உராய்வதால் மலைத்தோள்களுடைய திருமால் செவ்வி குலையாது உள்ளான். இச்செங்கண் மாலின் திருநாங்கூர் திருத்தெற்றியம்பலத்துள் மலை போன்ற மாடங்கள் வரிசையாக உள்ளன. கொஞ்சிப் பேசும் மாதர்களின் முகத்தில் உள்ள வில் போன்ற புருவங்கள் தத்தம் கணவர்கள் மனங்களைச் சிறைப்படுத்துவன. 1282

அரக்கர் கோன் இராவணன், இராமனை, அரசன் தானே என்று தாழ்வாக எண்ணிப் பயமில்லாமல் எதிர்க்கவும், மலை போன்ற அவன் இருபது தோள்களையும் இராமன் வீழ்த்தினான். இச்செங்கண் மாலின் திருநாங்கூர் திருத்தெற்றியம்பலத்தில் மான்பார்வையும் சிவந்த உதடும் உடைய பெண்கள், மரகதம் போன்ற மடக்கிளியைக் கைகளில் கொண்டு, தேன்போல இனிய பேச்சைக் கற்பிப்பார்கள். 1283

பூணூலும் மான்தோலும் அணிந்த அழகிய வாமனன், மங்கல வேதஒலி நிறைந்த மாவலியின் வேள்விச் சாலை சென்று பூமியை யாசித்தான். திருநாங்கூர் திருத்தெற்றி அம்பலத்துச் செங்கண்மால் இவனே. மலர்மணக் கூந்தல் உடைய பெண்களின் மார்புக் குங்குமம் ஆற்றுநீரில் கரைந்து, அச்சிவந்த கலங்கல், வெண் மணற் குன்றுகள் மீது மெள்ளப் பாயும். 1284

வராஹப்பெருமான் பூமியைக் குத்தி எடுத்தபொழுது, தண்டைச் சிலம்பின் பரல் ஓசை போலக் கால், குளம்பிலே மேருமலை கண கண என ஒலித்தது, திருமகள் தங்கிய மார்பு குலுங்கியது. பெருமான் பூமாதேவியைத் தழுவியபடி தன் கொம்பிலே வைத்துக்கொண்டான். இச்செங்கண் மாலின் திருத்தலம் திருநாங்கூர்த்திருத்தெற்றியம்பலம் ஆகும். நான்கு வேதங்கள், ஆறங்கங்கள், இதிகாசங்கள் முதலியன திசைகள் எட்டும் பரவிக் கேட்கப்படும் செல்வம் நிறைந்தது இவ்வூர். 1285

ஏழ் உலகும் தாழ் வரையும் எங்கும் மூடி
எண் திசையும் மண்டலமும் மண்டி அண்டம்
மோழை எழுந்து ஆழி மிகும் ஊழி வெள்ளம்,
முன் அகட்டில் ஒடுக்கிய எம் மூர்த்தி கண்டீர்-
ஊழிதொறும் ஊழிதொறும் உயர்ந்த செல்வத்து
ஓங்கிய நான்மறை அனைத்தும் தாங்கும் நாவர்
சேழ் உயர்ந்த மணிமாடம் திகழும் நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்து என் செங் கண் மாலே. 1286

சீர் அணிந்த மணி மாடம் திகழும் நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்து என் செங் கண் மாலை,
கூர் அணிந்த வேல் வலவன் ஆலி நாடன்,
கொடி மாட மங்கையர் கோன், குறையல் ஆளி
பார் அணிந்த தொல் புகழான் கலியன் சொன்ன
பாமாலை இவை ஐந்தும் ஐந்தும் வல்லார்
சீர் அணிந்த உலகத்து மன்னர் ஆகி
சேண் விசும்பில் வானவர் ஆய்த் திகழ்வர் தாமே. 1287

## திருநாங்கூர் – திருமணிக்கூடம்

தூம்பு உடைப் பனைக் கை வேழம் துயர் கெடுத்தருளி மன்னு
காம்பு உடைக் குன்றம் ஏந்திக் கடு மழை காத்த எந்தை -
பூம்புனல் பொன்னி முற்றும் புகுந்து பொன் வரண்ட எங்கும்
தேம் பொழில் கமழும் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 1288

கவ்வை வாள் எயிற்று வன் பேய்க் கதிர் முலை சுவைத்து இலங்கை
வவ்விய இடும்பை தீரக் கடுங் கணை துரந்த எந்தை -
கொவ்வை வாய் மகளிர் கொங்கைக் குங்குமம் கழுவிப் போந்த
தெய்வ நீர் கமழும் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 1289

மாத் தொழில் மடங்கச் செற்று, மருது இற நடந்து, வன் தாள்
சேத் தொழில் சிதைத்துப் பின்னை செவ்வித் தோள் புணர்ந்த எந்தை -
நாத் தொழில் மறை வல்லார்கள் நயந்து அறம் பயந்த வண்கைத்
தீத் தொழில் பயிலும் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 1290

தாங்கு அரும் சினத்து வன் தாள் தடக் கை மா மருப்பு வாங்கி,
பூங் குருந்து ஒசித்து புள் வாய் பிளந்து எருது அடர்த்த எந்தை-
மாங்கனி நுகர்ந்த மந்தி வந்து வண்டு இரிய வாழைத்
தீங் கனி நுகரும் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 1291





*ஏழுலகங்கள், மலைகள், எண்திசைகள், அண்டங்கள் ஆகிய எங்கும் கடல்பொங்கிய காலத்தில் தன் வயிற்றில் வைத்துக் காத்த செங்கண்மால் திருநாங்கூர் திருத்தெற்றியம் பலத்துள் உள்ளான். மாடங்கள் உயர்ந்த இவ்வூரில் நான்கு வேதங்களைப் பயிலும் அந்தணர்கள் என்றும் செல்வமுடையவர்.* 1286

*மணிமாடங்கள் உள்ள திருநாங்கூர் திருத்தெற்றியம்பலச் செங்கண் மாலைக் கூர்வேல் ஏந்திய திருவாலி மன்னர் பாடினார். திருக்குறையலூரை ஆளும் புகழுடைய திருமங்கை மன்னரான கலியனின் இப்பாசுரங்களைப் பயில்பவர் இவ்வுலக மன்னர் ஆவதுடன் நித்திய சூரிகளாகவும் ஆவார்கள்.* 1287

## திருநாங்கூர் – திருமணிக் கூடம்

*பனைபோல் பருத்ததாய்த் துளைகள் உள்ள துதிக்கை பெற்ற கஜேந்திரனின் துயரைப் போக்கியவன்; மூங்கில்கள் உள்ள மலையைத் தூக்கி மழையிலிருந்து இடைக்குலத்தைக் காத்தவன்; இந்த என் சுவாமியின் திருநாங்கூர் திருமணிக் கூடத்தில் பொன் கொழித்தோடும் காவிரியால் சோலையில் பூமணம் வீசும்.* 1288

*வாள் போன்ற பற்களுடன் ஆரவாரித்து வந்த பூதனையின் நஞ்சு முலையைக் கண்ணன் சுவைத்தான். இலங்கை அரக்கரின் தீமை தொலைய இராமன் அம்பு தொடுத்தான். இவ்விறைவனின் திருநாங்கூர் திருமணிக் கூடத்தில், கோவை வாயுடைய பெண்களின் மார்புக் குங்குமத்தைத்தைக் கழுவி ஓடும் நீர் மணம் வீசும்.* 1289

*குதிரையாய் வந்த கேசியைக் கொன்று, மருதமரங்களிடையே நடந்து அவற்றை முறித்து, வலிய கால்களை உடைய எருதுகளை அடக்கி, நப்பின்னையின் தோளைத் தழுவிய என் தலைவன் திருநாங்கூர் திருமணிக் கூடத்தில் உள்ளான். அவ்வூர் அந்தணர் நாவால் வேதம் ஓதுவார்; அறம்புரியும் கைகளால் வேள்வி செய்வர்.* 1290

*அடங்காத கோபத்தையும் வலிய கால்களையும் துதிக்கையையும் பெற்ற யானையின் கொம்பைப் பிடுங்கி, குருந்தை முறித்துப் பறவை வாயைக் கிழித்து, ஏழு எருதுகளை அடக்கிய என் சுவாமி திருநாங்கூர் திருமணிக் கூடத்தில் உள்ளான். இங்குப்பெண் குரங்கு மாம்பழத்தைத் தின்றபிறகு, வாழை மரத்தில் ஏறி, அங்குள்ள வண்டு சிதறி ஓடும்படி, வாழைப் பழங்களையும் தின்னும்.* 1291

கரு மகள் இலங்கையாட்டி பிலங் கொள் வாய் திறந்து தன்மேல்
வரும் அவள் செவியும் மூக்கும் வாளினால் தடிந்த எந்தை -
பெரு மகள் பேதை மங்கை தன்னொடும் பிரிவு இலாத
திருமகள் மருவும் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 1292

கெண்டையும், குறளும், புள்ளும், கேழலும், அரியும் மாவும்
அண்டமும், சுடரும், அல்லா ஆற்றலும் ஆய எந்தை -
ஒண் திறல் தென்னன் ஓட வட அரசு ஓட்டம் கண்ட
திண் திறலாளர் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 1293

குன்றமும், வானும் மண்ணும் குளிர்புனல், திங்களோடு
நின்ற வெம் சுடரும், அல்லா நிலைகளும் ஆய எந்தை -
மன்றமும் வயலும் காவும் மாடமும் மணங் கொண்டு எங்கும்
தென்றல் வந்து உலவும் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 1294

சங்கையும், துணிவும், பொய்யும், மெய்யும் இத் தரணி ஓம்பும்
பொங்கிய முகிலும், அல்லாப் பொருள்களும் ஆய எந்தை -
பங்கயம் உகுத்த தேறல் பருகிய வாளை பாய,
செங் கயல் உகளும் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 1295

பாவமும் , அறமும், வீடும், இன்பமும், துன்பம் தானும்,
கோவமும், அருளும், அல்லாக் குணங்களும் ஆய எந்தை -
மூவரில் எங்கள் மூர்த்தி இவன் என முனிவரோடு
தேவர் வந்து இறைஞ்சும் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 1296

திங்கள் தோய் மாட நாங்கூர்த் திருமணிக்கூடத்தானை
மங்கையர் தலைவன் வண் தார்க் கலியன் வாய் ஒலிகள் வல்லார்
பொங்கு நீர் உலகம் ஆண்டு, பொன் உலகு ஆண்டு பின்னும்
வெம் கதிர்ப் பரிதி வட்டத்து ஊடு போய் விளங்குவாரே. 1297

## திருநாங்கூர் – காவளம்பாடி

தா அளந்து உலக முற்றும், தட மலர்ப் பொய்கை புக்கு,
நா வளம் நவின்று அங்கு ஏத்த நாகத்தின் நடுக்கம் தீர்த்தாய்!
மா வளம் பெருகி மன்னும் மறையவர் வாழும் நாங்கைக்
காவளம்பாடி மேய கண்ணனே! களைகண் நீயே. 1298





இலங்கை அரசி எனத்தகும் சூர்ப்பணகை, குகை போன்ற வாயைத் திறந்தபடி, தன்மேல் வந்ததும் அவள் காதையும் மூக்கையும் அறுத்த பெருமான், திருநாங்கூர் திருமணிக் கூடத்தில் பெண்மை வடிவான பூமாதேவியுடனும் பிரிவில்லாத திருமகளுடனும் எழுந்தருளி உள்ளான். **1292**

மீன், வாமனன், அன்னம், வராஹம், நரசிம்மன், ஹயக்ரீவன், ஆகிய அவதாரங்கள் எடுத்த பகவான். அண்டங்கள், சூரிய சந்திரர், மற்றும் எல்லாவற்றிலும் நித்தியமாய் இருந்து நியமிக்கிறான். இப்பெருமானின் திருநாங்கூர் திருமணிக் கூடத்தில், பலம் மிகுந்த பாண்டியனையும், வட அரசர்களையும் தோற்றோடச் செய்த வலிமையாளர் வாழ்கிறார்கள். **1293**

மலைகள், வானம், பூமி, நீர், சந்திரன் சூரியன், நட்சத்திரங்கள் ஆகிய யாவிலும் நிறைந்து, நியமிக்கிற இறைவன் திருமணிக் கூடத்தில் கோயில் கொண்டான். இவ்வூரில் தென்றல் காற்று, வீதிகள், வயல்கள், தோட்டங்கள் மாடங்கள் ஆகிய எங்கும் புகுந்து மணத்தை மொண்டு வீசும். **1294**

ஐயமும் துணிவுமாய், பொய், மெய்களாய், உலகைக் காக்கும் மேகமாய் யாவற்றையும் நியமிக்கும் எம்பிரான் திருநாங்கூர் திருமணிக் கூடத்தில் உள்ளான். இவ்வூரில், தாமரைப் பூவிலிருந்து விழுந்த தேனைப் பருகியபெரிய வாளைமீன் துள்ளவும் சிறிய கயல்மீன் அதனைக் கண்டு பயந்தோடும். **1295**

எம்பிரான், பாவ புண்ணியம், வீடுபேறு, இன்பதுன்பம், சினம், அருள் ஆனவனாய் அவற்றை இயக்குகிறான். மும் மூர்த்திகளாய் வடிவெடுக்கும் அவனே விஷ்ணுவாகவும் உள்ளான் என்று தெளிந்த முனிவர்கள், "எங்கள் சுவாமி இவனே" என்று திருமணிக் கூடப் பெருமானை வணங்குகிறார்கள். **1296**

சந்திரனைத் தொடும்படி உயர்ந்த மாடங்கள் உள்ள திருமணிக்கூடப்பெருமானை, திருமங்கை மன்னரான கலியன் துதித்தார். இச்சந்தப் பாசுரங்களைப் பயில்பவர் கடல்சூழ் உலகை ஆண்டு, சுவர்க்கம் அடைந்து முடிவில், சூரிய மண்டலம் வழியாகப் பரமபதம் அடைவார்கள். **1297**

## திருநாங்கூர் – காவளம்பாடி

உலகெங்கும் திரிந்த கஜேந்திரன் பூப்பொய்கையில் இறங்கி முதலை வாய்ப்பட்டதும் உன் திருநாமத்தைத் துதிக்கவும், அதன் துயர் தீர்த்தவனே! அந்தணர்கள் வளத்துடன் வாழும் திருநாங்கூர் காவளம்பாடி மேவிய கண்ணா! நீயே என்னைக் காப்பாற்ற வேண்டும். **1298**

மண் இடந்து ஏனம் ஆகி, மாவலி வலி தொலைப்பான்,
விண்ணவர் வேண்டச் சென்று வேள்வியில் குறை இரந்தாய்!
துன் என மாற்றார் தம்மைத் தொலைத்தவர் நாங்கை மேய
கண்ணனே! காவளம் தண் பாடியாய்! களைகண் நீயே. 1299

உருத்து எழு வாலி மார்வில் ஒரு கணை உருவ ஓட்டி
கருத்து உடைத் தம்பிக்கு இன்பக் கதிர் முடி அரசு அளித்தாய்!
பருத்து எழு பலவும் மாவும் பழம் விழுந்து ஒழுகும் நாங்கைக்
கருத்தனே! காவளம் தண் பாடியாய்! களைகண் நீயே. 1300

முனைமுகத்து அரக்கன் மாள முடிகள் பத்து அறுத்து வீழ்த்து, ஆங்கு,
அனையவற்கு இளையவற்கே அரசு அளித்து அருளினானே!
சுனைகளில் கயல்கள் பாயச் சுரும்பு தேன் நுகரும் நாங்கைக்
கனை கழல் காவளம் தண் பாடியாய்! களைகண் நீயே. 1301

பட அரவு உச்சி தன்மேல் பாய்ந்து பல் நடங்கள்செய்து
மடவரல் மங்கை தன்னை மார்வகத்து இருத்தினானே!
தடவரை தங்கு மாடத் தகு புகழ் நாங்கை மேய
கடவுளே! காவளம் தண் பாடியாய்! களைகண் நீயே. 1302

மல்லரை அட்டு மாள, கஞ்சனை மலைந்து கொன்று,
பல் அரசு அவிந்து வீழப் பாரதப் போர் முடித்தாய்!
நல் அரண் காவின் நீழல் நறை கமழ் நாங்கை மேய
கல் அரண் காவளம் தண் பாடியாய்! களைகண் நீயே. 1303

மூத்தவருக்கு அரசு வேண்டி முன்பு தூது எழுந்தருளி,
மாத்து அமர் பாகன் வீழ மத கரி மருப்பு ஒசித்தாய்!
பூத்து அமர் சோலை ஓங்கி, புனல் பரந்து ஒழுகும் நாங்கைக்
காத்தனே! காவளம் தண் பாடியாய்! களைகண் நீயே. 1304

ஏவு இளங் கன்னிக்கு ஆகி இமையவர் கோனைச் செற்று
கா வளம் கடிது இறுத்துக் கற்பகம் கொண்டு போந்தாய்!
பூ வளம் பொழில்கள் சூழ்ந்த புரந்தரன் செய்த நாங்கைக்
காவளம்பாடி மேய கண்ணனே! களைகண் நீயே. 1305





*வராஹமாய்ப் பூமியைக் குத்தி எடுத்துக் காத்தவனே! தேவர்களுக்காக மாவலியின் வலிமையைப் போக்க வேள்வியில் பூமியை யாசித்தவனே! பகைவரை வென்ற வீரர் வாழும் திருநாங்கைக் காவளம் பாடியில் உள்ள கண்ணனே! அடியேனை நீயே காத்தருள வேண்டும்.* 1299

*சினத்துடன் எழுந்த வாலியின் மார்பில் தைக்கும்படி அம்பெய்து, அவன் தம்பி அரசு பெற ஒளி மகுடம் அளித்தாய். பருத்தபலாப் பழங்களும் மாம்பழங்களும் விழுந்து தேன் ஓடும் திருநாங்கைக் காவளம்பாடியில் உள்ள செயல்வீரனே! நீயே என்னைக் காத்திட வேண்டும்.* 1300

*போரில் இராவணனின் பத்துத் தலைகளையும் அறுத்து அவன் தம்பி வீடணனுக்கு அரசளித்தவனே! மீன்கள் நீரில் பாய்ந்தோட, வண்டுகள் தேன்பருகும் வளம் உடைய திருநாங்கைக் காவளம் பாடியில் உள்ள ஒலிக்கும் கழல் அணிந்தபெருமானே! நீயே என்னைக் காப்பாற்ற வேண்டும்.* 1301

*பெரிய பிராட்டியை மார்பில் கொண்டவனே! காளியன் படங்களில் நடனம் செய்தவனே! மலை ஒத்த மாளிகைகள் உள்ள திருநாங்கைக் காவளம்பாடியில் உள்ள கடவுளே! நீயே என்னைக் காக்க வேண்டும்.* 1302

*நிழற் சோலைகள் மணம் வீசும் திருநாங்கூர்க் காவளம் பாடியில் எனக்கு அரண்போல் உள்ளவனே! மல்லர்களை அழித்தாய்; கம்சனைக் கொன்றாய்; பல அரசர்கள் மாளும்படி பாரதப்போர் நடத்தினாய். நீயே என் காவலன் அப்பா!* 1303

*மூத்தவனான தருமனுக்காக அரசு வேண்டித் தூது சென்றாய்; மதம் மிகுந்த குவலயாபீடத்தின் கொம்பை முறித்து, அதன்மேல் இருந்த பாகனையும் வீழ்த்தினாய். பூஞ்சோலைகளைச் சுற்றி நீரோடி வளம் பெருக்கும் திருநாங்கைக் காவளம் பாடியில் உள்ளவனே! என்னைக் காப்பாற்று.* 1304

*இளம்பெண்ணான சத்தியபாமைக்காக தேவேந்திரனைத் தோற்கடித்து, தேவருலகத் தோட்டத்தின் அழகை அழித்துக் கற்பக மரத்தைக் கொண்டு வந்த கண்ணனே! இந்திரனால் சமைக்கப்பட்ட பூஞ்சோலைகள் சூழ்ந்த திருநாங்கைக் காவளம் பாடி மேவியவனே! என்னைக் காப்பாற்று.* 1305

சந்தம் ஆய்,சமயம் ஆகி, சமய ஐம் பூதம் ஆகி,
அந்தம் ஆய், ஆதி ஆகி, அரு மறை அவையும் ஆனாய்!
மந்தம் ஆர் பொழில்கள்தோறும் மட மயில் ஆலும் நாங்கைக்
கந்தம் ஆர் காவளம் தண் பாடியாய்! களைகண் நீயே. 1306

மா வளம் பெருகி மன்னும் மறையவர் வாழும் நாங்கைக்
காவளம்பாடி மேய கண்ணனைக் கலியன் சொன்ன
பா வளம் பத்தும் வல்லார் பார்மிசை அரசர் ஆகிக்
கோ இள மன்னர் தாழக் குடை நிழல் பொலிவர் தாமே. 1307

## திருநாங்கூர் – திருவெள்ளக்குளம்

கண் ஆர் கடல்போல் திருமேனி கரியாய்!
நண்ணார் முனை வென்றி கொள்வார் மன்னும் நாங்கூர்த்
திண் ஆர் மதிள் சூழ் திருவெள்ளக்குளத்துள்
அண்ணா! அடியேன் இடரைக் களையாயே. 1308

கொந்து ஆர் துளவ மலர் கொண்டு அணிவானே!
நந்தாத பெரும் புகழ் வேதியர் நாங்கூர்ச்
செந்தாமரை நீர்த் திருவெள்ளக்குளத்துள்
எந்தாய்! அடியேன் இடரைக் களையாயே. 1309

குன்றால் குளிர் மாரி தடுத்து உகந்தானே!
நன்று ஆய பெரும் புகழ் வேதியர் நாங்கூர்ச்
சென்றார் வணங்கும் திருவெள்ளக்குளத்துள்
நின்றாய்! நெடியாய்! அடியேன் இடர் நீக்கே. 1310

கான் ஆர் கரிக் கொம்பு அது ஒசித்த களிறே!
நானாவகை நல்லவர் மன்னிய நாங்கூர்த்
தேன் ஆர் பொழில் சூழ் திருவெள்ளக்குளத்துள்
ஆனாய்! அடியேனுக்கு அருள்புரியாயே. 1311

வேடு ஆர் திருவேங்கடம் மேய விளக்கே!
நாடு ஆர் புகழ் வேதியர் மன்னிய நாங்கூர்ச்
சேடு ஆர் பொழில் சூழ் திருவெள்ளக்குளத்தாய்!
பாடாவருவேன் வினை ஆயின பாற்றே. 1312





சந்தங்களாகவும் அவைபொருந்திய யாப்பாகவும், அனைத்துக்கும் அடியான ஐம்பூதங்களாகவும் உள்ளவனே! படைப்புக்கும் அழிவுக்கும் காரணமானவனே! வேதப்பொருளே! மந்தார மணச் சோலைகளில் பெண் மயில்கள் ஆடும் நாங்கைக் காவளம் பாடிப்பெருமானே! என்னைக் காத்திட வேண்டும். 1306

அந்தணர் வளத்துடன் வாழும் திருக்காவளம் பாடிப் பெருமானைப்பற்றிக் கலியன் பாடிய இப்பத்துப் பாசுரங்களைப் பயில்பவர் சிற்றரசர் கீழ்ப்படியப் பேரரசர்களாய்க் கொற்றக் குடைக்கீழ் விளங்குவர். 1307

## திருநாங்கூர் – திருவெள்ளக்குளம்

பரந்த கடல் போன்ற கரிய மேனிக்கண்ணனே! போரில் பகைவரை வெல்லும் வலிமை உடையார் வாழும் திருநாங்கூரில், மதிள்சூழ்ந்த திருவெள்ளக்குளத்தில் எழுந்தருளிய கண்ணா! அடியேன் துன்பத்தை நீக்குவாய். 1308

பூங்கொத்துகள் நிறைந்த திருத்துழாய் மாலை சூடியவனே! அழிவற்ற புகழ் கொண்ட அந்தணர் வாழும் திருநாங்கூரில் தாமரைக் குளங்கள் சூழ்ந்த திருவெள்ளக் குளத்தில் உள்ள எந்தையே! அடியேன் துயரைக் களைக. 1309

கோவர்த்தன மலையைத் தூக்கிக் குளிர் மழையைத் தடுத்து உகந்த கண்ணா! திரு நாங்கூர்க்குச் செல்பவரும் புகழுடைய அந்தணரும், வணங்க, திருவெள்ளக்குளத்தில் உள்ளபெருமானே! அடியேன் துன்பத்தை நீக்குக. 1310

காட்டிலே திரிந்து வந்த குவலயாபீடத்தின் கொம்பை முறித்த ஆண்யானையான கண்ணா! பலவகைகளிலும் சான்றாண்மை உடையவர் வாழும் திருநாங்கூரில், வண்டுகள் தங்கும் சோலைகள் சூழ்ந்த திருவெள்ளக்குளத்தில் உள்ள யானை போன்றவனே! அடியேனுக்கு அருள்க. 1311

வேடர்கள் வாழும் திருவேங்கட மலையில், காட்சி தரும் சுய ஒளியோனே! நாடு புகழும் பெருமை உடைய அந்தணர்கள் வாழும் திருநாங்கூரில் தளிர்கள் மிகுந்த சோலைகள் சூழ்ந்த திருவெள்ளக் குளத்தில் எழுந்தருளியவனே! உன்னைப் பாடி வரும் அடியேன் பாவங்களைத் தீர்க்க வேண்டும். 1312

கல்லால் கடலை அணை கட்டி உகந்தாய்!
நல்லார் பலர் வேதியர் மன்னிய நாங்கூர்ச்
செல்வா! திருவெள்ளக்குளத்து உறைவானே!
எல்லா இடரும் கெடுமாறு அருளாயே. 1313

கோலால் நிரை மேய்த்த எம் கோவலர் கோவே!
நால் ஆகிய வேதியர் மன்னிய நாங்கூர்ச்
சேல் ஆர் வயல் சூழ் திருவெள்ளக்குளத்துள்
மாலே! என வல் வினை தீர்த்தருளாயே. 1314

வாராகம் அது ஆகி இம் மண்ணை இடந்தாய்!
நாராயணனே! நல்ல வேதியர் நாங்கூர்ச்
சீர் ஆர் பொழில் சூழ் திருவெள்ளக்குளத்துள்
ஆராஅமுதே! அடியேற்கு அருளாயே. 1315

பூ ஆர் திரு மா மகள் புல்கிய மார்பா!
நா ஆர் புகழ் வேதியர் மன்னிய நாங்கூர்த்
தேவா! திருவெள்ளக்குளத்து உறைவானே!
ஆ ஆ! அடியான் இவன் என்று அருளாயே. 1316

நல் அன்பு உடை வேதியர் மன்னிய நாங்கூர்ச்
செல்வன் திருவெள்ளக்குளத்து உறைவானை,
கல்லின் மலி தோள் கலியன் சொன்ன மாலை
வல்லவர் என வல்லவர் வானவர் தாமே. 1317

திருநாங்கூர் – திருப்பார்த்தன் பள்ளி

**தலைவியின் செயலுக்குத் தாய் இரங்கியது.**

கவள யானைக் கொம்பு ஒசித்த
கண்ணன் என்றும், காமரு சீர்
குவளை, மேகம் அன்ன மேனி
கொண்ட கோன், என் ஆனை என்றும்
தவள மாட நீடு நாங்கைத்
தாமரையாள் கேள்வன் என்றும்,
பவள வாயாள் என் மடந்தை
பார்த்தன்பள்ளி பாடுவாளே. 1318

6 பெ-தி





*மலைகளால் கடல்மீது அணைகட்டி மகிழ்ந்தவனே! இரக்ககுணம் உடைய நல்ல பல அந்தணர்கள் வாழும் திருநாங்கூரில் உள்ள திருவெள்ளக்குளத்தலத்தில் உறைபவனே! திருமகள் கேள்வ! அடியேன் பாவங்கள் எல்லாம் அழியும்படி அருள் செய்ய வேண்டும்.* **1313**

*கோல் ஏந்திப் பசுக்களை மேய்த்த ஆயர் தலைவா! நால் வகை வேதங்கள் ஓதும் அந்தணர் வாழும் திருநாங்கூரில், சேல் மீன்கள் நிறைந்த வயல்கள் சூழ்ந்த திருவெள்ளக் குளத்தில் உள்ள திருமாலே! என் வலிய வினைகளைத் தீர்த்தருள்க.* **1314**

*வராஹ வடிவில் பூமியை எடுத்துக் காத்த நாராயணா! நல்லவர்களான அந்தணர்கள் வாழும் திருநாங்கூரில், சீர்மை உடைய சோலைகள் சூழ்ந்த திருவெள்ளக் குளத்தில் உள்ள ஆராவமுதே! அடியேனுக்கு அருள்க.* **1315**

*தாமரை வாழ் திருமாமகள் தழுவிக் கொள்ளும் மார்பனே! உலகோரால் புகழப்படும் அந்தணர்கள் வாழும் திரு நாங்கூர் திருவெள்ளக் குளத்தில் உள்ள சீல குணத்தோனே! "இந்த உன் அடியான் உலக வாழ்வில் நலிகிறானே" என்று இரங்கி நீ அருள் செய்ய வேண்டும்.* **1316**

*அன்பு கூடிய பக்தர்களான அந்தணர் வாழும் திருநாங்கூர் திருவெள்ளக்குளத்துத் திருமகள் கேள்வனைப் பற்றியன இப்பாசுரங்கள். மலையினும் வலிமை உடைய தோள்பெற்ற கலியன் அருளிய இவற்றைப் பயில்பவர் நித்திய சூரிகளுடன் ஒன்று சேர்வார்கள்.* **1317**

திருநாங்கூர் – திருப்பார்த்தன் பள்ளி

**தலைவியின் செயலுக்குத் தாய் இரங்கியது.**

*பவள உதடுகள் பெற்ற என் மகள், பார்த்தன் பள்ளித்தலத்தைப் பாடுகிறாள். "கவளச் சோறுண்ணும் குவலயா பீடத்தின் கொம்பை ஒடித்த கண்ணா! குவளைப் பூவையும் மேகத்தையும் ஒத்த, ஆசைப்படத்தக்க மேனி பெற்ற அரசனே! யானை போன்றவனே! வெண்மையான மாடங்கள் உள்ள திருநாங்கூரில் உள்ள திருமகள் கேள்வனே!" என்று திருப்பார்த்தன் பள்ளிப் பெருமானைக் கூவுகிறாள்.* **1318**

கஞ்சன் விட்ட வெம் சினத்த
களிறு அடர்த்த காளை என்றும்,
வஞ்ச மேவி வந்த பேயின்
உயிரை உண்ட மாயன் என்றும்,
செஞ்சொலாளர் நீடு நாங்கைத்
தேவ தேவன் என்று என்று ஓதி
பஞ்சி அன்ன மெல் அடியாள்
பார்த்தன்பள்ளி பாடுவாளே. 1319

அண்டர் கோன், என் ஆனை என்றும்,
ஆயர் மாதர் கொங்கை புல்கு
செண்டன் என்றும், நான்மறைகள்
தேடி ஓடும் செல்வன் என்றும்,
வண்டு உலவு பொழில் கொள் நாங்கை
மன்னு மாயன் என்று என்று ஓதி
பண்டுபோல் அன்று என் மடந்தை
பார்த்தன்பள்ளி பாடுவாளே. 1320

கொல்லை ஆனாள்; பரிசு அழிந்தாள்
கோல் வளையார் தம் முகப்பே;
மல்லை முந்நீர் தட்டு இலங்கை
கட்டு அழித்த மாயன் என்றும்,
செல்வம் மல்கு மறையோர் நாங்கைத்
தேவ தேவன் என்று என்று ஓதி,
பல் வளையாள் என் மடந்தை
பார்த்தன்பள்ளி பாடுவாளே. 1321

அரக்கர் ஆவி மாள, அன்று
ஆழ் கடல் சூழ் இலங்கை செற்ற
குரக்கரசன் என்றும் கோல
வில்லி என்றும் மா மதியை
நெருக்கு மாடம் நீடு நாங்கை
நின்மலன் தான் என்று என்று ஓதி
பரக்கழிந்தாள் என் மடந்தை
பார்த்தன்பள்ளி பாடுவாளே. 1322

ஞாலம் முற்றும் உண்டு உமிழ்ந்த
நாதன் என்றும், நானிலம் சூழ்
வேலை அன்ன கோல மேனி
வண்ணன் என்றும், மேல் எழுந்து
சேல் உகளும் வயல் கொள் நாங்கைத்
தேவ தேவன் என்று என்று ஓதி
பாலின் நல்ல மென் மொழியாள்
பார்த்தன்பள்ளி பாடுவாளே. 1323





"கமசன் அனுப்பிய சினம் கொண்ட யானையைக் கொன்றவனே! வஞ்சனைப் பூதனையின் உயிரைக் குடித்தவனே! நன்மைப் பேச்சுடைய அந்தணர் வாழும் திருநாங்கூரில் உள்ளவனே!" என்று பஞ்சு போன்ற மென்மையான பாதங்கள் கொண்ட என் மகள் திருப்பார்த்தன் பள்ளியைப் பாடுகிறாள். 1319

"நித்திய சூரிகள் தலைவா! யானை போன்றவனே! இடைப்பெண்களை மார்புடன் தழுவிய மலர்ச்செண்டே! நான்கு வேதங்களும் தேடும் என்செல்வனே! வண்டுலாவும் சோலைகள் உள்ள திருநாங்கூரில் எழுந்தருளியவனே" என்று மறுபடியும் என் மகள் திருப்பார்த்தன் பள்ளியைப் பாடுகிறாள். 1320

பல வளையல்கள் அணிந்த என் மகள், வளைக்கை மாதர்கள் முன்னே வரம்பில்லாமல், தனியே புறப்பட்டாள்; நாணத்தையும் பெண்மையையும் இழந்தாள். "நீர் நிறைந்த கடல் மீது அணை கட்டி, இலங்கையை அழித்த மாயனே! செல்வ அந்தணர் வாழும் திருநாங்கூர்த் தேவ தேவனே." என்று அவள் திருப்பார்த்தன் பள்ளியைப் பாடுகிறாள். 1321

"அன்று அரக்கர் அழியும்படிக் கடல் சூழ்ந்த இலங்கையில் போரிட்ட வானரர் அரசனே! அழகிய வில் ஏந்தியவனே! சந்திரனைத் தொடும் மாடங்கள் உள்ள திருநாங்கூரில் எழுந்தருளியவனே! நின்மலா!" என்று ஓதி என்மகள் பெண்மை அழிந்தாள். பார்த்தன் பள்ளியைப் பாடுகிறாள். 1322

என்மகள் பாலினும் இனிய பேச்சுடையவள்; திருப்பார்த்தன் பள்ளிப் பெருமானைப் பாடுகிறாள். "உலகங்களை உண்டு, உமிழ்ந்த தலைவனே! கடல் நிறத்திருமேனி உடையவனே மீன்கள் விளையாடும் வயல்கள் உள்ள திருநாங்கூரில் உள்ள தேவ தேவனே!" என்று அழைத்து உருகுகிறாள். 1323

நாடி என் தன் உள்ளம் கொண்ட
நாதன் என்றும், நான்மறைகள்
தேடி என்றும் காண மாட்டாச்
செல்வன் என்றும், சிறை கொள் வண்டு
சேடு உலவு பொழில் கொள் நாங்கைத்
தேவ தேவன் என்று என்று ஓதி
பாடகம் சேர் மெல் அடியாள்
பார்த்தன்பள்ளி பாடுவாளே. 1324

உலகம் ஏத்தும் ஒருவன் என்றும்,
ஒண் சுடரோடு உம்பர் எய்தா
நிலவும் ஆழிப் படையன் என்றும்,
நேசன் என்றும், தென் திசைக்குத்
திலதம் அன்ன மறையோர் நாங்கைத்
தேவ தேவன் என்று என்று ஓதி
பலரும் ஏச, என் மடந்தை
பார்த்தன்பள்ளி பாடுவாளே. 1325

கண்ணன் என்றும் வானவர்கள்
காதலித்து மலர்கள் தூவும்
எண்ணன் என்றும், இன்பன் என்றும்,
ஏழ் உலகுக்கு ஆதி என்றும்,
திண்ண மாட நீடு நாங்கைத்
தேவ தேவன் என்று என்று ஓதி
பண்ணின் அன்ன மென் மொழியாள்
பார்த்தன்பள்ளி பாடுவாளே. 1326

பாருள் நல்ல மறையோர் நாங்கைப்
பார்த்தன்பள்ளிச் செங் கண் மாலை
வார் கொள் நல்ல முலை மடவாள்
பாடலைத் தாய் மொழிந்த மாற்றம்,
கூர் கொள் நல்ல வேல் கலியன்
கூறு தமிழ்ப் பத்தும் வல்லார்
ஏர் கொள் நல்ல வைகுந்தத்துள்
இன்பம் நாளும் எய்துவாரே. 1327

## திருவிந்தளூர்

நும்மைத் தொழுதோம்; நும் தம் பணிசெய்து இருக்கும் நும் அடி யோம்;
இம்மைக்கு இன்பம் பெற்றோம்; எந்தாய்! இந்தளூரீரே!
எம்மைக் கடிதாக் கருமம் அருளி, ஆ வா! என்று இரங்கி,
நம்மை ஒருகால் காட்டி நடந்தால் நாங்கள் உய்யோமே? 1328





மெல்லிய பாதத்தில் பாடகம் அணிந்துள்ள என்மகள், திருப்பார்த்தன் பள்ளியைப் பாடுகிறாள். "என் இதயம் கவர்ந்தவனே! வேதங்கள் தேடியும் என்றும் காணமுடியாத மிக உயர்ந்த திருவாளனே! வண்டுலாவும் சோலைகள் உள்ள திருநாங்கூரில் எழுந்தருளிய தேவ தேவா," என்கிறாள். 1324

பலரும் தன்னைப் பழித்தும் என்மகள் திருப்பார்த்தன் பள்ளியைப் பாடுகிறாள். "உலகங்கள் புகழும் ஒப்பற்றவனே! சந்திர சூரியரும் தேவர்களும் அணுகமுடியாத படி ஒளி வீசும் சக்கரத்தை ஏந்தியவனே! என்னிடத்தும் அடியார்கள் இடத்தும் அன்பு காட்டுபவனே! தென்திசைக்குத் திலகம் போல அந்தணர் வாழும் திரு நாங்கூரில் உள்ள தேவ தேவனே!" என்கிறாள். 1325

இசையை விடவும் இனிய பேச்சுடைய எம்மகள், "கண்ணா! தேவர்கள் பக்தியுடன் பூக்கள் இட்டு வணங்கும் பெருமையோனே! அவர்கள் நெஞ்சில் நிற்பவனே! ஏழுலகங் களுக்கு ஆதி காரணனே! உயர்ந்த மாடங்கள் உள்ள திரு நாங்கூரில் எழுந்தருளிய தேவதேவனே!" என்று அழைத்துத் திருப்பார்த்தன் பள்ளியைப் பாடுகிறாள். 1326

நல்ல அந்தணர்கள் வாழும் திரு நாங்கூர்த் திருப்பார்த்தன் பள்ளியில் உள்ள செங்கண்மாலை, வேலாயுதம் ஏந்திய கலியன் பாடினார். கச்சணிந்த மார்புடைய தன் மகள் பெருமானை அழைத்தபடியைத் திருத்தாயார் பேசுவதாக உள்ளவை இப்பாசுரங்கள். இவற்றைக் கற்க வல்லவர் வைகுந்தத்தில் தினமும் பேரின்பம் அடையப் பெறுவர். 1327

## திருவிந்தளூர்

திரு இந்தளூரில் உள்ள என் தாய் போன்றவரே! உம்மைத்தொழுது, தொண்டு செய்து, அடியோங்கள் இப்பொழுது ஞானப் பயன் ஆன இன்பம் பெற்றோம். நீர், எம்மிடத்தே, "ஐயோ" என்று இரங்கி, நாங்கள் கைங்கரியம் செய்ய அருளவேண்டும். வேறுபயன் கருதாத எங்களுக்குத் தேவரீர் காட்சி கொடுத்தால் நாங்கள் உய்வடைவோம் அன்றோ! 1328

சிந்தை தன்னுள் நீங்காது இருந்த திருவே! மருவினிய
மைந்தா! அம் தண் ஆலி மாலே! சோலை மழ களிறே!
நந்தா விளக்கின் சுடரே! நறையூர் நின்ற நம்பீ! என்
எந்தாய்! இந்தளூராய்! அடியேற்கு இறையும் இரங்காயே! 1329

பேசுகின்றது இதுவே வையம் ஈர் அடியால் அளந்த
மூசி வண்டு முரலும் கண்ணி முடியீர்! உம்மைக் காணும்
ஆசை என்னும் கடலில் வீழ்ந்து இங்கு அயர்த்தோம்; அயலாரும்
ஏசுகின்றது இதுவே காணும், இந்தளூரீரே! 1330

ஆசை வழுவாது ஏத்தும் எமக்கு, இங்கு இழுக்காய்த்து; அடியோர்க்குத்
தேசம் அறிய உமக்கே ஆளாய்த் திரிகின்றோமுக்கு,
காசின் ஒளியில் திகழும் வண்ணம் காட்டீர், எம் பெருமான்!
வாசி வல்லீர்! இந்தளூரீரே! வாழ்ந்தே போம் நீரே. 1331

தீ எம் பெருமான், நீர் எம் பெருமான், திசையும் இரு நிலனும்
ஆய், எம் பெருமான் ஆகி நின்றால், அடியோம் காணோமால்;
தாய், எம் பெருமான், தந்தை தந்தை ஆவீர்! அடியோமுக் -
கே எம் பெருமான் அல்லீரோ நீர்? இந்தளூரீரே! 1332

சொல்லாது ஒழியகில்லேன்; அறிந்த சொல்லில், நும் அடியார்
எல்லாரோடும் ஒக்க எண்ணியிருந்தீர், அடியேனை;
நல்லார் அறிவீர்; தீயார் அறிவீர்;நமக்கு இவ் உலகத்தில்
எல்லாம் அறிவீர் ஈதே அறியீர் இந்தளூரீரே! 1333

மாட்டீர் ஆனீர், பணி நீர் கொள்ள; எம்மைப் பணி அறியா
வீட்டீர்; இதனை வேறே சொன்னோம்; இந்தளூரீரே!
காட்டீர் ஆனீர் நும் தம் அடிக்கள்: காட்டில், உமக்கு இந்த
நாட்டே வந்து தொண்டர் ஆன நாங்கள் உய்யோமே? 1334

முன்னை வண்ணம் பாலின் வண்ணம்; முழுதும் நிலைநின்ற
பின்னை வண்ணம் கொண்டல் வண்ணம்; வண்ணம் எண்ணுங்கால்
பொன்னின் வண்ணம், மணியின் வண்ணம் புரையும் திருமேனி
இன்ன வண்ணம் என்று காட்டீர், இந்தளூரீரே! 1335





இதயத்தில் என்றும் வாழும் திருவே! அழகிய திருவாலியில் எழுந்தருளிய என் இனிய திருமாலே! சோலைகளில் உலாவும் யானை போன்றவனே! அணையாத ஒளிச்சுடரே! திருநறையூர் நம்பீ! திருவிந்தளூரில் எழுந்தருளிய என் சுவாமி! அடியேனை அடிமை கொள்ள வேண்டும். 1329

திருஇந்தளூரில் உள்ளவரே! பூமியை ஈரடியால் அளந்தவரே! வண்டு ஒலிக்கும் மாலை சூடிய திருமுடி உடையவரே! உம்மைக் காணும் ஆசைக் கடலில் விழுந்து நாம் தளர்ந்தோம். நீர் முகம் காட்டாததால் அயலார் பழி கூறுகிறார்கள்; அடியேன் பேச்சும் அப்படியே ஆகும். 1330

இந்தளூர்ப் பெருமானே! ஆசை தவறாமல் உம்மை வணங்கும் எங்களுக்குப் பொன் போன்ற உம் வடிவழகைக் காட்டாமல் உள்ளீர். எங்கள் சுவாமியான நீர், தக்கது, தகாதது, அறிவீர், அதனால் என்ன? நீரே தாம் வாழ்ந்து போமே! 1331

திருவிந்தளூரில் உள்ளவரே! தீ, நீர், திசை, நிலம் ஆகிய வற்றில் நீரே வாழ்கிறீர் என்றாலும் அடியோங்களுக்குக் காட்சி தரவில்லை. எங்களுக்கு, நீரே, தாய், தந்தை, பாட்டன், ஆவீர். வேறு கதியற்ற எங்களுக்குத் தேவரீர் இறைவன் அன்றோ! 1332

இந்தளூர்ப் பெருமானே! ஒன்றை வலியுறுத்திச் சொல்கிறேன். பிரிவு பொறுக்க முடியாத அடியேனை, மற்றவர்களைப்போல் எண்ணுகிறீரே! பிரிவு பொறாத நல்லவர், பிரிவைப் பொருட்படுத்தாத தீயவர் ஆகிய இருவர் இயல்புகளையும் நீர் அறிவீர். இவ்வுலகில் வேறு பலவற்றையும் அறிவீர். ஆயினும், பிரிவால் துடிக்கும் எங்கள் எளிமையை மட்டும் அறியீர் போலும்! 1333

இந்தளூர்ப் பிரானே! தொண்டின் சுவையை நாங்கள் அறியச் செய்த பின், எங்களைப் பணி கொள்ளாமல் கைவிடல் ஆகுமா? தனியாக இதனைக் கூறியும், உம் திருவடிகளைக் காட்டவில்லையே! காட்டினால் நாங்கள் அடிமைக்கு இசைந்து, உமக்குத் தொண்டராகி, உய்வு பெறுவோமே! 1334

இந்தளூரீர்! கிருதயுகத்தில் உம் நிறம் பாலின் வெண்மை; திரேதாயுகத்தில் தங்க நிறம்; துவாபரத்தில் மணியின் நீலநிறம். ஆனால் எல்லாக் காலத்திலும் உமது நிறம் மேகத்தை ஒத்தது. இந்த நான்கு நிறங்கள் உடைய உமது திருமேனி இப்படிப் பட்டது என்று எங்களுக்குக் காட்டி அருள்க. 1335

எந்தை தந்தை தம்மான் என்று எமர் ஏழ் ஏழ் அளவும்
வந்து நின்ற தொண்டரோர்க்கே வாசி வல்லீரால்;
சிந்தை தன்னுள் முந்தி நிற்றிர்; சிறிதும் திருமேனி
இந்த வண்ணம் என்று காட்டீர், இந்தளூரீரே! 1336

ஏர் ஆர் பொழில் சூழ் இந்தளூரில் எந்தை பெருமானைக்
கார்ஆர் புறவின் மங்கை வேந்தன், கலியன் ஒலிசெய்த
சீர் ஆர் இன் சொல் மாலை கற்றுத் திரிவார் உலகத்தில்
ஆர்ஆர், அவரே அமரர்க்கு என்றும் அமரர் ஆவாரே. 1337

## திருவெள்ளியங்குடி

ஆய்ச்சியர் அழைப்ப வெண்ணெய் உண்டு, ஒருகால்,
ஆல்இலை வளர்ந்த எம் பெருமான்,
பேய்ச்சியை முலை உண்டு இணை மருது இறுத்து
பெரு நிலம் அளந்தவன் கோயில் -
காய்த்த நீள் கமுகும் கதலியும் தெங்கும்
எங்கும் ஆம் பொழில்களின் நடுவே
வாய்த்த நீர் பாயும் மண்ணியின் தென்பால் -
திருவெள்ளியங்குடி - அதுவே. 1338

ஆ நிரை மேய்த்து அன்று, அலை கடல் அடைத்திட்டு,
அரக்கர் தம் சிரங்களை உருட்டி
கார்நிறை மேகம் கலந்தது ஓர் உருவக்
கண்ணனார் கருதிய கோயில் -
பூநிரைச் செருந்தி புன்னை முத்து அரும்பி,
பொதும்பிடை வரி வண்டு மிண்டி
தேன்இரைத்து உண்டு அங்கு இன் இசை முரலும் -
திருவெள்ளியங்குடி - அதுவே. 1339

கடுவிடம் உடைய காளியன் தடத்தைக்
கலக்கி முன் அலக்கழித்து, அவன் தன்
படம் இறப் பாய்ந்து பல் மணி சிந்தப்
பல் நடம் பயின்றவன் கோயில் -
படஅரவு அல்குல் பாவை நல்லார்கள்
பயிற்றிய நாடகத்து ஒலி போய்
அடைபுடை தழுவி அண்டம் நின்று அதிரும் -
திருவெள்ளியங்குடி - அதுவே. 1340





*இந்தளூர்ப்பெருமானே! "அடியேனுக்கும் தந்தைக்கும் பாட்டனுக்கும் நாதனே!" என்று கூறி ஏழு தலை முறைகளாய்த் தொண்டு செய்கிறோம். இத்தகைய அடியோங்களிடம் வேறுபாடு கொள்ளலாமோ? நேரே, நீர் காட்சி தராவிடிலும், நெஞ்சில் முந்தி நிற்கிறீர், உம்திருமேனி வண்ணத்தைச் சிறிதாவது காட்டுவீரா?* **1336**

*அழகிய சோலைகள் உள்ள இந்தளூர்ப் பெருமானைப் பற்றி, மேகம் உலாவும் திருமங்கை நாட்டு மனனர் கலியன், பாடினார். இப்பாசுரங்களைக் கற்றுக் களிப்பவர், நித்திய சூரிகளால் என்றும் கொண்டாடப்படுவர்.* **1337**

## திருவெள்ளியங்குடி

*இடைச்சிகள் முறையிடும்படி, கண்ணன் வெண்ணெய் உண்டான்; பிரளய காலத்தில் ஆலந்தளிரில் கண் வளர்ந்தான்; பூதனைப்பேயின் முலைப்பால் அருந்தினான்; மருதமரங்களை முறித்தான். பூமியை அளந்த என் சுவாமி கோயில் கொண்டுள்ள திருவெள்ளியங்குடி பெண்ணை ஆற்றின் தென்கரையில் உள்ளது. இங்கே, கமுக மரங்கள் காய்க்கும்; வாழை, தென்னை மரங்கள் வளர்ந்த சோலை நடுவே ஆற்று நீர் பாயும்.* **1338**

*பசுக்களைக் காத்தவன்; அலை கடல் மீது அணைகட்டி அரக்கர்கள் தலைகளை அறுத்தவன்; கார்மேக நிறம் கொண்ட ஒப்பற்ற வடிவுடையவன். இத்தகைய கண்ணபிரான் கோயில் கொண்ட திருத்தலம் திருவெள்ளியங்குடி ஆகும். இங்கே, பூக்கள் மலர்ந்த செருந்தி, முத்து அரும்பும் புன்னை, ஆகிய மரப்பொந்துகளில், வண்டுகள் தேன் குடித்து, இனிய இசைபாடும்.* **1339**

*கொடிய நஞ்சுடைய காளியன் மடுவில் குதித்துக் கலக்கிய கண்ணன், அப்பாம்பின் படம் நசுங்கும்படி பாய்ந்து, மணிகள் சிதறவும், பல படியாய் நடனம் செய்தான். இப்பெருமான் எழுந்தருளிய திருவெள்ளியங்குடியில் பாம்புப் படம் ஒத்த இடையுடைய மாதர்கள் இரவெல்லாம் பயிலும் நாடக ஒலி, ஆகாயம் வரை சென்று அதிரும்.* **1340**

கறவை முன் காத்து, கஞ்சனைக் காய்ந்த
காளமேகத் திரு உருவன்,
பறவை முன் உயர்த்து பாற்கடல் துயின்ற
பரமனார் பள்ளிகொள் கோயில் -
துறைதுறைதோறும் பொன் மணி சிதறும்
தொகு திரை மண்ணியின் தென்பால்
செறி மணி மாடக் கொடி கதிர் அணவும் -
திருவெள்ளியங்குடி -அதுவே. 1341

பாரினை உண்டு, பாரினை உமிழ்ந்து,
பாரதம் கையெறிந்து ஒருகால்,
தேரினை ஊர்ந்து, தேரினைத் துரந்த
செங் கண் மால் சென்று உறை கோயில் -
ஏர் நிரை வயலுள் வாளைகள் மறுகி,
எமக்கு இடம் அன்று இது என்று எண்ணி,
சீர் மலி பொய்கை சென்று அணைகின்ற -
திருவெள்ளியங்குடி -அதுவே. 1342

காற்றிடைப் பூளை கரந்தென அரந்தை
உற, கடல் அரக்கர் தம் சேனை
கூற்றிடைச் செல்ல, கொங் கணை துரந்த
கோல வில் இராமன் தன் கோயில் -
ஊற்றிடை நின்ற வாழையின் கனிகள்
ஊழ்த்து வீழ்ந்தன உண்டு மண்டி
சேற்றிடைக் கயல்கள் உகள் திகழ் வயல் சூழ் -
திருவெள்ளியங்குடி - அதுவே. 1343

ஒள்ளிய கருமம் செய்வன் என்று உணர்ந்த
மாவலி வேள்வியில் புக்கு,
தெள்ளிய குறள் ஆய், மூவடி கொண்டு
திக்கு உற வளர்ந்தவன் கோயில் -
அள்ளி அம் பொழில்வாய் இருந்து வாழ் குயில்கள்
அரி அரி என்று அவை அழைப்ப,
வெள்ளியார் வணங்க விரைந்து அருள்செய்வான் -
திருவெள்ளியங்குடி - அதுவே. 1344

முடி உடை அமரர்க்கு இடர் செய்யும் அசுரர்
தம் பெருமானை, அன்று அரி ஆய்,
மடியிடை வைத்து மார்வம் முன் கீண்ட
மாயனார் மன்னிய கோயில் -
படியிடை மாடத்து, அடியிடைத் தூணில்
பதித்த பன் மணிகளின் ஒளியால்
விடி பகல், இரவு என்று, அறிவு அரிது ஆய
திருவெள்ளியங்குடி - அதுவே. 1345





கண்ணன் பசுக்களைக் காத்துக் கம்சனைக் கொன்றான். மேகநிறம் உடைய இத்திருமால், கருடனைக் கொடியாகக் கொண்டு பாற்கடலில் பள்ளி கொண்டான். இப்பெருமானின் திருவெள்ளியங்குடி, மண்ணி ஆற்றின் தென்கரையில் உள்ளது. இந்நதித்துறைகளில் எல்லாம் பொன்னும் மணியும் சிதறி ஓடும். கொடிகள் சூரியனைத் தொடும் அளவு உயர்ந்த மாடங்கள் இங்குண்டு. 1341

பூமியை உண்டு, பின், உமிழ்ந்து காத்தவனே, பாரதப் போரில், அணிவகுத்துத் தேர் ஓட்டினான்; அவனே தேரை விட்டு, வீடுமனை விரட்டினான். இச்செங்கண்மாலின் தலம் திருவெள்ளியங்குடி ஆகும். வரிசையாக ஏர்கள் காணப்படும் இவ்வூர் வயல்களில், வாளை மீன்கள் பயந்து, 'நமக்கு வயல் இடமல்ல' என்றெண்ணிக் குளங்களை நாடி ஓடுவன. 1342

அழகிய வில் ஏந்திய இராமன், கடல் போன்ற அரக்கர் படையைச்சாடி, கடிய அம்புகளை விட்டான்; காற்றிலே பூளைப்பூ சிதைவதுபோல, அவர்கள் அழிந்தனர். இப்பெருமானின் திருவெள்ளியங்குடியில், நீர்நிலத்தில் வாழை மரங்களிலிருந்து கனிந்த பழங்கள் விழும். அவற்றை உண்ட கயல்மீன்கள் சேற்று நில வயல்களில் துள்ளி ஓடும். 1343

தானம் செய்வதே கடமை என்று கருதிய மாவலியின் வேள்வியில் மூவடி மண், வேண்டிய வாமனன் திசை எங்கும் பரந்து வளர்ந்தான். இத்திரிவிக்கிரமன் எழுந்தருளிய திருவெள்ளியங்குடியில், சோலைக்குயில்கள் "அரி! அரி!" என்று அழைக்கும். தூய நெஞ்சுடைய பக்தர்கள், அதற்கேற்ப, பெருமானைத் துதிசெய்யவும், அவன் அவர்களுக்கு அருள் செய்வான். 1344

முடிசூடிய தேவர்களைத் துன்புறுத்திய அசுரவேந்தன் இரணியனை, நரசிம்மப்பெருமான் தன் மடியிலே கிடத்தி, மார்பைக் கிழித்தான். இம்மாயன் எழுந்தருளிய தலம் திருவெள்ளியங்குடி ஆகும். இங்குள்ள மாடங்களின் தூண்களில் பதிக்கப்பட்ட பல வகை மணிகள் ஒளி வீசுவன; இரவு, பகலென வேறுபாடில்லாதபடி, ஒளிமயமாய் இருக்கும். 1345

குடி குடி ஆகக் கூடி நின்று, அமரர்,
குணங்களே பிதற்றி நின்று ஏத்த,
அடியவர்க்கு அருளி, அரவு அணைத் துயின்ற
ஆழியான் அமர்ந்து உறை கோயில் -
கடி உடைக் கமலம் அடியிடை மலர,
கரும்பொடு பெருஞ் செந்நெல் அசைய,
வடிவு உடை அன்னம் பெடையொடும் சேரும்
வயல் வெள்ளியங்குடி - அதுவே. 1346

பண்டு முன், ஏனம் ஆகி, அன்று ஒரு கால்,
பார் இடந்து எயிற்றினில் கொண்டு
தெண் திரை வருடப் பாற்கடல் துயின்ற
திருவெள்ளியங்குடியானை,
வண்டு அறை சோலை மங்கையர் தலைவன்,
மான வேல் கலியன் வாய் ஒலிகள்
கொண்டு, இவை பாடும் தவம் உடையார்கள்
ஆள்வர் இக் குரை கடல் உலகே. 1347

## திருப்புள்ளம்பூதங்குடி

அறிவது அறியான், அனைத்து உலகும்
உடையான் என்னை ஆள் உடையான்,
குறிய மாணி உரு ஆய
கூத்தன்,மன்னி அமரும் இடம் -
நறிய மலர்மேல் சுரும்பு ஆர்க்க,
எழில் ஆர் மஞ்ஞை நடம் ஆட,
பொறி கொள் சிறை வண்டு இசை பாடும் -
புள்ளம்பூதங்குடி - தானே. 1348

கள்ளக் குறள் ஆய், மாவலியை
வஞ்சித்து, உலகம் கைப்படுத்து,
பொள்ளைக் கரத்த போதகத்தின்
துன்பம் தவிர்த்த புனிதன் இடம் -
பள்ளச் செறுவில் கயல் உகள,
பழனிக் கழனி அதனுள் போய்,
புள்ளுப் பிள்ளைக்கு இரை தேடும் -
புள்ளம்பூதங்குடி - தானே. 1349





பிரமன் முதலியோர், தம் குடிமக்களுடன் கூடி நின்று, திருப்பாற்கடலில், ஆதிசேஷன் மீது கண்வளரும் திருமாலின் குணங்களை ஏத்தித் துதிப்பார்கள். இவ்வடியார்களுக்கு அருளும், சக்கரம் ஏந்திய அப்பெருமான், திருவெள்ளியங்குடியில் எழுந்தருளி உள்ளான். இவ்வூர் வயல்களில், கரும்பும் நெற்பயிரும் வளர்ந்து அசையும்; மணத்துடன் தாமரைப் பூக்கள் மலரும்; அன்னங்கள் பேடைகளுடன் அங்கே வசிக்கும். **1346**

பிரளய காலத்தில் வராஹமாய்ப் பூமியைத் தூக்கிக் கொம்பினில் வைத்துக் காத்தவன், பாற்கடலில் பள்ளி கொண்டான். திருவெள்ளியங்குடியில் எழுந்தருளிய இப் பெருமானை, வேற்கலியன், பாடித்துதித்தார். வண்டொலிக்கும் சோலைகள் உள்ள திருமங்கை நாட்டு அரசர் பாடிய இப்பாசுரங்களைப் பாடிப் பயில்பவர், கடல் சூழ் உலகை ஆளப்பெறுவர். **1347**

## திருப்புள்ளம் பூதங்குடி

எல்லா உலகங்களின் உள் உயிராய் ஆளும் இறைவன், எவராலும் தன் முயற்சி கொண்டு அறிய முடியாதவன்; அவன் அடியேனை அடிமை கொண்டான். குள்ள வடிவில் பிரமசாரியாய் வந்த வாமன பகவானும் அவனே. இப் பெருமான் எழுந்தருளிய திருத்தலம் திருப்புள்ளம் பூதங்குடி ஆகும். இவ்வூரில், மனம் மிகுந்த பூக்களில் தேனீக்கள் அமர்ந்து ரீங்காரம் செய்யும்; மயில்கள் ஆடும்; பொறி வண்டுகள் இசை பாடும். **1348**

கள்ளத்தனத்துடன் வந்த வாமனன், மாவலியை வஞ்சித்து, மூவுலகங்களையும் கைப்பற்றித் தன்னுடைய தாக்கினான். ஓட்டை உள்ள துதிக்கை உடைய கஜேந்திரனின் துன்பத்தை நீக்கிய, தூயவன் ஆன இப்பெருமான் திருப்புள்ளம் பூதங்குடியில் எழுந்தருளி உள்ளான். இவ்வூரில் பள்ளமான வயல்களில் மீன்கள் துள்ளும்; பறவைகள் அங்கே, தங்கள் குஞ்சுகளுக்கு உணவு தேடும். **1349**

மேவா அரக்கர் தென் இலங்கை
வேந்தன் வீயச் சரம் துரந்து,
மா வாய் பிளந்து, மல் அடர்த்து,
மருதம் சாய்த்த மாலது இடம் -
கா ஆர் தெங்கின் பழம் வீழ,
கயல்கள் பாய, குருகு இரியும்
பூ ஆர் கழனி எழில் ஆரும் -
புள்ளம்பூதங்குடி - தானே. 1350

வெற்பால் மாரி பழுது ஆக்கி,
விறல் வாள் அரக்கர் தலைவன் தன்
வற்பு ஆர் திரள் தோள் ஐந் நான்கும்
துணித்த வல் வில் இராமன் இடம் -
கற்பு ஆர் புரிசைசெய் குன்றம்,
கவின் ஆர் கூடம், மாளிகைகள்,
பொற்பு ஆர் மாடம் எழில் ஆரும் -
புள்ளம்பூதங்குடி - தானே. 1351

மை ஆர் தடங் கண் கருங் கூந்தல்
ஆய்ச்சி மறைய வைத்த தயிர்
நெய் ஆர் பாலோடு அமுது செய்த
நேமி அங் கை மாயன் இடம் -
செய் ஆர் ஆரல் இரை கருதிச்
செங் கால் நாரை சென்று அணையும்
பொய்யா நாவின் மறையாளர் -
புள்ளம்பூதங்குடி - தானே. 1352

மின்னின் அன்ன நுண் மருங்குல்
வேய் ஏய் தடந் தோள் மெல்லியற்கா,
மன்னு சினத்த மழ விடைகள்
ஏழ் அன்று அடர்த்த மாலது இடம் -
மன்னு முது நீர் அரவிந்த
மலர்மேல் வரி வண்டு இசை பாட,
புன்னை பொன் ஏய் தாது உதிர்க்கும் -
புள்ளம்பூதங்குடி - தானே. 1353

குடையா விலங்கல் கொண்டு ஏந்தி,
மாரி பழுதா, நிரை காத்து,
சடையான் ஓட அடல் வாணன்
தடந் தோள் துணித்த தலைவன் இடம் -
குடியா வண்டு கள் உண்ண,
கோல நீலம் மட்டு உகுக்கும்
புடை ஆர் கழனி எழில் ஆரும் -
புள்ளம்பூதங்குடி - தானே. 1354





*இராமபிரான் தன்னுடன் பொருந்தாத தென்னிலங்கை அரக்கர் அரசன் இராவணனை அம்பெய்து அழித்தான். குதிரையாய் வந்த கேசியின் வாயைக் கிழித்து, மல்லர்களைக் கொன்று, மருதமரங்களை முறித்தான் கண்ணன். இத் திருமாலின் திருப்புள்ளம் பூதங்குடியில், தோட்டங்களில் தெங்குப் பழங்கள் கீழே விழுவதைக் கண்டு அஞ்சிய கயல் மீன்கள் பாய்ந்தோடும். இதனைப் பார்த்த நாரைகள் சிதறிப் பறக்கும். வயல்களில் பூக்கள் மலரும்.* **1350**

*கண்ணன் கோவர்த்தன மலையைத் தூக்கி மழையைத் தடுத்தான். வில் ஏந்திய இராமன் வாள் பலம் பெற்ற அரக்கர் தலைவன் இராவணனின் இருபது தோள்களையும் வெட்டினான். இராம, கிருஷ்ணனாக வந்த இத்திருமால் திருப்புள்ளம் பூதங்குடியில் உள்ளான். நல்ல வேலைப்பாடுள்ள மதில் சூழ்ந்த இத்தலத்தில் மாளிகைகளும் மாடங்களும் மலைகள் போல் உயர்ந்துள்ளான்.* **1351**

*கருங்கூந்தலும், மைக்கண்களும் உடைய இடைச்சிகள், ஒளித்து வைத்த, தயிர், பால், நெய் ஆகியவற்றைச் சக்கரக்கையன், கண்ணன் உண்டான். இந்த மாயன் எழுந்தருளிய திருப்புள்ளம் பூதங்குடியில் செங்கால் நாரைகள், ஆரல்மீன்களை, உணவாகப் பெற, வயல்களைச் சேரும். பொய்யிலாப் பேச்சுடைய வேதியர்கள் இத்தலத்தில் வாழ்கிறார்கள்.* **1352**

*மின்னல் போன்ற இடையையும் மூங்கிலை ஒத்த தோள் களையும் உடைய நப்பின்னையைப் பெறக் கண்ணன் ஏழு எருது களைத் தாக்கிக் கொன்றான். இப்பெருமானின் தலமான திருப்புள்ளம் பூதங்குடியில், நிலையான நீரிடங்களில் தாமரைகள் பூக்கும்; அவற்றில் அமர்ந்த வண்டுகள் பாடும். புன்னை மரங்களின் மரகதப் பொடிகள் உதிர்ந்து தங்கம் போல் தோன்றும்.* **1353**

*கண்ணன் மலையைக் குடையாய்த் தூக்கிப் பசுக்களை மழையி லிருந்து காத்தான்; சிவன் முதுகுகாட்டி ஓடவும் வாணாசுரனின் தோள்களை வெட்டினான். இறைவனான இத்திருமாலின் இடம் திருப்புள்ளம் பூதங்குடி ஆகும். இங்குள்ள கருநெய்தல் பூக்களில் வண்டுகள் குடும்பத்துடன் அமர்ந்து தேன் பருகும். அப்பூக்களோ தேனை மேன்மேலும் பெருகச் செய்யும். இத்தகைய வயல் பரப்புகள் அவ்வூரில் அழகுடன் விளங்கும்.* **1354**

கறை ஆர் நெடு வேல் மற மன்னர்
வீய, விசயன் தேர் கடவி,
இறையான் கையில் நிறையாத
முண்டம் நிறைத்த எந்தை இடம் -
மறையால் முத்தீ அவை வளர்க்கும்
மன்னு புகழால், வண்மையால்,
பொறையால் மிக்க அந்தணர் வாழ் -
புள்ளம்பூதங்குடி- தானே. 1355

துன்னி, மண்ணும் விண் நாடும்,
தோன்றாது இருள் ஆய் மூடிய நாள்,
அன்னம் ஆகி, அரு மறைகள்
அருளிச்செய்த அமலன் இடம் -
மின்னு சோதி நவமணியும்,
வேயின் முத்தும், சாமரையும்
பொன்னும் பொன்னி கொணர்ந்து அலைக்கும்
புள்ளம்பூதங்குடி - தானே. 1356

கற்றா மறித்துக் காளியன் தன்
சென்னி நடுங்க நடம்பயின்ற
பொன் தாமரையாள் தன் கேள்வன்
புள்ளம்பூதங்குடி தன்மேல்,
கற்றார் பரவும் மங்கையர் கோன்,
கார் ஆர் புயற்கைக் கலிகன்றி
சொல் தான் ஈர் ஐந்து இவை பாட,
சோர நில்லா துயர்- தாமே. 1357

## திருக்கூடலூர்

தாம் தம் பெருமை அறியார், தூது
வேந்தர்க்கு ஆய வேந்தர் ஊர்போல் -
காந்தள் விரல் மென் கலை நல் மடவார்
கூந்தல் கமழும் - கூடலூரே. 1358

செறும் திண் திமில் ஏறு உடைய பின்னை
பெறும் தண் கோலம் பெற்றார் ஊர்போல் -
நறும் தண் தீம் தேன் உண்ட வண்டு
குறிஞ்சி பாடும் -கூடலுரே. 1359





கண்ணபெருமான், அர்ஜுனன் தேரோட்டியாக, இரத்தக்கறை உடைய வேலேந்திய மன்னர்களை அழியச் செய்தான். சிவன் கையில் ஒட்டிய கபால ஓட்டை நிறைத்து வாழ்வித்தான். இந்த என் சுவாமி எழுந்தருளிய திருப்புள்ளம் பூதங்குடியில், பொறுமை மிகுந்த அந்தணர்கள், மூவகை ஓமங்கள் செய்து புகழும் கொடைத்தன்மையும் பொருந்த வாழ்கின்றனர். **1355**

மண்ணுலகத்தையும் வானுலகையும், இருள், மூடி மறைத்த நாளில், திருமால், அன்ன வடிவம் கொண்டு அருமையான வேதங்களைக் காத்து அருளினான். இத்தூய இறைவன், எழுந்தருளிய, திருப்புள்ளம் பூதங்குடியில், காவேரி ஆறு, ஒளி மிகுந்த மணிகளையும் மூங்கில் முத்துக்களையும் சாமரங்களையும், தங்கத்தையும் தள்ளிக்கொண்டு ஓடும். **1356**

பசுங்கன்றுகளை மேய்த்தவனும், காளியன் நடுங்க, அவன் தலையில் ஆடியவனும், ஆன கண்ணன், திருப்புள்ளம் பூதங்குடியில் எழுந்தருளினான். தாமரைச் செல்வியின் நாயகனான இப்பெருமானைப் பற்றித்திருமங்கை மன்னர் இப்பதிகம் அருளினார். அடியார்களால் புகழப்படும் கலியன் அருளிய இப்பத்துப் பாசுரங்களைப் பயில்பவரிடம் பாவம் சேராது. **1357**

## திருக்கூடலூர்

எம்பெருமான் எல்லாம் அறிந்தவன் ஆயினும் தன் பெருமையைத் தான் அறியான்; பாண்டவர்களுக்காகத் தூது போன இந்த இறைவன், கூடலூரில் எழுந்தருளி உள்ளான். இவ்வூர் மாதர்கள் காந்தள் மலர் போன்ற மெல்லிய விரல்கள் உடையவர்; அழகிய ஆடைகள் அணிந்த இவர் கூந்தல் மணம் எங்கும் வீசும். **1358**

கண்ணன் நப்பின்னையைப் பெறத்திண்மையான திமில்களை உடைய எருதுகளுடன் போரிட்டான். இப் பெருமான் எழுந்தருளிய கூடலூரில் வண்டுகள் பூக்களில் தேன் பருகிக் குறிஞ்சிப் பண்பாடும். **1359**

பிள்ளை உருவாய்த் தயிர் உண்டு, அடியேன்
உள்ளம் புகுந்த ஒருவர் ஊர்போல் -
கள்ள நாரை வயலுள் கயல்மீன்
கொள்ளை கொள்ளும் -கூடலூரே. 1360

கூற்று ஏர் உருவின் குறள் ஆய். நிலம் நீர்
ஏற்றான், எந்தை பெருமான் ஊர்போல் -
சேற்று ஏர் உழவர் கோதைப் போது ஊண்
கோல் தேன் முரலும் -கூடலூரே. 1361

தொண்டர் பரவ, சுடர் சென்று அணவ,
அண்டத்து அமரும் அடிகள் ஊர்போல் -
வண்டல் அலையுள் கெண்டை மிளிர,
கொண்டல் அதிரும் -கூடலூரே. 1362

தக்கன் வேள்வி தகர்த்த தலைவன்
துக்கம் துடைத்த துணைவர் ஊர்போல் -
எக்கல் இடு நுண் மணல்மேல் எங்கும்
கொக்கின் பழம் வீழ் -கூடலூரே. 1363

கருந் தண் கடலும், மலையும், உலகும்,
அருந்தும் அடிகள் அமரும் ஊர்போல் -
பெருந் தண் முல்லைப்பிள்ளை ஓடிக்
குருந்தம் தழுவும் - கூடலூரே. 1364

கலை வாழ் பிணையோடு அணையும் திருநீர்
மலை வாழ் எந்தை மருவும் ஊர்போல் -
இலை தாழ் தெங்கின் மேல்நின்று இளநீர்க்
குலை தாழ் கிடங்கின் - கூடலூரே. 1365

பெருகு காதல் அடியேன் உள்ளம்
உருகப் புகுந்த ஒருவர் ஊர் போல் -
அருகு கைதை மலர, கெண்டை
குருகு என்று அஞ்சும் -கூடலூரே. 1366





பாலனாகத் தயிருண்ட கண்ணபெருமான் அடியேன் உள்ளம் புகுந்தான். அந்த ஒப்பற்றவன் எழுந்தருளிய கூடலூரில் கள்ளம் கொண்ட நாரை, வயலில் கயல்மீனைக் கொத்தி எடுக்கும். 1360

கொண்டாடத் தக்க, குள்ள வடிவில், வாமனப்பெருமான், மாவலியிடமிருந்து பூமியைத் தானம் பெற்றான். என் குலதெய்வமான இவன், எழுந்தருளி உள்ள கூடலூரில், வயல்களில், ஏர்பூட்டி உழுபவர், தலைமயிரில் சூடிய பூக்களில், தேன் அருந்திய வண்டுகள் இசைபாடும். 1361

வான் அளவும் பரவிச் சூரிய மண்டலத்தைத் தொடும் திருமேனி உடைய பகவானை அடியார்கள் துதி செய்வர். கூடலூரில் இப்பெருமான் எழுந்தருளி உள்ளான். இவ்வூரில் வண்டல் பாய்ந்த அலை நீரில், கெண்டை மீன்கள் மிளிரும்; அதைக்கண்ட மேகங்கள் ஒலி முழங்கும். 1362

தக்கன் வேள்வியை அழித்த சிவனின் துயரத்தைத் திருமால் தீர்த்தான். ஆபத்தில் துணை நிற்கும் இப்பெருமான் எழுந்தருளிய கூடலூரில் வண்டல், பாய்ந்த மணல்மேடுகள் மேல், மாம்பழங்கள் விழுந்து காணப்படும். 1363

பிரளய காலத்தில், கருங்கடல், மலைகள், உலகங்கள் யாவற்றையும் உண்டு காப்பாற்றிய எம்பெருமான், கூடலூரில் எழுந்தருளி உள்ளான். இவ்வூரில், பெருத்து வளர்ந்த முல்லைக் கொடி, குருந்த மரத்தைத் தழுவி, அதன் மீது ஓடிப் பரவும். 1364

ஆண்மானும் பெண்மானும் கூடி வாழும் திருநீர்மலையில் எழுந்தருளிய என் சுவாமி, திருக்கூடலூரில் உள்ளான். இவ்வூரில், தென்னை மரத்தின் தழைத்த இலைகள், இளநீர்க் குலைகளுடன், வெற்றிலைக் கிடங்கை, மறைத்தவாறு, தாழ்ந்து கிடக்கும். 1365

பக்திப் பெருக்கு எடுக்கும் அடியேன் மனத்தில் புகுந்துள்ள, ஒப்பற்ற எம்பெருமான், திருக்கூடலூரில் எழுந்தருளி உள்ளான். இவ்வூரில் தாழம்பூ மலர்வதைப் பார்த்த கெண்டைமீன்கள், குருகுப் பறவை என்று எண்ணிப் பயப்படும். 1366

காவிப் பெருநீர் வண்ணன், கண்ணன்
மேவித் திகழும் கூடலூர்மேல்,
கோவைத் தமிழால் கலியன் சொன்ன
பாவைப்பாட, பாவம் போமே. 1367

## திருவெள்ளறை

வென்றி மாமழு ஏந்தி முன் மண்மிசை
மன்னரை மூவெழுகால்
கொன்ற தேவ! - நின் குரை கழல் தொழுவது ஓர்
வகை எனக்கு அருள்புரியே -
மன்றில் மாம் பொழில் நுழைதந்து மல்லிகை
மௌவலின் போது அலர்த்தி,
தென்றல் மா மணம் கமழ்தர வரு திரு -
வெள்ளறை நின்றானே! 1368

வசைஇல் நான்மறை கெடுத்த அம் மலர் அயற்கு
அருளி, முன் பரி முகமாய்
இசைகொள் வேத நூல் என்று இவை பயந்தவ-
னே! எனக்கு அருள்புரியே -
உயர்கொள் மாதவிப் போதொடு உலாவிய
மாருதம் வீதியின்வாய்
திசைஎல்லாம் கமழும் பொழில் சூழ் திரு -
வெள்ளறை நின்றானே! 1369

வெய்யன் ஆய், உலகு ஏழ் உடன் நலிந்தவன்
உடலகம் இரு பிளவாக்
கையில் நீள் உகிர்ப் படை அது வாய்த்தவ-
னே! எனக்கு அருள்புரியே -
மையின் ஆர்தரு வரால் இனம் பாய, வண்
தடத்திடைக் கமலங்கள்
தெய்வ நாறும் ஒண் பொய்கைகள் சூழ் திரு -
வெள்ளறை நின்றானே! 1370

வாம்பரி உக, மன்னர் தம் உயிர் செக,
ஐவர்கட்கு அரசு அளித்த,
காம்பின் ஆர் திரு வேங்கடப் பொருப்ப! நின்
காதலை அருள் எனக்கு
மாம்பொழில் தளிர் கோதிய மடக் குயில்
வாய் அது துவர்ப்பு எய்த,
தீம்பலங்கனித் தேன் அது நுகர் திரு -
வெள்ளறை நின்றானே! 1371





கருநெய்தல், கடல், ஆகியவற்றின், நிறம் கொண்ட கண்ணன், எழுந்தருளிய திருக்கூடலூர் பற்றிக் கலியன் இப்பதிகத்தை அருளினார். இவற்றைப் பாட வல்லவரின் பாவங்கள் தொலையும். **1367**

## திருவெள்ளறை

தென்றல் காற்று, ஊர் நடுவுள்ள, மாந்தோட்டத்தில் நுழைந்து, மல்லிகை, முல்லைப் பூக்களை மலரச் செய்து, மணம் பரப்பும் சிறப்புடைய, திருவெள்ளறைப் பெருமானே! நீ பரசுராமனாக வந்த பொழுது, மழு ஏந்தி பூவுலக அரசர்களை இருபத்தொரு தலைமுறைகள் கொன்றாயே! தேவா! உன் கழல் திருவடிகளை அடியேன் தொழும்படி அருள் செய்ய வேண்டும். **1368**

சோலைகள் சூழ்ந்த திருவெள்ளறையில் வீசும் காற்று, உயர்ந்த குருக்கத்தி மரப் பூக்களைத் தழுவி, தெருக்கள் தோறும் உலாவித் திசையெல்லாம் மணம் பரப்பும். இத்தலத்தில் எழுந்தருளிய பெருமானே! உன் கொப்பூழ்த் தாமரையில் தோன்றிய பிரமன் நான்கு வேதங்களை இழந்தபொழுது, அவற்றையும் சாத்திரங்களையும் மீட்டுக் கொடுத்தாயே! எனக்கும் அருள் புரியலாகாதா? **1369**

திருவெள்ளறையில் உள்ள குளங்களில் மை போன்ற நிறமுடைய வரால் மீன்கள் துள்ளிப்பாயும்; அங்குள்ள தாமரைப் பூக்கள் மலர்ந்து மணம் பரப்பும். இத்தலத்தில் எழுந்தருளியவனே! ஏழு உலகங்களையும் துன்புறுத்திய இரணியன் உடல், இருபிளவாகப் போகுமாறு உன் கை நகங்களால் கிழித்தாயே! நீ அடியேனுக்கு அருள் செய்ய வேண்டும். **1370**

மடக்குயில்கள், மாந்தோட்டத்தில் தளிர்களைத்தம் வாயால் கொத்தித்துவர்ப்பைச் சுவைக்கும்; அதை மாற்றப் பலாப்பழத் தேனைப் பருகும். இச்சிறப்புடைய திருவெள்ளறையில் உள்ள பெருமானே! பாரதப் போரில் குதிரைகளும் மன்னர்களும் அழியும்படி செய்து, பாண்டவர்க்கு அரசு அளித்தாயே! மூங்கில் நிறைந்த திருவேங்கட மலைப் பெருமானே! உன்னிடத்தே அடியேன் பரம பக்திபெற அருள் செய்ய வேண்டும். **1371**

மான வேல் ஒண் கண் மடவரல் மண் மகள்
அழுங்க, முந்நீர்ப் பரப்பில்
ஏனம் ஆகி, அன்று, இருநிலம் இடந்தவ-
னே! எனக்கு அருள்புரியே-
கான மா முல்லைக் கழைக் கரும்பு ஏறி, வெண்
முறுவல் செய்து அலர்கின்ற,
தேனின் வாய் மலர் முருகு உகுக்கும் திரு-
வெள்ளறை நின்றானே! 1372

பொங்கு நீள் முடி அமரர்கள் தொழுது எழ,
அமுதினைக் கொடுத்தளிப்பான்.
அங்கு ஓர் ஆமை அது ஆகிய ஆதி! நின்
அடிமையை அருள், எனக்கு -
தங்கு பேடையோடு ஊடிய மதுகரம்
தையலார் குழல் அணைவான்,
திங்கள் தோய் சென்னி மாடம் சென்று அணை திரு -
வெள்ளறை நின்றானே! 1373

ஆறினோடு ஒரு நான்கு உடை நெடு முடி
அரக்கன் தன் சிரம் எல்லாம்
வேறு வேறு உக வில் அது வளைத்தவ -
னே! எனக்கு அருள்புரியே
மாறு இல் சோதிய மரகதப் பாசடைத்
தாமரை மலர் வார்ந்த
தேறல் மாந்தி வண்டு இன் இசை முரல் திரு-
வெள்ளறை நின்றானே! 1374

முன் இவ் ஏழ் உலகு உணர்வு இன்றி இருள் மிக,
உம்பர்கள் தொழுது ஏத்த,
அன்னம் ஆகி, அன்று அரு மறை பயந்தவ -
னே! எனக்கு அருள்புரியே
மன்னு கேதகை சூதகம் என்று இவை
வனத்திடைச் சுரும்பு இனங்கள்
தென்ன என்ன, வண்டு இன் இசை முரல் திரு-
வெள்ளறை நின்றானே! 1375

ஆங்கு மாவலி வேள்வியில் இரந்து சென்று,
அகல் இடம் முழுதினையும்
பாங்கினால் கொண்ட பரம! நின் பணிந்து எழு -
வேன் எனக்கு அருள்புரியே -
ஓங்கு பிண்டியின் செம் மலர் ஏறி வண்டு
உழிதர, மா ஏறித்
தீம் குயில் மிழற்றும் படப்பைத் திரு-
வெள்ளறை நின்றானே! 1376





*வேல் போன்ற கண்களுடைய பூமிப்பிராட்டியைக் காக்க, அன்று, நீ, கடல் பரப்பில் வராஹமாக வந்து, அண்டபித்தியில் குத்தி எடுத்துக் காத்தாயே! காட்டில் முல்லைக்கொடி கரும்பின் நுனி வரை சென்று படர்ந்து புன்முறுவல் செய்து, வண்டுகள் வாயில் தேனைப் பெருக்கும். இத்தகைய திருவெள்ளறைத் தலத்தில் எழுந்தருளியவனே! எனக்கு அருள வேண்டும்.* **1372**

*திருவெள்ளறையில், சந்திரனைத் தொடும் அளவு உயர்ந்த மாடங்கள் உள்ளன. பூவில் வாழும் ஆண் வண்டு தன் பெடையுடன் வாடியதால், பெண்களின் கூந்தலில் மறைய எண்ணி, இம்மாடங்களைச் சேரும். இத்தகைய சிறப்புடைய தலத்தில் எழுந்தருளியவனே! முடிசூடிய இந்திராதி தேவர்கள், தொழுதபொழுது, அவர்க்கு அமுதம் கொடுத்துக் காக்க, ஆமை வடிவெடுத்த ஆதி காரணனே! உனக்கு அடிமை செய்யும் பேற்றினை அடியேனுக்கு அருளுக.* **1373**

*ஒப்பற்ற ஒளியுடன் மரகதப் பசுமை உடைய இலைகளைக்கொண்ட தாமரைத்தேனைப் பருகிய வண்டுகள், இசைபாடும் திருவெள்ள்றையில் உள்ள பெருமானே! பத்துத்தலை இராவணனின் சிரங்களை வெவ்வேறாக அறுந்து விழும்படி வில்லை வளைத்த இராமபிரானே! நீ எனக்கு அருள் செய்ய வேண்டும்.* **1374**

*இடைவிடாமல் பூக்கும் தாழைகளும் மாமரங்களும் உள்ள சோலைகளில் வண்டினங்கள் தென்னைத்தென' எனப்பாடும். திருவெள்ளறைப்பெருமானே! முற்காலத்தில் ஏழுலகங்களும் உணர்வின்றி இருளில் ஆழ்ந்து கிடந்தபொழுது பிரமன் முதலியோர் தொழுது ஏத்தவும், நீ, அன்னமாக வடிவெடுத்து அரிய வேதங்களைக் காப்பாற்றினாய். என்னிடத்தும் அத்தகைய அருள் செய்யலாகாதா?* **1375**

*திருவெள்ளறைத் தோட்டங்களில் ஓங்கி வளர்ந்த அசோகமரத்தின் சிவந்த பூக்களில் வண்டுகள் ஏறி உலாவும்; மாமரங்களில் குயில்கள் கூவும், இத்தலத்தில் எழுந்தருளியவனே! மாவலியின் வேள்விச் சாலை சென்று யாசித்து, பூமியை அளந்து கொண்ட பரமனே! உன்னைப் பணிய விழைகின்ற அடியேனுக்கு அருள்புரிய வேண்டும்.* **1376**

மஞ்சு உலாம் மணி மாடங்கள் சூழ் திரு-
வெள்ளறை அதன் மேய
அஞ்சனம் புரையும் திரு உருவனை,
ஆதியை, அமுதத்தை,
நஞ்சு உலாவிய வேல் வலவன் கலி -
கன்றி சொல் ஐஇரண்டும்
எஞ்சல் இன்றி நின்று ஏத்த வல்லார் இமை-
யோர்க்கு அரசு ஆவர்களே. 1377

## திருவரங்கம் – 1

உந்திமேல் நான்முகனைப் படைத்தான், உலகு உண்டவன்,
எந்தை பெம்மான், இமையோர்கள் தாதைக்கு இடம் என்பரால்-
சந்தினோடு மணியும் கொழிக்கும் புனல் காவிரி
அந்திபோலும் நிறத்து ஆர் வயல் சூழ் தென் அரங்கமே. 1378

வையம் உண்டு ஆல்இலை மேவும் மாயன், மணி நீள் முடி
பை கொள் நாகத்து அணையான் பயிலும் இடம் என்பரால்-
தையல் நல்லார் குழல் மாலையும், மற்று அவர் தட முலைச்
செய்ய சாந்தும் கலந்து இழி புனல் சூழ் தென் அரங்கமே. 1379

பண்டு இவ் வையம் அளப்பான், சென்று மாவலி கையில் நீர்
கொண்ட ஆழித் தடக் கைக் குறளன் இடம் என்பரால் -
வண்டு பாடும் மது வார் புனல் வந்து இழி காவிரி,
அண்டம் நாறும் பொழில், சூழ்ந்து அழகு ஆர் தென் அரங்கமே. 1380

விளைத்த வெம் போர் விறல் வாள் அரக்கன் நகர் பாழ்பட
வளைத்த வல் வில் தடக்கை அவனுக்கு இடம் என்பரால் -
துளைக் கை யானை மருப்பும், அகிலும் கொணர்ந்து உந்தி முன்
திளைக்கும் செல்வப் புனல் காவிரி சூழ் தென் அரங்கமே. 1381

வம்பு உலாம் கூந்தல் மண்டோதரி காதலன் வான் புக
அம்பு தன்னால் முனிந்த அழகன் இடம் என்பரால் -
உம்பர் கோனும் உலகு ஏழும் வந்து, ஈண்டி வணங்கும் நல்
செம் பொன் ஆரும் மதிள் சூழ்ந்து அழகு ஆர் தென் அரங்கமே. 1382





*மேகங்கள் உலாவும் மாடங்கள் உள்ள திருவெள்ளறையில் எழுந்தருளிய மைந்நிற அழகன் உலகிற்கு ஆதி காரணன் ஆவான். அமுதம் போன்ற அப்பெருமானைப் பற்றி, நஞ்சு தோய்ந்த வேல் ஏந்திய, கலிகன்றி அருளிய இப்பாசுரங்களைக் குறைவின்றிப் பயில்பவர் நித்திய சூரிகள் அரசர் ஆவர்.* **1377**

## திருவரங்கம் –1

*தன் கொப்பூழில் நான்முகனைப் படைத்த திருமால் பிரளயத்தில் உலகுகளை உண்டு காத்த நித்திய சூரிகள் தலைவன் ஆவான். இப்பெருமான் திருவரங்கத்தில் கோயில் கொண்டுள்ளான். சந்தனத்தையும் மணிகளையும் இழுத்து ஓடும் காவிரியும் மங்கிய மாலை நிறம் ஒத்த வயல்களும் இத்தலத்தைச் சூழ்ந்துள்ளன.* **1378**

*பூமியை உண்டு ஆலந்தளிரில் கண் வளர்ந்த மாயன், மணிகள் இழைத்த நீண்ட முடி சூடியவன்; இவன் திருவரங்கத்தில், படங்களுடைய ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டவனாய்க் காட்சி தருகிறான். இத்தலத்தைச் சுற்றி ஓடும் காவிரியில், பெண்களின் தலைமாலைகளும் மார்புச் சந்தனமும் கலந்து வரும்.* **1379**

*தேன் கலந்த தண்ணீர்ப்பரப்பின் மேல் வண்டுகள் பாடவும் காவிரி நதி திருவரங்கத்தைச் சுற்றி ஓடும். வானம்வரை மணம் வீசும் சோலைகளும் இத்தலத்தைச் சூழ்ந்துள்ளன. பண்டு, பூமியை அளக்க, மாவலி கை நீர் ஏற்ற, சக்கரக்கையன் ஆன வாமனன், இத்தலத்தில் எழுந்தருளி உள்ளான்.* **1380**

*தன் அகன்ற கைகளால் வில்லை வளைத்து, வாள்போர் செய்த இராவணனையும் இலங்கையையும் அழித்த இராமன் திருவரங்கத்தில் எழுந்தருளி உள்ளான். இவ்வூரைச் சுற்றி ஓடும் காவிரியில், துளை உடைய துதிக்கை பெற்ற யானைத் தந்தங்களும் அகில் கட்டைகளும் நீருடன் வரும். இத்தகைய செல்வம் உள்ள தலம் இது.* **1381**

*மணம் வீசும் கூந்தல் பெற்ற மண்டோதரி கணவன் இராவணன் வீரசுவர்க்கம் அடையுமாறு இராமபிரான் அம்பெய்தான். இப்பெருமான் எழுந்தருளிய திருவரங்கத்தில் தேவர்கள் தலைவன் பிரமனும் ஏழுலகத்தவரும் திரண்டு நின்று வணங்குவர். இத்தலம், பசும்பொன்னை ஒத்த மதில் சூழப்பட்டது.* **1382**

கலை உடுத்த அகல் அல்குல் வன் பேய் மகள், தாய் என
முலை கொடுத்தாள், உயிர் உண்டவன் வாழ் இடம் என்பரால்-
குலை எடுத்த கதலிப் பொழிலூடும் வந்து உந்தி, முன்
அலை எடுக்கும் புனல் காவிரி சூழ் தென் அரங்கமே. 1383

கஞ்சன் நெஞ்சும், கடு மல்லரும், சகடமும், காலினால்
துஞ்ச வென்ற சுடர் ஆழியான் வாழ் இடம் என்பரால் -
மஞ்சு சேர் மாளிகை நீடு அகில் புகையும், மறையோர்
செஞ்சொல் வேள்விப் புகையும் கமழும் தென் அரங்கமே. 1384

ஏனம், மீன், ஆமையோடு அரியும், சிறு குறளும் ஆய்,
தானும் ஆய தரணித் தலைவன் இடம் என்பரால் -
வானும் மண்ணும் நிறையப் புகுந்து ஈண்டி வணங்குதல் நல்
தேனும் பாலும் கலந்தன்னவர் சேர், தென் அரங்கமே. 1385

சேயன், என்றும், மிகப் பெரியன், நுண் நேர்மையன் ஆய இம்
மாயை ஆரும் அறியா வகையான் இடம் என்பரால் -
வேயின் முத்தும், மணியும் கொணர்ந்து ஆர் புனல் காவிரி
ஆய பொன் மா மதிள் சூழ்ந்து அழகு ஆர் தென் அரங்கமே. 1386

அல்லி மாதர் அமரும் திரு மார்வன் அரங்கத்தைக்
கல்லின் மன்னு மதிள் மங்கையர் கோன், கலிகன்றி சொல்
நல் இசை மாலைகள் நால் இரண்டும் இரண்டும் உடன்
வல்லவர் தாம் உலகு ஆண்டு, பின், வான் உலகு ஆள்வரே. 1387

## திருவரங்கம் – 2

### மகளின் ஆற்றாமைக்குத் தாய் வருந்துதல்

வெருவாதாள் வாய்வெருவி, வேங்கடமே!
வேங்கடமே! என்கின்றாளால்;
மருவாளால் என் குடங்கால்; வாள் நெடுங் கண்
துயில் மறந்தாள் வண்டு ஆர் கொண்டல்
உருவாளன், வானவர் தம் உயிராளன்,
ஒலி திரை நீர்ப் பௌவம் கொண்ட
திருவாளன் என் மகளைச் செய்தனகள்
எங்ஙனம் நான் சிந்திக்கேனே? 1388





அகன்ற இடைஉடைய பூதனைப்பேய், யசோதைத்தாய் போல, ஆடை உடுத்தியவளாய் வந்து பால் கொடுக்க விழைந்ததும், கண்ணன் பால் குடிப்பது போல அவள் உயிரைப் பருகினான். இந்த ஸ்ரீகிருஷ்ணன் எழுந்தருளிய திருவரங்கத்தில் குலைகள் மிகுந்த வாழைத் தோட்டங்கள் உள்ளன. அலை அடித்தோடும் காவிரி, இச்சோலைகளில் புகுந்து, ஊரைச்சுற்றி ஓடும். 1383

கஞ்சனின் நெஞ்சமும் மல்லர்களும் சகடாசுரனும் அழியும் படி, கண்ணன் தன் காலால் உதைத்தான். ஒளிச்சக்கரம் ஏந்திய இப் பெருமான் திருவரங்கத்தில் உள்ளான். இவ்வூரில், வேதம் பயிலும் அந்தணர் வீட்டு வேள்விப்புகையும், மேகம்தொடும் மாளிகைகளில் எழும் அகில்புகையும் ஒன்று சேர்ந்து மணம் வீசும். 1384

வராஹம், மீன், நரசிம்மம், வாமனன் ஆகிய வடிவங்களில் வந்தவனே முழு அவதாரமான இராமன் ஆகி உலகாண்டான். இந்த இராமபிரான் எழுந்தருளிய திருவரங்கத்தில், நித்திய சூரிகளும், உலகினரும், ஒன்றுபட்டுப் பெருமானை வழிபடுதல், தேனும் பாலும் கலந்த சுவை போலத் திகழும். 1385

இறைவனின் மாயத்தன்மை எவராலும் எக்காலத்திலும் அறிய இயலாதது; அணுகமுடியாத தொலைவில் உள்ள அவன் எல்லா வற்றையும் ஆள்பவன். ஆயினும், நுட்பம் மிகுந்த மிகச் சிறியவற் றிலும் நுண்ணியதாய் உள்ளவன். இப்பெருமானின் திருவரங்கத்தில், காவிரி, மூங்கில் முத்துக்களையும் மணிகளையும் தள்ளிக் கொண்டு ஓடும். இத்தலம் பொன் மதில் சூழப்பெற்றது. 1386

தாமரைச்செல்வி திருமகள் தங்கும் மார்புடைய பெரிய பெருமாள் எழுந்தருளிய திருவரங்கத்தைக் கலியன் இப் பாசுரங்களில் பாடினார். கல், மதிள் சூழ்ந்த திருமங்கை நாட்டுமன்னர் பாடிய இவற்றைப் பயில்பவர், பூவுலகாண்டு, முடிவில் பரமபதத்தையும் ஆளப்பெறுவர். 1387

## திருவரங்கம் – 2

### மகளின் ஆற்றாமைக்குத் தாய் வருந்துதல்

அச்சம் அறியாத என் மகள், வாய்விட்டு, 'திருவேங்கடமே!' என்று பல தடவை புலம்புகிறாள். என் மடியில் பொருந்தாத இவள் பாடு என்னே.' வாளினும் கூர்மையான அவள் கண்கள் உறக்கத்தை மறந்தன. வண்டையும் மேகத்தையும் ஒத்த திருமேனியன்; நித்திய சூரிகள் தலைவன்; கடலில் தோன்றிய திருமகள் நாதன் என் பெண்ணிடத்தே செய்தவற்றை நான் எப்படி எண்ணுவேன்? 1388

கலைஆளா அகல்அல்குல்; கனவளையும்
கை ஆளா - என் செய்கேன் நான்?
விலைஆளா அடியேனை வேண்டுதியோ?
வேண்டாயோ? என்னும் மெய்ய
மலையாளன், வானவர் தம் தலையாளன்,
மராமரம் ஏழ் எய்த வென்றிச்
சிலையாளன் என் மகளைச் செய்தனகள்
எங்ஙனம் நான் சிந்திக்கேனே? 1389

மான்ஆய மென் நோக்கி வாள் நெடுங் கண்
நீர் மல்கும்; வளையும் சோரும்;
தேன்ஆய நறுந் துழாய் அலங்கலின்
திறம் பேசி உறங்காள் காண்மின்
கான் ஆயன் கடி மனையில் தயிர் உண்டு;
நெய் பருக நந்தன் பெற்ற
ஆன் ஆயன் என் மகளைச் செய்தனகள்,
அம்மனைமீர்! அறிகிலேனே. 1390

தாய்வாயில் சொல் கேளாள்; தன் ஆயத்
தோடு அணையாள்; தட மென் கொங்கை -
யே,ஆரச் சாந்து அணியாள்; எம் பெருமான்
திருவரங்கம் எங்கே? என்னும்
பேய்மாய முலை உண்டு, இவ் உலகு உண்ட
பெரு வயிற்றன், பேசில், நங்காய்!
மாமாயன் என் மகளைச் செய்தனகள்,
மங்கைமீர்! மதிக்கிலேனே. 1391

பூண்முலைமேல் சாந்து அணியாள்; பொரு கயல் கண்
மை எழுதாள்; பூவை பேணாள்;
ஏண்அறியாள் எத்தனையும்; எம் பெருமான்
திருவரங்கம் எங்கே? என்னும்
நாள்மலராள் நாயகன் ஆய், நாம் அறிய
ஆய்ப்பாடி வளர்ந்த நம்பி
ஆண்மகன் ஆய் என் மகளைச் செய்தனகள்,
அம்மனைமீர்! அறிகிலேனே. 1392

தாது ஆடு வனமாலை தாரானோ?
என்று என்றே தளர்ந்தாள் காண்மின்;
யாதானும் ஒன்று உரைக்கில், எம் பெருமான்
திருவரங்கம் என்னும் பூமேல்
மாது, ஆளன், குடம்ஆடி மதுசூதன்,
மன்னர்க்கு ஆய் முன்னம் சென்ற
தூதாளன் என் மகளைச் செய்தனகள்
எங்ஙனம் நான் சொல்லுகேனே? 1393





திருமெய்யம் என்னும் திருமலையில் உள்ள நித்திய சூரிகள் தலைவனிடத்தே என் மகள் மனம் இழந்தாள். "என் இடையில் மேகலை தங்காமல் நழுவுகிறது, கை வளையல்கள் கழல்கின்றன. உனக்கே உரிமையான என்னை ஏற்பாயா? மாட்டாயா?" என்று அவள் புலம்புகிறாள். மராமரங்கள் ஏழினையும் துளைத்த அப்பெருமான் என் மகளைச் செய்த பாடுகள் என்னே! 1389

மானைப் போன்ற பார்வை உடைய என் மகளின் நீண்ட கண்களிலிருந்து நீர் பெருகுகிறது; கை வளையல்கள் கழன்றன, சோர்ந்த அப்பெண் துழாய் மாலை பற்றிப் பேசுகிறாள்; கண் உறங்கவுமில்லை, தாய்மார்களே! நந்தன் மகன் கண்ணன், இடையர் மனைகளில் தயிர், நெய் உண்டு, காட்டில் திரிபவன்; என் மகளின் மனம் கவர்ந்து செய்தனவற்றை நான் அறியேன். 1390

மங்கைகளே! என் மகள், தாயான என் சொல்லைக் கேட்கவில்லை; தன் தோழிகளுடன் சேரவில்லை; மார்பில் சந்தனம் பூசிக்கொள்ளவில்லை, 'எம்பெருமான் திருவரங்கம் எங்கே" என்று கேட்டவண்ணம் புலம்புகிறாள்' பூதனைப்பேய் மாள, முலைப்பால் அருந்தியவனும் உலகம் உண்ட வயிறுடையவனும் ஆகிய அந்தமாயன் என் மகளைச் செய்த பாடுகள் சொல்லும் தரமன்று. 1391

தாய்மார்களே! என்மகள் தன் மார்பில் சந்தனம் பூசிக் கொள்ளவில்லை. கயல் மீன் ஒத்த கண்களில் மை எழுதிக் கொள்ளவில்லை. தன் கிளியைக் கவனியாமல் எதனையும் எண்ணாமல், 'எம்பெருமான் திருவரங்கம் எங்கே?" என்று கேட்டுப் புலம்புகிறாள். தாமரையில் வாழும் திருமகள் நாதனான, நம்பி, நாமெல்லோரும் அறிய, ஆய்ப்பாடியில் வளர்ந்தவன் தானே! அந்த ஆண்பிள்ளை என் மகளை என்ன பாடு படுத்துகிறான்? 1392

"இதழ்களுடைய வனமாலையை எனக்குத் தருவானோ!' என்று கூறித் தளரும் என் மகள், எது பேசினாலும், 'எம்பெருமான் திருவரங்கம்' என்றே புலம்புகிறாள். தாமரைச் செல்வி திருமகளின் நாதன், குடக்கூத்து ஆடிய மதுசூதன், பாண்டவர்க்குத் தூது சென்ற கண்ணன், என் மகளைப்படுத்தும் பாட்டினை எங்ஙனம் நான் கூறுவேன்? 1393

வார் ஆளும் இளங் கொங்கை வண்ணம் வேறு
ஆயினவாறு எண்ணாள்; எண்ணில்
பேராளன் பேர் அல்லால், பேசாள்; இப்
பெண் பெற்றேன் என் செய்கேன் நான்?
தார் ஆளன், தண் குடந்தை நகர் ஆளன்.
ஐவர்க்கு ஆய் அமரில் உய்த்த
தேர் ஆளன் என் மகளைச் செய்தனகள்
எங்ஙனம் நான் செப்புகேனே? 1394

உறவு ஆதும் இலள் என்று என்று ஒழியாது
பலர் ஏசும் அலர் ஆயிற்றால்;
மறவாதே எப்பொழுதும், மாயவனே!
மாதவனே! என்கின்றாளால்
பிறவாத பேராளன், பெண் ஆளன்,
மண் ஆளன், விண்ணோர் தங்கள்
அறவாளன் என் மகளைச் செய்தனகள்
அம்மனைமீர்! அறிகிலேனே. 1395

பந்தோடு கழல் மருவாள்; பைங்கிளியும்
பால் ஊட்டாள்; பாவை பேணாள்;
வந்தானோ, திருவரங்கன் வாரானோ?
என்று என்றே வளையும் சோரும்
சந்தோகன், பௌழியன், ஐந் தழல் ஓம்பு
தைத்திரியன், சாமவேதி
அந்தோ! வந்து, என் மகளைச் செய்தனகள்.
அம்மனைமீர்! அறிகிலேனே. 1396

சேல் உகளும் வயல் புடை சூழ் திருவரங்கத்து
அம்மானைச் சிந்தைசெய்த
நீல மலர்க் கண் மடவாள் நிறை அழிவைத்
தாய் மொழிந்த அதனை நேரார்
கால வேல் பரகாலன், கலிகன்றி
ஒலி மாலை கற்று வல்லார்
மாலை சேர் வெண் குடைக்கீழ் மன்னவர் ஆய்,
பொன் உலகில் வாழ்வர் தாமே. 1397

திருவரங்கம் – 3

கைம் மான மழ களிற்றை, கடல் கிடந்த கருமணியை,
மைம் மான மரகதத்தை, மறை உரைத்த திருமாலை,
எம்மானை, எனக்கு என்றும் இனியானை, பனி காத்த
அம்மானை யான் கண்டது - அணி நீர்த் தென் அரங்கத்தே. 1398





கச்சாலே கட்டப்பட்ட தன் முலைகள் பசலை பூத்ததை, என் மகள் பொருட்படுத்தாள்; தன்னையே வெறுக்கிறாள்; ஆயினும் பெரியவன் ஆன திருமால் பெயர் அன்றி வேறு பேசாள். இந்தப்பெண்ணைப் பெற்றேனே! என் செய்வேன்? மாலை அணிந்த திருக்குடந்தைப் பிரானும் பாண்டவர்க்குப் போரில் தேர் ஓட்டியவனுமான சுவாமி என் மகளைப் படுத்துவதை எப்படிக் கூறுவேன்? 1394

'ஆறுதல் கூறும் சுற்றத்தார் இல்லையோ?' என்று ஊரார் பழிக்கும்படி ஆயிற்று. 'மாயவனே! மாதவனே!' என்று என் மகள் அவனை மறவாமல் எப்பொழுதும் பிதற்றுகிறாள். தாய்மார்களே!' பிறவி அறுக்கும் பெயர் உடையவன்; பெண்களை ஆள்பவன்; உலகைக் காப்பவன்; நித்திய சூரிகள் தலைவன்; ஆகிய அப்பெருமான் என் மகளைப் படுத்துவதை எப்படிப் பேசுவேன்? 1395

என்மகள் பந்தையும் கழல் காயையும் விரும்பவில்லை; கிளிக்குப் பால் ஊட்டவில்லை; பொம்மையையும் ஒதுக்கி விட்டாள். "ஆ! திருவரங்கன் வந்தான்!' என்கிறாள். உடனே "ஐயோ! அவன் வரவில்லையே!' என்று கூறிக் கைவளை கழலச் சோர்கிறாள். தாய்மாரே! சாந்தோக்கியம், தைத்தரியம், சாமம் ஆகியவற்றை அறிந்தவனாய் ஐவகை வேள்வி செய்பவனும் ஆகிய எம்பெருமான் என் மகளைப் படுத்துவதைச் சொல்லித் தீரமுடியாது. 1396

கருநெய்தல் பூப்போன்ற கண்களுடைய பெண், மீன்கள் துள்ளும் வயல்கள் சூழ்ந்த திருவரங்க நாதனால் நிறை அழிந்ததைத் தாய் பேசியதாக இப்பதிகத்தில் கலிகன்றி அருளினார். பகைவர்க்கு யமனான பரகாலரின் இப்பாசுரங்களைப் பயில்பவர் கொற்றக்குடைக்கீழ் மன்னராகும் பேறுடன் பரமபதத்தையும் பெறுவார்கள். 1397

திருவரங்கம் – 3

என் இறைவனான திருமால் வேதங்களால் விரித்துரைக்கப் படுபவன். நீண்ட துதிக்கை உடைய இளைய யானை போன்றவன். கடலில் கண் வளர்ந்த நீலமணி ஒத்தவன்; ஒப்பற்ற மரகத வண்ணன்; எனக்கு என்றும் இனியவன்; மலை எடுத்துக் கல்மழையைத் தடுத்தவன்; இப்பெருமானை நான் நீர் சூழ்ந்த திருவரங்கத்தில் கண்டேன். 1398

பேரானை, குறுங்குடி எம் பெருமானை, திருத்தண்கால்
ஊரானை, கரம்பனூர் உத்தமனை, முத்து இலங்கு
கார் ஆர் திண் கடல் ஏழும், மலை ஏழ் இவ் உலகு ஏழ் உண்டு
ஆராது என்று இருந்தானைக் கண்டது -தென் அரங்கத்தே. 1399

ஏன் ஆகி உலகு இடந்து, அன்று, இரு நிலனும் பெரு விசும்பும்
தான் ஆய பெருமானை; தன் அடியார் மனத்து என்றும்
தேன் ஆகி, அமுது ஆகித் திகழ்ந்தானை; மகிழ்ந்து ஒரு கால்
ஆன் ஆயன் ஆனானைக் கண்டது - தென் அரங்கத்தே. 1400

வளர்ந்தவனைத் தடங் கடலுள், வலி உருவில் திரி சகடம்
தளர்ந்து உதிர உதைத்தவனை, தரியாது அன்று இரணியனைப்
பிளந்தவனை, பெரு நிலம் ஈர் அடி நீட்டிப் பண்டு ஒருநாள்
அளந்தவனை யான் கண்டது-அணி நீர்த் தென் அரங்கத்தே. 1401

நீர் அழல் ஆய், நெடு நிலன் ஆய் நின்றானை; அன்று அரக்கன்
ஊர் அழலால் உண்டானை, கண்டார் பின் காணாமே;
பேர் அழல் ஆய், பெரு விசும்பு ஆய், பின் மறையோர் மந்திரத்தின்
ஆர் அழலால் உண்டானைக் கண்டது - தென் அரங்கத்தே. 1402

தம் சினத்தைத் தவிர்த்து அடைந்தார் தவ நெறியை; தரியாது
கஞ்சனைக் கொன்று, அன்று உலகம் உண்டு உமிழ்ந்த கற்பகத்தை;
வெம் சினத்த கொடுந் தொழிலோன் விசை உருவை அசைவித்த
அம் சிறைப் புள் பாகனை யான் கண்டது-தென் அரங்கத்தே. 1403

சிந்தனையை, தவநெறியை திருமாலை, பிரியாது
வந்து எனது மனத்து இருந்த வடமலையை, வரி வண்டு ஆர்
கொந்து அணைந்த பொழில் கோவல் உலகு அளப்பான் அடி நிமிர்த்த
அந்தணனை யான் கண்டது-அணி நீர்த் தென் அரங்கத்தே. 1404

துவரித்த உடையவர்க்கும், தூய்மை இல்லாச் சமணர்க்கும்,
அவர்கட்கும் அங்கு அருள் இல்லா அருளானை; தன் அடைந்த
எமர்கட்கும், அடியேற்கும், எம்மாற்கும், எம் அனைக்கும்,
அமரர்க்கும் பிரானாரைக் கண்டது - தென் அரங்கத்தே. 1405





ஒளி மிகுந்த முத்துக்கள் உள்ள ஏழுகடல்களையும் ஏழுமலைகளையும் ஏழுலகங்களையும் உண்டு, வயிற்றில் வைத்துக் காத்த திருமால், திருப்பேர், திருக்குறுங்குடி, திருத்தண்கால், கரம்பனூர் ஆகிய தலங்களில் எழுந்தருளி உள்ளான். எல்லாம் வல்ல இவ்வுத்தமனை நான் திருவரங்கத்தில் கண்டேன். 1399

வராஹமாய் உலகை எடுத்துக் காத்தவன்; அகன்ற பூமியையும் வானையும் தன் பகுதிகளாகக் கொண்டவன்; அடியார்கள் மனத்தில் என்றும் தேனாகவும் அமுதமாகவும் இனிப்பவன்; பண்டு ஒருகால், மகிழ்ச்சியுடன் பசு மேய்த்த இடையன் ஆன கண்ணனை நான் திருவரங்கத்தில் கண்டேன். 1400

பரந்த பாற்கடலில் கண் வளர்ந்த திருமால், சகடாசுரனை உதைத்தான்; பிரகலாதன் பட்ட துன்பத்தைப் பொறுக்க இயலாமல் இரணியனைப் பிளந்து வதைத்தான். பூமியைத் தன் இரண்டு அடிகளால் நீட்டி அளந்த திரிவக்கிரமனைத் திருவரங்கத்தில் கண்டேன். 1401

நீர், நெருப்பு, பூமி ஆகியவற்றின் உள்ளே உயிராய் இருப்பவன்; இராவணனின் இலங்கையைத் தீக்கு இரையாக்கி அழித்தவன்; வடவைக்கனலாய் இருக்கும் அவனே பரமபதநாதன்; அந்தணர்கள் வேள்வியில் மந்திரம் கூடிய அவி உணவைப் பெறுபவன். இப்பெருமானை நான் திருவரங்கத்தில் கண்டேன். 1402

சினம் தவிர்ந்த தவம் உடையவர்க்குத் தானே நெறியாக இருப்பவன்; கம்சனின் கொடுமையைப் பொறுக்க முடியாமல், அவனைக்கொன்றவன்; உலகங்களை உண்டு, உமிழ்ந்து காத்த வள்ளல்; பாணாசுரப்போரில் சிவனைத் தோற்கடித்தவன்; கருடவாகனான இப்பெருமானைத் திருவரங்கத்தில் கண்டேன். 1403

கைங்கரியத்துக்கான என் விருப்பத்தின் பொருள் ஆனவன்; அதற்கான வழியையும் காட்டுபவன்; திருவேங்கடத்துத் திருமால் என் நெஞ்சை விட்டுப் பிரியாதவன்; வண்டு அமரும் பூஞ்சோலைகள் உள்ள திருக்கோவலூரில் உலகளந்த திருவடிகளுடன் காட்சி தருகிறான். இந்த சுவாமியை நீர்சூழ்ந்த திருவரங்கத்தில் கண்டேன். 1404

காவி ஆடை அணிந்த பௌத்தர்க்கும் தூய்மை அற்ற சமணர்க்கும், வேதப்புறம்பானவர்க்கும் அருள் செய்யாதவன்; ஆயினும் அருளே இயல்பானவன்; தன்னை அடைந்த எனக்கும், என் தொடர்புடையவர்க்கும், தந்தைதாயார்க்கும், நித்திய சூரிகளுக்கும் அருளும் பெருமானை நான் திருவரங்கத்தில் கண்டேன். 1405

பொய் வண்ணம் மனத்து அகற்றி, புலன் ஐந்தும் செல வைத்து,
மெய் வண்ணம் நினைந்தவர்க்கு மெய்ந் நின்ற வித்தகனை;
மை வண்ணம், கரு முகில்போல் திகழ் வண்ணம், மரகதத்தின்
அவ் வண்ண வண்ணனை யான் கண்டது-தென் அரங்கத்தே. 1406

ஆ மருவி நிரை மேய்த்த அணி அரங்கத்து அம்மானைக்
காமரு சீர்க் கலிகன்றி ஒலிசெய்த மலி புகழ் சேர்
நா மருவு தமிழ் மாலை நால் இரண்டோடு இரண்டினையும்
தாம் மருவி வல்லார்மேல் சாரா தீவினை தாமே. 1407

## திருவரங்கம் – 4

பண்டை நான்மறையும், வேள்வியும், கேள்விப்
பதங்களும், பதங்களின் பொருளும்,
பிண்டம் ஆய் விரிந்த பிறங்கு ஒளி அனலும்,
பெருகிய புனலொடு நிலனும்,
கொண்டல் மாருதமும், குரை கடல் ஏழும்,
ஏழு மா மலைகளும், விசும்பும்
அண்டமும் தான் ஆய் நின்ற எம் பெருமான்-
அரங்க மா நகர் அமர்ந்தானே. 1408

இந்திரன், பிரமன், ஈசன் என்று இவர்கள்
எண் இல் பல் குணங்களே இயற்ற,
தந்தையும், தாயும், மக்களும், மிக்க
சுற்றமும் சுற்றி நின்று அகலாப்
பந்தமும், பந்தம் அறுப்பது ஓர் மருந்தும்,
பான்மையும் பல் உயிர்க்கு எல்லாம்
அந்தமும், வாழ்வும் ஆய எம் பெருமான்-
அரங்க மா நகர் அமர்ந்தானே. 1409

மன்னு, மா நிலனும், மலைகளும், கடலும்,
வானமும், தானவர் உலகும்
துன்னு மா இருள் ஆய், துலங்கு ஒளி சுருங்கி,
தொல்லை நான்மறைகளும் மறைய,
பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கி,
பிறங்கு இருள் நிறம் கெட, ஒருநாள்,
அன்னம் ஆய், அன்று, அங்கு அரு மறை பயந்தான்-
அரங்க மா நகர் அமர்ந்தானே. 1410





நிலையில்லா உலகப்பொருள்களிலிருந்து மனத்தை அகற்றி, ஐம்புலன்களின் செயல்களிலிருந்து விடுபட்டு, மெய்ப்பொருளை உணர்ந்தவர்க்குத் தன்னை உள்ளபடியே காட்டுபவன்; மை, கருமேகம் ஆகியவற்றின் நிறம் கொண்டவனாய், மரகத வண்ணனானவனை, நான் திருவரங்கத்தில் கண்டேன். **1406**

பசுக்களை மேய்த்துக் காத்த கண்ணன், திருவரங்கத்தில் எழுந்தருளினான். வைணவத்திரு உடைய கலிகன்றி அப் பெருமானை இப்பதிகத்தில் பாடினார். இத்தமிழ்மாலையை நாவால் பாடிப் பயிலுபவர்க்குப் பாவங்கள் தாமே அகலும். **1407**

## திருவரங்கம் – 4

தொன்மையான வேதங்கள், யாகங்கள், கேள்விக் கல்வி யான இலக்கணம், ஒலிகளின் பொருளான உயிரினங்கள் ஆகியன யாவும் இறைவன் பகுதிகளாய், அவனால் ஏற்பட்டவை. மேலும் காரண நிலையிலிருந்து விரிந்த, ஒளிநெருப்பு, ஓடும் நீர், பூமி, மேகம், காற்று, ஏழுகடல்கள், மலைகள், வானம் ஆகியவற்றிலும் அவனே உள் உறைகிறான். இந்த எம்பெருமானே திருவரங்கத்தில் பள்ளி கொண்டவன். **1408**

இந்திரன் பிரமன் சிவன் எனப்படுவோர், இறைவனின் எண்ணற்ற குணங்களைக் கூறித்துதிப்பார்கள். இவனே, பல வகை உயிரினங்களுக்குத் தந்தையாய்த் தாயாய்ப் பிள்ளைகளாய்ச் சுற்றத்தாராய் உள்ளவன். இவ்வுலக வாழ்க்கைப் பிணைப்பைப் போக்க வல்லமருந்தும் அவனே. முடிவாகவும் முடிவில் அடையத் தகுந்தவனாகவும் இடையே இன்பவாழ்வாகவும் உள்ள அவன் திருவரங்கத்தில் எழுந்தருளினான். **1409**

ஒரு காலத்தில் நிலையான பூமி, மலைகள். கடல்கள், வானம், அசுரர் உலகம், ஆகிய இடங்கள் எல்லாம் இருள் சூழ்ந்து, ஒளி மங்கித் தொன்மையான நான்கு வேதங்களும் மறைந்தன. அப்பொழுது, திருமால் அன்ன வடிவம் எடுத்து, தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் நன்மை புரிய, அவ்விருளைப் போக்கி, வேதங்களைத் திரும்பப்பெற்றுத் தந்தான். இப்பெருமான் திருவரங்கத்தில் நாம் கண்களால் கண்டு வணங்கும்படி பள்ளி கொண்டுள்ளான். **1410**

மா இருங் குன்றம் ஒன்று, மத்து ஆக,
மாசுணம் அதனொடும் அளவி,
பா இரும் பௌவம் பகடு விண்டு அலற,
படு திரை விசும்பிடைப் படர,
சேய் இரு விசும்பும், திங்களும், சுடரும்,
தேவரும் தாம் உடன் திசைப்ப,
ஆயிரம் தோளால் அலை கடல் கடைந்தான் -
அரங்க மா நகர் அமர்ந்தானே. 1411

எங்ஙனே உய்வர், தானவர் நினைந்தால்?
இரணியன் இலங்கு பூண் அகலம்
பொங்கு வெம் குருதி பொன்மலை பிளந்து
பொழிதரும் அருவி ஒத்து இழிய,
வெம் கண் வாள் எயிற்று ஓர் வெள்ளி மா விலங்கல்
விண் உறக் கனல் விழித்து எழுந்தது
அங்ஙனே ஒக்க அரி உரு ஆனான் -
அரங்க மா நகர் அமர்ந்தானே. 1412

ஆயிரம் குன்றம் சென்று தொக்கனைய
அடல் புரை எழில் திகழ் திரள் தோள்
ஆயிரம் துணிய, அடல் மழுப் பற்றி,
மற்று அவன் அகல் விசும்பு அணைய,
ஆயிரம் பெயரால் அமரர் சென்று இறைஞ்ச,
அறிதுயில் அலை கடல் நடுவே
ஆயிரம் சுடர் வாய் அரவு அணைத் துயின்றான் -
அரங்க மா நகர் அமர்ந்தானே. 1413

கரி குழல் கனி வாய்த் திருவினைப் பிரித்த
கொடுமையின் கடு விசை அரக்கன்
எரிவிழித்து இலங்கு மணி முடி பொடிசெய்து
இலங்கை பாழ்படுப்பதற்கு எண்ணி,
வரி சிலை வளைய, அடு சரம் துரந்து,
மறி கடல் நெறிபட, மலையால்,
அரிகுலம் பணிகொண்டு அலை கடல் அடைத்தான் -
அரங்க மா நகர் அமர்ந்தானே. 1414

ஊழி ஆய், ஓமத்து உச்சி ஆய், ஒருகால்
உடைய தேர் ஒருவன் ஆய், உலகில்
சூழி மால் யானைத் துயர் கெடுத்து, இலங்கை
மலங்க, அன்று அடு சரம் துரந்து,
பாழியால் மிக்க பார்த்தனுக்கு அருளி,
பகலவன் ஒளி கெடப் பகலே,
ஆழியால், அன்று அங்கு,ஆழியை மறைத்தான் -
அரங்க மா நகர் அமர்ந்தானே. 1415





உயர்ந்த மந்தரமலையை மத்தாக நட்டு, வாசுகிப்பாம்பால் சுற்றித் திருமால் பாற்கடலைக் கடைந்தபொழுது, யானை பிளிறுவது போல அது வாய்விட்டு அலறிற்று; கடல் அலைகள் விண்ணைத் தொட்டன. அப்பொழுது சுவர்க்கத்தினரும், சந்திரன், சூரியன், தேவர்கள் முதலியோர் ஒரே நேரத்தில் வியந்தனர். திருமாலின் நான்கு தோள்களும் ஆயிரம்மாகத் தோன்றின. இவ்வாறு கடல் கடைந்த எம்பெருமான் திருவரங்கத்தில் எழுந்தருளி உள்ளான். **1411**

இரணிய வதத்தை அசுரர்கள் எண்ணிப்பார்த்தால் எவ்வாறு உயிர்வாழ்வர்? அணிகலன்களுடன் விளங்கிய இரணியன் மார்பி லிருந்து புறப்பட்ட இரத்தவெள்ளம் தங்கமயமான மலையி லிருந்து அருவி கொட்டுவது போலப் பெருகிற்று. வெள்ளிமலை ஒன்று விண்ணில் உயர்ந்தது போல, நரசிம்மர், சிவந்த கண்களுடன், வாள் பற்களுடன் தீயைக் கக்கியபடி தோன்றினார். இப்பெருமான் திருவரங்கத்தில் பள்ளி கொண்டுள்ளார். **1412**

ஆயிரம் மலைகள் கூடி வந்தன போலக் கார்த்தவீர் யர்ச்சுனன் போருக்கு வந்தான். அழகுடன் ஒளி வீசும் அவன் ஆயிரம் தோள்களையும் பரசுராமன் தன் மழுவால் அறுத்து, அவனை, சுவர்க்கம் அடையச் செய்தான். இதைப்பார்த்த தேவர்கள் பகவானை ஆயிரம் பெயர்களால் துதித்தனர். ஆயிரம் வாய்கள் பெற்ற ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டவனே, பரசுராமனாக ஆவேசம் கொண்டவன். இப்பெருமான் திருவரங்கத்தில் கண் வளர்கிறான். **1413**

சுருண்ட கூந்தலும் கோவைப்பழம் போன்ற உதடும் உடைய சீதையை, கொடுமை பொருந்திய இராவணன், இராம னிடமிருந்து பிரித் தான். தீயின் ஒளியுடைய மணிமுடி அணிந்த அந்த இராவணனையும் இலங்கையையும் இராமன் தன் வில்லை வளைத்து அம்பு தொடுத்து அழித்தான். வானரர் உதவியுடன் கடல்மீது அணைகட்டிய அந்த இராமபிரான் திருவரங்கத்தில் கண் வளர்கிறான். **1414**

காலத்தை இயக்குபவன்; வேள்வியில் வழிபடப்படுபவன்; ஒற்றைச் சக்கரத் தேர் உடைய சூரியனுக்கு உள்ளே உறைபவன்; மதநீர் உடைய கஜேந்திரனின் துயர் தீர்த்தவன்; இலங்கை அழியும்படி அம்பு தொடுத்தவன்; பாரதப் போரில் பகலிலேயே சூரிய ஒளி மங்கும்படி, தன் சக்கரத்தால் மறைத்துப் பலம் மிகுந்த அர்ஜுனனுக்கு அருள்செய்தான். இப்பெருமான் திருவரங்கத்தில் கண் வளர்கிறான். **1415**

பேயினார் முலை ஊண் பிள்ளை ஆய், ஒருகால்
 பெரு நிலம் விழுங்கி, அது உமிழ்ந்த
வாயன் ஆய், மால் ஆய், ஆல்இலை வளர்ந்து,
 மணி முடி வானவர் தமக்குச்
சேயன் ஆய், அடியோர்க்கு அணியன் ஆய் வந்து என்
 சிந்தையுள் வெம் துயர் அறுக்கும்
ஆயன் ஆய், அன்று குன்றம் ஒன்று எடுத்தான் -
 அரங்க மா நகர் அமர்ந்தானே. 1416

பொன்னும் மா மணியும் முத்தமும் சுமந்து
 பொரு திரை மா நதி புடை சூழ்ந்து
அன்ன மாடு உலவும் அலை புனல் சூழ்ந்த
 அரங்க மா நகர் அமர்ந்தானை
மன்னு மா மாட மங்கையர் தலைவன்,
 மான வேல் கலியன் வாய் ஒலிகள்
பன்னிய பனுவல் பாடுவார் நாளும்
 பழவினை பற்று அறுப்பாரே. 1417

## திருவரங்கம் – 5

ஏழை, ஏதலன், கீழ்மகன் என்னாது
 இரங்கி, மற்று அவற்கு இன் அருள் சுரந்து,
மாழை மான் மட நோக்கி உன் தோழி
 உம்பி எம்பி என்று ஒழிந்திலை; உகந்து
தோழன் நீ எனக்கு இங்கு ஒழி என்ற
 சொற்கள் வந்து அடியேன் மனத்து இருந்திட
ஆழி வண்ண! நின் அடி இணை அடைந்தேன் -
 அணி பொழில் திருவரங்கத்து அம்மானே! 1418

வாத மா மகன், மர்க்கடம், விலங்கு,
 மற்று ஓர் சாதி என்று ஒழிந்திலை, உகந்து,
காதல் ஆதரம் கடலினும் பெருகச்
 செய்தகவினுக்கு இல்லை கைம்மாறு என்று
கோது இல் வாய்மையினாயொடும் உடனே
 உண்பன் நான் என்ற ஒண் பொருள் எனக்கும்
ஆதல் வேண்டும் என்று அடி இணை அடைந்தேன் -
 அணி பொழில் திருவரங்கத்து அம்மானே! 1419





*கண்ணன் பூதனைப்பேயின் நஞ்சு முலைவழியே அவள் உயிரைக் குடித்தான். பிரளயகாலத்தில் பூமியை உண்டு, பின் உமிழ்ந்து காத்த, வாய் உடைய இத்திருமால், ஆலந்தளிரில் கண் வளர்ந்தான். மணி முடிகள் அணிந்த தேவர்களாலும் கிட்ட முடியாதவன், அடியேனுக்கு அருகில் உள்ளவனாய்ச் சிந்தையில் புகுந்தான்; என் துயரத்தை அறுத்தான். கோவர்த்தன மலையைத் தூக்கிய இடையன் கண்ணன் திருவரங்கத்தில் கண் வளர்கிறான்.* 1416

*பொன், மணி, முத்துக்களுடன் அலை அடிக்க ஓடும் காவிரி சூழ்ந்த திருவரங்கத்தில், அன்னங்கள் உலாவும் குளங்கள் உள்ளன. இங்குள்ள அரங்க நாதனைத் திருமங்கை மன்னரான, வேற்கலியன் பாடித்துதித்தார். இப்பாசுரங்களைப் பாடுபவரின் பழவினைகள் அடியோடு அழியும்.* 1417

## திருவரங்கம் –5

*இராமன், குகனை, 'அறிவிலி, அயலான், கீழ்மகன்" என்று எண்ணாமல் இன்னருள் செய்தான். அவனிடத்தே, "குகனே! மான் பார்வை உடைய இந்த சீதை உன் தோழி; உன் தம்பி இலக்குவன் என்தம்பி; உன்னை நான் விடேன்; நீ எனக்குற்ற தோழன்." என்று கூறினான். இந்த அன்புச் சொற்கள் இன்று அடியேன் மனத்தில் பொருந்திவிட்டன. கடல் நிறப்பெருமானே! சோலைகள்சூழ்ந்த திருவரங்கத்தில் உள்ள சுவாமியே! உன் திருவடிகளில் நான் சரணம் புகுந்தேன்.* 1418

*இராமபிரானே! அனுமனை, 'வேற்றுசாதியைச் சேர்ந்த குரங்காகிய விலங்குதானே! அகங்கார வாயுவின் மகன் அன்றோ!" என்று நீ புறக்கணிக்கவில்லை. அவனை விரும்பிக் கடல் போலக் காதல் அன்பைப் பொழிந்தாய். "அனும! உன் உதவிக்கு நான் மறுஉதவி செய்யும் தரம் அல்லேன். குற்றமற்றவனாய் உண்மை பேசும் உன்னைத் தழுவி இன்புறுவேன்" என்று கூறினாயே! இந்த மேன்மையான எண்ணம் என்னிடத்திலும் உண்டாக வேண்டும். அழகிய சோலைகள் சூழ்ந்த திருவரங்கத்து அம்மானே! உன் திருவடிகளில் அடைக்கலம் புகுந்தேன்.* 1419

கடி கொள் பூம் பொழில் காமரு பொய்கை
வைகு தாமரை வாங்கிய வேழம்
முடியும் வண்ணம், ஓர் முழு வலி முதலை
பற்ற, மற்று அது நின் சரண் நினைப்ப,
கொடிய வாய் விலங்கின் உயிர் மலங்கக்
கொண்ட சீற்றம் ஒன்று உண்டு. உளது அறிந்து, உன்
அடியனேனும் வந்து, அடி இணை அடைந்தேன் -
அணி பொழில் திருவரங்கத்து அம்மானே! 1420

நஞ்சு சோர்வது ஓர் வெம் சின அரவம்
வெருவி வந்து நின் சரண் என, சரண் ஆய்
நெஞ்சில் கொண்டு, நின் அம் சிறைப் பறவைக்கு
அடைக்கலம் கொடுத்து அருள்செய்தது அறிந்து,
வெம் சொலாளர்கள் நமன் தமர் கடியர்
கொடிய செய்வன உள; அதற்கு அடியேன்
அஞ்சி வந்து நின் அடி இணை அடைந்தேன்
அணி பொழில் திருவரங்கத்து அம்மானே! 1421

மாக, மா நிலம் முழுவதும் வந்து இறைஞ்சும்
மலர் அடி கண்ட மா மறையாளன்
தோகை மா மயில் அன்னவர் இன்பம்
துற்றிலாமையில், அத்த இங்கு ஒழிந்து
போகம் நீ எய்திப் பின்னும் நம் இடைக்கே
போதுவாய் என்ற பொன் அருள் எனக்கும்
ஆக வேண்டும் என்று அடி இணை அடைந்தேன் -
அணி பொழில் திருவரங்கத்து அம்மானே! 1422

மன்னு நான்மறை மா முனி பெற்ற
மைந்தனை மதியாத வெம் கூற்றம்
தன்னை அஞ்சி, நின் சரண் என, சரண் ஆய்,
தகவு இல் காலனை உக முனிந்து, ஒழியா,
பின்னை என்றும் நின் திருவடி பிரியா
வண்ணம் எண்ணிய பேர் அருள் எனக்கும்
அன்னது ஆகும் என்று அடி இணை அடைந்தேன் -
அணி பொழில் திருவரங்கத்து அம்மானே! 1423

ஓது வாய்மையும், உவனியப் பிறப்பும்
உனக்கு முன் தந்த அந்தணன் ஒருவன்,
காதல் என் மகன் புகல் இடம் காணேன்
கண்டு நீ தருவாய் எனக்கு என்று
கோது இல் வாய்மையினான், உனை வேண்டிய
குறை முடித்து அவன் சிறுவனைக் கொடுத்தாய்
ஆதலால், வந்து உன் அடி இணை அடைந்தேன் -
அணி பொழில் திருவரங்கத்து அம்மானே! 1424





*சோலைகள் சூழ்ந்த திருவரங்கத்தில் உள்ள பெருமானே! மணம் வீசும் பூஞ்சோலை அருகே, பொய்கையில் தாமரைப் பூவைப்பறித்த யானையை, முழு வலிமை உடைய முதலை பற்றி இழுக்கவும் அது தேவரீரைச் சரணம் அடைந்தது. கொடிய வாயையுடைய அம்முதலை உயிர்விடும்படி, நீர் கொண்ட சீற்றத்தை அடியேன் உணர்கிறேன். நானும் திருவடியில் அடைக்கலம் புகுகிறேன்.* **1420**

*நஞ்சுமிழும் கொடிய சுமுகன் என்னும் பாம்பு கருடனுக்கு அஞ்சி உம்மைச் சரணம் அடைந்தது. திருவுள்ளத்தில் அருள்கொண்டு, நீர், உம் அடியவன் ஆன கருடனிடத்தேயே அப்பாம்பை அடைக்கலம் பெறச் செய்தீர். திருவரங்கனே! மரணகாலத்தில் யமதூதர்கள் கடுமையான பேச்சுடன் புரியும் கொடுமைகளுக்கு அஞ்சி, உம்மைச் சரணம் அடைகிறேன். அடியேனுக்கும் அடைக்கலம் அருள வேண்டும்.* **1421**

*நித்திய சூரிகளும், இவ்வுலகத்தவரும், திரண்டு, வணங்கும் மேன்மை உடைய உன் திருவடிகளைக் கோவிந்தசாமி என்னும் அந்தணன் காணப்பெற்றான். அவனிடம், "நீ, மயில் போன்ற பெண்களின் இன்பவாழ்வை அனுபவியாததால், அதை அனுபவித்த பிறகு நம்மருகே வா" என்று கூறினாய். என்னிடத்தும் இவ்வாறு அருளவேண்டும். திருவரங்கா! அடியேன் உன்திருவடிகளை அடைந்தேன்.* **1422**

*நிலையான நான்கு வேதங்களை ஓதும் முனிவர் மைந்தன் மார்க்கண்டேயன் யமனுக்கு அஞ்சி, 'நீயே அடைக்கலம்' என்று சரணம் புகுந்தான். அவனுக்காக, தயை அற்ற யமனைச் சினந்த, நீர், என்றும் வாழும்படி மார்க்கண்டேயனுக்கு அருளி, உம்மைப் பிரியாதவாறு ஆக்கிக் கொண்டீர். சோலை சூழ் திருவரங்கா! அடியேனுக்கும் அவ்வாறு அருள் செய்ய வேண்டும்.* **1423**

*குற்றம்அற்ற ஸாந்தீபினி என்னும் அந்தண ஆசிரியன் சொற்களால் ஓதப்படும் வேதத்தை உமக்குக்கற்பித்து, உபநயனத்தால் உம்மை இருபிறப்பாளன் ஆக ஆக்கினான். அவன் உம்மிடத்தே, "என் அன்புப்பிள்ளை போன இடம் அறியேன். மீட்டுத் தர வேண்டும்" என்று வேண்டினான். நீரும் அவன் குறை தீர்த்து, அப் பிள்ளையைத் தேடிக் கொடுத்தீர். எல்லாம் வல்ல திருவரங்கனே! நானும் உம்திருவடி அடைந்தேன் அருள் புரிய வேண்டும்.* **1424**

வேத வாய்மொழி அந்தணன் ஒருவன்,
எந்தை!நின் சரண்: என்னுடைய மனைவி
காதல் மக்களைப் பயத்தலும் காணாள்;
கடியது ஓர் தெய்வம் கொண்டு ஒளிக்கும் என்று அழைப்ப,
ஏதலார் முன்னே, இன் அருள் அவற்குச்
செய்து உன் மக்கள் மற்று இவர் என்று கொடுத்தாய்;
ஆதலால், வந்து உன் அடி இணை அடைந்தேன்-
அணி பொழில் திருவரங்கத்து அம்மானே! 1425

துளங்கு நீள் முடி அரசர் தம் குரிசில்
தொண்டை மன்னவன் திண் திறல் ஒருவற்கு
உளம் கொள் அன்பினோடு இன் அருள் சுரந்து அங்கு
ஓடு நாழிகை ஏழ் உடன்இருப்ப,
வளம் கொள் மந்திரம் மற்று அவற்கு அருளிச்
செய்த ஆறு அடியேன் அறிந்து, உலகம்
அளந்த பொன் அடியே அடைந்து உய்ந்தேன்-
அணி பொழில் திருவரங்கத்து அம்மானே! 1426

மாட மாளிகை சூழ் திருமங்கை
மன்னன், ஒன்னலர் தங்களை வெல்லும்
ஆடல்மா வலவன், கலிகன்றி
அணி பொழில் திருவரங்கத்து அம்மானை,
நீடு தொல் புகழ் ஆழி வல்லானை,
எந்தையை நெடுமாலை நினைந்த
பாடல் பத்து இவை பாடுமின், தொண்டீர்!
பாட நும்மிடைப் பாவம் நில்லாவே. 1427

## திருப்பேர் நகர்

கை இலங்கு ஆழி சங்கன், கரு முகில் திரு நிறத்தன்,
பொய் இலன் மெய்யன் தன் தாள் அடைவரேல் அடிமை ஆக்கும்
செய் அலர் கமலம் ஓங்கு செறி பொழில் தென் திருப்பேர்
பை அரவு அணையான் நாமம் பரவி, நான் உய்ந்த ஆறே! 1428

வங்கம் ஆர் கடல்கள் ஏழும், மலையும், வானகமும், மற்றும்,
அம் கண் மா ஞாலம் எல்லாம் அமுது செய்து உமிழ்ந்த எந்தை
திங்கள் மா முகில் அணவு செறி பொழில் தென் திருப்பேர்
எங்கள் மால் இறைவன் நாமம் ஏத்தி, நான் உய்ந்த ஆறே! 1429





*வேதம் ஓதும் அந்தணன் ஒருவன் உம்மிடம், “எந்தையே' நான் உம் அடைக்கலம்; என் மனைவி பிள்ளைகளைப் பெற்ற உடனேயே, கொடிய தேவதை எடுத்துப் போய் ஒளித்துள்ளது” என்றான். நீர் அப்பிள்ளைகளைக் கொண்டு வந்து, “இவர்உன் மக்கள்” என்று கொடுத்தருளினீர். சோலை சூழ்ந்த திருவரங்கத்தில் உள்ளவனே! நானும் உம் திருவடி அடைந்தேன்.* **1425**

*பெருமானே! ஒளி முடி அணிந்த பேரரசன் தொண்டை மானுக்கு, நீ, அன்புடன் அருள் செய்தாய், அவனுடைய ஒழிவு நேரத்தில் ஏழுநாழிகை நேரம் உடனிருந்து ஏழு செய்திகள் உள்ள திருமந்திரத்தை உபதேசித்தாய். இதனை அடியேன் அறிந்தேன். சோலைகள் சூழும் திருவரங்கத்தில் எழுந்தருளி யவனே! உலகளந்த உன் திருவடிகளில் அடியேன் சரணம் புகுகிறேன்.* **1426**

*சோலை சூழ்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளியவன் நிறைந்த புகழ் உடைய, சக்கரம் ஏந்திய பெருமான் ஆவான். ‘ஆடல்மா' என்னும் குதிரை உடைய கலிகன்றி இப்பாசுரங்களில் இப்பெருமானைப் பாடினார். மாட மாளிகைகள் சூழ்ந்த திருமங்கை மன்னர் அருளிய இவற்றைப் பாடினால் பாவங்கள் அழியும்.* **1427**

## திருப்பேர் நகர்

*சங்கையும் சக்கரத்தையும் கைகளில் ஏந்திய பெருமாள் கருமேகம் ஒத்தவன்; சாத்திரங்களில் விவரிக்கப்படும் குணங்கள் உடைய பொய்யற்றவன். அடியார்களுக்கு உண்மை ஆனவன். திருவடி அடைந்தோரை ஆட்கொள்வான். தாமரை வயல்களும் சோலைகளும் உள்ள திருப்பேர் நகரில் எழுந்தருளி உள்ளான். ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்டவனின் பெயர்களைச் சொல்லி நான் உய்வுபெற்றேன். என்னே என் பேறு!* **1428**

*கப்பல்கள் ஓடும் ஏழு கடல்கள், மலைகள், வானம், அகன்ற பூமி, ஆகியவற்றை, உண்டு, பின் உமிழ்ந்து காத்தவன் திருப்பேர்நகரில் உள்ளான். இத்தலத்தில் உள்ள சோலைகளில், மேகமண்டலம் சந்திரனைத் தொடும். இத்திருப்பேர் நகர்ப்பெருமானைத் துதித்து நான் உய்வு பெற்ற பேறுதான் என்னே!* **1429**

ஒருவனை உந்திப் பூமேல் ஓங்குவித்து, ஆகம் தன்னால்
ஒருவனைச் சாபம் நீக்கி, உம்பர் ஆள் என்று விட்டான்.
பெரு வரை மதிள்கள் சூழ்ந்த பெரு நகர் அரவு அணைமேல்
கரு வரை வண்ணன் தென் பேர் கருதி, நான் உய்ந்த ஆறே! 1430

ஊன் அமர் தலை ஒன்று ஏந்தி, உலகு எலாம் திரியும் ஈசன்
ஈன் அமர் சாபம் நீக்காய் என்ன, ஒண் புனலை ஈந்தான்.
தேன் அமர் பொழில்கள் சூழ்ந்த செறி வயல் தென் திருப்பேர்
வானவர் தலைவன் நாமம் வாழ்த்தி, நான் உய்ந்த ஆறே! 1431

வக்கரன் வாய், முன், கீண்ட மாயனே! என்று வானோர்
புக்கு அரண் தந்தருளாய் என்ன, பொன் ஆகத்தானை,
நக்கு அரி உருவம் ஆகி, நகம் கிளர்ந்து இடந்து உகந்த
சக்கரச் செல்வன் தென்பேர்த் தலைவன் தாள் அடைந்து உயந்தேனே. 1432

விலங்கலால் கடல் அடைத்து விளங்கிழை பொருட்டு, வில்லால்
இலங்கை மா நகர்க்கு இறைவன் இருபது புயம் துணித்தான்,
நலம் கொள் நான்மறை வல்லார்கள் ஓத்து ஒலி ஏத்தக் கேட்டு
மலங்கு பாய் வயல் திருப்பேர் மருவி, நான் வாழ்ந்த ஆறே! 1433

வெண்ணெய் தான் அமுதுசெய்ய, வெகுண்டு, மத்து ஆய்ச்சி ஓச்சி
கண்ணி ஆர் குறுங் கயிற்றால் கட்ட, வெட்டென்று இருந்தான்.
திண்ண மா மதிள்கள் சூழ்ந்த தென் திருப்பேருள் மேவும்
வண்ணனார் நாமம் நாளும் வாய் மொழிந்து உய்ந்த ஆறே! 1434

அம் பொன் ஆர் உலகம் ஏழும் அறிய ஆயப்பாடி தன்னுள்
கொம்பு அனார் பின்னை கோலம் கூடுதற்கு ஏறு கொன்றான்,
செம் பொன் ஆர் மதிள்கள் சூழ்ந்த தென் திருப்பேருள் மேவும்
எம்பிரான் நாமம் நாளும் ஏத்தி, நான் உய்ந்த ஆறே! 1435

நால் வகை வேதம், ஐந்து வேள்வி, ஆறு அங்கம் வல்லார்,
மேலை வானவரின் மிக்க வேதியர், ஆதி காலம்
சேல் உகள் வயல் திருப்பேர்ச் செங் கண் மாலோடும் வாழ்வார்
சீல மா தவத்தர் சிந்தை ஆளி என் சிந்தையானே. 1436





திருமால், ஒப்பற்ற பிரமனைத் தன் கொப்பூழ்த் தாமரையில் படைத்தான். தன் மார்பின் வேர்வையால் சிவன் சாபத்தை நீக்கி, மேலுலகை ஆளச் செய்தான். மலைகளை ஒத்த மதில்கள் சூழ்ந்த திருப்பேர் நகரில் ஆதிசேஷன்மீது பள்ளி கொண்ட கரிய மலை போன்றவனைக் கண்டு அனுபவித்து உய்ந்தேன். **1430**

புலால் நிறைந்த மண்டை ஓட்டை, ஏந்தியபடி, உலகெங்கும் திரிந்த சிவன், "என் சாபத்தை நீக்கு" என்று வேண்டவும், திருமால் தன் மார்பு நீரைத் தெறித்தான். வண்டுகள் வாழும் சோலைகளும் வயல்களும் சூழ்ந்த தென் திருப்பேரில் உள்ள நித்திய சூரிகள் தலைவனின் நாமத்தைத் துதித்து நான் உய்வடைந்தேன். **1431**

தேவர்கள் திருமாலிடம், "தந்த வக்கிரன் வாயைக் கிழித்த மாயவனே! எங்களைக் காப்பாற்று" என வேண்டினர். ஆதலால் அவன் நரசிம்மமாய்த் தோன்றிக் கோபச்சிரிப்புடன், இரணியனை நகங்களால் கிழித்து மகிழ்ந்தான். தென் திருப்பேர் நகரில் எழுந்தருளிய சக்கரம் ஏந்திய திருமாலின் திருவடிகளைப் பற்றி உய்ந்தேன். **1432**

ஆபரணங்கள் உடைய பிராட்டிக்காக, இராமன், கடல்மீது மலைகளால் அணைகட்டி, இலங்கை மன்னனின் இருபது தோள் களையும் வில் வளைத்து வீழ்த்தினான். தென்திருப்பேர் நகரில் எழுந் தருளிய இப்பெருமானை வணங்கி நான் உய்வடைந்தேன். நன்மை யான நான்கு வேதங்களில் வல்லவர்கள், ஓதும் வேதஒலியைக் கேட்டு, இவ்வூர் வயல்களில் உள்ள மலங்கு மீன்கள் துள்ளிப் பாயும். **1433**

கண்ணன் வெண்ணெய்யை உண்டபொழுது, சினந்த யசோதை, மத்தை வீசி, கண்ணிக்கயிற்றால் அவனைக் கட்டவும், அதற்கு இசைந்தான். திண்ணிய மதிள்கள் சூழ்ந்த தென் திருப்பேர் நகரில் எழுந்தருளிய கடல் நிறப்பெருமானின் திருநாமங்களை நாளும் சொல்லி நான் உய்வு பெற்றேன். **1434**

கொடி போன்ற அழகிய நப்பின்னையைக் கூடுவதற்காகக் கண்ணன், ஆய்ப்பாடியில் ஏழுலகத்தவரும் அறிய, எருதுகளைக் கொன்றான். பொன் மதிள்கள் சூழ்ந்த தென்திருப்பேர் நகரில் உள்ள பெருமானின் நாமங்களை நாளும் ஓதி, உய்ந்தேன். **1435**

நான்கு வேதங்கள், ஐந்து வேள்விகள், ஆறு அங்கங்கள் ஆகியவற்றில் வல்லவராய், தேவர்களை விடவும் மேம்பட்ட அந்தணர், படைப்புக்காலம் தொடங்கித் தென்திருப்பேர் நகரில் வாழ்கிறார்கள். கயல்கள் துள்ளும் வயல்கள் உள்ள இத்தலத்துப் பெருமான், தவத்தவரான இவர்கள் சிந்தையில் வாழ்வது போலவே என் சிந்தையிலும் உள்ளான். **1436**

வண்டு அறை பொழில் திருப்பேர் வரி அரவுஅணையில் பள்ளி
கொண்டு உறைகின்ற மாலைக் கொடி மதிள் மாட மங்கைத்
திண் திறல் தோள் கலியன் செஞ்சொலால் மொழிந்த மாலை
கொண்டு இவை பாடி ஆடக் கூடுவர் நீள் விசும்பே. 1437

## திருநந்திபுரவிண்ணகரம்

தீது அறு நிலத்தொடு, எரி, காலினொடு, நீர், கெழு
விசும்பும் அவை ஆய்,
மாசு அறு மனத்தினொடு உறக்கமொடு இறக்கை அவை
ஆய பெருமான்,
தாய் செற உளைந்து, தயிர் உண்டு குடம் ஆடு தட
மார்வர், தகை சேர்
நாதன் உறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகரம் -
நண்ணு மனமே! 1438

உய்யும் வகை உண்டு, சொன செய்யில்; உலகு ஏழும் ஒழி-
யாமை முன நாள்
மெய்யின் அளவே அமுது செய்ய வல ஐயன் அவன்
மேவும் நகர் தான்
மைய வரி வண்டு மது உண்டு, கிளையோடு மலர்
கிண்டி அதன்மேல்
நைவளம் நவிற்று பொழில் நந்திபுரவிண்ணகரம்-
நண்ணு மனமே! 1439

உம்பர் உலகு ஏழு கடல் ஏழு, மலை ஏழும் ஒழி-
யாமை முன நாள்,
தம் பொன் வயிறு ஆர் அளவும் உண்டு, அவை உமிழ்ந்த தட
மார்வர், தகை சேர்,
வம்பு மலர்கின்ற பொழில் பைம் பொன் வரு தும்பி மணி
கங்குல் வயல் சூழ்.
நம்பன் உறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகரம் -
நண்ணு, மனமே! 1440





வண்டுகள் பாடும் சோலைகள் உள்ள திருப்பேர் நகரில், ஆதிசேஷன் மீது பள்ளிகொண்ட திருமாலைக் கலியன் பாடினார். கொடிகள் உயர்ந்த மதிள்கள் சூழ்ந்த திருமங்கை நகர்க்கு மன்னரான ஆழ்வார் அருளியவற்றைப்பாடி ஆடுபவர். பரமபதம் சேர்வர். 1437

## திருநந்திபுர விண்ணகரம்

ஐம்பூதங்கள் ஆத்மாக்களின் இன்பத்தையும் வீட்டையும் விளைவிப்பன. தீமையற்ற நிலம், தீ, காற்று, நீர் ஆகிய வற்றுள்ளும் இவற்றை அகப்படுத்தும் ஆகாயத்திலும் இறைவன் உள் உயிராய் நின்று ஆள்கிறான். குற்றமற்ற மனம், உறக்கம், கனவு, மரணம் ஆகியவற்றையும் அவனே நியமிக்கிறான், இவனே கண்ணனாக வந்தபொழுது தயிரை உண்ட தாய் யசோதையின் கோபத்துக்குப் பயந்தான்; குடக்கூத்தாடினான், மனமே! இப்பெருமான் எழுந்தருளி உள்ள நந்திபுர விண்ணகரம் சென்று வணங்கு. 1438

மனமே! நான் சொல்வதைச் செய்தால் நீ உய்யும் வழி உள்ளது. பிரளயத்தில் ஏழுலகங்களையும் இறைவன், தன் திருவுடம்புக்கு ஏற்ப, ஒன்று விடாமல் உண்டு காப்பாற்றினான். இப்பெருமான் எழுந்தருளிய நந்திபுர விண்ணகரத்தை நீ அடைவாய். இங்குள்ள சோலைகளில் வரிவண்டுகள் சுற்றத்துடன், மலர் கோதித் தேன் பருகும். பிறகு குறிஞ்சிப் பண்ணைப்பாடும். 1439

பிரளய காலத்தில், ஏழுலகங்கள், ஏழுகடல்கள், ஏழு மலைகள் யாவற்றையும் ஒன்று விடாமல், எம்பெருமான் வயிறு ஆர உண்டு, பின், வெளிப்படுத்தினான். அகன்ற திருமார்புடைய அப்பெருமான் அடியார்களின் நம்பிக்கைக்கு உகந்தவன்; நந்திபுர விண்ணகரத்தில் எழுந்தருளி உள்ளான். இவ்வூரில் பூக்கள் மலரும் சோலைகளில் அழகிய கருவண்டுகள் உலாவும். இருண்ட பயிர் நிறைந்த வயல்கள் சூழ்ந்துள்ளன. மனமே! நீ இத்தலம் சென்று பெருமானை வணங்கு. 1440

பிறையின் ஒளி எயிறு இலக, முறுகி, எதிர் பொருதும் என
வந்த அசுரர்
இறைகள் அவை நெறு நெறு என, வெறிய அவர் வயிறு அழல,
நின்ற பெருமான்
சிறை கொள் மயில் குயில் பயில, மலர்கள் உக, அளி முரல,
அடிகொள் நெடு மா
நறைசெய் பொழில் மழை தவழும் நந்திபுரவிண்ணகரம் -
நண்ணு மனமே! 1441

மூள எரி சிந்தி, முனிவு எய்தி, அமர் செய்தும் என
வந்த அசுரர்
தோளும் அவர் தாளும் முடியோடு பொடி ஆக, நொடி
ஆம் அளவு எய்தான்,
வாளும், வரி வில்லும் வளை ஆழி, கதை, சங்கம் இவை
அம் கை உடையான்
நாளும் உறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகரம் -
நண்ணு மனமே! 1442

தம்பியொடு, தாம் ஒருவர், தம் துணைவி காதல் துணை
ஆக, முன நாள்,
வெம்பி எரி கானகம் உலாவும் அவர் தாம் இனிது
மேவும் நகர் தான்
கொம்பு குதி கொண்டு குயில் கூவ, மயில் ஆலும், எழில்
ஆர் புறவு சேர்
நம்பி உறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகரம் -
நண்ணு மனமே! 1443

தந்தை மனம் உந்து துயர் நந்த, இருள் வந்த விறல்
நந்தன் மதலை
எந்தை இவன் என்று அமரர் கந்த மலர் கொண்டு தொழ
நின்ற நகர் தான்
மந்த முழவு ஓசை மழை ஆக எழு கார் மயில்கள்
ஆடு பொழில் சூழ்
நந்தி பணிசெய்த நகர் நந்திபுரவிண்ணகரம் -
நண்ணு மனமே! 1444

எண்ணில் நினைவு எய்தி இனி இல்லை இறை என்று முனி-
யாளர் திரு ஆர்
பண்ணில் மலி கீதமொடு பாடி அவர் ஆடலொடு
கூட, எழில் ஆர்
மண்ணில் இதுபோல நகர் இல்லை என வானவர்கள்
தாம் மலர்கள் தூய்,
நண்ணி உறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகரம் -
நண்ணு மனமே! 1445





பிறைச்சந்திரனைப் போன்ற பற்களை உடைய அரக்கர்கள், போரிட வந்தபொழுது, இராமபிரான், அவர்கள் வயிறெரிய, உடல்களை நெறுநெறு என்று முறித்து, வீசினான். இப்பெருமானின் நந்திபுர விண்ணகரில் சோலைகளில் பருத்த அடிகளை உடைய மரங்கள் உள்ளன. மயில்களும் குயில்களும் வாழும்; மேகங்கள் உலாவும்; பூக்கள் உதிரும்; வண்டுகள் ரீங்காரம் செய்யும். மனமே! இத்தலத்தை நீ அடைவாய். **1441**

புகை எழ, நெருப்பைச் சிந்திச் சினந்தவாறு, போரிட வந்த, அரக்கர்களின் தோள்களையும் கால்களையும் தலைகளையும் இராமபிரான் நொடிப்பொழுதில் பொடி ஆக்கினான். இத்திருமால், தன் கைகளில், நாந்தகவாள், சார்ங்கவில், சக்கரம், சங்கு, கதை ஆகிய ஐந்து ஆயுதங்களைத் தரித்துள்ளான். மனமே! இவன் எழுந்தருளிய நந்திபுர விண்ணகரை நீ அடைவாயாக. **1442**

தன் தம்பியுடனும் காதல் மனைவியுடனும் இராமன் தீ உமிழும் காட்டில் உலாவி வாழ்ந்தான். இவன் எழுந்தருளிய நந்திபுர விண்ணகரத்துச் சோலைப்புறங்களில் குயில்கள் மரக்கிளைகளிலிருந்து கூவிக் குதிக்கும். இதனைக் கண்ட மயில்கள் ஆடும். மனமே! இத்தலத்தை நீ அடைவாய். **1443**

தந்தையான நந்த கோபன் மனத்துயரம் தீர், இருண்ட இரவில், கண்ணன் மதுரையிலிருந்து கோகுலம் வந்தான். இக்கண்ணன் எழுந்தருளிய நந்திபுர விண்ணகரத்தில் தேவர்கள் வாசனை மலர்களை இட்டு வழிபடுவர். இங்கே முழங்கும் மத்தள ஓசையைக் கேட்ட சோலைக்குயில்கள், கார்காலமேகம் இடிக்கும் இடி என எண்ணி ஆடும். மனமே! நந்திவர்மன் பணி செய்த இத்தலத்தை நீ அணுகி, வழிபடு. **1444**

"எண்ணிப்பார்த்தால் தியானத்துக்கு உரிய இறைவன் இவனே! வேறிலர்" என்று முடிவு செய்த சனகாதி முனிவர்கள், கேட்க இனிய இசைபாடித் துதித்து ஆடுவார்கள். நந்திபுர விண்ணகரப் பெருமானை வணங்குவதற்காகத் தேவர்கள் திரண்டு வந்து, "பூவுலகில் இது போல் திவ்வியதேசம் வேறு இல்லை" என்று போற்றிப் பூ இட்டுத்துதிப்பர், மனமே! இத்தலத்துக்கு நீ போவாய். **1445**

வங்க மலி பௌவம் அது மா முகடின் உச்சி புக,
மிக்க பெருநீர்
அங்கம் அழியார், அவனது ஆணை தலை சூடும் அடி
யார்; அறிதியேல்,
பொங்கு புனல் உந்து மணி கங்குல் இருள் சீறும் ஒளி
எங்கும் உளதால்,
நங்கள் பெருமான் உறையும் நந்திபுரவிண்ணகரம் -
நண்ணு மனமே! 1446

நறை செய் பொழில் மழை தவழும் நந்திபுரவிண்ணகரம்
நண்ணி உறையும்
உறை கொள் புகர் ஆழி, சுரி சங்கம் அவை அம் கை உடை
யானை ஒளி சேர்
கறை வளரும் வேல் வல்ல கலியன் ஒலி மாலை இவை
ஐந்தும் ஐந்தும்
முறையின் இவை பயில வல அடியவர்கள் கொடுவினைகள்
முழுது அகலுமே. 1447

## திருவிண்ணகர் – 1

வண்டு உணும் நறு மலர் இண்டை கொண்டு,
பண்டை நம் வினை கெட என்று அடிமேல்
தொண்டரும் அமரரும் பணிய நின்று அங்கு
அண்டமொடு அகல் இடம் அளந்தவனே!
ஆண்டாய்! உனைக் காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்,
வேண்டேன், மனைவாழ்க்கையை - விண்ணகர் மேயவனே! 1448

அண்ணல் செய்து, அலை கடல் கடைந்து, அதனுள்
கண்ணுதல் நஞ்சு உண்ணக் கண்டவனே!
விண்ணவர் அமுது உண, அமுதில் வரும்
பெண் அமுது உண்ட எம் பெருமானே!
ஆண்டாய்! உனைக் காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்,
வேண்டேன், மனைவாழ்க்கையை - விண்ணகர் மேயவனே! 1449

குழல் நிற வண்ண! நின் கூறு கொண்ட
தழல் நிற வண்ணன் நண்ணார் நகரம்
விழ, நனி மலை சிலை வளைவு செய்து, அங்கு,
அழல் நிற அம்பு அது ஆனவனே!
ஆண்டாய்! உனைக் காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்,
வேண்டேன், மனைவாழ்க்கையை - விண்ணகர் மேயவனே! 1450





கப்பல்கள் ஓடும் கடல், பூமியை வளைத்து, வான முகடுவரை பொங்குகின்ற பிரளய காலத்திலும் இறைவன் ஆணையைத் தலைமேல் ஏற்கும் அடியார்கள் முத்திபெறுவர். மனமே! இதை நீ நன்கு அறிந்தால் , எம்பெருமான் எழுந்தருளிய நந்திபுரவிண்ணகரம் செல்வாய். இங்கு ஓடும் நீரால் தள்ளப்பட்ட மணிகள் இரவின் இருளைக் கிழித்து எங்கும் ஒளி வீசும். 1446

மேகம் தவழும் தேன் துளிர்க்கும் சோலைகள் உள்ள நந்திபுர விண்ணகரத்தில் எழுந்தருளிய சங்கு சக்கரப் பெருமானைக் கலியன் பாடினார். இப்பத்துப் பாசுரங்களையும் முறையாகப் பயிலும் அடியார்களின் வினைகள் அகலும். 1447

## திருவிண்ணகர் –1

தேவர்களும் அடியார்களும், வண்டுகள் தேன் பருகும் வாசனை மாலைகளை இட்டு "எம் பாவங்களைத் தீர்த்தருள்க" என வேண்டினார். அவர்களுக்காக மாவலியிடம் யாசித்து உலகங்களையும் பூமியையும் அளந்து கொண்ட பெருமானே! திருவிண்ணகரில் எழுந்தருளியவனே! என்னை நீ முன்பே ஆண்டு கொண்டாய். உன்னை நான் வணங்கும்படி அருள் செய்தால், அடியேன் இல் வாழ்க்கையை விரும்பமாட்டேன். 1448

கொடை வள்ளலான பெருமானே! நீ தேவர்களுக்காக அலை கடலைக் கடைந்தாய்; அதிற் புறப்பட்ட நஞ்சை நெற்றிக் கண்ணன் விழுங்குமாறு செய்தாய். தேவர்கள் அமுதம் பருகவும், பெண் அமுதாக வந்த திருமகளை நீ மார்பில் பெற்றாய். என்னை ஆண்ட திரு விண்ணகரப்பெருமானே! உன்னை நான் வணங்க அருள் செய்தால் அடியேன் இல்வாழ்க்கையை விரும்பேன். 1449

தலைமயிர் போன்ற கறுத்த திருமேனியனே! நெருப்பு நிறச் சிவனுக்கு உன் உடம்பில் இடம் தந்தவனே! அச்சிவனைக் கொண்டு, அசுரர்களின் திரிபுரத்தை அழித்தாய். மேருமலை போன்ற வில்லை வளையச் செய்து, நீயே தீ நிற அம்பாகி நின்றாயே! என்னை ஆண்ட திருவிண்ணகரப்பெருமானே! உன்னை நான் வணங்க அருள் செய்தால் அடியேன் இல்வாழ்க்கையை விரும்பேன் 1450

நிலவொடு வெயில் நிலவு இரு சுடரும்
உலகமும் உயிர்களும் உண்டு ஒருகால்,
கலை தரு குழவியின் உருவினை ஆய்,
அலை கடல் ஆல்இலை வளர்ந்தவனே!
ஆண்டாய்! உனைக் காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்,
வேண்டேன், மனைவாழ்க்கையை - விண்ணகர் மேயவனே! 1451

பார் எழு, கடல் எழு, மலை எழும் ஆய்,
சீர் கெழும் இவ் உலகு ஏழும் எல்லாம்
ஆர் கெழு வயிற்றினில் அடக்கி நின்று, அங்கு
ஓர் எழுத்து ஓர் உரு ஆனவனே!
ஆண்டாய்! உனைக் காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்.
வேண்டேன், மனைவாழ்க்கையை - விண்ணகர் மேயவனே! 1452

கார் கெழு கடல்களும், மலைகளும் ஆய்,
ஏர் கெழும் உலகமும் ஆகி, முத-
லார்களும் அறிவு அரும் நிலையினை ஆய்,
சீர் கெழு நான்மறை ஆனவனே!
ஆண்டாய்! உனைக் காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்,
வேண்டேன், மனைவாழ்க்கையை - விண்ணகர் மேயவனே! 1453

உருக்கு உறு நறு நெய் கொண்டு, ஆர் அழலில்
இருக்கு உறும் அந்தணர் சந்தியின்வாய்,
பெருக்கமொடு அமரர்கள் அமர, நல்கும்
இருக்கினில் இன் இசை ஆனவனே!
ஆண்டாய்! உனைக் காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்,
வேண்டேன், மனைவாழ்க்கையை - விண்ணகர் மேயவனே! 1454

காதல் செய்து இளையவர் கலவி தரும்
வேதனை வினை அது வெருவுதல் ஆம்;
ஆதலின், உனது அடி அணுகுவன் நான்;
போது அலர் நெடு முடிப் புண்ணியனே!
ஆண்டாய்! உனைக் காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்,
வேண்டேன் மனைவாழ்க்கையை - விண்ணகர் மேயவனே! 1455





நிலவு வீசும் சந்திரன், வெயில் பரப்பும்சூரியன், உலகங்கள், உயிர்கள் ஆகிய யாவற்றையும் பிரளய காலத்தில் உண்டு, குழந்தையாகக் கடலில் ஆலிலையில் பள்ளிக் கொண்டவனே! என்னை ஆண்ட திருவிண்ணகரப்பெருமானே! எனக்கு நீ அருள் செய்தால் நான் இல்வாழ்க்கையை விரும்பேன். **1451**

ஏழு பூமிகள், ஏழு கடல்கள், ஏழு மலைகள், ஏழு உலகங்கள் எல்லாவற்றையும் வயிற்றில் அடக்கிக் காத்தவனே! அகாரப் பொருளாக நிற்கும் முதல்வனே! என்னை ஆண்ட திருவிண்ணகரத்தானே! எனக்கு அருளினால், இல் வாழ்வை வேண்டேன். **1452**

மேகங்களுடைய கடல்களுக்கும் மலைகளுக்கும் உலகங்களுக்கும் ஆதாரமாய் அவற்றினுள்ளே எழுந்தருளியவனே! பிரமன் முதலியோராலும் அறிய முடியாத நிலைத்த இயல்புடையவனே! சீர்மை மிகுந்த நான்கு வேதப்பொருளே! திருவிண்ணரில் உள்ள என் ஆண்டவனே! அடியேனுக்கு அருள் செய்தால் இல்வாழ்வை வேண்டேன் **1453**

செல்வத்துடன் வேள்விப் பொருள்களைப் பெறுவதற்காக, அந்தணர்கள் மாலைக் காலத்தில் உருக்கிய மணம் மிக்க நெய்யை ஓமத்தீயில் வார்த்து தேவர்களுக்கு அவிவுணவைக் கொடுப்பார்கள். இந்த வேதத்தில் கூறப்பட்ட இனிமையான 'ஓம்' என்னும் பிரணவப் பொருள் ஆனவனே! என்னை ஆண்ட திருவிண்ணகரப்பெருமானே! உன்னைக் காணும் படி எனக்கு அருளினால் நான் இல்வாழ்க்கையை விரும்பேன். **1454**

பூத்துப் பொலியும் மலர் மாலை சூடிய திருமுடி உடைய புண்ணியனே! இளைய பெண்களின் காதல் தொடர்பால் ஏற்படும் கலவி, முடிவில் துயரத்தையே விளைவிக்கிறது. இச்செயலை எண்ணுங்கால் அடியேனுக்குப் பயம் மேலிடுகிறது. ஆதலால் அப்பயம் தீர, உன் திருவடிகளை நான் அணுகுவேன். என்னை ஆண்ட திருவிண்ணகரப்பெருமானே! உன்னைக் காண அருளினால் அடியேன் இல்வாழ்க்கையை வேண்டேன். **1455**

சாதலும் பிறத்தலும் என்று இவற்றைக்
காதல் செய்யாது உன் கழல் அடைந்தேன்;
ஓதல் செய் நான்மறை ஆகி, உம்பர்
ஆதல் செய் மூவுரு ஆனவனே!
ஆண்டாய்! உனைக் காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்,
வேண்டேன் மனைவாழ்க்கையை - விண்ணகர் மேயவனே! 1456

பூ மரு பொழில் அணி விண்ணகர்மேல்
காமரு சீர்க் கலிகன்றி சொன்ன
பா மரு தமிழ் இவை பாட வல்லார்
வாமனன் அடி இணை மருவுவரே. 1457

## திருவிண்ணகர் – 2

பொறுத்தேன் புன்சொல் நெஞ்சில்; பொருள் இன்பம் என இரண்டும்
இறுத்தேன், ஐம்புலன்கள் கடன் ஆயின; வாயில் ஒட்டி
அறுத்தேன், ஆர்வச் செற்றம்; அவை தம்மை மனத்து அகற்றி,
வெறுத்தேன்; நின் அடைந்தேன் - திருவிண்ணகர் மேயவனே! 1458

மறந்தேன் உன்னை, முன்னம்; மறந்த மதி இல் மனத்தால்
இறந்தேன், எத்தனையும்; அதனால், இடும்பைக் குழியில்
பிறந்தே எய்த்து ஒழிந்தேன்; பெருமான்! திரு மார்பா!
சிறந்தேன், நின் அடிக்கே - திருவிண்ணகர் மேயவனே! 1459

மான் ஏய் நோக்கியர் தம் வயிற்றுக் குழியில் உழைக்கும்
ஊன் ஏய் ஆக்கை தன்னை உதவாமை உணர்ந்து உணர்ந்து
வானே! மா நிலமே! வந்து வந்து, என் மனத்து இருந்த
தேனே! நின் அடைந்தேன் - திருவிண்ணகர் மேயவனே! 1460

பிறிந்தேன், பெற்ற மக்கள் பெண்டிர் என்று இவர் பின் உதவாது
அறிந்தேன்; நீ பணித்த அருள் என்னும் ஒள் வாள் உருவி
எறிந்தேன், ஐம்புலன்கள் இடர் தீர; எறிந்து வந்து
செறிந்தேன், நின் அடிக்கே - திருவிண்ணகர் மேயவனே! 1461





ஓதப்படும் நான்கு வேதப்பொருளே! தேவர்களின் முதல்வரான பிரமன் சிவன், இந்திரன் ஆகியோரை உடற் பகுதிகளாகக் கொண்டவனே! இறப்பு, பிறப்பு ஆகிய துயரங்களை உணர்ந்தால் அவற்றை நான் விரும்பேன். உம் திருவடிகளைப் பற்றுவதில் அவற்றின் ஞானமும் தேவையில்லை. என்னை ஆண்ட திருவிண்ணகரப் பெருமானே! உன்னைக் காண அருளினால், நான் மனை வாழ்க்கையை வேண்டேன். **1456**

வைணவச் செல்வம் உடைய கலிகன்றி ஆழ்வார் பூஞ் சோலைகள் உள்ள திருவிண்ணகர்மேல் இத் தமிழ்ப் பாசுரங்களை அருளினார். இவற்றைப் பாடிப் பயில வல்லவர். வாமனாவதாரம் செய்த திருமாலின் திருவடிகளை அடைவர். **1457**

## திருவிண்ணகர் – 2

உறவினரின் இழிந்த சொற்களை நான் உறவுக்காகப் பொறுத்தேன். பொருள் இன்பம் ஆகிய இரண்டையும் உறவினர்க் காகவும் ஐம்புலன்களின் அனுபவத்துக்காகவும் கொடுத்தேன். வேண்டியவரிடம் விருப்பையும் அல்லாதவரிடம் வெறுப்பையும் வாய்மொழிந்து நடைப்படுத்தினேன். திருவிண்ணகப் பெருமானே! முடிவில் இவற்றை வெறுத்து ஒதுக்கி, உன் திருவடி அடைந்தேன். **1458**

என்றும் நினைக்க வேண்டிய உன்னைப் பலகாலமாய் மறந்தேன். மறந்ததற்கு வருந்தாமல் அசேதனமாய்ப் பயன் அற்றேன். துன்பக் கருக்குழியில் புகுந்து பிறப்பு, இறப்பு இவற்றில் இளைத்தேன். திருவிண்ணகரில் உள்ள திருமகள் கேள்வனே! இப்பொழுது நான் உன் திருவடி அடைந்தேன். **1459**

பரம பதத்துக்கும் நில உலகங்களுக்கும் இறைவா! தேனே! நீ மனம் உவந்து என் நெஞ்சில் தங்கினாய். மான் பார்வை உடைய பெண்கள் கருவில் நான் தங்கி வருந்தினேன். முடிவான உறுதிப் பொருளைப்பெற என் மாமிச உடல் துணை அற்றது என அறிந்தேன். திருவிண்ணகரானே! ஆதலால் உன்னை அடைந்தேன். **1460**

பெற்ற பிள்ளைகள், மனைவியர் ஆகிய உறவினர் கடைசிக் காலத்தில் துணை ஆகார் என்பதை அறிந்தேன். ஆகவே அவர்களை விட்டு அகன்றேன். "என்னையே தஞ்சமாக நினைத்திரு" என்று நீ அர்ச்சுனனுக்கு கூறியதை உணர்ந்தேன். ஆகவே, உன் அருள் என்னும் வாளை உருவி, ஐம்புலன்களின் துன்பம் நீங்கும்படி வீசினேன் திருவிண்ணகரப் பெருமானே! அத்துன்பங்களை ஒழித்து உன் திருவடி அடைந்தேன். **1461**

பாண் தேன் வண்டு அறையும் குழலார்கள் பல்லாண்டு இசைப்ப,
ஆண்டார் வையம் எல்லாம் அரசு ஆகி, முன் ஆண்டவரே,
மாண்டார் என்று வந்தார்; அந்தோ! மனை வாழ்க்கை தன்னை
வேண்டேன்; நின் அடைந்தேன் - திருவிண்ணகர் மேயவனே! 1462

கல்லா ஐம்புலன்கள் அவை கண்டவாறு செய்யகில்லேன்;
மல்லா! மல்லம் அருள் மல்லர் மாள மல் அடர்த்த
மல்லா! மல்லல் அம் சீர் மதிள் நீர் இலங்கை அழித்த
வில்லா! நின் அடைந்தேன் - திருவிண்ணகர் மேயவனே! 1463

வேறா யான் இரந்தேன்; வெகுளாது மனக்கொள், எந்தாய்!
ஆறா வெம் நரகத்து அடியேனை இடக் கருதி,
கூறா ஐவர் வந்து குமைக்கக் குடிவிட்டவரைத்
தேறாது உன் அடைந்தேன் - திருவிண்ணகர் மேயவனே! 1464

தீ வாய் வல் வினையார் உடன் நின்று சிறந்தவர்போல்,
மேவா வெம் நரகத்து இட உற்று விரைந்து வந்தார்;
மூவா வானவர் தம் முதல்வா! மதி கோள் விடுத்த
தேவா! நின் அடைந்தேன் - திருவிண்ணகர் மேயவனே! 1465

போது ஆர் தாமரையாள், புலவி குல வானவர் தம்
கோதா! கோது இல் செங்கோல் குடை மன்னர் இடை நடந்த
தூதா! தூ மொழியாய்! சுடர்போல் என் மனத்து இருந்த
வேதா! நின் அடைந்தேன் - திருவிண்ணகர் மேயவனே! 1466

தேன் ஆர் பூம் புறவில் திருவிண்ணகர் மேயவனை
வான் ஆரும் மதிள் சூழ் வயல் மங்கையர் கோன், மருவார்
ஊன் ஆர் வேல் கலியன், ஒலிசெய் தமிழ் மாலை வல்லார்
கோன் ஆய், வானவர் - தம் கொடி மா நகர் கூடுவரே. 1467

## திருவிண்ணகர் – 3

துறப்பேன் அல்லேன் இன்பம்; துறவாது நின் உருவம்
மறப்பேன் அல்லேன் என்றும்; மறவாது யான் உலகில்
பிறப்பேன் ஆக எண்ணேன்; பிறவாமை பெற்றது, நின்
திறத்தேன் ஆதன்மையால் - திருவிண்ணகரானே! 1468





தேன் பருகி இசை பாடும் வண்டுகள் அமரும் கூந்தலை உடைய பெண்கள் பல்லாண்டு கூற, உலகாண்ட மன்னர்களுக்கும் மரணம் உண்டு. "முன்பு ஆண்டவர் மாண்டனர்" என்னும் பேச்சுக்கு ஏற்பச் செல்வம் நிலையற்றது. திருவிண்ணகரப்பெருமானே! ஆதலால் இல்வாழ்க்கை வேண்டேன். உன் திருவடி அடைந்தேன். 1462

மற்போரில் சாணூரன், முஷ்டிகன் இருவரையும் அழித்த வலிமை பெற்றவனே! நூல்நெறிகளின் படி நடவாத கொடிய ஐம்புலன்களும் கண்டபடி செய்வதற்கு நான் விரும்பேன். கடலும் மதிளும் சூழ்ந்த செல்வம் நிறைந்த இலங்கையை அழித்த வில்லாளனே! திருவிண்ணகரப்பெருமானே! உன் திருவடி அடைந்தேன். 1463

இதுவரை உன்னைப் புறக்கணித்த நான் இப்பொழுது வேண்டுவதைச் சினந்திடாமல் மனம் கொள்ள வேண்டும். கொடிய நரகில் என்னைத் தள்ள எண்ணும் ஐம்புலன்களும் கூறு போடுகின்றன. நல்வழிப்படுத்தவே அவற்றை நீ வைத்தாய். ஆயினும் நான் அவற்றை நம்பேன். திருவிண்ணகர்ப்பெருமானே! உன் திருவடி அடைந்தேன் 1464

தீயை உமிழ்வது போன்ற கொடிய பாவங்கள் நெருங்கிய உறவினர்போல் என்னைப் பிரியாமல் நரகில் தள்ள விரைகின்றன. மூப்பற்றவனே! நித்திய சூரிகள் தலைவா! சந்திரனின் நோயைத் தீர்த்தவனே! திருவிண்ணகரத்தோனே! நான் உன்னிடம் அடைக்கலம் புகுந்தேன். 1465

தாமரைப் பூவில் உள்ள திருமகள், பூமாதேவி, நித்திய சூரிகள் ஆகியோருக்கு மகிழ்ச்சி தருபவனே! உறுதியான ஆணை செலுத்திய துரியோதன மன்னர் அவையில் தூதனாகச் சென்று தூய சொற்களைப் பேசியவனே! உன்னை நான் அடைந்தேன் 1466

வான் அளவும் மதிளும் வயல்களும் சூழ்ந்த திருமங்கையில் உள்ளவர்களின் தலைவரான கலியன், இத் தமிழ்மாலையை அருளினார். தேன் துளிர்க்கும் பூஞ்சோலைகள் உள்ள திருவிண்ணகரப் பெருமானைப் பற்றியது இப் பதிகம். இப் பாசுரங்களைப் பயில்வோர் நித்திய சூரிகள் வாழும் பரமபதம் அடைவார்கள். 1467

## திருவிண்ணகர் – 3

திருவிண்ணகரப்பெருமானே! உன்னை அனுபவித்த இன்பத்தை விடேன். உன் வடிவழகை என்றும் மறக்கமாட்டேன். ஆதலால் இனி உலகில் பிறப்பேன் என்று நினையேன். உன் அடியவன் ஆனதால் என் பிறவியும் தொலையப் பெற்றேன். 1468

துறந்தேன், ஆர்வச் செற்றச் சுற்றம்; துறந்தமையால்,
சிறந்தேன், நின் அடிக்கே அடிமை ; திருமாலே!
அறம் தான் ஆய்த் திரிவாய்! உன்னை என் மனத்து அகத்தே
திறம்பாமல் கொண்டேன் - திருவிண்ணகரானே! 1469

மான் ஏய் நோக்கு நல்லார் மதிபோல் முகத்து உலவும்
ஊன் ஏய் கண் வாளிக்கு உடைந்து, ஓட்டந்து, உன் அடைந்தேன்
கோனே! குறுங்குடியுள் குழகா! திருநறையூர்த்
தேனே! வரு புனல் சூழ் திருவிண்ணகரானே! 1470

சாந்து ஏந்து மென் முலையார் தடந் தோள் புணர் இன்ப வெள்ளத்து
ஆழ்ந்தேன்; அரு நரகத்து அழுந்தும் பயன் படைத்தேன்;
போந்தேன், புண்ணியனே! உன்னை எய்தி, என் தீவினைகள்
தீர்ந்தேன்; நின் அடைந்தேன் - திருவிண்ணகரானே! 1471

மற்று ஓர் தெய்வம் எண்ணேன்; உன்னை என் மனத்து வைத்துப்
பெற்றேன்; பெற்றதுவும், பிறவாமை எம் பெருமான்!
வற்றா நீள் கடல் சூழ் இலங்கை இராவணனைச்
செற்றாய்! கொற்றவனே! திருவிண்ணகரானே! 1472

மை ஒண் கருங் கடலும், நிலனும், மணி வரையும்,
செய்ய சுடர் இரண்டும் இவை ஆய நின்னை நெஞ்சில்
உய்யும் வகை உணர்ந்தேன், உண்மையால்; இனி யாதும் மற்று ஓர்
தெய்வம் பிறிது அறியேன் - திருவிண்ணகரானே! 1473

வேறே கூறுவது உண்டு; அடியேன் விரித்து உரைக்கும்
ஆறே நீ பணியாது அடை, நின் திருமனத்து;
கூறேன், நெஞ்சு தன்னால் குணம் கொண்டு, மற்று ஓர் தெய்வம்;
தேறேன், உன்னை அல்லால் - திருவிண்ணகரானே! 1474

முளிந்தீந்த வெம் கடத்து மூரிப் பெருங் களிற்றால்
விளிந்தீந்த மா மரம்போல் வீழ்ந்தாரை நினையாதே,
அளிந்து ஓர்ந்த சிந்தை நின்பால் அடியேற்கு வான் உலகம்
தெளிந்தே என்று எய்துவது? திருவிண்ணகரானே! 1475





திருவிண்ணகரானே! திருமாலே! தருமத்தின் வடிவமான நீ, அருளை வழங்கக் காலம் பார்த்துத் திரிவாய். சுற்றத்தார் உறவையும் அதனால் ஏற்படும் விருப்பு வெறுப்பையும் நான் துறந்தேன். ஆதலால் உன் திருவடிகளில் தொண்டு செய்யும் தகுதி பெற்றேன். என் நெஞ்சில் உன்னைக் கொண்டுள்ளேன். **1469**

என் அரசே! கலந்து பழகவே திருக்குறுங்குடி வந்தாயோ? திருநறையூரில் எழுந்தருளிய தேனே! நீர்வளம் உள்ள திருவிண்ணகரானே! மான் பார்வை உடைய மாதர்களின் சந்திரனை ஒத்த முகத்தில், புரளும் சதைப்பற்றுக் கண்களாகிய அம்புக்கு நான் தளர்ந்தேன். ஓடிவந்து சரண் அடைந்தேன். **1470**

திருவிண்ணகரனே! புண்ணியனே! குங்குமம் பூசிய முலைகளை உடைய பெண்களின் தோள்களைத் தழுவிய இன்ப வெள்ளத்தில் முன்பு, நான் மூழ்கினேன். அதனால் உலக வாழ்வாகிய நரகில் அழுந்தினேன். இப்பொழுது உன் திருவடிகளைத் துணையாக அடைந்தபின் பாவங்கள் தீரப்பெற்றேன். ஆகவே உன்னை அடைந்தேன். **1471**

வற்றாத கடலால் சூழப்பட்ட இலங்கையின் அரசன் இராவணனைக் கொன்று வெற்றி பெற்றவனே! திருவிண்ணகரத்தில் உள்ளவனே! உன்னைத் தவிர வேறு தெய்வத்தை நான் நினையேன். இறைவா! உன்னை என் நெஞ்சில் வைத்து பிறவாமை ஆகிய பேற்றை அடைந்தேன் **1472**

திருவிண்ணகரானே! மைந்நிறக்கடல் நிலம், மலைகள், ஒளி உள்ள சூரியன் சந்திரன் ஆகியவற்றை உன் உடைமைகளாக கொண்ட நீ, அவற்றின் உள்ளே இருக்கிறாய். இத்தகைய உன்னை என் நெஞ்சால் உணர்ந்து உய்வு பெற்றேன். இதற்குப் பிறகு, உன்னை விட வேறு தெய்வம் அறியேன் **1473**

திருவிண்ணகரப் பெருமானே! அடியேன் தனிப்பட உம்மிடத்தே கூறுவது ஒன்றுண்டு. விவரித்துக் கூறுமாறு அருளாமல் உமது திருவுள்ளத்தில் விண்ணப்பத்தை ஏற்க வேண்டும். உம்மைத் தவிர வேறு தெய்வத்தை வாயாலே பேசேன். மற்ற தேவதைகளின் குணங்களைக் கண்டாலும் அவர்களை ஏற்கமாட்டேன். **1474**

திருவிண்ணகரப் பிரானே! உலர்ந்து எரிந்த மரங்கள் உள்ள காட்டில் பலமுடைய யானையால் தள்ளப்பட்ட மரம்போல வீழ்ந்து போனவரை நான் நினையேன். உன்னிடத்தே தெளிவான நம்பிக்கையுடன் பக்தி கொண்டு உன்னை எப்பொழுதும் சிந்திக்கிறேன். அடியேனுக்குப் பரமபதம் எப்பொழுது அருள்வாய்? **1475**

சொல்லாய், திரு மார்வா! உனக்கு ஆகித் தொண்டு பட்ட
நல்லேனை வினைகள் நலியாமை நம்பு நம்பீ!
மல்லா! குடம் ஆடீ ! மதுசூதனே! உலகில்
செல்லா நல் இசையாய்! திருவிண்ணகரானே! 1476

தார் ஆர் மலர்க் கமலத் தடம் சூழ்ந்த தண் புறவில்
சீர் ஆர் நெடு மறுகின் திருவிண்ணகரானைக்
கார் ஆர் புயல் தடக் கைக் கலியன் ஒலி மாலை
ஆர் ஆர் இவை வல்லார், அவர்க்கு அல்லல் நில்லாவே. 1477

## திருநறையூர் – 1

கண்ணும் சுழன்று பீளையோடு ஈளை வந்து ஏங்கினால்,
பண் இன் மொழியார் பைய நடமின் என்னாதமுன்,
விண்ணும், மலையும், வேதமும், வேள்வியும் ஆயினான்
நண்ணும் நறையூர் நாம் தொழுதும், எழு, நெஞ்சமே! 1478

கொங்கு உண் குழலார் கூடி இருந்து, சிரித்து, நீர்
இங்கு என் இருமி எம்பால் வந்தது? என்று இகழாதமுன்,
திங்கள், எரி, கால், செஞ் சுடர் ஆயவன் தேசு உடை
நங்கள் நறையூர் நாம் தொழுதும், எழு, நெஞ்சமே! 1479

கொங்கு ஆர் குழலார் கூடி இருந்து, சிரித்து, எம்மை
எம் கோலம், ஐயா! என் இனிக் காண்பது? என்னாதமுன்,
செங்கோல் வலவன் தாள் பணிந்து ஏத்தித் திகழும் ஊர்
நம் கோன் நறையூர் - நாம் தொழுதும், எழு, நெஞ்சமே! 1480

கொம்பும், அரவமும், வல்லியும் வென்ற நுண் ஏர் இடை
வம்பு உண் குழலார் வாசல் அடைத்து இகழாதமுன்,
செம் பொன் கமுகு இனம் தான் கனியும் செழும் சோலை சூழ்
நம்பன் நறையூர் நாம் தொழுதும், எழு, நெஞ்சமே! 1481





மிக்க வலிமையுடன் குடக்கூத்து ஆடியவனே! மதுசூதனா! உலகில் இல்லாத எல்லாப் புகழும் உடையவனே நம்பீ! திருவிண்ணகரத்தில் உள்ள திருமகள் கேள்வனே! உனக்கு அடிமைப்பட்ட நல்லவனான என் பாவங்கள் துன்புறுத்தாதபடி ஏற்று அருள வேண்டும். இதுபற்றிப் பதில் கூறுவாயா? **1476**

தாமரைப் பூக்கள் மலரும் குளங்கள் சூழ்ந்த சோலைகளையும் செல்வம் மிகுந்த வீதிகளையும் பெற்ற திருவிண்ணகரப் பெருமானைக் கலியன் இத்தமிழ்ப் பாசுரங்களில் பாடினார். மேகம் ஒத்த கொடையாளரான ஆழ்வாரின் பாசுரங்களைப் பயில்பவர்க்குப் பாவங்கள் நில்லாமல் அழியும். **1477**

## திருநறையூர் – 1

பீளை தோன்றிய கண்கள் சுழலவும், கோழை மேலிட்டு உடல் தளர்ந்தால் இசையிலும் இனிய பேச்சுடைய பெண்கள் "மெள்ள நடந்து போம்" என்று கேலி புரிவார்கள். மனமே! இதற்கு முன்னே நீ திருநறையூர்ப் பெருமானைத் தொழுவாய். வானமாகவும் மலைகளாகவும் ஆன அவனே, வேதப்பொருள்; வேள்விப்பயனும் ஆவான். **1478**

மணம் வீசும் கூந்தலுடைய பெண்கள் கூடிச்சிரித்து "நீர் இருமிக் கொண்டு எங்கள் பக்கம் வருவதேன்?" என்று இகழ்வார்கள். நெஞ்சமே! இதற்கு முன்பேயே திருநறையூர்ப் பெருமானை வணங்கு. அவனே சந்திரன், அக்னி, காற்று, சூரியன் ஆகியவற்றில் புகுந்து நியமிக்கும் இறைவன் ஆவான். **1479**

வாசனை வீசும் கூந்தலைப் பெற்ற பெண்கள் சிரித்தவாறு, "கிழவரே! வயதான பின்னும், எங்களையும் எங்கள் கோலத்தையும் ஏன் பார்க்கிறீர்?" என்று கேட்பர். நெஞ்சமே! இதற்கு முன்பே, திருநறையூர்ப் பெருமானை வணங்கு. நல்லாட்சி செய்யும் சோழ மன்னன், இத்தலம் சென்று பெருமானை வணங்கித் துதிப்பான். **1480**

மனமே! வஞ்சிக் கொம்பு, பாம்பு, வல்லிக்கொடி ஆகியவற்றை வென்ற நுண்ணிய இடையையும் மணம் வீசும் கூந்தலையும் பெற்ற பெண்கள், தங்கள் வாசல் கதவுகளை அடைத்து அவமதிக்கும் முன்னே, திருநறையூர்ப் பெருமானை வணங்குவாய். அவனே நம்பத் தகுந்தவன். சிவந்த பழங்களை உடைய கமுகு மரச் சோலைகள் இத் தலத்தைச் சூழ்ந்துள்ளன. **1481**

விலங்கும், கயலும், வேலும், ஒண் காவியும் வென்ற கண்,
சலம் கொண்ட சொல்லார் தாங்கள் சிரித்து, இகழாத முன்,
மலங்கும், வராலும், வாளையும் பாய் வயல் சூழ்தரு,
நலம் கொள் நறையூர் நாம் தொழுதும், எழு, நெஞ்சமே! 1482

மின் நேர் இடையார், வேட்கையை மாற்றியிருந்து,
என் நீர் இருமி எம்பால் வந்தது? என்று இகழாதமுன்,
தொல் நீர் இலங்கை மலங்க விலங்கு எரி ஊட்டினான்
நல் நீர் நறையூர் நாம் தொழுதும், எழு, நெஞ்சமே! 1483

வில் ஏர் நுதலார், வேட்கையை மாற்றி, சிரித்து, இவன்
பொல்லான், திரைந்தான் என்னும் புறன் உரை கேட்பதன்முன்,
சொல் ஆர் மறை நான்கு ஓதி உலகில் நிலாயவர்
நல்லார் நறையூர் நாம் தொழுதும், எழு, நெஞ்சமே! 1484

வாள் ஒண் கண் நல்லார் தாங்கள் மதனன் என்றார் தம்மைக்
கேள்மின்கள்,ஈளையோடு ஏங்கு கிழவன் என்னாதமுன்,
வேள்வும் விழவும் வீதியில் என்றும் அறாத ஊர்,
நாளும், நறையூர் நாம் தொழுதும், எழு, நெஞ்சமே! 1485

கனி சேர்ந்து இலங்கு நல் வாயவர், காதன்மை விட்டிட,
குனி சேர்ந்து உடலம் கோலில் தளர்ந்து, இளையாதமுன்,
பனி சேர் விசும்பில் பால்மதி கோள் விடுத்தான் இடம்,
நனி சேர் நறையூர் நாம் தொழுதும், எழு, நெஞ்சமே! 1486

பிறை சேர் நுதலார் பேணுதல் நம்மை இலாதமுன்,
நறை சேர் பொழில் சூழ் நறையூர் தொழு, நெஞ்சமே, என்ற
கறை ஆர் நெடு வேல் மங்கையர் கோன், கலிகன்றி சொல்
மறவாது உரைப்பவர் வானவர்க்கு இன் அரசு ஆவரே. 1487

## திருநறையூர் – 2

கலங்க முந்நீர் கடைந்து, அமுதம் கொண்டு, இமையோர்
துளங்கல் தீர நல்கு, சோதிச் சுடர் ஆய
வலங்கை ஆழி இடங்கைச் சங்கம் உடையான் ஊர்-
நலம் கொள் வாய்மை அந்தணர் வாழும் - நறையூரே. 1488





நெஞ்சமே! மான், கயல்மீன், வேல், செங்கழுநீர்ப்பூ ஆகியவற்றை தோற்கடிக்கும் கண்களுடைய வஞ்சக மாதர்கள் சிரிக்கும் முன்னே, நலம் செய்யும் திருநறையூர்ப் பெருமானைத் தொழு. மலங்கு வரால், வாளை மீன்கள் துள்ளும் நீர்வள வயல்கள் இவ்வூரைச் சுற்றி உள்ளன. 1482

மனமே! பின்னல் இடை உடைய பெண்கள், முன்பு வைத்த அன்பை மாற்றிக் கொண்டு, "கிழவரே! இருமியபடி என்னிடம் ஏன் வந்தீர்?" என்று இகழ்வார்கள். இம்முதுமைக்கு முன்னமேயே நீர் வளம் உடைய திருநறையூர் பெருமானை வணங்கு. கடல்சூழ்ந்த இலங்கையை, அனுமனால் தீ இடுவித்த இராமனின் திருத்தலம் இது. 1483

நெஞ்சே! விற்புருவம் உடைய பெண்கள் முன்பு காட்டிய விருப்பை ஒதுக்கி விட்டுச் சிரித்தபடி,"இக்கிழவன் பொல்லா தவன்; உடல் தளர்ந்தான்" என்று பழிப்பதற்கு முன்னே, திருநறையூர்ப் பெருமானை வணங்குவாய். சொல் வளம் மிகுந்த நான்கு வேதங்களை ஓதும் நல்ல அந்தணர்கள் இங்கே வாழ்கிறார்கள். 1484

வாள் போன்ற கண்களுடைய பெண்கள் 'மன்மதன்' என்று முன்பு அழைத்த ஆண்களை இப்பொழுது "கோழை மேலிடத் தளரும் கிழவன்" என்று கூறி இகழ்வார். நெஞ்சமே! இந்த முதுமைக்கு முன்பே, திருநறையூர் சென்று பெருமானை வணங்கு. அத்தலத்தில், வேள்வி களும், விழாக்களும், வீதிகளில் எப்பொழுதும் நடக்கும். 1485

கூன் விழுந்து, உடல் தளர்ந்து, கோலே துணையாய் கொண்டு நடக்கும் முதுமையில், கோவைப்பழ உதடுகள் உடைய மாதர்கள், தங்கள் மேல் வைத்த ஆசையை விலக்கி விடுவர். நெஞ்சே! இதற்கு முன்பே, திருநறையூர்ப் பெருமானை வணங்கு. இவனே, பால் போல் விளங்கும் வானத்துச் சந்திரனின் நோய் தீர்த்த திருமால் ஆவான். 1486

திருமங்கை ஆழ்வார் தம் நெஞ்சிடம், "பெண்கள் தம் ஆதரவைத் தவிர்த்து இகழும் முதுமைக்கு முன்னேயே திருநறையூர்ப் பெருமானை வணங்கு" என்று கூறுவதாக இப்பாசுரங்களில் அருளினார். கலிகன்றியின் இப்பதிகத்தை மறவாது பாடுபவர். நித்திய சூரிகளின் பரமபதத்தில் அரசர் ஆவர். 1487

## திருநறையூர் – 2

நல்லவராய் உண்மையைப் பேசும் அந்தணர் வாழும் திருநறையூரில் எழுந்தருளிய திருமால், வலக்கையில் சக்கரத்துடனும் இடக்கையில் சங்குடன் காட்சி தருகிறான். ஒளி மிகுந்த இப் பெருமானே தேவர்களின் கலக்கம் தீரக் கடல் கடைந்து அமுதத்தைக் கொடுத்தான். 1488

முனை ஆர் சீயம் ஆகி, அவுணன் முரண் மார்வம்
புனை வாள் உகிரால் போழ்பட ஈர்ந்த புனிதன் ஊர்
சினை ஆர் தேமாஞ் செந் தளிர் கோதிக் குயில் கூவும்
நனை ஆர் சோலை சூழ்ந்து அழகு ஆய - நறையூரே. 1489

ஆனை, புரவி, தேரொடு காலாள் அணிகொண்ட
சேனைத் தொகையைச் சாடி, இலங்கை செற்றான் ஊர்-
மீனைத் தழுவி வீழ்ந்து எழும் மள்ளர்க்கு அலமந்து,
நானப் புதலில் ஆமை ஒளிக்கும் - நறையூரே. 1490

உறி ஆர் வெண்ணெய் உண்டு, உரலொடும் கட்டுண்டு,
வெறி ஆர் கூந்தல் பின்னை பொருட்டு, ஆன் வென்றான் ஊர்
பொறி ஆர் மஞ்ஞை பூம் பொழில்தோறும் நடம் ஆட,
நறு நாண்மலர்மேல் வண்டு இசை பாடும் - நறையூரே. 1491

விடை ஏழ் வென்று, மென் தோள் ஆய்ச்சிக்கு அன்பன் ஆய்,
நடையால், நின்ற மருதம் சாய்த்த நாதன் ஊர்
பெடையோடு அன்னம் பெய்வளையார் தம் பின் சென்று,
நடையோடு இயலி, நாணி ஒளிக்கும் - நறையூரே. 1492

பகு வாய் வன் பேய் கொங்கை சுவைத்து ஆர் உயிர் உண்டு,
புகு வாய் நின்ற போதகம் வீழப் பொருதான் ஊர்
நெகு வாய் நெய்தல் பூ மது மாந்தி, கமலத்தின்
நகு வாய் மலர்மேல் அன்னம் உறங்கும் - நறையூரே. 1493

முந்து நூலும், முப்புரி நூலும், முன்,ஈந்த
அந்தணாளன் பிள்ளையை அஞ்ஞான்று அளித்தான் ஊர்
பொந்தில் வாழும் பிள்ளைக்கு ஆகி, புள் ஓடி
நந்து வாரும் பைம் புனல் வாவி - நறையூரே. 1494

வெள்ளைப் புரவித் தேர் விசயற்கு ஆய், விறல் வியூகம்
விள்ள, சிந்துக்கோன் விழ, ஊர்ந்த விமலன் ஊர்
கொள்ளைக் கொழு மீன் உண் குருகு ஓடி பெடையோடும்
நள்ளக் கமலத் தேறல் உகுக்கும் - நறையூரே. 1495







இரணியனுடன் போரிட்டு அவன் மார்பை ஒளியுள்ள தன் நகங்களால்பிளந்த, பரிசுத்தனான நரசிம்மன் திருநறையூரில் எழுந்தருளி உள்ளான். இவ்வூர்க் குயில்கள் மாமரக்கிளைகளின் செந்தளிர்களைக் கோதியபடி கூவும். பூக்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த அழகிய தலம் இது. **1489**

யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நால்வகைப் படைகளைச் சாடி இலங்கையை அழித்த இராமபிரான் திருநறையூரில் கோயில்கொண்டான். இவ்வூரில் உழவர்கள் தம் இருகைகளாலும் மீன்களைப் பிடிக்க முயலும்பொழுது தள்ளப்பட்டு கீழே விழுந்து எழுவர். இதனைக் கண்டு பயந்த ஆமை மஞ்சள் புதரில் மறையும். **1490**

கண்ணன் உறிகளில் இருந்த வெண்ணெயை உண்டதால் யசோதையால் உரலோடு கட்டப்பட்டான். மணம் வீசும் கூந்தலை உடைய நப்பின்னையைப் பெற எருதுகளை வென்ற இப்பெருமான் திருநறையூரில் உள்ளான். இங்குள்ள சோலை களில் புள்ளி மயில்கள் நடனமாடும். இதற்கேற்ப, வண்டுகள் தாமரையில் இசைபாடும். **1491**

கண்ணன் ஏழு காளைகளை வென்று மென்தோள் நப்பின் னையை அன்புடன் பிடித்தான். தவழ்ந்தபடியே மருத மரத்தைத் தள்ளிய இவன் திருநறையூரில் எழுந்தருளினான். இவ்வூர்ப் பெண்கள் நடப்பதைப் பார்த்து, அன்னங்கள் தம் பேடைகளுடன் உலாவித் தோற்றதால், வெட்கம் அடைந்து ஒளிந்து கொள்ளும். **1492**

பெரிய வாயுடைய பூதனைப் பேயின் முலை சுவைத்து அவள் உயிர் உண்ட பெருமான் திருநறையூரில் உள்ளான். குவலயாபீட யானையுடன் போரிட்டு அழித்த அக்கண்ணனின் திருத்தலத்தில் அன்னங்கள் நெய்தல் பூக்களில் உள்ள தேனை அருந்தி, மலர்ந்த தாமரை மீது கண் உறங்கும். **1493**

தொன்மையான வேதத்தைத் தனக்குப் பயிற்றுவித்து உபநயனம் செய்வித்த குருவின் பிள்ளையைக் கண்ணன் கடலில் இருந்து மீட்டுக் கொடுத்தான். இந்தக் கண்ணபிரான் எழுந் தருளிய திருநறையூரில், பறவைகள் மரப்பொந்துகளில் வாழும் குஞ்சுகளுக்கு, நத்தைகளை திரட்டிக்கொடுக்கும். தெளிந்த நீர்க் குளங்களும் உள்ளன. **1494**

கண்ணன், வெள்ளைக் குதிரைகள் பூட்டிய தேரை உடைய அர்ச்சுனனுக்காகப் போர் அணிகளைச் சிதறச்செய்து, சிந்து தேச அரசன் ஜயத்திரதனைக் கொல்லச் செய்தான். இந்த விமலன் எழுந்தருளிய திருநறையூரில் நாரைகள் தம் பேடைகளுடன் கொழுத்த மீன்களை உண்டபிறகு, தாமரைப் பூவில் உள்ள தேனை அருந்தும். **1495**

பாரை ஊரும் பாரம் தீரப் பார்த்தன் தன்
தேரை ஊரும் தேவதேவன் சேரும் ஊர்
தாரை ஊரும் தண் தளிர் வேலி புடை சூழ,
நாரை ஊரும் நல் வயல் சூழ்ந்த - நறையூரே. 1496

தாமத் துளப நீள் முடி மாயன் தான் நின்ற
நாமத் திரள் மா மாளிகை சூழ்ந்த நறையூர்மேல்
காமக் கதிர் வேல் வல்லான் கலியன் ஒலி மாலை
சேமத் துணை ஆம், செப்பும் அவர்க்கு, திருமாலே. 1497

## திருநறையூர் - 3

அம்பரமும், பெரு நிலனும் திசைகள் எட்டும்,
அலை கடலும், குல வரையும் உண்ட கண்டன்,
கொம்பு அமரும் வட மரத்தின் இலைமேல் பள்ளி
கூடினான் திருவடியே கூடகிற்பீர்!
வம்பு அவிழும் செண்பகத்தின் வாசம் உண்டு,
மணி வண்டு வகுளத்தின் மலர்மேல் வைகு,
செம்பியன் கோச் செங்கணான் சேர்ந்த கோயில்,
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. 1498

கொழுங் கயல் ஆய், நெடு வெள்ளம் கொண்ட காலம்
குல வரையின் மீது ஓடி அண்டத்து அப்பால்
எழுந்து இனிது விளையாடும் ஈசன், எந்தை,
இணை அடிக்கீழ் இனிது இருப்பீர்! இன வண்டு ஆலும்,
உழும் செறுவில் மணி கொணர்ந்து கரைமேல் சிந்தி,
உலகு எல்லாம் சந்தனமும் அகிலும் கொள்ள,
செழும் பொன்னி வளம் கொடுக்கும் சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. 1499

பவ்வ நீர் உடை ஆடை ஆகச் சுற்றி,
பார் அகலம் திருவடியா, பவனம் மெய்யா,
செவ்வி மாதிரம் எட்டும் தோளா, அண்டம்
திரு முடியா நின்றான்பால் செல்லகிற்பீர்!
கவ்வை மா களிறு உந்தி, வெண்ணி ஏற்ற
கழல் மன்னர் மணி முடிமேல் காகம் ஏறத்
தெய்வ வாள் வலம் கொண்ட சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. 1500





பூமி பாரம் தொலையும் படி, அர்ச்சுனன் தேரை ஓட்டிய, தேவ தேவனான கண்ணன் எழுந்தருளிய திருநறையூரில் வயல்களைச் சுற்றித் தேன் ஒழுகும். இலைத் தளிர்களே வேலியாய் விளங்கும். இங்கு நாரைகள் உலவும். 1496

ஒளி விடும் வேலாயுதம் தாங்கிய கலியன், மாளிகைகள் சூழ்ந்த திருநறையூரில் உள்ள, திருத்துழாய் மாலை சூடிய திருமாலைப் பற்றிப் பாடினார். இப்பாசுரங்களைப் பயில்பவர்க்குத் திருமால் காப்பாகவும் துணையாகவும் உள்ளான். 1497

## திருநறையூர் - 3

வானம், அகன்ற பூமி, எண்திசைகள், அலைகடல், மலைகள் ஆகியவற்றை உண்ட கழுத்துடைய திருமால் ஆலந்தளிரில் பள்ளிக்கொண்டான். இந்த அருஞ் செயலாளனின் திருவடி சேர விரும்புவர்களே! மணிகளால் இழைக்கப்பட்ட மாடங்கள் உள்ள திருநறையூர்க் கோயிலை அடையுங்கள். இவ்வூரில் வண்டுகள் செண்பகப் பூவின் மணத்தை அனுபவித்தபின், மகிழம்பூவில் தவழும். சிவந்த கண்களைக் கொண்ட செம்பியச் சோழன் சேவித்த கோயில் இது. 1498

பிரளய கால வெள்ளத்தில் பூமி மூழ்கிய பொழுது, திருமால், மீன்வடிவில் மலைகள் மீதோடி அண்டபித்திவரை சென்று விளையாடினான். இவ்விறைவனின் இரு திருவடிகளின் கீழே இனிதாக இருக்க விரும்புவரே! சோழன் கோச்செங்கணான் சென்று வணங்கிய திருநறையூருக்குச் செல்லுங்கள். இவ்வூரில் வண்டுகள் இசைபாடும். காவிரி ஆறு வயல் வரம்புகளில் பாய்ந்து மணிகளைச் சிந்தும்; அதில் புரண்டு வரும் அகில் சந்தனக் கட்டைகளை மக்கள் எடுத்துச் செல்வர். 1499

உலகைச் சூழும் கடல் நீரே இறைவனின் ஆடையாகும்; நிலப்பரப்பே திருவடிகள்; காற்றே அவன் திருமேனி; எண் திசைகளே கைகள்; வானமுகடே அவன் திருமுடி. இவ்வாறு எங்கும் பரந்து விளங்கும் திருமாலை அடைய விரும்புவரே! நீங்கள் சோழ மன்னன் சேவித்த திருநறையூருக்குச் செல்லுங்கள். புனிதப் போர்வாளை ஏந்திய இச்சோழன் போரில் யானைகளையும் பகை மன்னர்களையும் அழித்தான். மணிமுடிகள் தாங்கிய அம்மன்னர் களின் தலைகளைக் காகங்களுக்கு இரை ஆக்கினான். 1500

பைங் கண் ஆள் அரி உரு ஆய், வெருவ நோக்கி,
பரு வரைத் தோள் இரணியனைப் பற்றி வாங்கி,
அம் கை வாள் உகிர் நுதியால் அவனது ஆகம்
அம் குருதி பொங்குவித்தான் அடிக்கீழ் நிற்பீர்!
வெம் கண் மா களிறு உந்தி, வெண்ணி ஏற்ற
விறல் மன்னர் திறல் அழிய, வெம் மா உய்த்த
செங்கணான் கோச் சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. 1501

அன்று உலகம் மூன்றினையும் அளந்து வேறு ஓர்
அரி உரு ஆய், இரணியனது ஆகம் கீண்டு,
வென்று அவனை விண் உலகில் செல உய்த்தாற்கு
விருந்து ஆவீர்! மேல் எழுந்து விலங்கல் பாய்ந்து
பொன் சிதறி, மணி கொணர்ந்து கரைமேல் சிந்திப்
புலம் பரந்து நிலம் பரக்கும் பொன்னி நாடன்,
தென் தமிழன், வட புலக்கோன், சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. 1502

தன்னாலே தன் உருவம் பயந்த தான் ஆய்,
தயங்கு ஒளி சேர் மூவுலகும் தான் ஆய், வான் ஆய்,
தன்னாலே தன் உருவின் மூர்த்தி மூன்று ஆய்,
தான் ஆயன் ஆயினான் சரண் என்று உய்வீர்!
மின் ஆடு வேல் ஏந்து விளைந்த வேளை
விண் ஏறத் தனி வேல் உய்த்து உலகம் ஆண்ட
தென்னாடன் குடகொங்கன், சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. 1503

முலைத் தடத்த நஞ்சு உண்டு துஞ்சப் பேய்ச்சி,
முது துவரைக் குலபதி ஆய், காலிப்பின்னே
இலைத் தடத்த குழல் ஊதி, ஆயர் மாதர்
இன வளை கொண்டான் அடிக்கீழ் எய்தகிற்பீர்!
மலைத் தடத்த மணி கொணர்ந்து வையம் உய்ய
வளம் கொடுக்கும் வரு புனல் அம் பொன்னிநாடன்,
சிலைத் தடக் கைக் குலச் சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. 1504

முருக்கு இலங்கு கனித் துவர் வாய்ப் பின்னை கேள்வன,
மன் எல்லாம் முன் அவியச் சென்று, வென்றிச்
செருக்களத்துத் திறல் அழியச் செற்ற வேந்தன்
சிரம் துணித்தான் திருவடி நும் சென்னி வைப்பீர்!
இருக்கு இலங்கு திருமொழி வாய் எண் தோள் ஈசற்கு
எழில் மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட
திருக் குலத்து வளச் சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. 1505





நரசிம்மப்பிரான், தன் பசுங்கண்களால் பயமுறுத்தியபடி, பருத்த தோள்களும் வரமும் கொண்ட இரணியனைத் தள்ளினான். தன் நகங்களால் அவன் உடம்பிலிருந்து இரத்தம் பெருகச் செய்தான். இப் பெருமான் திருவடிக் கீழ் இருக்க விரும்புபவரே; கோச்செங்கணான் வணங்கிய திருநறையூர் செல்லுங்கள். இச்சோழன் குதிரை ஏறிப் போர் செய்து யானைகளையும் அரசர்களையும் அழித்தான். 1501

திரிவிக்கிரமனாய் மூன்று உலகையும் அளந்ததிருமால், நரசிம்மனாய் இரணியன் உடலை இரண்டாக்கி வானுலகு அனுப்பினான். இப்பெருமானுக்கு விருந்தினராக விரும்புவரே! வட நாட்டை அடிப்படுத்திய தென்னாட்டுச் சோழன் வணங்கிய திருநறையூர்க் கோவிலுக்கு செல்லுங்கள். மலைகளைச் சாடிப் பொன்னையும் மணியையும் இழுத்துப் பாயும் காவிரி நாட்டுக்கு மன்னன் இவன். 1502

திருமால், தன் மேனி இயல்புகளைத் தானிட்ட வழக்காகக் கொண்டவன். ஒளி உடைய மூவுலகங்களுக்கும் பரமபதத்துக்கும் இறைவன். தானே விரும்பி, பிரமன், விஷ்ணு, சிவன் ஆனவன். கர்மத்துக்குக் கட்டுப்படாத கண்ணன் ஆகப் பிறந்தான். இத் திருமாலை உபாயமாகக் கொள்பவர்களே! தென்னாட்டையும் கொங்கு நாட்டையும் ஆண்ட,சோழன் வணங்கிய திருநறையூர்க் கோவிலுக்குப் போங்கள். இச்சோழன் வேலேந்திய வேள் என்பவனை வேல் வீசி வீரசுவர்க்கம் அடைவித்தான். 1503

பூதனைப்பேயின் முலை நஞ்சுண்டு அவனை வதைத்தவன்; துவாரகை அரசன்; இலைக் குழல் ஊதிப் பசு மேய்த்தவன்; இடைச்சிகள் வளைகளைக் கவர்ந்து விளையாடியவன் என்னும் சிறப்புகள் உடைய பெருமானின் திருவடிகளை அடைய விரும்புவர்களே! சோழன் வணங்கிய திருநறையூர் மாடக் கோவிலுக்குப் போங்கள். உலக வளத்துக்காக மலையின் மணிகளை உருட்டி ஓடும் காவிரி பாயும் நாட்டுக்கு இவன் பேரரசன் ஆவான். 1504

"முருக்கம் பூவையும் கோவைப் பழத்தையும் ஒத்த உதடுடைய நப்பின்னை கணவன்; போர்க்களம் புகுந்து அரசர்களைக் கொன்று கார்த்தவீரியனின் தலைகளை வெட்டியவன் எனப்படும்" கண்ணனாகவும் பரசுராமனாகவும் வந்த திருமால் திருவடி சூடுவோர்களே! உலகாண்ட உயர்குலத்துச் சோழன் வணங்கிய திருநறையூர் செல்லுங்கள். இருக்கு வேதத்தை வாயால் ஓதித் திருமாலை வணங்கும் எட்டுத் தோள்களுடைய சிவனுக்கு, இச் சோழன் எழுபது மாடக் கோயில்களைக் கட்டினான். 1505

தார் ஆளன், தண் அரங்க ஆளன், பூமேல்
தனியாளன், முனியாளர் ஏத்த நின்ற
பேர் ஆளன், ஆயிரம் பேர் உடைய ஆளன்,
பின்னைக்கு மணவாளன் பெருமை கேட்பீர்!
பார் ஆளர் அவர் இவர் என்று அழுந்தை ஏற்ற
படை மன்னர் உடல் துணியப் பரிமா உய்த்த
தேர் ஆளன், கோச் சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. 1506

செம் மொழி வாய் நால் வேத வாணர் வாழும்
திருநறையூர் மணிமாடச் செங் கண் மாலைப்
பொய்ம் மொழி ஒன்று இல்லாத மெய்ம்மையாளன்,
புல மங்கைக் குல வேந்தன், புலமை ஆர்ந்த
அம் மொழி வாய்க் கலிகன்றி இன்பப் பாடல்
பாடுவார் வியன் உலகில் நமனார் பாடி
வெம் மொழி கேட்டு அஞ்சாதே. மெய்ம்மை சொல்லில்,
விண்ணவர்க்கு விருந்து ஆகும் பெருந் தக்கோரே. 1507

## திருநறையூர் – 4

ஆளும் பணியும் அடியேனைக்
கொண்டான்; விண்ட நிசாசரரைத்
தோளும் தலையும் துணிவும் எய்தச்
சுடு வெம் சிலைவாய்ச் சரம் துரந்தான்
வேளும் சேயும் அனையாரும்,
வேல் கணாரும் பயில் வீதி
நாளும் விழவின் ஒலி ஓவா
நறையூர் நின்ற நம்பியே. 1508

முனி ஆய் வந்து, மூவெழுகால்
முடி சேர் மன்னர் உடல் துணிய
தனி வாய் மழுவின் படை ஆண்ட
தார் ஆர் தோளான்- வார் புறவில்
பனி சேர் முல்லை பல் அரும்ப,
பானல் ஒருபால் கண் காட்ட,
நனி சேர் கமலம் முகங்காட்டும்
நறையூர் நின்ற நம்பியே. 1509





"பரமபதம், இவ்வுலகம் இரண்டையும் காக்கத் தனி மாலை சூடியவன் திருவரங்கன்; தாமரைச் செல்வி திருமகள் நாதன்; சனகாதி முனிவரால் துதிக்கப்படும் பெருமை உடையவன்; ஆயிரம் திருநாமங்கள் கொண்டவன்; நப்பின்னை மணவாளன் "ஆகிய எம் பெருமான் பெருமைகளைக் கேட்க விரும்புபவரே! கோச்சோழன் வணங்கிய திருநறையூர் மாடக் கோவிலுக்குச் செல்லுங்கள். இச்சோழன் குதிரைகள் பூட்டப் பட்டத் தேரை நடத்தி திருவழுந்தூர்ப் போரில் எதிர்த்த மன்னர்களை வீழ்த்தினான். 1506

சத்தியமே பேசி, நான்கு வேதங்களை ஓதும் அந்தணர்கள் வாழும் திருநறையூர்ச் செங்கண் மாலைப் பற்றித் திருமங்கை ஆழ்வார் இப்பதிகம் பாடினார். பொய்கலவாத உண்மையே பேசும் புலமைமிகுந்த கலிகன்றி அருளிய இவற்றைப் பாடுபவர் யமதூதர் கடுமொழிக்கு அஞ்சாதபடி, நித்திய சூரிகளுக்கு விருந்தினராய் ஞானிகள் ஆவர். 1507

## திருநறையூர் – 4

வில்லை வளைத்து அம்பெய்து எதிர்த்த அரக்கர்களின் தோள்களையும் தலைகளையும் துண்டாக்கிய பகவான் திருநறையூரில் கோவில் கொண்டான். மன்மதனையும் முருகனையும் ஒத்த ஆடவரும் வேல்கண் மாதர்களும் வாழும் இவ்வூர்த் தெருக்களில் தினமும் திருவிழா ஆரவாரம் தொடர்ந்து கேட்கும். இப்பெருமான் அடியேனை ஆளாகக் கொண்டு, அடியேன் நினைவில், அவனுக்கு ஆட்பட்ட உணர்வை உண்டாக்கிக் கைங்கரியத்தையும் ஏற்றுக்கொண்டான். 1508

மாலை அணிந்த தோள்களுடைய மழு ஏந்திய பரசுராமன். இருபத்தொரு தடவை முடிமன்னர்களின் உடல்களை வெட்டி னான். இந்த பகவானான நம்பி திருநறையூரில் எழுந்தருளி அடியேனை ஆட் கொண்டான். இவ்வூர்ப்புறவுகளில் முல்லைப் பூக்கள் மாதர்களின் பற்களைப்போல மலரும்; பானல் என்னும் நெய்தற் பூ. அவர்கள் கண்களை ஒக்கும்; தாமரைப் பூக்கள் அவர்களின் முகங்களுக்கு நேராகும். 1509

தெள் ஆர் கடல்வாய் விட வாயச்
சின வாள் அரவில் துயில் அமர்ந்து,
துள்ளா வரு மான் விழ, வாளி
துரந்தான்; இரந்தான் மாவலி மண்
புள் ஆர் புறவில் பூங் காவி
பொலன் கொள் மாதர் கண் காட்ட,
நள் ஆர் கமலம் முகம் காட்டும்
நறையூர் நின்ற நம்பியே. 1510

ஒளியா, வெண்ணெய் உண்டான் என்று,
உரலோடு ஆய்ச்சி ஒண் கயிற்றால்,
விளியா, ஆர்க்க ஆப்புண்டு
விம்மி அழுதான் - மென் மலர்மேல்
களியா, வண்டு கள் உண்ண,
காமர் தென்றல் அலர் தூற்ற,
நளிர்வாய் முல்லை முறுவலிக்கும்
நறையூர் நின்ற நம்பியே. 1511

வில் ஆர் விழவில் வட மதுரை
விரும்பி, விரும்பா மல் அடர்த்து,
கல் ஆர்திரள் தோள் கஞ்சனைக்
காய்ந்தான்; பாய்ந்தான் காளியன்மேல்
சொல் ஆர் சுருதி முறை ஓதிச்
சோமுச் செய்யும் தொழிலினோர்,
நல்லார் மறையோர் பலர் வாழும்
நறையூர் நின்ற நம்பியே. 1512

வள்ளி கொழுநன் முதலாய
மக்களோடு முக்கணான்
வெள்கி ஓட, விறல் வாணன்
வியன் தோள் வனத்தைத் துணித்து உகந்தான்
பள்ளி கமலத்திடைப் பட்ட
பகு வாய் அலவன் முகம் நோக்கி,
நள்ளி ஊடும் வயல் சூழ்ந்த
நறையூர் நின்ற நம்பியே. 1513

மிடையா வந்த வேல் மன்னர்
வீய, விசயன் தேர் கடவி,
குடையா வரை ஒன்று எடுத்து, ஆயர்
கோ ஆய் நின்றான், கூர் ஆழிப்
படையான் வேதம் நான்கு, ஐந்து
வேள்வி அங்கம் ஆறு, இசை ஏழ்
நடையா வல்ல அந்தணர் வாழ்
நறையூர் நின்ற நம்பியே. 1514





நஞ்சுமிழும் வாயும், ஒளியும், சீறும் இயல்பும் உடைய ஆதிசேஷன் மீது திருப்பாற்கடலில் பள்ளி கொண்டவன், இராமனாய், மாயமான் மீது அம்பெய்தான். மாவலி இடத்தே பூமியை வேண்டிய இந்நம்பி, திருநறையூரில் உள்ளான். இங்குப் பறவைகள் உள்ள தோட்டங்களில் செங்கழுநீர்கள் பெண்களின் கண்களை ஒத்து மலரும். இதழ்களுடைய தாமரைகள் அவர் முகங்களைக் காட்டும். **1510**

ஒளிந்தபடி வெண்ணெய் விழுங்கிய கண்ணனைச் சினந்த யசோதை, கயிற்றால் உரலுடன் கட்டினாள். கட்டுண்டு ஏங்கி அழுத இந்த நம்பி, திருநறையூரில் எழுந்தருளி உள்ளான். இங்குள்ள பூக்களின் வண்டுகள் களிப்புடன் தேனைப் பருகும்; தென்றல் வீசுவதால் மலர்கள் சிதறும். முல்லை மலரும். **1511**

வட மதுரை வில் விழாவிற்கு விருப்பமுடன் சென்ற கண்ணன், தன்னை விரும்பாத மல்லர்களை அழித்தான். கல் போன்ற தோளுடைய கம்சனைக் கொன்றான்; காளிய நாகத்தின் மேல் குதித்து அதனை அடக்கினான். இந்நம்பி திருநறையூரில் காட்சி தருகிறான். இவ்வூரில் வாழும் நல்ல அந்தணர்கள் மந்திரச் சொற்களுடைய வேதங்களை ஓதி, சோமயாகங்கள் செய்து கருமங்களில் குறைவற்றவராய் உள்ளனர். **1512**

வள்ளியின் கணவன், முருகன், முதலிய தம் பிள்ளைகளுடன் போரிட வந்த சிவனை, வெட்கப்பட்டு ஓடச் செய்த கண்ணன், பாணாசுரனின் அகன்ற தோள்களாகிய காட்டை வெட்டி மகிழ்ந்தான். வயல்கள் சூழ்ந்த திருநறையூரில் இந்நம்பி எழுந்தருளி உள்ளான். இங்குள்ள வயலில் பெரிய வாயுடைய ஆண் நண்டு படுப்பதற்காகப் பூவில் சென்றதும் அகப்பட்டு, மகரந்தம் முகத்தில் படிந்ததால் பெண் நண்டு, அம் முகம் நோக்கி, அதன் மீது சந்தேகம் கொண்டு ஊடல் கொள்ளும். **1513**

வேல் ஏந்திக் கூட்டமாய் வந்த மன்னர்கள் அழியும்படி கண்ணன், அர்ச்சுனனின் தேரை ஓட்டினான். மலையைக் குடையாய்த் தூக்கி இடையர்களை காத்த சக்கரச் கையனான நம்பி திருநறையூரில் எழுந்தருளி உள்ளான். நான்கு வேதங்கள் ஆறங்கங்கள் ஏழிசை இவற்றில் வல்லவரான அந்தணர் இத் தலத்தில் ஐவகை வேள்விகளை எப்பொழுதும் செய்வார். **1514**

பந்து ஆர் விரலாள் பாஞ்சாலி
கூந்தல் முடிக்க, பாரதத்து,
கந்து ஆர் களிற்றுக் கழல் மன்னர்
கலங்க, சங்கம் வாய் வைத்தான்
செந்தாமரைமேல் அயனோடு
சிவனும் அனைய பெருமையோர்,
நந்தா வண் கை மறையோர், வாழ்
நறையூர் நின்ற நம்பியே. 1515

ஆறும் பிறையும்,அரவமும்,
அடம்பும் சடைமேல் அணிந்து, உடலம்
நீறும் பூசி, ஏறு ஊரும்
இறையோன் சென்று குறை இரப்ப,
மாறு ஒன்று இல்லா வாச நீர்
வரை மார்வு அகலத்து அளித்து உகந்தான்
நாறும் பொழில் சூழ்ந்து அழகு ஆய
நறையூர் நின்ற நம்பியே. 1516

நன்மை உடைய மறையோர் வாழ்
நறையூர் நின்ற நம்பியைக்
கன்னி மதிள் சூழ் வயல் மங்கைக்
கலியன் ஒலிசெய் தமிழ் மாலை
பன்னி உலகில் பாடுவார்
பாடு சாரா, பழ வினைகள்;
மன்னி உலகம் ஆண்டு போய்,
வானோர் வணங்க வாழ்வாரே. 1517

## திருநறையூர் – 5

மான் கொண்ட தோல் மார்வின் மாணி ஆய், மாவலி மண்
தான் கொண்டு தாளால் அளந்த பெருமானை,
தேன் கொண்ட சாரல் திருவேங்கடத்தானை,
நான் சென்று நாடி நறையூரில் கண்டேனே. 1518

முந்நீரை முன் நாள் கடைந்தானை, மூழ்த்த நாள்
அந் நீரை மீன் ஆய் அமைத்த பெருமானை,
தென் ஆலி மேய திருமாலை, எம்மானை,
நல் நீர் வயல் சூழ் நறையூரில் கண்டேனே. 1519





பந்தை விரலிற் பிடித்த திரௌபதியின் கூந்தலை முடிக்கக் கண்ணன் பாரதப் போரில் பாஞ்சசன்னியத்தை தன் வாயில் வைத்து ஊதினான். மதயானைகள் மீதேறிப் போரிட வந்த துரியோதனாதிகள் சங்கொலி கேட்டு மனம் கலங்கினர். இந்த நம்பி எழுந்தருளிய திரு நறையூரில் வேதியர்கள், தாமரையில் தோன்றிய பிரமனையும் சிவனையும் ஒத்த பெருமை உடையவர். 1515

“கங்கை ஆறு, பிறைமதி, பாம்பு, அடம்பப்பூ, ஆகிய வற்றைக் சடையில் தரித்தவன்; நீறு பூசிய மேனியன்; காளை வாகனம் உடையவன்” எனப்படும் சிவன் தன் குறை தீரக் திருமாலிடம் பிச்சை வேண்டினான். அப்பொழுது தம் மலை போன்ற மார்பில் உண்டான மணம் வீசும் வியர்வை நீரைத் தெளித்துத் திருமால் சாபம் நீக்கினான். இந்த நம்பியின் திருநறையூர் ‘வாசனைப் பூக்கள் உள்ள சோலைகளால் சூழப்பட்டு விளங்குகிறது. 1516

பயன் எதிர்பாரா நல்ல அந்தணர் வாழும் திருநறையூர்ப் பெருமானைப் பற்றி, அழியாத மதிளும் வயல்களும் சூழ்ந்த திருமங்கை நகருக்கு மன்னரான கலியன், இத் தமிழ் மாலை அருளினார். இதனைப் பாடுவோரின் பழவினைகள் தொடராமல் உலகாளப் பெற்று, நித்திய சூரிகளின் ஆதரவில் பரமபத இன்பம் பெறுவர். 1517

## திருநறையூர் – 5

மார்பில் மான்தோல் அணிந்து பிரமசாரியாய் மாவலி யிடத்தில், பூமியைத் தானம் வாங்கித் தன் திருவடிகளால் அளந்த திருமால், தேனடைகள் உள்ள மலைச் சாரல் பொருந்திய திருவேங்கடத்தில் எழுந்தருளி உள்ளான். இந்நாள் வரை புறக்கணித்துத் திரிந்த அடியேன் இன்று அவனைத் தேடிச் சென்று, திருநறையூரில் கண்டேன். 1518

முற்காலத்தில் கடலைக் கடைந்த திருமால், பிரளயத்தில் மீன் உருவம் கொண்டு அக்கடலைத் தன் கீழ் வயிற்றில் அடக்கினான். அடியேனை வாழ்க்கைக் கடலினின்று மீட்க, அவன் பிராட்டியுடன் திருவாலித் தலத்தில் எழுந்தருளினான். இந்த என் சுவாமியை, அடியேன் நீர்வயல்கள் சூழ்ந்த திருநறையூரில் கண்டேன். 1519

தூ வாய புள் ஊர்ந்து வந்து, துறை வேழம்,
மூவாமை, நல்கி, முதலை துணித்தானை,
தேவாதிதேவனை, செங்கமலக் கண்ணானை,
நாவாய் உளானை நறையூரில் கண்டேனே. 1520

ஓடா அரி ஆய், இரணியனை ஊன் இடந்த
சேடு ஆர் பொழில் சூழ் திருநீர்மலையானை,
வாடா மலர்த் துழாய் மாலை முடியானை,
நாள்தோறும் நாடி நறையூரில் கண்டேனே. 1521

கல் ஆர் மதிள் சூழ் கடி இலங்கைக் கார் அரக்கன்
வல் ஆகம் கீள, வரி வெம் சரம் துரந்த
வில்லானை செல்வ விபீடணற்கு வேறாக
நல்லானை, நாடி நறையூரில் கண்டேனே. 1522

உம்பர் உலகோடு உயிர் எல்லாம் உந்தியில்
வம்பு மலர்மேல் படைத்தானை, மாயோனை,
அம்பு அன்ன கண்ணாள் அசோதை தன் சிங்கத்தை
நம்பனை நாடி நறையூரில் கண்டேனே. 1523

கட்டு ஏறு நீள் சோலைக் காண்டவத்தைத் தீ மூட்டி
விட்டானை, மெய்யம் அமர்ந்த பெருமானை,
மட்டு ஏறு கற்பகத்தை மாதர்க்கு ஆய், வண் துவரை
நட்டானை நாடி நறையூரில் கண்டேனே. 1524

மண்ணின் மீ பாரம் கெடுப்பான், மற மன்னர்
பண்ணின்மேல் வந்த படை எல்லாம், பாரதத்து,
விண்ணின் மீது ஏற விசயன் தேர் ஊர்ந்தானை
நண்ணி நான் நாடி நறையூரில் கண்டேனே. 1525

பொங்கு ஏறு நீள் சோதிப் பொன் ஆழி தன்னோடும்
சங்கு ஏறு கோலத் தடக்கைப் பெருமானை,
கொங்கு ஏறு சோலைக் குடந்தைக் கிடந்தானை,
நம் கோனை நாடி நறையூரில் கண்டேனே. 1526





தூய்மையான வேத வடிவான கருடன் மீதேறி, மடுக்கரை சென்ற திருமால், முதலையைத் துண்டாக்கிக் கஜேந்திரனின் துயர் தீர்த்தருளினான். செந்தாமரைக் கண்கள் உடைய நித்திய சூரிகள் தலைவன் பரமபதம் ஒத்த திருநாவாய்த்தலத்தில் உள்ளான். இப்பெருமானைத் திருநறையூரில் நான் கண்டேன். 1520

புற முதுகிடாத நரசிம்மனாய், இரணியன் உடலைக் கிழித்தவன் வளம் மிகுந்த சோலைகள் உள்ள திரு நீர்மலையில் உள்ளான். வாடாத திருத்துழாய் மாலையை முடியிற் சூடியவனை அடியேன் தினமும் தேடி, இங்கே திருநறையூரில் கண்டேன். 1521

கல் மதிளும் அகழும் சூழ்ந்த இலங்கைக்கு மன்னனான இராவணனின் உடல் பிளக்கும்படி, இராமபிரான் தீ மயமான அம்பை விடுத்தான். பக்திச் செல்வம் கொண்ட வீடணன் இடத்தே, தவிர்க்க முடியாத தனிப்பட்ட அன்பும் நட்பும் கொண்ட இப்பெரு மானை, அடியேன் திருநறையூரில் காணப் பெற்றேன். 1522

மாயோனான திருமால் வானுலகங்களுடன் எல்லா உயிர்களையும் தன் கொப்பூழ்த் தாமரையில் படைத்தான். அம்பு போன்ற கண்களுடைய, யசோதையின் மகனான, கண்ணன், சிங்கம் போன்றவன்; அடியவரின் நம்பிக்கைக்கு உகந்தவன். நானும் அவனை நம்பினேன்; நறையூரில் கண்டு பற்றினேன். 1523

காவல் மிகுந்த, அகன்ற சோலைகளால் ஆன, காண்டவ வனத்தைத் தீ மூட்டிய கண்ணன் திரு மெய்யத்தில் கோவில் கொண்டான். தேன் துளிர்க்கும் கற்பக மரத்தை சத்தியபாமைக் காகத் துவாரகைக்குக் கொண்டு வந்து நட்ட பெருமானை அடியேன் திருநறையூரில் கண்டு வணங்கினேன். 1524

பூமி பாரம் தொலைவதற்காகப் பாரதப் போரில் கண்ணன் அர்ச்சுனனுக்குத் தேர் ஓட்டி மன்னர் படைகளை வீர சுவர்க்கம் புகச் செய்தான். இப் பெருமானை வணங்க ஆசைப்பட்ட அடியேன் திருநறையூரில் காணப்பெற்றேன். 1525

பொங்கும் ஒளி கூடிய அழகான சுதர்சனச் சக்கரம், பாஞ்சசன்னியம் இரண்டையும் ஏந்திய அகன்ற திருக்கைகள் உடைய திருமால், தேன் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருக்குடந்தையில் பள்ளி கொண்டான். இந்த நம் சுவாமியை அடியேன் திருநறையூரில் கண்டேன். 1526

மன்னும் மதுரை வசுதேவர் வாழ் முதலை,
நல் நறையூர் நின்ற நம்பியை, வம்பு அவிழ் தார்
கல் நவிலும் தோளான் கலியன் ஒலி வல்லார்
பொன் உலகில் வானவர்க்குப் புத்தேளிர் ஆகுவரே. 1527

## திருநறையூர் – 6

பெடை அடர்த்த மட அன்னம் பிரியாது மலர்க் கமலம்
மடல் எடுத்து மது நுகரும் வயல் உடுத்த திருநறையூர்-
முடை அடர்த்த சிரம் ஏந்தி மூவுலகும் பலி திரிவோன்
இடர் கெடுத்த திருவாளன் இணை அடியே அடை, நெஞ்சே! 1528

கழி ஆரும் கன சங்கம் கலந்து எங்கும் நிறைந்து ஏறி,
வழி ஆர முத்து ஈன்று வளம் கொடுக்கும் திருநறையூர்-
பழி ஆரும் விறல் அரக்கன் பரு முடிகள் அவை சிதற,
அழல் ஆரும் சரம் துரந்தான் அடி இணையே அடை, நெஞ்சே! 1529

சுளை கொண்ட பலங்கனிகள் தேன் பாய, கதலிகளின்
திளை கொண்ட பழம் கெழுமித் திகழ் சோலைத் திருநறையூர்-
வளை கொண்ட வண்ணத்தன் பின் தோன்றல், மூவுலகோடு
அளை வெண்ணெய் உண்டான் தன் அடி இணையே அடை நெஞ்சே. 1530

துன்று ஒளித் துகில் படலம் துன்னி எங்கும் மாளிகைமேல்
நின்று ஆர, வான் மூடும் நீள் செல்வத் திருநறையூர்-
மன்று ஆரக் குடம் ஆடி வரை எடுத்து, மழை தடுத்த
குன்று ஆரும் திரள் தோளன் குரை கழலே அடை, நெஞ்சே! 1531

அகில் குறடும், சந்தனமும், அம் பொன்னும், அணி முத்தும்,
மிகக் கொணர்ந்து திரை உந்தும் வியன் பொன்னித் திருநறையூர்-
பகல் சுரந்த சுடர் ஆழிப் படையான், இவ் உலகு ஏழும்
புகக் கரந்த திரு வயிற்றன் பொன் அடியே அடை நெஞ்சே! 1532





*மதுரையில் வசுதேவர் வாழ்வுக்குக் காரணமான முதல்வன் கண்ணன் திருநறையூரில் எழுந்தருளினான். இந்நம்பியைப் பற்றி, மலர் மாலை சூடிய திண்ணிய தோள்கள் உடைய கலியன் இப்பாசுரங்களைப் பாடினார். இவற்றைப் பயில்வோர் பரமபதம் சேர்ந்து நித்திய சூரிகள் ஆவர்.* **1527**

## திருநறையூர் – 6

*நெஞ்சமே! புலால் நாற்றக் கபாலத்தை ஏந்திய சிவன், மூவுலகும் பிச்சைக்காகத் திரிந்தான். அவன் சாபத்தைப் போக்கிய திருமாலின் இரு திருவடிகளை அடைவாய். இப்பெருமான் எழுந்தருளிய திருநறையூர், வயல்களால் சூழப்பட்டது. இங்கே ஆண் அன்னம் தன் படையின் ஊடலுக்கு அடங்கி, அதனைப் பிரியாமல், தான் தங்கிய தாமரையில் மது அருந்தி, அப்பேடையையும் பருகச் செய்யும்.* **1528**

*மனமே! பழமிகுந்த வீரன் இராவணனின் பத்துத் தலை களையும் சிதறச் செய்ய, தீ ஒத்த அம்புகளை எய்த இராம பிரானின் இணைத் திருவடிகளை அடைவாய். இப்பெருமானின் திருநறையூர்த் தெருக்களில் கடல்கழிகளிலிருந்து நீருடன் ஓடி வந்த சங்குகள் எங்கும் கலந்து, வழி அடைத்து, முத்துக்களை ஈன்று நிறைக்கும்.* **1529**

*மூவுலகங்களையும் உண்ட திருமால், சங்கை ஒத்த வெண்ணிற முடைய பலராமனுக்குத் தம்பியாகத் தோன்றி, கடைந்த தயிரையும் வெண்ணெய்யையும் உண்டான். திருநறையூரில் உள்ள இவன் இணை அடிகளை, நெஞ்சமே, நீ அடைவாய். இவ்வூர்ச் சோலைகளில் பலாச்சுளைகளிலிருந்து தேன்பாயும். பழங்கள் திரண்ட வாழை மரங்கள் நெருங்கிக் காணப்படும்.* **1530**

*கண்ணன் ஊர் மன்றத்தில் குடக்கூத்தாடினான்; மலை தூக்கி மழை தடுத்தான். குன்றைப் போன்ற தோள் உடையவன். நெஞ்சமே! திருநறையூரில் எழுந்தருளிய இத் திருமாலின் கழல் அணிந்த திருவடிகளை நீ அடைவாய். செல்வம் நிறைந்த இவ்வூரில் மாளிகைகள் மேல் கட்டப்பட்ட ஆடைக்கொடிகள் வானை மறைத்து உயர்ந்துள்ளன.* **1531**

*நெஞ்சமே! பாரதப்போரில் சூரியனை மறைத்த சக்கரத்தைப் படையாகக் கொண்டவன், ஏழுலகங்களையும் வயிற்றில் அடக்கிக் காத்தவன், ஆகிய திருமாலின் அழகிய திருவடிகளை நீ அடைவாய். இப்பெருமான் எழுந்தருளிய திருநறையூரில் காவிரி ஆறு, அகில், சந்தனம், பொன், முத்து ஆகியவற்றை தள்ளிக் கொண்டு ஓடும்.* **1532**

பொன், முத்தும், அரி உகிரும், புழைக் கை மா கரிக் கோடும்,
மின்னத் தண் திரை உந்தும் வியன் பொன்னித் திருநறையூர்-
மின் ஒத்த நுண் மருங்குல் மெல் இயலைத் திரு மார்பில்
மன்ன, தான் வைத்து உகந்தான் மலர் அடியே அடை, நெஞ்சே! 1533

சீர் தழைத்த கதிர்ச் செந்நெல், செங் கமலத்து இடை இடையில்,
பார் தழைத்துக் கரும்பு ஓங்கிப் பயன் விளைக்கும் திருநறையூர்
கார் தழைத்த திரு உருவன், கண்ணபிரான், விண்ணவர் கோன்
தார் தழைத்த துழாய் முடியன் தளிர் அடியே அடை நெஞ்சே! 1534

குலை ஆர்ந்த பழுக் காயும், பசுங் காயும், பாளை முத்தும்
தலை ஆர்ந்த இளங் கமுகின் தடஞ் சோலைத் திருநறையூர்-
மலை ஆர்ந்த கோலம் சேர் மணி மாடம் மிக மன்னி
நிலை ஆர நின்றான் தன் நீள் கழலே அடை நெஞ்சே! 1535

மறை ஆரும் பெரு வேள்விக் கொழும் புகை போய் வளர்ந்து எங்கும்
நிறை ஆர வான் மூடும் நீள் செல்வத் திருநறையூர் -
பிறை ஆரும் சடையானும், பிரமனும், முன் தொழுது ஏத்த
இறை ஆகி நின்றான் தன் இணை அடியே அடை, நெஞ்சே! 1536

திண் களக மதிள் புடை சூழ் திருநறையூர் நின்றானை,
வண் களகம் நிலவு எறிக்கும் வயல் மங்கை நகராளன்
பண்கள் அகம் பயின்ற சீர்ப் பாடல் இவை பத்தும் வல்லார்
விண்கள் அகத்து இமையவர் ஆய் வீற்றிருந்து வாழ்வாரே. 1537

## திருநறையூர் – 7

கிடந்த நம்பி குடந்தை மேவி, கேழல் ஆய் உலகை
இடந்த நம்பி எங்கள் நம்பி, எறிஞர் அரண் அழியக்
கடந்த நம்பி கடி ஆர் இலங்கை, உலகை ஈர் அடியால்
நடந்த நம்பி நாமம் சொல்லில் - நமோ நாராயணமே. 1538





*நெஞ்சமே! மின்னலைப்போன்ற நுண்ணிடை உடைய திருமகளை, மார்பில் ஏற்று மகிழும் பகவானின், பூப்போன்ற திருவடிகளை அடைவாய். இத்திருமால் எழுந்தருளிய திருநறையூரில், காவிரி நதி, பொன், முத்து, சிங்க நகங்கள், துளைத் துதிக்கை கொண்ட யானையின் கொம்புகள் ஆகியவற்றை இழுத்து ஓடும்.* 1533

*நித்திய சூரிகள் தலைவனான மேகநிறத் திருமால், திருத்துழாய்மாலை சூடிய திருமுடி உடையவன். நெஞ்சமே! திருநறையூரில் உள்ள இக் கண்ணனின் தளிர் போன்ற திருவடிகளை நீ அடைவாய். இவ்வூரிலுள்ள செந்நெல் கதிர்களின் நடுவே தாமரைப் பூக்கள் மலரும்; இடைஇடையே கரும்புகள் வளர்ந்து முற்றிக் காணப்படும்.* 1534

*காய்க்குலைகள், பழக்குலைகள், முத்துக்களைச் சிதறும் பாளைகள், முதிராத இளங்குலைகள் நிறைந்த, பாக்கு மரச் சோலைகள் திருநறையூரைச் சூழ்ந்துள்ளன. மலை போன்ற மணிமாடங்களும் உள்ளன. நெஞ்சமே! இததலத்தில் எழுந் தருளியவனின் கழல் அடிகளை நீ அடைவாய்.* 1535

*திருநறையூரில் வேத விதிப்படி செய்யப்படும் யாகங்களால் உண்டான புகை எங்கும் நிறைந்து மேலோங்கி விண்ணை மறைக்கும். எல்லையற்ற செல்வம் உள்ள திருநறையூரில் எழுந்தருளிய திருமாலை, பிறை சூடிய சிவனும், பிரமனும் முன் நின்று தொழுது துதிப்பார்கள். நெஞ்சமே! நீயும் இவ்வாறு நின்றவனின் இணை அடிகளை அடைவாய்.* 1536

*சுண்ணாம்பு பூசப்பட்ட மதிள் சுற்றுடைய திருநறையூரில் எழுந்தருளியவனை, திருமங்கை மன்னர் இப்பாசுரங்களில் பாடினார். அன்னங்கள் வாழ்வதால் ஒளி பரவும் வயல்கள் இத் திருமங்கையில் உள்ளன. யாப்புச் சிறப்புடைய இப் பாசுரங்களைப் பயில்பவர். பரமபத வாழ்ச்சி பெறுவர்.* 1537

## திருநறையூர் – 7

*திருக்குடந்தையில் பள்ளி கொண்ட நம்பி; பூமியைக் குத்தி எடுத்த வராஹ நம்பி; குறை தீர்க்கும் நம்பி; கடல் கடந்து பகைவர் மதிள் தூர்த்து இலங்கையை அழித்த நம்பி; இரண்டு அடிகளால் உலகளந்த நம்பி. இவ்வாறு சிறப்புடையவனின் திருநாமம் கூறில், அது 'நமோ நாராயணமே' ஆகும்.* 1538

விடம் தான் உடைய அரவம் வெருவ, செருவில் முன நாள், முன்
தடந் தாமரை நீர்ப் பொய்கை புக்கு மிக்க தாள் ஆளன்,
இடந்தான் வையம் கேழல் ஆகி, உலகை ஈர் அடியால்
நடந்தானுடைய நாமம் சொல்லில் -நமோ நாராயணமே. 1539

பூணாது அனலும் தறுகண் வேழம் மறுக வளை மருப்பைப்
பேணான் வாங்கி, அமுதம் கொண்ட பெருமான், திருமார்வன்,
பாணா வண்டு முரலும் கூந்தல் ஆய்ச்சி தயிர் வெண்ணெய்
நாணாது உண்டான் நாமம் சொல்லில் - நமோ நாராயணமே. 1540

கல் ஆர் மதிள் சூழ் கச்சி நகருள் நச்சி, பாடகத்துள்
எல்லா உலகும் வணங்க இருந்த அம்மான், இலங்கைக்கோன்
வல் ஆள் ஆகம் வில்லால் முனிந்த எந்தை விபீடணற்கு
நல்லானுடைய நாமம் சொல்லில் -நமோ நாராயணமே. 1541

குடையா வரையால் நிரை முன் காத்த பெருமான், மருவாத
விடை தான் ஏழும் வென்றான், கோவல் நின்றான், தென் இலங்கை
அடையா அரக்கர் வீயப் பொருது மேவி வெம் கூற்றம்
நடையா உண்ணக் கண்டான் நாமம் - நமோ நாராயணமே. 1542

கான எண்கும், குரங்கும்,முசுவும் படையா, அடல் அரக்கர்
மானம் அழித்து நின்ற வென்றி அம்மான், எனக்கு என்றும்
தேனும், பாலும், அமுதும் ஆய திருமால் திருநாமம்
நானும் சொன்னேன்; நமரும் உரைமின்-நமோ நாராயணமே. 1543

நின்ற வரையும், கிடந்த கடலும், திசையும் இரு நிலனும்
ஒன்றும் ஒழியா வண்ணம் எண்ணி நின்ற அம்மானார்
குன்று குடையா எடுத்த அடிகளுடைய திருநாமம்-
நன்று காண்மின்; தொண்டீர்! சொன்னேன்-நமோ நாராயணமே 1544

கடுங் கால், மாரி கல்லே பொழிய அல்லே எமக்கு என்று
படுங்கால், நீயே சரண் என்று ஆயர் அஞ்ச அஞ்சாமுன்,
நெடுங்கால் குன்றம் குடை ஒன்று ஏந்தி நிரையைச் சிரமத்தால்
நடுங்கா வண்ணம் காத்தான் நாமம் - நமோ நாராயணமே. 1545





நஞ்சுடைய காளியன் அஞ்சும்படியாய்க் கண்ணன் தாமரைப் பொய்கையில் புகுந்து அவனை விரட்டினான். வராகமாய் உலகை எடுத்துக் காத்த திருமால் இரண்டு அடியால் அதனை அளந்தான். இவன் திருநாமம் நமோ நாராயணமே; 1539

வளையத்தில் கட்டப்படாமல் தீ உமிழும் கண்களுடன் நின்ற குவலயாபீட யானையின் கொம்பை ஒடித்தவன்; பாற்கடல் கடைந்தவன். திருமகளை மார்பில் கொண்டவன் வண்டொலிக்கும் கூந்தல் பெற்ற யசோதை கடைந்த தயிரையும் வெண்ணெய்யையும் வெட்கமின்றி உண்டவன் என்னும் சிறப்புகள் உடையவனின் திருநாமம் நமோ நாராயணமே ஆகும். 1540

கல் மதிள் சூழ்ந்த காஞ்சியில் திருப்பாடகத்தில், உலகத்தவர் விரும்பி வணங்கும்படி, எழுந்தருளியவன்; இலங்கை மன்னன் மார்பில் அம்பெய்ய, வில்லை வளைத்து, வீடணனுக்கு அருளியவன். இத்தகு சிறப்புடையவனின் திருநாமம் நமோ நாராயணமே ஆகும். 1541

கண்ணன்,மலையைக் குடையாகத் தூக்கிப் பசுக்களைக் காத்தான்; ஏழு எருதுகளைக் கொன்றான். இலங்கையில் அரக்கருடன் போரிட்டு அவர்களை அழித்தான். இராவணனை யமனுக்கு உணவாக்கினான். திருக்கோவலூரில் எழுந்தருளிய இப் பெருமானின் திருநாமம் நமோ நாராயணமே என்பதாம். 1542

காட்டுக்கரடிகள், வானரங்கள், கருங்குரங்குகள் ஆகிய வற்றைப் படையாகக் கொண்ட இராமன் அரக்கர்கள் மானத்தை அழித்து வென்றான். தேன், பால், அமுதம் ஆகியவை போல் எனக்கு இனிமையான திருமாலின் திருநாமம் நமோ நாராயணமே. என்னைப் போல், நீங்களும் அந்நாமம் சொல்லுங்கள். 1543

நிற்கும் மலைகள், கிடக்கும் கடல்கள், திசைகள், பூமி ஆகியன ஒன்றும் விடாமல் படைத்து, அவற்றுள்ளே வாழும் என் தலைவன், கண்ணனாக மலை தூக்கிக் குடை பிடித்தான். அவன் திருநாமம் 'நமோ நாராயணமே' என்பது. தொண்டர்களே! இதுவே சிறந்தது என்று நன்றாய் உணருங்கள். 1544

காற்றுடன் கூடிய மேகம் கல் மழை பெய்த பொழுது இடையர்கள் அஞ்சி "இருள் சூழ்ந்து நீண்ட இரவாயிற்றே கண்ணா! நீயே காத்தருள்" என்றனர். அவர்கள் நடுங்காதபடி உயர்ந்த மலையைத் தூக்கிக் குடையாய்ப் பிடித்துக் கண்ணன் காத்தான். இப் பெருமானின் திருநாமம் நமோ நாராயணமே. 1545

பொங்கு புணரிக் கடல் சூழ் ஆடை நில மா மகள், மலர் மா
மங்கை பிரமன், சிவன், இந்திரன், வானவர் நாயகர் ஆய
எங்கள் அடிகள், இமையோர் தலைவருடைய திருநாமம்-
நங்கள் வினைகள் தவிர உரைமின் - நமோ நாராயணமே. 1546

வாவித் தடம் சூழ் மணி முத்தாற்று நறையூர் நெடு மாலை
நாவில் பரவி, நெஞ்சில் கொண்டு, நம்பி நாமத்தை
காவித் தடங் கண் மடவார் கேள்வன் கலியன் ஒலி மாலை
மேவிச் சொல்ல வல்லார் பாவம் நில்லா வீயுமே. 1547

## திருநறையூர் – 8

கறவா மட நாகு தன் கன்று உள்ளினால்போல்,
மறவாது அடியேன் உன்னையே அழைக்கின்றேன்
நறவு ஆர் பொழில் சூழ் நறையூர் நின்ற நம்பி!
பிறவாமை எனைப் பணி - எந்தை பிரானே! 1548

வற்றா முதுநீரொடு மால் வரை ஏழும்
துற்று ஆக முன் துற்றிய தொல் புகழோனே!
அற்றேன் அடியேன் உன்னையே அழைக்கின்றேன்
பெற்றேன்; அருள் தந்திடு - என் எந்தை பிரானே! 1549

தாரேன் பிறர்க்கு; உன் அருள் என்னிடை வைத்தாய்;
ஆரேன் அதுவே பருகிக் களிக்கின்றேன் -
கார் ஏய் கடலே, மலையே, திருக்கோட்டி
ஊரே உகந்தாயை உகந்து, அடியேனே. 1550

புள் வாய் பிளந்த புனிதா! என்று அழைக்க,
உள்ளே நின்று என் உள்ளம் குளிரும் ஒருவா!
கள்வா! கடல்மல்லைக் கிடந்த கரும்பே!
வள்ளால்! உன்னை எங்ஙனம் நான் மறக்கேனே? 1551

வில் ஏர் நுதல் வேல் நெடுங் கண்ணியும் நீயும்
கல் ஆர் கடுங் கானம் திரிந்த களிறே!
நல்லாய்! நர நாரணனே! எங்கள் நம்பி!
சொல்லாய்-உன்னை யான் வணங்கித் தொழும் ஆறே. 1552





அலை கடலை ஆடையாக உடைய பூமி தேவி, தாமரையில் வாழும் திருமகள், பிரமன், சிவன், இந்திரன், தேவர்கள் ஆகியோருக்கு அதிபதியானவன், எங்களுக்கும் நித்திய சூரிகளுக்கும் தலைவன் ஆவான். நமோ நாராயணமே அவன் திருநாமம். நம் பாவங்கள் தீர இதைச் சொல்லுங்கள். **1546**

முத்தும் மணியும் சுமந்து ஓடும் காவிரி பாயும் திருநறையூர் குளங்களால் சூழப்பட்டது. இங்குள்ள பெருமாளைப் பற்றிய இப் பாசுரங்களைக் கலியன் அருளினார். நெய்தல்பூக் கண்களுடைய மாதர்கள் ஆசையில் வீழ்ந்து, பிறகு திருந்திய, இவர் பாசுரங்களைப் பயில்பவர்க்குப் பாவங்கள் நில்லாமல் அழியும். **1547**

## திருநறையூர் – 8

பால் கறக்கப்பெறாத பசுவைத் தன் கன்று நினைப்பது போல, அடியேன் உன்னை மறவாமல் அழைக்கிறேன். தேன் துளிர்க்கும் சோலைகள் சூழ்ந்த திருநறையூரில் உள்ள நம்பியே! என் தந்தையே! இனி நான் உலகில் பிறவாதிருக்க அருள் புரிய வேண்டும். **1548**

வற்றாத கடலையும் ஏழு பெரிய மலைகளையும் ஒரே கவளமாக விழுங்கிய பெருமை உடைய என் தந்தையே! என்னைக் காக்க உன்னை அன்றி வேறு புகல் அறியாத அடியேன் உன்னையே அழைக்கும் பேறு பெற்றேன். அருள் தந்து ஆட்கொள்ள வேண்டும். **1549**

உன் கண்ணழிவு அற்ற அருளை என்னிடம் வைத்தாய். அதனை நான் அயலார்க்குத் தர மாட்டேன். என்னை உகந்து வந்த உன்னை நான் உகந்தேன். மேகம்பரவும் பாற்கடலையும் திருமலையையும் திருக்கோட்டியூரையும் விரும்பிய உன் அருளை நான் பருகியும் நிறைவற்றவனாய் மேலும் அதை எண்ணிக் களிக்கிறேன். **1550**

"பறவையின் வாயைக் கிழித்த தூயவனே!" என்று நான் அழைக்கவும் என் இதயத்தில் உள் எங்கும் குளிர்கிறது. ஒப்பற்றவனே! யாராலும் அறியமுடியாதவனே! திருக்கடல் மல்லையில் பள்ளி கொண்ட கரும்பினும் இனியவனே! வள்ளலே! உன்னை நான் இனி எவ்வாறு மறப்பேன்? **1551**

வில் ஒத்த நெற்றியும் வேல் போன்ற கண்களும் உடைய பிராட்டியுடன் கற்கள் நிறைந்த காட்டில் திரிந்த யானை போன்றவனே! அடியார்களுக்கு நன்மை செய்தவனே! நரனாகவும் நாராயணன் ஆகவும் வந்தவனே! எங்கள் நம்பியே; அடியேன் உன் திருவடிகளில் வணங்கி ஆட்படும் வழியை அருள வேண்டும். **1552**

பனி ஏய் பரங் குன்றின் பவளத் திரளே!
முனியே! திருமூழிக்களத்து விளக்கே!
இனியாய்! தொண்டரோம் பருகு இன் அமுது ஆய
கனியே! உன்னைக் கண்டுகொண்டு, உய்ந்தொழிந்தேனே. 1553

கதியேல் இல்லை, நின் அருள் அல்லது எனக்கு;
நிதியே! திருநீர்மலை நித்திலத் தொத்தே!
பதியே! பரவித் தொழும் தொண்டர் தமக்குக்
கதியே! உன்னைக் கண்டு கொண்டு, உய்ந்தொழிந்தேனே. 1554

அத்தா! அரியே என்று, உன்னை அழைக்க,
பித்தா என்று பேசுகின்றார் பிறர் என்னை;
முத்தே! மணி மாணிக்கமே! முளைக்கின்ற
வித்தே! உன்னை எங்ஙனம் நான் விடுகேனே? 1555

தூயாய்! சுடர் மா மதிபோல், உயிர்க்கு எல்லாம்
தாய் ஆய், அளிக்கின்ற தண் தாமரைக் கண்ணா!
ஆயா! அலை நீர் உலகு ஏழும் முன் உண்ட
வாயா! உன்னை எங்ஙனம் நான் மறக்கேனே? 1556

வண்டு ஆர் பொழில் சூழ் நறையூர் நம்பிக்கு என்றும்,
தொண்டு ஆய், கலியன் ஒலிசெய் தமிழ் மாலை,
தொண்டீர்! இவை பாடுமின், பாடி நின்று ஆட,
உண்டே, விசும்பு உம் தமக்கு; இல்லை துயரே. 1557

## திருநறையூர் – 9

புள் ஆய், ஏனமும் ஆய், புகுந்து என்னை உள்ளம் கொண்ட
கள்வா! என்றலும், என் கண்கள் நீர்கள் சோர்தருமால்;
உள்ளே நின்று உருகி நெஞ்சம், உன்னை உள்ளியக்கால்,
நள்ளேன் உன்னை அல்லால், நறையூர் நின்ற நம்பீயோ! 1558

ஓடா ஆள் அரியின் உரு ஆய் மருவி, என் தன்
மாடே வந்து, அடியேன் மனம் கொள்ள வல்ல மைந்தா!
பாடேன் தொண்டர் தம்மைக் கவிதைப் பனுவல்கொண்டு
நாடேன், உன்னை அல்லால், நறையூர் நின்ற நம்பீயோ! 1559





பனி மிகுந்த இமயமலையில் திருப்பிரிதியில் பவளக்கொடி போல எழுந்தருளிய அழகோனே! முனிவனே! திருமூழிக் களத்தில் விளங்கும் திருவிளக்கே! இனியவனே! தொண்டர்களான அடியோங்கள் பருகும்படி இனிய அமுதானவனே! கனியே! உன்னைக் கண்டு வணங்கி, உய்வு பெற்றேன். **1553**

உன் அருளை அன்றி அடியேனுக்கு வேறு வழி இல்லை. வைப்பு நிதி ஆனவனே! முத்து மாலை போலத் தழுவுதற்கு உரியவனே! திருநீர் மலையில் எழுந்தருளியவனே! அடியார்களின் இருப்பிடமாய் அவர்கள் துதி செய்ய அவர்களுக்குக் கதி ஆனவனே! அடியேன் உன்னைக் கண்டுகொண்டு உய்வு பெற்றேன். **1554**

'என் பகையைப் போக்கிய சுவாமியே!' என்று உன்னை நான் அழைக்கவும், அயலார் என்னைப் பித்துப் பிடித்தவன் என்று பேசுகிறார். முத்து, மணி, மாணிக்கம் ஆகியவற்றை ஒத்தவனே! பயன்தரும் முளையாயும் விதையாயும் உள்ள உன்னை, உன் இயல்பை அறிந்த பிறகு எவ்வாறு விடுவேன்? **1555**

தூயவனே! ஒளி கூடிய முழு மதிபோல் உலகத்து உயிர்களுக்கு அன்பு காட்டித் தாயாய் ஆனவனே! குளிர்ந்த தாமரை போன்ற கண்கள் உடையவனே! கண்ணனே! அலை கடல் உலகங்கள் ஏழினையும் பிரளய காலத்தில் உண்டவனே! இத்தகைய உன்னை நான் எவ்வாறு விடுவேன்? **1556**

அடியார்களே! வண்டுகள் வாழும் சோலைகள் சூழ்ந்த திருநறையூர் நம்பியிடம் அடிமை பூண்ட கலியன் அருளிய இப் பாசுரங்களைப் பாடுங்கள். பாட்டிற்கேற்ப ஆடுங்கள். உமது துயர் தீர்ந்து பரமபதம் கிடைக்கும். **1557**

## திருநறையூர் – 9

என்னுள் புகுந்த திருநறையூர் நம்பியே! அன்னமாயும் வராஹமாவும் வடிவெடுத்தநீ என் மனத்தை உன் வசம் ஆக்கிக் கொண்டாய். என்னைத் திருடிய கள்வா என்று கூறும்பொழுது என் கண்களில் நீர் பெருகுகிறது. உன்னை நினையும் நெஞ்சம் உள் உருகுகிறது. இனி உன்னை அன்றி வேறு எதையும் நான் ஆசைப்படேன். **1558**

திருநறையூரில் நின்ற நம்பியே! நாட்டில் காணாத நரசிம்மமாய் வந்தவனே! என்னிடம் மருவி, அடியேன் மனத்தை உன்னுடையதாக ஆக்கிக் கொண்டாய். இனி என் கவிதைகளால் உலகியற் பட்டோரைப் பாடேன். உன்னை அன்றி வேறு எவரையும் பற்றிக் கவி பாட மனத்தில் எண்ணேன். **1559**

எம்மானும், எம் அனையும் என்னைப் பெற்று ஒழிந்ததற்பின்,
அம்மானும், அம்மனையும் அடியேனுக்கு ஆகி நின்ற
நல் மான ஒண் சுடரே! நறையூர் நின்ற நம்பீ! உன்
மைம் மான வண்ணம் அல்லால், மகிழ்ந்து ஏத்தமாட்டேனே. 1560

சிறியாய், ஓர் பிள்ளையும் ஆய், உலகு உண்டு, ஓர் ஆல்இலைமேல்
உறைவாய்! என் நெஞ்சின் உள்ளே உறைவாய்! உறைந்தது தான்
அறியாது இருந்தறியேன் அடியேன் - அணி வண்டு கிண்டும்
நறை வாரும் பொழில் சூழ் நறையூர் நின்ற நம்பீயோ! 1561

நீண்டாயை வானவர்கள் நினைந்து ஏத்திக் காண்பு அரிதால்;
ஆண்டாய் என்று ஆதரிக்கப்படுவாய்க்கு நான் அடிமை
பூண்டேன்; என் நெஞ்சின் உள்ளே புகுந்தாயைப் போகல் ஒட்டேன் ;
நாண் தான் உனக்கு ஒழிந்தேன் நறையூர் நின்ற நம்பீயோ! 1562

எம் தாதை, தாதை அப்பால் எழுவர் பழ அடிமை
வந்தார்; என் நெஞ்சின் உள்ளே வந்தாயைப் போகல் ஒட்டேன்;
அந்தோ! என் ஆர்உயிரே! அரசே! அருள் எனக்கு
நந்தாமல் தந்த எந்தாய்! நறையூர் நின்ற நம்பீயோ! 1563

மன் அஞ்ச ஆயிரம் தோள் மழுவில் துணித்த மைந்தா!
என் நெஞ்சத்துள் இருந்து. இங்கு இனிப் போய்ப் பிறர் ஒருவர்
வன் நெஞ்சம் புக்கு இருக்க ஒட்டேன்; வளைத்து வைத்தேன்
நன் நெஞ்ச அன்னம் மன்னும் நறையூர் நின்ற நம்பீயோ! 1564

எப்போதும் பொன் மலர் இட்டு, இமையோர் தொழுது, தங்கள்
கைப்போது கொண்டு இறைஞ்சிக் கழல்மேல் வணங்க நின்றாய்!
இப்போது என் நெஞ்சின் உள்ளே புகுந்தாயைப் போகல் ஒட்டேன்
நல் போது வண்டு கிண்டும் நறையூர் நின்ற நம்பீயோ! 1565

ஊன் நேர் ஆக்கை தன்னை உழந்து ஓம்பி வைத்தமையால்,
யான் ஆய் என் தனக்கு ஆய், அடியேன் மனம் புகுந்த
தேனே! தீங் கரும்பின் தெளிவே! என் சிந்தை தன்னால்
நானே எய்தப் பெற்றேன்- நறையூர் நின்ற நம்பீயோ! 1566





திருநறையூரில் நின்ற நம்பியே! என்னைப் பெற்ற தந்தையும் தாயும் புறக்கணித்துப் போன பின்னர், நீயே அடியேனுக்குத் தகப்பனும் தாயும் ஆவாய். ஒளி மிகுந்த பரஞ்சுடரே! மை நிறமான உன் திருமேனியை அன்றி மற்ற திருப்பதிகளை உகந்து துதி செய்யேன். 1560

வண்டுகள் படிந்து தேன் வழியும் சோலைகள் சூழ்ந்த திருநறையூர் நம்பியே! உலகங்களை விழுங்கிச் சிறிய குழந்தையாய் ஆலந்தளிரில் பள்ளி கொண்டவனே! அடியேன் நெஞ்சிலும் நீ பொருந்தி இருப்பதை அறியாமல் இருக்க மாட்டேன். 1561

திருநறையூர் நம்பியே! அளவிட்டு அறியலாகா உன்னைப் பிரமன் முதலிய தேவர்கள் எண்ணித் துதித்தாலும் காண்பது அரிது. 'எம் ஆண்டவனே;' என்று ஏத்தப்படும் உன்னிடம் நான் அடிமை பூண்டேன். என் நெஞ்சில் புகுந்த உன்னை இனிப் போகவிடேன். இதில் நான் வெட்கத்தைத் துறந்தேன். 1562

என் உயிராய் என்னை ஆளும் அரசே! திருநறையூர் நம்பி! என்னிடம் குறையாத அருள் செய்யும் தாயே! நான், என் தந்தை, பாட்டன் அவனுக்கு முன்பு ஏழு தலைமுறையாகப் பழைய அடியார்கள் ஆவோம். என் நெஞ்சிற்புகுந்த உன்னைப் போக விடேன். 1563

அன்பு மனம் கொண்ட அன்னம் போன்ற திருமகளுடன் திருநறையூரில் உள்ள நம்பியே! பரசு ராமனாக வந்த நீ, அரசர்கள் அஞ்ச, கார்த்த வீரியனின் ஆயிரம் தோள்களையும் மழுவால் வெட்டினாய். என் நெஞ்சில் வாழ்ந்த நீ இனி அயலாரின் வலிய நெஞ்சில் புகுந்திட ஒட்டேன். நீ போகாதபடி தடுக்கிறேன். 1564

பூக்களில் வண்டுகள் வாழும் திருநறையூர் நம்பியே! நித்திய சூரிகள் எப்பொழுதும் பூப்போன்ற கைகளால் மலர்களை உன் திருவடியில் இட்டுத் துதிப்பர். இத்தகைய நீ இப்பொழுது என் நெஞ்சில் புகுந்ததால் வெளியே போக விடேன். 1565

என்னுள் வாழ்பவனாய் எனக்கென்றே அடியேன் மனம் புகுந்த தேனே! இனிய கருப்பஞ்சாற்றின் தெளிவு போன்றவனே! திருநறையூரில் உள்ள நம்பீ! சதையால் ஆன இவ்வுடம்பைப் பாடுபட்டு வளர்த்ததால் அதனைக் கொண்டே உன் அருளால் என் மனத்தில் நீ தங்கிடப்பெற்றேன். 1566

நல் நீர் வயல் புடை சூழ் நறையூர் நின்ற நம்பியைக்
கல் நீர மால் வரைத் தோள் கலிகன்றி, மங்கையர் கோன்,
சொல் நீர சொல் மாலை சொல்லுவார்கள் சூழ் விசும்பில்
நல் நீர்மையால் மகிழ்ந்து நெடுங் காலம் வாழ்வாரே. 1567

## திருநறையூர் – 10

சின இல் செங் கண் அரக்கர் உயிர் மாளச்
செற்ற வில்லி என்று கற்றவர் தம்தம்
மனமுள் கொண்டு, என்றும் எப்போதும், நின்று ஏத்தும்
மா முனியை, மரம் ஏழ் எய்த மைந்தனை,
நனவில் சென்றார்க்கும் நண்ணற்கு அரியானை,
நான் அடியேன், நறையூர் நின்ற நம்பியைக்
கனவில் கண்டேன் இன்று; கண்டமையால் என்
கண் இணைகள் களிப்பக் களித்தேனே. 1568

தாய் நினைந்த கன்றே ஒக்க என்னையும்
தன்னையே நினைக்கச் செய்து தான் எனக்கு
ஆய் நினைந்து அருள் செய்யும் அப்பனை,
அன்று, இவ் வையகம் உண்டு, உமிழ்ந்திட்ட
வாயனை, மகரக் குழைக் காதனை,
மைந்தனை, மதிள் கோவல் இடைகழி
ஆயனை அமரர்க்கு அரி ஏற்றை, என்
அன்பனை அன்றி ஆதரியேனே. 1569

வந்த நாள் வந்து என் நெஞ்சு இடம் கொண்டான்;
மற்று ஓர் நெஞ்சு அறியான்; அடியேனுடைச்
சிந்தை ஆய் வந்து தென்புலர்க்கு என்னைச்
சேர்கொடான்; இது சிக்கெனப் பெற்றேன்;
கொந்து உலாம் பொழில் சூழ் குடந்தைத் தலைக்
கோவினைக் குடம் ஆடிய கூத்தனை,
எந்தையை எந்தை தந்தை தம்மானை,
எம்பிரானை எத்தால் மறக்கேனே? 1570

உரங்களால் இயன்ற மன்னர் மாள,
பாரதத்து, ஒரு தேர் ஐவர்க்கு ஆய்ச் சென்று,
இரங்கி, ஊர்ந்து அவர்க்கு இன் அருள் செய்யும்
எம்பிரானை வம்பு ஆர் புனல் காவிரி
அரங்கம் ஆளி, என் ஆளி விண் ஆளி,
ஆழி சூழ் இலங்கை மலங்கச் சென்று,
சரங்கள் ஆண்ட தண் தாமரைக் கண்ணனுக்கு
அன்றி என் மனம் தாழ்ந்து நில்லாதே. 1571





*நீர் நிரம்பிய வயல்கள் சூழ்ந்த திருநறையூர்ப் பெருமானை மலை போன்ற தோள்களை உடைய கலிகன்றியாகிய திருமங்கை மன்னர் பாடினார். இப்பாசுரங்களைப் பயில்பவர் பரமபதம் சென்று மகிழ்ந்து வாழ்வர்.* 1567

## திருநறையூர் – 10

*"கோபத்தால் சிவந்த கண்களுடைய அரக்கர் அழியும்படி சினந்த வில்லை உடையவனே!" என்று யோகிகளால் தியானிக்கப் பட்டுத் துதிக்கப்படுபவன்; அடியார்களை அருள்பவன். ஏழுமரா மரங்களையும் துளைத்தவன். தெளிவான நிலையிலும் ஞானிகளால் உணர்வதற்கு அரியவன்- இத்தகைய நம்பியை நான் முன்பு மனதால் அனுபவித்தேன். இன்றோ திருநறையூரில் என் இரு கண்களாலும் கண்டு சேவிக்கப்பெற்றுக் களிக்கின்றேன்.* 1568

*தாயை நினைக்கும் கன்றே போல என்னையும் தன்னை நினைக்கச் செய்தான்; முழுதும் ஞானமான அவன் அறிவிலி யான எனக்கு அருளினான். இந்த என் தந்தை அன்று இவ்வுலகை விழுங்கி உமிழ்ந்த திருவாய் உடையவன். மகர குண்டலங்கள் அணிந்த செவிகளுடைய நித்திய இளைஞன். மதிள் சூழ்ந்த திருக்கோவலூர் இடைகழியில் முதலாழ்வார்கள் நடுவில் நின்றான். நித்திய சூரிகள் சிங்கமான இந்த அன்பனை அன்றி வேறு எவரையும் நான் வழிபடேன்.* 1569

*என் நெஞ்சு புகுந்த நாள் தொடங்கி எம்பெருமான் வேறோர் நெஞ்சை இருப்பிடமாக அறியான். கைங்கர்யப் பேற்றை அடியேனுக்குத் தருவதற்காக என் சிந்தை புகுந்தான். தென்திசையமனிடம் நான் அகப்படாதவாறு திண்ணமாகப் பெருமானைப் பெற்றேன். பூஞ்சோலைத் திருக்குடந்தையில் எழுந்தருளிய பிரான் குடக்கூத்தாடியவன்; என் தந்தையாய் உள்ளவன். என் தந்தைக்கும் பாட்டனுக்கும் அம்மான் ஆகிய எம்பிரானை எக் காரணத்தால் மறப்பேன்?* 1570

*எம்பெருமான், வலிமை மிகுந்த துரியோதனாதியர் அழியுமாறு பாரதப்போரில் பஞ்சபாண்டவர்க்கு தேர் ஓட்டி அருள் செய்தான். புதுப்புனல் ஓடும் காவிரி பாயும் திருவரங்கத்தை ஆள்பவன். என்னையும் ஆண்டு பரமபதத்தையும் ஆள்கிறான். கடல் சூழ்ந்த இலங்கை அழிய, அம்பெய்த, தாமரைக் கண்ணன் ஆன பெருமானுக் கன்றி வேறிடத்தில் என் மனம் உருகி இரங்காது.* 1571

ஆங்கு வெம் நரகத்து அழுந்தும்போது,
அஞ்சேல் என்று அடியேனை, அங்கே வந்து,
தாங்கு, தாமரை அன்ன பொன் ஆர் அடி
எம்பிரானை, உம்பர்க்கு அணி ஆய் நின்ற
வேங்கடத்து அரியை, பரி கீறியை,
வெண்ணெய் உண்டு உரலினிடை ஆப்புண்ட
தீங் கரும்பினை, தேனை, நன் பாலினை,
அன்றி, என் மனம் சிந்தை செய்யாதே. 1572

எட்டனைப்பொழுது ஆகிலும் என்றும்,
என் மனத்து அகலாது இருக்கும் புகழ்,
தட்டு அலர்த்த பொன்னே அலர் கோங்கின்
தாழ் பொழில் திருமாலிருஞ்சோலை, அம்
கட்டியை கரும்பு ஈன்ற இன் சாற்றை,
காதலால் மறை நான்கும் முன் ஓதிய
பட்டனை, பரவைத் துயில் ஏற்றை, என்
பண்பனை அன்றி. பாடல் செய்யேனே. 1573

பண்ணின் இன் மொழி யாழ் நரம்பில் பெற்ற
பாலை ஆகி இங்கே புகுந்து என்
கண்ணும் நெஞ்சும், வாயும் இடம் கொண்டான்;
கொண்ட பின், மறையோர் மனம் தன் உள்,
விண் உளார் பெருமானை, எம் மானை,
வீங்கு நீர் மகரம் திளைக்கும் கடல்
வண்ணனன், மா மணி வண்ணனன், எம் அண்ணல்
வண்ணமே அன்றி வாய் உரையாதே. 1574

இனி எப் பாவம் வந்து எய்தும், சொல்லீர், எமக்கு -
இம்மையே அருள்பெற்றமையால் ; அடும்
துனியை தீர்த்து இன்பமே தருகின்றது ஓர்
தோற்றத் தொல் நெறியை வையம் தொழப்படும்
முனியை, வானவரால் வணங்கப்படும்
முத்தினை பத்தர் தாம் நுகர்கின்றது ஓர்
கனியை காதல் செய்து என் உள்ளம் கொண்ட
கள்வனை இன்று கண்டு கொண்டேனே. 1575

என் செய்கேன் அடியேன், உரையீர், இதற்கு:
என்றும், என் மனத்தே இருக்கும் புகழ்த்
தஞ்சை ஆளியை பொன்பெயரோன் நெஞ்சம்
அன்று இடந்தவனை, தழலே புரை
மின் செய் வாள் அரக்கன் நகர் பாழ்பட,
சூழ் கடல் சிறை வைத்து, இமையோர் தொழும்
பொன் செய் மால் வரையை மணிக் குன்றினை
அன்றி என் மனம் போற்றி என்னாதே. 1576





கொடிய நரகில் அழுந்துகையில் அஞ்ச வேண்டாம் என்று அடியேனைக் காப்பாற்றும் எம் பிரான், தாமரைத் திருவடிகள் உடையவன்; நித்தியசூரிகளின் அணிகலன் ஆவான். திருவேங்கட மலையில் எழுந்தருளிய சிங்கம் ஆவான். குதிரை வாயைக் கிழித்து வெண்ணெய் உண்டு, உரலிற் கட்டுப்பட்ட கண்ணன் கரும்பையும் தேனையும் பாலையும் ஒத்த இனியவன். இவனைத் தவிர என் மனம் வேறு நினையாது. 1572

நொடி நேரமும் பிரியாது மனத்தில் தங்கும் பெருமான் புகழ் உடையவன். பொன் போன்ற பூக்களுடைய கோங்குமரச் சோலைகள் உள்ள திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளினான். கற்கண்டையும், கரும்புச் சாற்றையும் போன்ற இனியவன்; அக் கண்ணன் நான்கு வேதங்களையும் ஓதியவன். பாற்கடலில் கண் வளர்ந்த அவனை அன்றி வேறு யாரையும் கவி பாடேன். 1573

வீணைத் தந்திகளில் பிறக்கும் சிறந்த இசையில் செம்பாலைப் பண்ணைப் போன்று இனியவன். என் நெஞ்சம், கண்கள், வாக்கு மூன்றையும் இடமாகக் கொண்டான். இவ்வாறு என்னை ஏற்றபின், வேதியர்கள் நெஞ்சிலும் இடம் பெற்றான். நித்தியசூரிகள் தலைவனாவான் இவன். மீன்கள் துள்ளும் கடலையும் நீல மணியையும் ஒத்த நிறமுடைய என் அண்ணலை அன்றி வேறு யாரையும் என் நா பேசாது. 1574

இப்பிறவியில் எம்பெருமான் அருளைப் பெற்றதால் இனி எமக்கு எப்பாவம் வந்து சேரும்? கூறுங்கள். ஆத்மாவின் தூய இயல்பை அழிக்கும் வினைகளைப் போக்கும் இறைவனே உபாயமும் ஆகிறான். உலகினரால்தொழப்படும் அவனே அவர்கள் நலத்தை எண்ணுபவன். நித்திய சூரிகளால் வணங்கப்படுபவன். முத்தைப் போல வடிவுடைய அவன் பக்தர்களால் அனுபவிக்கப் படுகிறான். என் மனம் கவர்ந்த கனி போன்ற அக்கள்வனை, ஆசையுற்று, இன்று நான் கண்டு கொண்டேன். 1575

என் மனத்தே என்றும் வாழும் எம்பெருமானின் அருளுக்கு அடியேன் என்ன பிரதி பயன் செய்வேன்? கூறுங்கள். இரணியன் மார்பைக் கிழித்த அப்பிரான் தஞ்மைாமணிக் கோவிலில் எழுந்தருளி உள்ளான். கடல் மீது அணை கட்டி, நெருப்பை ஒத்த வீரமும், வாளும் கொண்ட இராவணன் நகரைப் பாழாகச் செய்த இராமன் தேவர்களால் தொழப்படுபவன். ஒளி வீசும் நீல மணிமயமான மலை போன்ற அவனை அன்றி என் நெஞ்சம் வேறு யாருக்கும் மங்களாசாசனம் செய்யாது. 1576

தோடு விண்டு அலர் பூம் பொழில் மங்கையர்
தோன்றல், வாள் கலியன், திரு ஆலி
நாடன், நல் நறையூர் நின்ற நம்பி தன்
நல்ல மா மலர்ச் சேவடி சென்னியில்
சூடியும் தொழுதும், எழுந்து ஆடியும்,
தொண்டர்கட்கு அவன் சொன்ன சொல் மாலைப்
பாடல் பத்திவை பாடுமின் தொண்டீர்
பாட நும்மிடைப் பாவம் நில்லாவே! 1577

## திருச்சேறை

கண் சோர, வெம் குருதி வந்து இழிய, வெம் தழல்போல்
கூந்தலாளை
மண் சேர முலை உண்ட மா மதலாய்! வானவர் தம்
கோவே! என்று,
விண் சேரும் இளங் திங்கள் அகடு உரிஞ்சு மணி மாடம்
மல்கு செல்வத்
தண் சேறை எம் பெருமான் தாள் தொழுவார் காண்மின் என்
தலைமேலாரே. 1578

அம் புருவ வரி நெடுங் கண் அலர் மகளை வரை அகலத்து
அமர்ந்து, மல்லல்
கொம்பு உருவ விளங்கனிமேல் இளங் கன்று கொண்டு எறிந்த
கூத்தர் போலாம்,
வம்பு அலரும் தண் சோலை வண் சேறை வான் உந்து
கோயில் மேய
எம் பெருமான் தாள் தொழுவார், எப்பொழுதும் என் மனத்தே
இருக்கின்றாரே. 1579

மீது ஓடி வாள் எயிறு மின் இலக, முன் விலகும்
உருவினாளைக்
காதோடு கொடி மூக்கு அன்று உடன் அறுத்த கைத்தலத்தா!
என்று நின்று,
தாதோடு வண்டு அலம்பும் தண் சேறை எம் பெருமான்
தாளை ஏத்தி,
போதோடு புனல் தூவும் புண்ணியரே விண்ணவரின்
பொலிகின்றாரே. 1580





இதழ்கள் விரிந்த மலர்கள் உள்ள சோலைகள் சூழ்ந்த திருமங்கை நாட்டில் உள்ளவர்க்குத் தலைவரான கலியன் திருவாலி நாட்டுக்கும் அரசர் ஆவார். இவர். திருநறையூர் நம்பியின் திருவடிகளைத்தம் முடியில் சூடித் தொழுது, பெருமானின் குணங்களில் ஆட்பட்டு ஆடிப்பாடினார். பகவானின் அடியவர்களே! இப்பாசுரங்களை நீங்கள் பாடினால், உமது பாவங்கள் தங்கா. 1577

## திருச்சேறை

திருச்சேறைத் தலத்தில் உள்ள மாடங்கள் வானில் உள்ள சந்திரனின் அடிவயிற்றைத் தொடும் அளவு உயர்ந்தவை; இங்கு எழுந்தருளிய பெருமானை அடியார்கள், 'நித்திய சூரிகள் தலைவனே!' என்று அழைப்பர். 'கொடிய கண் தளரவும் இரத்தம் பீறிடவும் தீ ஒத்த தலை மயிர் உடைய பூதனை பூமியிலே விழும்படி முலை சுவைத்து உண்ட சிறிய குழந்தையே!' என்று துதிப்பார்கள். இவ்வாறு பெருமானின் திருவடிகளைத் தொழும் அடியார்கள் அடியேன் தலைமேல் தம் திருவடிகளை வைத்து உலாவுவதைக் காணுங்கள். 1578

அழகிய புருவங்களும் வரிபடர்ந்த கண்களும் உடைய திருமகளை மார்பில் கொண்டவன்; கொம்புகளுடன் கூடிய விளா மரத்தின் மேல் கன்றை வீசி, இரண்டு அசுரர்களையும் அழித்த கூத்தன்; ஆகிய எம்பெருமான் மணம் பரவும் சோலைகள் உள்ள திருச்சேறையில் வானை முட்டும் கோவிலில் எழுந்தருளினான். இப்பெருமானின் திருவடிகளைத் தொழும் அடியவர்கள் எப்பொழுதும் என் நெஞ்சில் உள்ளனர். 1579

"மேல் நோக்கிய கோரைப் பற்கள் மின்னல் போல ஒளிவிட, எதிரே வந்தால் வியக்கும்படியான பயங்கர வடிவம் கொண்ட சூர்ப்பணகையின் கொடி போன்ற மூக்கை அறுத்த திருக்கைகளை உடையவனே!" என்று அடியார்கள் திருச்சேறைப் பெருமானைத் துதிப்பார்கள். பூந்தாதுக்களில் வண்டுகள் ஒலிக்கும் சிறப்புடைய இவ்வூர்ப்பெருமானின் திருவடிகளில் மலர் தூவி நீர் வார்த்து வழிபடும் அடியார்கள் நித்திய சூரிகளிலும் மேம்பட்டவராய் விளங்குவர். 1580

தேர் ஆளும் வாள் அரக்கன் தென் இலங்கை வெம் சமத்துப்
பொன்றி வீழ,
போர் ஆளும் சிலை அதனால் பொரு கணைகள் போக்குவித்தாய்!
என்று, நாளும்
தார் ஆளும் வரை மார்பன், தண் சேறை எம் பெருமான்
உம்பர் ஆளும்
பேராளன் பேர் ஓதும் பெரியோரை ஒருகாலும்
பிரிகிலேனே. 1581

வந்திக்கும் மற்றவர்க்கும், மாசு உடம்பின் வல் அமணர்
தமக்கும் அல்லேன்,
முந்திச் சென்று அரி உரு ஆய், இரணியனை முரண் அழித்த
முதல்வர்க்கு அல்லால்
சந்தப் பூ மலர்ச் சோலைத் தண் சேறை எம் பெருமான்
தாளை நாளும்
சிந்திப்பார்க்கு என் உள்ளம், தேன் ஊறி, எப்பொழுதும்
தித்திக்குமே. 1582

பண்டு, ஏனம் ஆய், உலகை அன்று இடந்த பண்பாளா!
என்று நின்று,
தொண்டு ஆனேன்; திருவடியே துணை அல்லால்,துணை இலேன்;
சொல்லுகின்றேன் ;
வண்டு ஏந்தும் மலர்ப் புறவின் வண் சேறை எம் பெருமான்
அடியார் தம்மைக்
கண்டேனுக்கு, இது காணீர் என் நெஞ்சும், கண் இணையும்
களிக்கும் ஆறே! 1583

பை விரியும் வரி அரவில், படு கடலுள், துயில் அமர்ந்த
பண்பா! என்றும்,
மை விரியும் மணி வரைபோல் மாயவனே! என்று என்றும்,
வண்டு ஆர் நீலம்
செய் விரியும் தண் சேறை எம் பெருமான் திரு வடிவைச்
சிந்தித்தேற்கு, என்
ஐ அறிவும் கொண்டானுக்கு ஆள் ஆனார்க்கு ஆள் ஆம்-என்
அன்பு தானே. 1584

உண்ணாது வெம் கூற்றம்; ஓவாத பாவங்கள்
சேரா மேலை
விண்ணோரும் மண்ணோரும் வந்து இறைஞ்சும் மென் தளிர்போல்
அடியினானை,
பண் ஆர வண்டு இயம்பும் பைம் பொழில் சூழ் தண் சோறை
அம்மான் தன்னை,
கண் ஆரக் கண்டு உருகி, கை ஆரத் தொழுவாரைக்
கருதுங்காலே. 1585





"தேர் ஏறி, வாள் வீசிய, இராவணனின் தென்னிலங்கை அழியும்படி, வில் வளைத்து அம்பெய்து போரில் ஆளுமை காட்டியவனே!" என்று திருச்சேறைப் பெருமானைத் தினமும் அடியார்கள் துதிப்பார்கள். மலை போன்ற மார்பில் திருத்துழாய் மாலை அணிந்த அவன் வான் உலகங்களையும் ஆள்பவன். இப் பெருமான் திருநாமங்களை ஓதும் பெரியார்களை நான் ஒரு நொடியும் பிரியேன். 1581

நரசிம்மமாய் இரணியன் பலத்தை அழித்த உலககாரணன் ஆன திருமாலுக்கு அடியவன் ஆவேன். உடலில் அழுக்குடைய சமணருடனும் தாழ்ந்த தேவதைகளை வணங்கும் பௌத்தருடனும் நான் இணங்கேன். வாசனை வீசும் பூக்கள் மலரும் சோலைகள் சூழ்ந்த திருச்சேறைப் பெருமானை நாளும் தியானம் செய்பவர் இடத்தே என் மனம் தேன் ஊறியது போல எப்பொழுதும் தித்திக்கும். 1582

'முற்காலத்தில் வராஹமாய் உலகை எடுத்துக் காத்த குணவானே!' என்று துதித்து உமக்கு நான் அடிமைப்பட்டேன். உமது திருவடிகளே அடியேனுக்குக் காப்பு ஆகும். அவை அன்றி வேறு துணை இல்லை என்பதை உறுதியாகக் கூறுகிறேன். வண்டுகள் தங்கும் பூக்கள் மலரும் புறவுகளை உடைய திருச்சேறையில் உள்ள பெருமானின் அடியார்களைக் கண்ட என் கண்களும் மனமும் மகிழ்வதைப் பாரீர். 1583

"விரிந்த படங்களுடைய ஆதிசேஷன் மீது பாற்கடலில் கண் வளர்ந்த பண்பாளா! நீல மணி மலை போன்ற திருமேனி உடைய மாயவனே!" என்று பலகாலும் திருச்சேறைப்பெருமான் திருவடிகளைச் சிந்தித்தேன். வண்டுகள் தங்கும் நெய்தற்பூக்கள் மலர்ந்த வயல்கள் அத்தலத்தில் உள்ளன. எனது ஐம்புலன்களின் ஞானத்தையும் தனதாக்கிக் கொண்ட அவ்வெம்பெருமானுக்கு அடிமைப்பட்ட பாகவதரிடத்தே அடியேன் அன்புற்று அடிமைப்பட்டேன். 1584

வண்டுகள் இசைபாடும் சோலைகள் சூழ்ந்த திருச்சேறையில் எழுந்தருளிய பெருமானை நித்திய சூரிகளும் உலகினரும் வணங்குகிறார்கள். இப்பெருமானைக் கண்ணாரக் கண்டு சேவித்து மனம் உருகிக் கைகளால் தொழும் அடியார்களை நினைத்தாலே கொடிய யமன் துன்புறுத்த மாட்டான்; இடைவிடாத பாவங்களும் அணுகா. 1585

கள்ளத்தேன், பொய் அகத்தேன்; ஆதலால், ஒருபோது ஒருகால்
கவலை என்னும்
வெள்ளத்தேற்கு என்கொலோ? விளை வயலுள் கரு நீலம்
களைஞர் தாளால்
தள்ள, தேன் மணம் நாறும் தண் சேறை எம் பெருமான்
தாளை நாளும்
உள்ளத்தே வைப்பாருக்கு, இது காணீர் என் உள்ளம்
உருகும் ஆறே! 1586

பூ மாண் சேர் கருங் குழலார்போல் நடந்து வயல் நின்ற
பெடையோடு அன்னம்
தேமாவின் இன் நிழலில் கண் துயிலும் தண் சேறை
அம்மான் தன்னை
வா மான் தேர்ப் பரகாலன், கலிகன்றி, ஒலி மாலை
கொண்டு, தொண்டீர்!
தூ மாண் சேர் பொன் அடிமேல் சூட்டுமின் நும் துணைக் கையால்
தொழுது நின்றே. 1587

### திருவழுந்தூர் – 1 (தலைவி பேச்சு)

தந்தை காலில் பெரு விலங்கு தாள் அவிழ, நள் இருட்கண்
வந்த எந்தை பெருமானார் மருவி நின்ற ஊர்போலும் -
முந்தி வானம் மழை பொழியும், மூவா உருவின் மறையாளர்
அந்தி மூன்றும் அனல் ஓம்பும், அணி ஆர் வீதி அழுந்தூரே. 1588

பாரித்து எழுந்த படை மன்னர் தம்மை மாள, பாரதத்து,
தேரில் பாகன் ஆய், ஊர்ந்த தேவ தேவன் ஊர்போலும் -
நீரில் பணைத்த நெடு வாளைக்கு அஞ்சிப் போன குருகு இனங்கள்,
ஆரல் கவுளோடு, அருகு அணையும் அணி ஆர் வயல் சூழ் அழுந்தூரே. 1589

செம்பொன் மதிள் சூழ் தென் இலங்கைக்கு இறைவன் சிரங்கள் ஐ இரண்டும்
உம்பர் வாளிக்கு இலக்கு ஆக உதிர்த்த உரவோன் ஊர்போலும் -
கொம்பில் ஆர்ந்த மாதவிமேல் கோதி மேய்ந்த வண்டு இனங்கள்
அம்ப அராவும் கண் மடவார் ஐம்பால் அணையும் அழுந்தூரே. 1590

வெள்ளத்துள் ஓர் ஆல்இலைமேல் மேவி, அடியேன் மனம் புகுந்து, என்
உள்ளத்துள்ளும் கண்ணுள்ளும் நின்றார் நின்ற ஊர்போலும்-
புள்ளுப் பிள்ளைக்கு இரை தேடிப் போன காதல் பெடையோடும்
அள்ளல் செறுவில் கயல் நாடும், அணி ஆர் வயல் சூழ் அழுந்தூரே. 1591





திருச்சேறை வயல்களில் உழவர்கள் நெய்தற் பூக்களைக் கால்களால் ஒதுக்கித் தள்ளவும் தேன் வழிந்து மணம் வீசும். இங்குள்ள பெருமானைத் தியானம் செய்யும் பாகவதரிடத்தே என் மனம் உருகியதைப் பாருங்கள். ஆத்மாவை உரிமையாக எண்ணும் கள்ளத்தனமும் பொய்யும் கொண்டு துயரக்கடலில் அழுந்திய எனக்குப் பாகவதர்களிடத்தே ஈடுபாடு எவ்வாறு ஏற்பட்டதோ? ஆ! ஆ! 1586

பூச்சூடிய கூந்தலைப் பெற்ற பெண்களைப்போல நடக்கும் அன்னம், தன் பேடையுடன் உலாவியபின், திருச்சேறையில் மாமர நிழலில்உறங்கும். இப்பெருமானைப் பற்றிய பாசுரங்களை, தேர் ஏறிப் பகவரை வெல்லும் கலிகன்றி அருளினர். தொண்டர்களே! இவற்றைப் பாடிப் பெருமான் திருவடிகளைக் கைகளால் தொழுது வணங்குங்கள். 1587

### திருவழுந்தூர் – 1 (தலைவி பேச்சு)

தந்தையின் கால் விலங்கு அவிழ்தற்காக, அவதாரம் செய்த கண்ணன் திருவழுந்தூரில் கோயில் கொண்டான். மூப்பே அடையாத அந்தணர், மேகம் மழை பொழிய இங்கு மூன்று காலங்களிலும் வேள்வி செய்வர். இங்குள்ள வீதிகள் அழகானவை. இத்தலம், என் தலைவனின் பரமபதத்தை ஒக்கும். 1588

பாரதப் போரில், படையுடன் கிளர்ந்த துரியோதனாதியரை அழிக்க நித்திய சூரிகள் தலைவன், தேர்ப்பாகன் ஆனான். இவன் பரமபதம் போன்ற திருவழுந்துரில் உள்ளான். வயல்களால் சூழப்பட்டது இவ்வூர். இங்குள்ள நீரில் துள்ளும் பெரிய மீன்களுக்குப் பயப்படும் குருகுகள், ஆரல் மீனைக் கவ்வியவாறு அருகே வரும். 1589

ஸ்ரீராமன் பொன் மதிள் சூழ்ந்த இலங்கை மன்னனின் பத்துத் தலைகளையும் பிரமாத்திரத்தால் வீழ்த்தினான். இப்பெருமானின் திருவழுந்துர் வைகுந்தம் போன்றது. இங்கு, கிளைகளுடன் வளர்ந்த குருகத்தி மரம் மீது, மூக்கால் கொத்தி இரை தேடும் வண்டுகள், அம்பை ஒத்த கண்களுடைய பெண்களில் கூந்தலில் அமரும். 1590

பிரளயத்தில் ஆலிலையில் பொருந்திய எம்பெருமான் அடியேன் மனம் புகுந்து கண்களிலும் நிற்கிறான். இப்பெருமான் எழுந்தருளிய திருவழுந்தூரில் உள்ள வயல்களில் ஆண் பறவை, தன் குஞ்சுக்காக அன்புடன் இரை தேடி மீன்களை நாடும். 1591

பகலும் இரவும் தானே ஆய், பாரும் விண்ணும் தானே ஆய்,
நிகரில் சுடர் ஆய், இருள் ஆகி நின்றார் நின்ற ஊர்போலும்-
துகிலின் கொடியும் தேர்த் துகளும் துன்னி, மாதர் கூந்தல்வாய்
அகிலின் புகையால் முகில் ஏய்க்கும், அணி ஆர் வீதி அழுந்தூரே. 1592

ஏடு இலங்கு தாமரைபோல் செவ்வாய் முறுவல் செய்தருளி,
மாடு வந்து, என் மனம் புகுந்து நின்றார் நின்ற ஊர்போலும் -
நீடு மாடத் தனிச் சூலம் போழக் கொண்டல் துளி தூவ,
ஆடல் அரவத்து ஆர்ப்பு ஓவா, அணி ஆர் வீதி அழுந்தூரே. 1593

மாலைப் புகுந்து மலர் அணைமேல் வைகி, அடியேன் மனம் புகுந்து என்
நீலக் கண்கள் பனி மல்க நின்றார் நின்ற ஊர்போலும்-
வேலைக் கடல்போல் நெடு வீதி விண் தோய் சுதை வெண் மணி மாடத்து
ஆலைப் புகையால் அழல் கதிரை மறைக்கும் வீதி அழுந்தூரே. 1594

வஞ்சி மருங்குல் இடை நோவ மணந்து நின்ற கனவகத்து, என்
நெஞ்சு நிறையக் கைகூப்பி நின்றார் நின்ற ஊர்போலும்-
பஞ்சி அன்ன மெல் அடி நல் பாவைமார்கள் ஆடகத்தின்
அம் சிலம்பின் ஆர்ப்பு ஓவா, அணி ஆர் வீதி அழுந்தூரே. 1595

என் ஐம்புலனும் எழிலும் கொண்டு, இங்கே நெருநல் எழுந்தருளி
பொன் அம் கலைகள் மெலிவு எய்த, போன புனிதர் ஊர்போலும்-
மன்னும் முது நீர் அரவிந்த மலர்மேல் வரி வண்டு இசை பாட,
அன்னம் பெடையோடு உடன் ஆடும் அணி ஆர் வயல் சூழ் அழுந்தூரே. 1596

நெல்லில் குவளை கண் காட்ட நீரில் குமுதம் வாய் காட்ட,
அல்லிக் கமலம் முகம் காட்டும் கழனி அழுந்தூர் நின்றானை
வல்லிப் பொதும்பில் குயில் கூவும் மங்கை வேந்தன், பரகாலன்
சொல்லில் பொலிந்த தமிழ் மாலை சொல்ல, பாவம் நில்லாவே. 1597

## திருவழுந்தூர் – உ

சிங்கம் அது ஆய், அவுணன் திறல் ஆகம் முன் கீண்டு; உகந்த
சங்கம் இடத்தானை, தழல் ஆழி வலத்தானை,
செங் கமலத்து அயன் அனையார் தென் அழுந்தையில் மன்னி நின்ற
அம் கமலக் கண்ணனை-அடியேன் கண்டுகொண்டேனே. 1598





பகல், இரவு, பூமி, வானம் ஆகியவற்றில் உள் நின்று நியமிக்கிற திருமால் ஒளிப் பொருள்களாகவும் இருளாகவும் ஆனவன். இப் பெருமான் எழுந்தருளிய திருவழுந்தூரில் தெருவிலுள்ள துகில் கொடிகள் அசைவதால் காற்று வீசும்; தேர்களால் தூசி உண்டாகும். பெண்களின் கூந்தல் மேலிட்ட அகில் புகைகள் மேகம் போல் பரவும். 1592

இதழ்களுடைய தாமரை போன்ற வாயால் புன்முறுவல் செய்து, என்மனம் புகுந்த பெருமான் பரமபதம் போன்ற திருவழுந்துரில் எழுந்தருளினான். இவ்வூர் மாடங்களின் உச்சிகள் மேகத்தைப் பிளக்கும்படி உயர்ந்துள்ளன. மேகம் மழைத் துளியைத் தூவவும், பெண்கள் ஆடுவர்; அவர்களின் ஆரவாரம் ஓவாது கேட்கும். 1593

மாலையில் வந்து, பூம்படுக்கையில் அமர்ந்து என் இதயம் புகுந்தவர், நெய்தல் பூப்போன்ற என் கண்களிலிருந்து நீர் பெருகக் கண்டு விலகாமல் நின்றார். இவரது திருவழுந்தூரில் கடல் போல நீண்டுள்ள வீதிகளில், வெண் சாந்து பூசிய மாடங்களில் படியும் சூரிய வெப்பக் கதிர்களை, கரும்பு ஆலைப் புகை மறைக்கும். 1594

வஞ்சிக் கொடி போன்ற என் இடை தளரும் படி என்னுடன் சேர்ந்து கனவுமயமான கலவியில், நான் குறை காணாதபடி தன் கைகளைக் கூப்பி, நின்றானே! அந்த நாயகனின் திருத்தலம் திருவழுந்தூர் அன்றோ! பஞ்சு போன்ற மெல்லிய பாதங்களுடைய மாதர்களின் தங்கச் சலங்கை ஒலி, இவ்வூர் வீதியில் ஓயாதே கேட்கும். 1595

நேற்று நான் இருந்த இடத்தே வந்த அவர், என் ஐம்புலன்களின் அழகைக் கவர்ந்து போனார். அவரைப் பிரிந்ததால் என் அழகிய ஆடைகள் தளரும்படி நான் மெலிந்தேன். இத்தூயவரின் திருவழுந்தூரில் மீன்கள் வாழும் குளங்களில் தாமரைப் பூக்களில் வண்டுகள் இசை பாடும். பெடையுடன் அன்னம் ஆடும் வயல்கள் சூழ்ந்துள்ளன. 1596

திருவழுந்தூரில், நெற்பயிர் நடுவே மலர்ந்த குவளைகள் பெண்களின் கண்களை ஒக்கும்; நீரில் மலர்ந்த ஆம்பல் அவர்கள் வாயைப் போன்றது. தாமரையோ,முகத்தைப் போன்றது. கொடிப் புதரில் குயில் கூவும். திருமங்கை நாட்டு மன்னர், பரகாலன் பாடிய இச் சந்தப் பாடல்களைப் பயில்பவரின் பாவங்கள் நில்லாமல் அழியும். 1597

## திருவழுந்தூர் – உ

நரசிம்மப் பிரான், இரணியனின் உடலைக் கிழித்து மகிழ்ந்தான். வலக்கை ஆழியும் இடக்கைச் சங்கும் உடைய தாமரைக் கண்ணனை, நான் திருவழுந்தூரில் காணப்பெற்றேன். இங்குள்ள அந்தணர், தாமரையில் தோன்றிய பிரம தேவனை ஒத்தவர்கள் ஆவர். 1598

கோ ஆனார் மடியக் கொலை ஆர் மழுக் கொண்டருளும்
மூவா வானவனை, முழு நீர் வண்ணனை, அடியார்க்கு
ஆஆ! என்று இரங்கித் தென் அழுந்தையில் மன்னி நின்ற
தேவாதிதேவனை-யான் கண்டு கொண்டு, திளைத்தேனே. 1599

உடையானை, ஒலி நீர் உலகங்கள் படைத்தானை,
விடையான் ஓட அன்று விறல் ஆழி விசைத்தானை,
அடையார் தென் இலங்கை அழித்தானை, அணி அழுந்தூர்
உடையானை-அடியேன் அடைந்து உய்ந்துபோனேனே. 1600

குன்றால் மாரி தடுத்தவனை, குல வேழம் அன்று
பொன்றாமை, அதனுக்கு அருள் செய்த போர் ஏற்றை,
அன்று ஆவின் நறுநெய் அமர்ந்து உண்ட அணி அழுந்தூர்
நின்றானை-அடியேன் கண்டு கொண்டு நிறைந்தேனே. 1601

கஞ்சனைக் காய்ந்தானை, கண்ணமங்கையுள் நின்றானை,
வஞ்சனப் பேய் முலையூடு உயிர் வாய் மடுத்து உண்டானை,
செஞ்சொல் நான்மறையோர் தென் அழுந்தையில் மன்னி நின்ற
அஞ்சனக் குன்றம் தன்னை-அடியேன் கண்டுகொண்டேனே. 1602

பெரியானை, அமரர் தலைவற்கும், பிரமனுக்கும்,
உரி யானை உகந்தான் அவனுக்கும் உணர்வதனுக்கு
அரியானை, அழுந்தூர் மறையோர்கள் அடிபணியும்
கரியானை-அடியேன் கண்டு கொண்டு களித்தேனே. 1603

திரு வாழ் மார்வன் தன்னை; திசை, மண், நீர், எரி முதலா
உரு ஆய் நின்றவனை; ஒலி சேரும் மாருதத்தை;
அரு ஆய் நின்றவனை ; தென் அழுந்தையில் மன்னி நின்ற
கரு ஆர் கற்பகத்தை-கண்டுகொண்டு, களித்தேனே. 1604

நிலை ஆள் ஆக என்னை உகந்தானை, நில மகள் தன்
முலை ஆள் வித்தகனை, முது நான்மறை வீதிதொறும்
அலை ஆர் கடல்போல் முழுங்கும் தென் அழுந்தையில் மன்னிநின்ற
கலை ஆர் சொற்பொருளை-கண்டுகொண்டு, களித்தேனே. 1605





*நீர் நிறைந்த கடல் நிறம் உடைய திருமால் அரசர்களை அழிக்க அவதாரம் செய்தான்; மூப்பு முதலிய மாறுபாடில்லாத பரமபதநாதன் இவன். அடியாரிடத்தே 'ஐயோ' என்று அருளும் இவன் அழகிய திருவழுந்தூரில் உள்ளான். நித்தியசூரிகள் தலைவனான இவனைக் கண்டு வணங்கிக் களித்தேன்.* 1599

*எல்லோர்க்கும் இறைவன் ஆனவன்; கடல் சூழ்ந்த உலகங்களைப் படைத்தான்; காளை வாகனன் சிவன் ஓடும்படி பாணாசுரப்போரில் சக்கரத்தை ஏவினான். பகைவரின் இலங்கையை அழித்தான். அழகிய திருவழுந்தூரை இருப்பிடமாகக் கொண்டான். அடியேன் இப்பெருமானுக்கு ஆட்பட்டு உய்வு பெற்றேன்.* 1600

*மலையைத் தூக்கி மழையைத் தடுத்தான்; குலத்தில் சிறந்த கஜேந்திரன் அழியாதபடி அருள் செய்து காத்தான். போரில் வல்லவன்; ஆய்ச்சி யசோதை வைத்த பசுவின் நெய்யை அமர்ந்து உண்ட இக்கண்ணனைத் திருவழுந்தூரில் கண்டு முழுமை பெற்றேன்.* 1601

*கம்சனை அழித்தவன்; திருக்கண்ண மங்கையில் எழுந்தருளியவன்; வாய் வழியே முலைப் பாலைப் பருகுவது போல் வஞ்சனைப் பூதனையைக் கொன்றவன்; மெய்ப்பொருள் உடைய நான்கு வேதங்களைப் பயிலும் அந்தணர் வாழும் திருவழுந்தூரில் எழுந்தருளியவன்; மை மலை போன்ற இவ்வழகனை அடியேன் கண்டு கொண்டேன்.* 1602

*யாவர்க்கும் பெரியவன்; தேவர்தலைவன் இந்திரன், பிரமன், யானைத் தோலை ஆடையாகப் பெற்ற சிவன், ஆகிய மூவரும் அறிந்துணர முடியாத அரியவன்; அந்தணர் வணங்கும் கரியவன்; திருவழுந்தூரில் உள்ள இப்பெருமானைக் கண்டு மகிழ்ந்தேன்.* 1603

*திருமகள் மார்பன்; திசைகள், பூமி,நீர்,தீ முதலிய யாவற்றுக்கும் காரணன்; ஐம்பூதங்களின் வடிவானவன்; ஒலி பரவும் காற்றையும் உடலாகப் பெற்றவன்; ஆயினும் இவற்றுள் வாழ்ந்து இவற்றை இயக்குபவன்; வேர்ப் பற்றுடைய கற்பக மரம் போன்றவனைத் திருவழுந்தூரில் கண்டு கொண்டு களித்தேன்.* 1604

*என்னை ஆளாக்கி, நித்திய கைங்கர்யம் செய்யப் பணித்து மகிழ்ந்தான். பூமாதேவியின் மார்பைப் பொருந்தியவன். தொன்மையான நான்கு வேதங்களும், வீதிகளில், கடல் அலை போல் முழங்கப்படும் திருவழுந்தூரில் உள்ளவன்; கலைகளால் பேசப்படும் செம்பொருள் ஆன இவனை, நான் கண்டு களித்தேன்.* 1605

பேரானை, குடந்தைப் பெருமானை, இலங்கு ஒளி சேர்
வார் ஆர் வனமுலையாள் மலர் மங்கை நாயகனை,
ஆரா இன் அமுதை தென் அழுந்தையில் மன்னி நின்ற
கார் ஆர் கரு முகிலை-கண்டுகொண்டு, களித்தேனே. 1606

திறல் முருகன் அனையார் தென் அழுந்தையில் மன்னி நின்ற
அற முதல்வன் அவனை, அணி ஆலியர் கோன், மருவார்
கறை நெடு வேல் வலவன், கலிகன்றி சொல் ஐ இரண்டும்
முறை வழுவாமை வல்லார் முழுது ஆள்வர் வான் உலகே. 1607

## திருவழுந்தூர் – 3

திருவுக்கும் திரு ஆகிய செல்வா!
தெய்வத்துக்கு அரசே! செய்ய கண்ணா!
உருவச் செஞ் சுடர் ஆழி வல்லானே!
உலகு உண்ட ஒருவா! திரு மார்பா!
ஒருவற்கு ஆற்றி உய்யும் வகை இன்றால்,
உடன் நின்று ஐவர் என்னுள் புகுந்து, ஒழியாது.
அருவித் தின்றிட அஞ்சி நின் அடைந்தேன்
அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே! 1608

பந்து ஆர் மெல் விரல் நல் வளைத் தோளி
பாவை பூ மகள் தன்னொடும் உடனே
வந்தாய்! என் மனத்தே மன்னி நின்றாய்!
மால் வண்ணா! மழைபோல் ஒளி வண்ணா!
சந்தோகா! பௌழியா! தைத்திரியா!
சாம வேதியனே! நெடுமாலே!
அந்தோ நின் அடி அன்றி, மற்று அறியேன்
அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே! 1609

நெய் ஆர் ஆழியும், சங்கமும் ஏந்தும்
நீண்ட தோள் உடையாய்! அடியேனைச்
செய்யாத உலகத்திடைச் செய்தாய்;
சிறுமைக்கும் பெருமைக்கும் உள் புகுந்து,
பொய்யால் ஐவர் என் மெய் குடி ஏறிப்
போற்றி வாழ்வதற்கு அஞ்சி, நின் அடைந்தேன்;
ஐயா! நின் அடி அன்றி, மற்று அறியேன்
அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே! 1610





*திருப்பேர் நகர், திருக்குடந்தை ஆகிய தலங்களில் எழுந்தருளியவன்; ஒளி வீசும் மார்புகளைப் பெற்ற மலர் மங்கையின் நாயகன்; ஆரா இன்னமுதாக இருப்பவன; மழைக் கால மேகம் போன்ற இப்பெருமானைத் திருவழுந்தூரில் கண்டு களித்தேன்.* **1606**

*வலிமை மிகுந்த முருகனைப் போன்றவர் வாழும் திருவழுந்தூரில் எழுந்தருளிய அறத்தின் முதல்வனை, ஆலி நாட்டரசர், வேல் ஏந்திய கலியன் இப்பாசுரங்களில் பாடினார். இவற்றை முறை தவறாமல் பயில்பவர் பரமபதத்தை முழுதுமாய் ஆள்வர்.* **1607**

## திருவழுந்தூர் – 3

*எல்லோர்க்கும் செல்வம் அருளும் திருமகளுக்கும் செல்வனே! நித்திய சூரிகளின் அரசனே! சிவந்த கண்ணனே! அழகுடன் ஒளி விடும் சக்கரத்தைக் கையில் பிடித்தவனே! உலகுகளை விழுங்கிக் காத்தவனே; திருமகளை மார்பில் தரித்தவனே! திருவழுந்தூரில் மேல் திசையில் எழுந்தருளியவனே! ஒரு புலனுக்கு ஆட்பட்டே அடியேன் உய்வு பெற வழி இல்லை எனில், ஐம்புலன்களும் கூட இருந்து, என்னுள் புகுந்து தொடர்ந்து அலைக்கழிக்கின்றனவே! இவற்றுக்கு அஞ்சி உன் திருவடி அடைந்தேன்.* **1608**

*மெல்லிய விரல்களில் பந்துடன், தோள்களில் வளைகளை அணிந்த திருமகளுடன், கூடி எழுந்தருளியவனே! என் மனத்தில் பொருந்தி நின்றாய். மேகம் போன்று கறுத்த திருமேனியில் ஒளி கூடியவனே! சாந்தோக்கியம், பிருகதாரணியம், தைத்திரீயம் ஸாமவேதம் ஆகியவைகளில் வல்லவனே! திருவழுந்தூரில் மேல் திசையில் எழுந்தருளிய திருமாலே! உன் திருவடிகளை அன்றி அடியேன் வேறு புகலிடம் அறியேன்.* **1609**

*திருவழுந்தூரில் மேல் திசையில் எழுந்தருளிய ஐயனே! கூர்மையான சக்கரத்தையும் சங்கையும் தரித்த தோள்களைப் பெற்றவனே! உலகத்தில் பிறர்க்குக் காட்டாத அருளை அடியேனிடத்தே மட்டும் காட்டி, உன் கைங்கரியத்தில் நான் சுவை பெறச் செய்தாய். ஐம்புலன்களும் வஞ்சனையாக என்னுள்ளே புகுந்து குடியேறி, அழியும் சிறிய, பெரிய இன்பங்களில் ஈடுபடுத்துகின்றன. அவற்றைப் புகழ்ந்து வாழப் பயப்பட்டு, உன் திருவடிகளை அடைக்கலமாகப் பற்றினேன்.* **1610**

பரனே! பஞ்சவன், பௌழியன், சோழன்,
பார் மன்னர் மன்னர்தாம் பணிந்து ஏத்தும்
வரனே! மாதவனே! மதுசூதா!
மற்று ஓர் நல் துணை நின் அலால் இலேன் காண்;
நரனே! நாரணனே! திருநறையூர்
நம்பீ! எம் பெருமான்! உம்பர் ஆளும்
அரனே! ஆதிவராகம் முன் ஆனாய்!
அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே! 1611

விண்டான் விண் புக, வெம் சமத்து அரி ஆய்,
பரியோன் மார்வு அகம் பற்றிப் பிளந்து,
பண்டு, ஆன் உய்ய, ஓர் மால் வரை ஏந்தும்
பண்பாளா! பரனே! பவித்திரனே!
கண்டேன் நான் கலியுகத்ததன் தன்மை;
கருமம் ஆவதும் என் தனக்கு அறிந்தேன்;
அண்டா! நின் அடி அன்றி, மற்று அறியேன்
அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே! 1612

தோயா இன் தயிர் நெய் அமுது உண்ண,
சொன்னார் சொல்லி நகும் பரிசே, பெற்ற
தாயால் ஆப்புண்டு இருந்து, அழுது ஏங்கும்
தாடாளா! தரையோர்க்கும் விண்ணோர்க்கும்
சேயாய்! கிரேத, திரேத, துவாபர,
கலியுகம் இவை நான்கும் முன் ஆனாய்!
ஆயா! நின் அடி அன்றி மற்று அறியேன்
அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே! 1613

கறுத்துக் கஞ்சனை அஞ்ச முனிந்தாய்!
கார் வண்ணா! கடல்போல் ஒளி வண்ணா!
இறுத்திட்டு ஆன் விடை ஏழும், முன் வென்றாய்!
எந்தாய்! அந்தரம் ஏழும் முன் ஆனாய்!
பொறுத்துக்கொண்டிருந்தால், பொறுக்கொணாப்
போகமே நுகர்வான் புகுந்து ஐவர்
அறுத்துத் தின்றிட, அஞ்சி நின் அடைந்தேன்
அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே! 1614

நெடியானே! கடி ஆர்கலி நம்பீ!
நின்னையே நினைந்து இங்கு இருப்பேனைக்
கடி ஆர் காளையர் ஐவர் புகுந்து
காவல் செய்த அக் காவலைப் பிழைத்து,
குடிபோந்து, உன் அடிக்கீழ் வந்து புகுந்தேன்;
கூறை, சோறு இவை தந்து எனக்கு அருளி,
அடியேனைப் பணி ஆண்டுகொள் எந்தாய்!
அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே! 1615





எல்லோர்க்கும் தலைவனே! பஞ்சவன், பௌழியன், சோழன் என்று பெயர் பெற்ற மன்னர்கள் பணிந்து துதிக்கும்படி எழுந்தருளிய அருளாளனே! நரனாகவும் நாராயணன் ஆகவும் அவதரித்தவனே! திருநறையூரில் உள்ள நம்பி எம்பெருமானே! தேவர்களை ஆளும் சிவனுக்குள்ளும் வாழ்கின்றவனே! ஆதிவராஹ மூர்த்தியே! திருவழுந்தூரில் மேல் திசையில் எழுந்தருளிய அம்மானே! உன்னை அன்றி வேறு துணை இல்லை. 1611

உன்னை எதிர்த்த, பருத்த இரணியனுடன்போர் செய்து, அவன் மார்பைப் பிளந்து வீர சுவர்க்கம் புகச் செய்தவனே! பண்டு, பெரிய மலையைத் தூக்கிப் பசுக்கள்பிழைக்கும் படி காத்த பண்பாளனே! தூயவனே! அண்டங்களுக்கு அதிபதியே! திருவழுந்தூரில் மேல் திசையில் எழுந்தருளியவனே! கலியுகத்தின் கொடுமையை அறிந்து, என் நன்மை எதுவென உணர்ந்ததால், உன் திருவடிகளே புகலிடம் எனத் தெரிந்தேன். 1612

யாவர்க்கும் பெரியவனே! முற்றும் தோயாத இனிய தயிரையும் நெய்யையும் உண்டு, வாய் வந்தபடி பேசுபவர் பழிக்கு அஞ்சாமல், பெற்ற தாயினும் மேலான யசோதையால் கட்டுப் பட்டு அகலாமல், அழுது ஏங்கினாயே! பூவுலகத்தவரும் மேல் உலகத்தவரும் அணுக முடியாத அரியவனே! முன்னமே, கிருத யுகம், திரேதாயுகம், துவாபரயுகம் கலியுகம் ஆகிய நான்கையும் இயக்குபவனே! ஆய்ப் பிள்ளையான கண்ணா! திருவழுந்தூரில் மேல் திசையில் எழுந்தருளியவனே! உன் திருவடி அன்றி வேறு அடைக்கலம் அறியேன். 1613

கம்சன் அஞ்சும்படி சீறினாய்; மேக வண்ணா! கடலின் நீல ஒளி உடையவனே! ஏழு எருதுகளை அடர்த்து வென்ற சுவாமியே! ஏழுலகங்களுக்கும் தலைவனே! திருவழுந்தூரில் மேல் திசையில் கோயில் கொண்டவா! ஐம்புலன்களின் துன்பங்களை அடியேன் பொறுக்க முடியவில்லை. அவை என்னுள் புகுந்து, சிற்றின்பத்தில் மூழ்கியடித்து என் ஆத்ம இயல்பை அழிக்கின்றன. அவற்றுக்குப் பயந்து உன்னைச் சரண் அடைந்தேன். 1614

நெடிய திருமாலே! பூமிக்கு அரண் ஆன கடலில் கண் வளர்ந்த நம்பியே! திருவழுந்தூரில் மேல் திசையில் நின்ற அம்மானே! உன்னைத் தியானிக்கும் என்னைப் பலமுடைய காளைகள் போன்ற ஐம்புலன் களும் உன்னிடம் நான் வராதபடி காவல் செய்கின்றன. அக்காவலைத் தப்பி வந்து, உன் திருவடிகளில் குடிபுக வந்தேன். அடியேனுக்கு உணவாகவும் ஆடையாகவும் உள்ள தேவரீர், நான் நித்திய கைங்கரியம் புரிய, ஏற்றுக் கொள்ள வேண்டும். 1615

கோ ஆய் ஐவர் என் மெய் குடி ஏறி,
கூறை, சோறு இவை தா என்று குமைத்து,
போகார்; நான் அவரைப் பொறுக்ககிலேன்;
புனிதா! புள் கொடியாய்! நெடுமாலே!
தீ வாய் நாகணையில் துயில்வானே!
திருமாலே! இனிச் செய்வது ஒன்று அறியேன்;
ஆஆ! என்று அடியேற்கு இறை இரங்காய்
அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே! 1616

அன்னம் மன்னு பைம் பூம் பொழில் சூழ்ந்த
அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானைக்
கன்னி மன்னு திண் தோள் கலிகன்றி,
ஆலி நாடன், மங்கைக் குல வேந்தன்
சொன்ன இன் தமிழ் நல் மணிக் கோவை,
தூய மாலை, இவை பத்தும் வல்லார்
மன்னி மன்னவர் ஆய், உலகு ஆண்டு,
மான வெண் குடைக்கீழ் மகிழ்வாரே. 1617

## திருவழுந்தூர் – 4

செங் கமலத் திருமகளும், புவியும் செம் பொன்
திருவடியின் இணை வருட, முனிவர் ஏத்த,
வங்கமலி தடங் கடலுள் அநந்தன் என்னும்
வரி அரவின் அணைத் துயின்ற மாயோன் காண்மின்
எங்குமலி நிறை புகழ் நால் வேதம், ஐந்து
வேள்விகளும் கேள்விகளும் இயன்ற தன்மை
அம் கமலத்து அயன் அனையார் பயிலும் செல்வத்து
அணி அழுந்தூர் நின்று. உகந்த அமரர் கோவே. 1618

முன் இவ் உலகு ஏழும் இருள் மண்டி உண்ண,
முனிவரொடு தானவர்கள் திசைப்ப, வந்து,
பன்னு கலை நால் வேதப் பொருளை எல்லாம்
பரி முகம் ஆய் அருளிய எம் பரமன் காண்மின்-
செந்நெல் மலி கதிர் கவரி வீச, சங்கம்
அவை முரல, செங் கமல மலரை ஏறி
அன்னம் மலி பெடையோடும் அமரும் செல்வத்து
அணி அழுந்தூர் நின்று, உகந்த அமரர்-கோவே. 1619





தூயவனே! கருடனைக் கொடியாகக் கொண்டவனே! நெடுமாலே! தீ உமிழும் வாயுடைய ஆதிசேஷன் மீது கண் வளரும் திருமகள் கேள்வனே! திருவழுந்தூரில் மேல் திசையில் உள்ள அம்மானே! ஐம்புலன்களும் என்னுள் புகுந்து ‘ஆடையும் சோற்றையும் கொடு’ என்று துன்புறுத்தியபடி கூடவே உள்ளனர். அவர்களைப் பொறுக்க இயலவில்லை. செய்வது அறியேன். ‘ஐயோ’ என்று எனக்கு அருள் செய்ய வேண்டும். 1616

அன்னங்கள் வாழும் சோலைகள் சூழ்ந்த திருவழுந்தூரில் மேல் திசையில் கோயில் கொண்ட பெருமானை, திண்மையான தோள்களுடைய திருமங்கை மன்னர் பாடினர். திருவாலி நாட்டு அரசனான இவ்வாழ்வார் பாடிய கோவையான பாசுரங்களைப் பயில்பவர் கொற்றக் குடைக்கீழ் அமர்ந்து மன்னராய் உலகு ஆள்வார்கள். 1617

## திருவழுந்தூர் – 4

திருமால் நித்திய சூரிகளின் தலைவன்; தாமரைச் செல்வி திருமகளும் பூமா தேவியும் அவனுடைய திருவடிகளை வருடவும், முனிவர்கள் துதி செய்யவும், அவன், மரக்கலன்கள் ஓடும் கடலில் அனந்தன் என்னும் பாம்பின் மீது கண் வளர்கிறான். இந்த மாயோனே, திருவழுந்தூரில் விருப்பமுடன் எழுந்தருளி இருப்பதைக் காணுங்கள். நான்கு வேதங்கள்,ஐந்து வேள்விகள், சாத்திர அறிவு யாவற்றிலும் வல்லவர்கள் தாமரையில் வாழும் நான்முகன் போன்ற சிறப்புடன் செல்வராய் இவ்வூரில் வாழ்கிறார்கள். 1618

ஏழுலகங்களும் அறியாமை இருளில் மண்டியபொழுது, சனகாதி முனிவர் முதலியோரும் அசுரர்களும் திகைத்தார்கள். திருமால் ஹயக்ரீவனாய்த் தோன்றிக் கலைகளை உடைய நான்கு வேதங்களையும் உபதேசித்தான். நித்திய சூரிகள் தலைவனான இப் பெருமானே திருவழுந்தூரில் எழுந்தருளியதைப் பாருங்கள். இத்திருத்தலத்தில் வயல்களில் செந்நெற்பயிர் சாமரை வீச சங்குகள் முழங்க அழகிய தாமரைப் பூவில், அன்னம் தன் பெடையுடன் பொருந்திக் கண்வளரும். 1619

குலத்தலைய மத வேழம் பொய்கை புக்கு,
கோள் முதலை பிடிக்க அதற்கு அனுங்கி நின்று,
நிலத்திகழும் மலர்ச் சுடர் ஏய் சோதீ! என்ன,
நெஞ்சு இடர் தீர்த்தருளிய என் நிமலன் காண்மின்
மலைத்திகழ் சந்து, அகில், கனகம், மணியும் கொண்டு
வந்து உந்தி, வயல்கள்தொறும் மடைகள் பாய,
அலைத்து வரும் பொன்னி வளம் பெருகும் செல்வத்து
அணி அழுந்தூர் நின்று, உகந்த அமரர்-கோவே. 1620

சிலம்பு முதல் கலன் அணிந்து, ஓர் செங்கண் குன்றம்
திகழ்ந்தது என, திரு உருவம் பன்றி ஆகி
இலங்குபுவி மடந்தை தனை இடந்து புல்கி,
எயிற்றிடை வைத்தருளிய எம் ஈசன் காண்மின்
புலம்புசிறை வண்டு ஒலிப்ப, பூகம் தொக்க
பொழில்கள்தொறும் குயில் கூவ, மயில்கள் ஆல,
அலம்புதிரைப் புனல் புடை சூழ்ந்து அழகு ஆர் செல்வத்து
அணி அழுந்தூர் நின்று, உகந்த அமரர்-கோவே. 1621

சின மேவும் அடல் அரியின் உருவம் ஆகி,
திறல் மேவும் இரணியனது ஆகம் கீண்டு,
மன மேவு வஞ்சனையால் வந்த பேய்ச்சி
மாள, உயிர் வவ்விய எம் மாயோன் காண்மின்
இன மேவு வரி வளைக் கை ஏந்தும் கோவை
ஏய் வாய மரகதம்போல் கிளியின் இன் சொல்,
அன மேவு நடை மடவார் பயிலும் செல்வத்து
அணி அழுந்தூர் நின்று, உகந்த அமரர்-கோவே. 1622

வானவர் தம் துயர் தீர வந்து தோன்றி,
மாண் உரு ஆய், மூவடி மாவலியை வேண்டி
தான் அமர ஏழ் உலகும் அளந்த வென்றித்
தனி முதல் சக்கரப் படை என் தலைவன் காண்மின்
தேன்அமரும் பொழில் தழுவும் எழில் கொள் வீதி
செழு மாட மாளிகைகள் கூடம்தோறும்
ஆனதொல் சீர் மறையாளர் பயிலும் செல்வத்து
அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர்-கோவே. 1623

பந்து அணைந்த மெல் விரலாள் சீதைக்கு ஆகிப்
பகலவன் மீது இயங்காத இலங்கை வேந்தன்
அந்தம் இல் திண் கரம் சிரங்கள் புரண்டு வீழ,
அடு கணையால் எய்து உகந்த அம்மான் காண்மின்
செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர்,
திசைமுகனை அனையவர்கள், செம்மை மிக்க
அந்தணர் தம் ஆகுதியின் புகை ஆர் செல்வத்து
அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர்-கோவே. 1624





*உடற்கட்டும் மதமும் கொண்ட கஜேந்திரன் பொய்கையில் புகுந்ததும், முதலை அதன் காலைப் பிடிக்கவே, துன்புற்ற அது, ''சந்திரனை ஒத்த ஒளிச்சுடரே!'' என்று இறைவனைக் கூப்பிட்டது. அதன் துயரைப்போக்கிய தூயவன் ஆன நித்திய சூரிகள் தலைவன் திருவழுந்தூரில் எழுந்தருளியதைக் காணுங்கள். இவ்வூரில் ஓடும் காவிரி, மலைச் சந்தனம், அகில், பொன், மணி ஆகியவற்றை தள்ளிக் கொண்டு மடைகளில் புகுந்து வயல்களில் பாய்ந்து வளம் பெருக்கும்.* **1620**

*சிலம்பு முதலியவற்றை அணிந்த மேருமலை போன்றவராகப் பிரான், பூமியைக் குத்தி எடுத்து அத் தேவியைத் தந்தங்களில் ஏந்தித் தழுவிக் காத்தான். திருவழுந்தூரில், இந்த நித்திய சூரிகள் தலைவன் எழுந்தருளினதைக் காணுங்கள். இங்குள்ள பாக்குச் சோலைகளில் அழகிய இறகுகளைப் பெற்ற வண்டுகள் ஒலிக்கும்; குயில்கள் கூவும்; மயில்கள் ஆடும். அலைகளுடன் தண்ணீர் ஓடிச் செல்வம் பெருக்கும்.* **1621**

*வலிய நரசிம்மன் பலம் மிகுந்த இரணியனைச் சினந்து அவன் உடலைப் பிளந்தான். வஞ்சக மனத்துடன் வந்த பூதனைப் பேயை கண்ணன் அழித்தான். இந்த, நித்திய சூரிகள் தலைவன் திருவழுந்தூரில் கோயில் கொண்டதைப் பாருங்கள். இவ்வூர்ப் பெண்கள் தங்கள் வளைக்கைகளில் கிளிகளை ஏந்துவர். கோவைப்பழ உதடும் மரகதப் பச்சை நிறமும் உடைய இக்கிளிகளைப் போல அவர்கள் இனிமை யாய்ப் பேசுவர்; அன்னங்களைப் போல நடப்பார்கள்.* **1622**

*எம்பெருமான் தேவர்கள் துன்பம் தீர, வாமனனாய் மாவலி முன்னே மூவடி மண்ணை வேண்டி நின்று ஏழுலகங்களையும் அளந்தான். ஒப்பற்ற சக்கரப் படை உடைய நித்திய சூரிகள் தலைவன் செல்வத் திருவழுந்தூரில் எழுந்தருளியதைக் காணுங்கள். இங்கே தேன் ஓடும் சோலைகளால் சூழப்பட்ட தெருக்களிலும் மண்டபங்களிலும், மாளிகை வீடுகளிலும் ஆத்ம குணமுடைய வேதியர்கள் வாழ்கிறார்கள்.* **1623**

*இராமபிரான் பந்தைப் பிடித்த விரல்களுடைய சீதையைப் பெற, சூரியன் மேலே செல்லாத இலங்கை மன்னன் இராவணனின் எண்ணற்ற கைகளையும் தலைகளையும் அம்பால் வீழ்த்தி மகிழ்ந்தான். நித்திய சூரிகள் தலைவனான இப்பெருமான் திருவழுந்தூரில் காட்சி தருவதைப் பாருங்கள். செந்தமிழிலும் வடமொழியிலும் தேர்ந்த நா நலம் உடைய அந்தணர்கள் இவ்வூரில் பிரமனை ஒத்தவராய் வாழ்கிறார்கள். இவர்கள் செய்யும் வேள்விப்புகை ஊரெங்கும் நிறைகிறது.* **1624**

கும்ப மிகு மதவேழம் குலைய, கொம்பு
பறித்து மழ விடை அடர்த்து, குரவை கோத்து,
வம்புஅவிழும் மலர்க் குழலாள் ஆய்ச்சி வைத்த
தயிர் வெண்ணெய் உண்டு, உகந்த மாயோன் காண்மின்
செம்பவள மரகதம் நல் முத்தம் காட்டத்
திகழ் பூகம், கதலி பல வளம் மிக்கு எங்கும்
அம்பொன் மதிள் பொழில் புடை சூழ்ந்து அழகு ஆர் செவ்வத்து
அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர்-கோவே. 1625

ஊடுஏறு கஞ்சனொடு மல்லும்வில்லும்,
ஒண் கரியும் உருள் சகடும் உடையச்செற்ற
நீடுஏறு பெரு வலித் தோள் உடைய வென்றி
நிலவு புகழ் நேமி அங்கை நெடியோன் காண்மின்
சேடுஏறு பொழில் தழுவும் எழில் கொள் வீதி,
திருவிழவில் மணி அணிந்த திண்ணைதோறும்,
ஆடுஏறு மலர்க் குழலார் பயிலும் செல்வத்து
அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர்-கோவே. 1626

பன்றிஆய், மீன் ஆகி, அரி ஆய், பாரைப்
படைத்து, காத்து உண்டு. உமிழ்ந்த பரமன் தன்னை,
அன்று அமரர்க்கு அதிபதியும், அயனும், சேயும்
அடி பணிய அணி அழுந்தூர் நின்ற கோவை,
கன்றி நெடு வேல் வலவன், ஆலி நாடன்,
கலிகன்றி ஒலிசெய்த இன்பப் பாடல்
ஒன்றினொடு நான்கும் ஓர் ஐந்தும் வல்லார்
ஒலி கடல் சூழ் உலகு ஆளும் உம்பர்-தாமே. 1627

## திருச்சிறுபுலியூர்

கள்ளம் மனம் விள்ளும் வகை கருதி, கழல் தொழுவீர்!
வெள்ளம் முது பரவைத் திரை விரிய, கரை எங்கும்
தெள்ளும் மணி திகழும் சிறுபுலியூர்ச் சலசயனத்து
உள்ளும், எனது உள்ளத்துளும் உறைவாரை உள்ளீரே. 1628

தெருவில் திரி சிறு நோன்பியர் செஞ் சோற்றொடு கஞ்சி
மருவிப் பிரிந்தவர் வாய்மொழி மதியாது வந்து அடைவீர்
திருவில் பொலி மறையோர் சிறுபுலியூர்ச் சலசயனத்து;
உருவக் குறள் அடிகள் அடி உணர்மின் உணர்வீரே! 1629





கண்ணபெருமான் மத்தகத்தையும் மதத்தையும் உடைய யானையின் கொம்புகளைப் பிடுங்கிக் கொன்றான். இளைய எருதுகளை அடர்த்தான்; குரவைக் கூத்து ஆடினான்; மணம் வீசும் பூச்சூடிய கூந்தலை உடைய யசோதை வைத்திருந்த தயிரையும் வெண்ணெய்யையும் உண்டு மகிழ்ந்தான். நித்திய சூரிகள் தலைவனான இந்த மாயவன் திருவழுந்தூரில் எழுந்தருளியதைக் காணுங்கள். இங்கே, பாக்குப் பழங்கள் பவளங்களை ஒத்தன, காய்கள் மரகதம் போன்றவை; வாழைத் தோப்புகளும் மதிளும் இவ்வூரைச் சூழ்ந்துள்ளன. 1625

மஞ்சத்தில் இருந்த கம்சன், மல்லர்கள், வில், யானை, சகடாசுரன், யாவரையும் அழித்த கண்ணன், பெருகும் தோள் வலிமை பெற்றவன்; புகழ்ச் சக்கரம் ஏந்தியவன்; நித்திய சூரிகள் தலைவனான இப்பெருமானைச் செல்வம் நிறைந்த திருவழுந்தூரில் காணுங்கள். தழைத்த சோலைகள் சூழ்ந்த இவ்வூர் வீதிகளில் நடைபெறும் திருவிழாக் காலத்தே, மணிமயமான திண்ணைகளில் மணம் வீசும் பூக்களைச் சூடிய பெண்கள் நெருங்கிக் காணப்படுவர். 1626

வராஹம், மீன், நரசிம்மன், ஆகிய அவதாரங்களைச் செய்தவன், பூமியைப் படைத்துக் காத்து, உண்டு, உமிழ்ந்த பரமன் ஆவான். இந்திரன் பரமன், சிவன் மூவரும் வணங்கும் திருவடிகளை உடைய பெருமான் திருவழுந்தூரில் எழுந்தருளியதை, ஆலி நாடரான கலி கன்றி ஆழ்வார் இப்பத்துப் பாசுரங்களில் பாடினார். இவற்றைப் பயில் பவர் உலகாளும் பேறு பெற்றுத் தேவர்களுக்கு ஒப்பு ஆவர். 1627

## திருச்சிறுபுலியூர்

இறைவனுக்கு உரிய ஆத்மாவைத் தனதாக எண்ணும் திருட்டு மனம் திருந்த விரும்பி அவன் திருவடிகளைத் தொழுபவர்களே! கடல் அலைகள் கரைகளில் பரவி மணிகள் கொழித்துத் தள்ளப்படும் சிறு புலியூரில் உள்ள ஜலசயனப் பெருமானத் தியானம் செய்யுங்கள். அப்பெருமான் என் இதயத்திலும் தங்கி உள்ளான். 1628

நோன்பு மேற்கொண்டு தெருவில் திரியும் சமணர், சோற்றையும் கஞ்சியையும் விரும்பி வேதமரிந்தவர்களிடமிருந்து விலகுவார்கள். நீங்கள் அவர்கள் பேச்சை மதிக்க வேண்டாம். செல்வம் நிறைந்த அந்தணர்கள் வாழும் சிறுபுலியூர் சலசயனத்தில் வாமன மூர்த்தியின் திருவடிகளை மனத்தில் பதித்துத் தியானம் செய்யுங்கள். 1629

பறையும் வினை; தொழுது உய்ம்மின், நீர் பணியும் சிறு தொண்டீர்!
அறையும் புனல் ஒருபால், வயல் ஒருபால், பொழில் ஒருபால்,
சிறை வண்டு இனம் அறையும் சிறுபுலியூர்ச் சலசயனத்து
உறையும் இறை அடி அல்லது ஒன்று இறையும் அறியேனே. 1630

வான் ஆர் மதி பொதியும் சடை மழுவாளியொடு ஒருபால்
தான் ஆகிய தலைவன் அவன் அமரர்க்கு அதிபதி ஆம்;
தேன் ஆர் பொழில் தழுவும் சிறுபுலியூர்ச் சலசயனத்து
ஆன் ஆயனது அடி அல்லது ஒன்று அறியேன் அடியேனே. 1631

நந்தா நெடு நரகத்திடை நணுகாவகை, நாளும்
எந்தாய்! என இமையோர் தொழுது ஏத்தும் இடம், எறி நீர்ச்
செந்தாமரை மலரும் சிறுபுலியூர்ச் சலசயனத்து
அம் தாமரை அடியாய்! உனது அடியேற்கு அருள்புரியே. 1632

முழுநீலமும் மலர் ஆம்பலும் அரவிந்தமும் விரவிக்
கழுநீரொடு மடவார் அவர் கண், வாய், முகம் மலரும்
செழு நீர் வயல் தழுவும் சிறுபுலியூர்ச் சலசயனம்
தொழும் நீர்மை அது உடையார் அடி தொழுவார் துயர் இலரே. 1633

சேய் ஓங்கு தண் திருமாலிருஞ்சோலை மலை உறையும்
மாயா! எனக்கு உரையாய், இது மறை நான்கின் உளாயோ?
தீ ஓம்புகை மறையோர் சிறுபுலியூர்ச் சலசயனத்
தாயோ? உனது அடியார் மனத்தாயோ? அறியேனே. 1634

மைஆர் நீல மலர்க் கண்ணார் மனம் விட்டிட்டு,
உய்வான், உன கழலே தொழுது எழுவேன்; கிளி மடவார்
செவ்வாய் மொழி பயிலும் சிறுபுலியூர்ச் சலசயனத்து
ஐ வாய் அரவு அணைமேல் உறை அமலா! அருளாயே. 1635

கருமா முகில் உருவா! கனல் உருவா! புனல் உருவா!
பெருமால் வரை உருவா! பிற உருவா! நினது உருவா!
திருமா மகள் மருவும் சிறுபுலியூர்ச் சலசயனத்து
அருமா கடல் அமுதே! உனது அடியே சரண் ஆமே. 1636





*தகாத சிற்றின்பங்களுக்காகத் தொண்டுபட்டிருக்கின்ற நீங்கள் எம் பெருமானைத் தொழுது உய்யுங்கள்; உங்கள் பாவங்கள் பறந்து போகும். நீர்வெள்ளம் ஒருபுறமும் வயல்கள் மறுபுறமும் சோலைகள் இன்னொரு புறமும் காணப்படும் சிறுபுலியூர் சலசயனத்தில் வண்டுகள் ஒலிக்கும். இங்குள்ள இறைவன் திருவடிகளை அன்றி வேறு அறியேன்.* 1630

*வானத்துச் சந்திரனைச் சடையில் கொண்ட மழு ஏந்திய சிவனையும், தேவர்கள் அரசன் இந்திரனையும் தனக்குள்ளே அடக்கி, அவர்களுக்குத் தலைவனான திருமால் தேன் நிறைந்த சோலைகள் உள்ள சிறுபுலியூர் சலசயனத்தில் எழுந்தருளினான். இந்த ஸ்ரீகிருஷ்ண னுடைய திருவடிகளை அன்றி அடியேன் வேறு அறியேன்.* 1631

*அலைமோதும் நீர் நிலைகளில் தாமரை மலரும் சிறு புலியூர் சலசயனத்தில் தினமும் தேவர்கள், 'எந்தையே!' என்று கூறி வணங்குவர். இத்தலத்தில் எழுந்தருளிய தாமரைத் திருவடிகளை உடைய பெருமானே! தொலையாத நீண்ட நரகம் போன்ற உலகவாழ்வில் நான் மறுபடியும் பிறவாதபடி, உன் அடியனான எனக்கு அருள வேண்டும்.* 1632

*நீர் நிறைந்த வயல்கள் சூழ்ந்த சிறுபுலியூர் சலசயனத்தில் எங்கும் ஒக்க கறுத்திருக்கும் நீலப் பூக்களும், அரக்கு நிற ஆம்பலும், தாமரையும் செங்கழு நீரும் சேர்ந்து அங்கு வாழும் பெண்களின் கண்களையும் வாய்களையும் முகங்களையும் ஒத்து உள்ளன. இத்தலத்தில் உள்ள பெருமானைத் தொழுது வணங்குபவர்களின் திருவடிகளைத் தொழுபவர், துயரம் அடைய மாட்டார்கள்.* 1633

*குளிர்ச்சி உடைய உயர்ந்த திருமாலிருஞ் சோலை மலையில் உள்ள மாயவனே! நீ நான்கு வேதங்களில் அவற்றின் பொருளாய் உள்ளாயோ! வேள்வியே வாழ்வாக உடைய அந்தணர் வாழும் சிறுபுலியூர் சலசயனத்தில் உள்ளாயோ? அடியார்களின் மனத்தில் உள்ளாயோ? நான் அறியேன்; எங்குள்ளாய் என எனக்குக் கூறி அருள்க.* 1634

*பெண்களின் சிவந்த வாயில் பிறக்கும் சொற்களைக் கூறிப் பயிலும் கிளிகள் வாழும் சிறுபுலியூரில் உள்ள சலசயனப்பெருமானே! ஐந்து வாய்களுடைய ஆதிசேஷன் மீது கண் வளரும். தூயவனே! கரு நெய்தல் பூக்கண்களுடைய பெண்களிடம் மனம் ஆசைப்படாதபடி உய்வு பெற அடியேன் உன் திருவடிகளைத் தொழுகிறேன். அருள வேண்டும்.* 1635

*அடியார்கள் குளிரும் படியான மேக நிறத்தானே, அல்லாதவர்க்கு நெருப்பு வடிவானவனே! எல்லோர்க்கும் எளிய, நீரின் தன்மையனே! பெருத்த மலை வடிவானவனே! பிற உருவங்கள் கொண்டவனே! உனக்கே உரிய வடிவுடன் திருமகளுடன் கூடிச் சிறுபுலியூர் சலசயனத்தில் பாற் கடல் அமுதம் போல் காட்சி தருபவனே; உன் திருவடிகளே சரணம்.* 1636

சீர் ஆர் நெடு மறுகின் சிறுபுலியூர்ச் சலசயனத்து
ஏர் ஆர் முகில் வண்ணன் தனை, இமையோர் பெருமானை,
கார் ஆர் வயல் மங்கைக்கு இறை, கலியன் ஒலி மாலை
பாரார் இவை பரவித் தொழப் பாவம் பயிலாவே. 1637

## திருக்கண்ணமங்கை

பெரும் புறக் கடலை, அடல் ஏற்றினை,
பெண்ணை, ஆணை, எண் இல் முனிவர்க்கு அருள்
தரும் தவத்தை, முத்தின் திரள் கோவையை,
பத்தர் ஆவியை நித்திலத் தொத்தினை,
அரும்பினை அலரை, அடியேன் மனத்து
ஆசையை, அமுதம் பொதி இன் சுவைக்
கரும்பினை, கனியை சென்று நாடி
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 1638

மெய்ந் நலத் தவத்தை. திவத்தைத் தரும்
மெய்யை, பொய்யினை, கையில் ஓர் சங்கு உடை
மைந் நிறக் கடலை, கடல் வண்ணனை,
மாலை, ஆல்இலைப் பள்ளி கொள் மாயனை,
நென்னலை, பகலை, இற்றை நாளினை,
நாளை ஆய் வரும் திங்களை, ஆண்டினை,
கன்னலை, கரும்பினிடைத் தேறலை-
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 1639

எங்களுக்கு அருள் செய்கின்ற ஈசனை,
வாச வார் குழலாள் மலை மங்கை தன்
பங்கனைப் பங்கில் வைத்து உகந்தான் தன்னை;
பான்மையை, பனி மா மதியம் தவழ்
மங்குலை, சுடரை, வட மா மலை
உச்சியை நச்சி நாம் வணங்கப்படும்
கங்குலை, பகலைச் சென்று நாடி-
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 1640

பேய் முலைத் தலை நஞ்சு உண்ட பிள்ளையைத்
தெள்ளியார் வணங்கப்படும் தேவனை,
மாயனை, மதிள் கோவல் இடைகழி
மைந்தனை, அன்றி அந்தணர் சிந்தையுள்
ஈசனை, இலங்கும் சுடர்ச்சோதியை,
எந்தையை எனக்கு எய்ப்பினில் வைப்பினை,
காசினை, மணியை சென்று நாடி-
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 1641





*நீண்ட தெருக்களும் செல்வமும் உள்ள சிறுபுலியூர்ச் சலசயனப் பெருமானைக் கருமை மிக்க வயல்களுடைய திருமங்கை நாட்டு மன்னர் கலியன், பாடினார். நித்தியசூரிகள் தலைவனான மேக நிறப் பிரானைப் பற்றிய இப் பாசுரங்களைப் பாடி, வணங்குபவரைப் பாவங்கள் அணுக மாட்டா.* **1637**

## திருக்கண்ணமங்கை

*கடல்களுக்கெல்லாம் அப்பாற்பட்ட பெருங்கடல் ஆனவன்; காளையின் மிடுக்கு உடையவன்; அடியவர்களின் அடிமையில் பெண் போன்றவன்; ஆளுமையிலோ ஆண் ஆனவன்; முனிவர்க்கு அருளும் தவ வடிவன்; முத்து மாலை போல் இனியவன்; பக்தர்களின் உயிர் ஆனவன்; முத்துக் குவியல் போல் காப்புப் பொருள்; அரும்பு போல் குமரனாயும் மலர்போல் இளைஞனாயும் உள்ளவன்; அடியேன் மனத்து ஆசையாய்,அமுதம், கரும்பு,கனி போல இனிமையன்; இவனைத் திருக்கண்ண மங்கையில் கண்டேனே.* **1638**

*பக்தியோகமான தவத்தைச் செய்விப்பவன்; பரமபதம் தரும் பிரபத்தியைக் காட்டுவிப்பவன்; அல்லாதவர்க்கு பொய்யன்; கையில் சங்கேந்தியவன்; மையையும் கடலையும் ஒத்த இத்திருமால் ஆலந்தளிரில் கண் வளர்ந்தான். நேற்று, பகல் இன்று நாளை மாதங்கள், ஆண்டு முதலிய காலங்களில் எல்லாம் வெல்லக்கட்டி போலவும் கருப்பஞ்சாராகவும் இனிப்பவன். இப்பெருமானைத் திருக்கண்ண மங்கையில் கண்டேன்.* **1639**

*வேறு கதி அற்ற எங்களுக்கு அருளும் இறைவன் இவனே, மணக்கும் கூந்தலுடைய பார்வதியைப் பாகத்தில் பெற்ற சிவனைத் தன் உடம்பில் வைத்து உகந்தான். இந்நீர்மை உடைய இவன் குளிர்ந்த சந்திரன் உலாவும் வானிற்கு அதிபதி; சூரியனுக்குள் இருந்து நியமிக் கிறான். வடவேங்கட மலை உச்சியில் எழுந்தருளி நம்மால் வணங்கப் படும் இப் பெருமான் இரவு பகலுக்குக் காரணம் ஆனவன். இவனைச் சென்று நாடித் திருக்கண்ண மங்கையில் கண்டு கொண்டேன்.* **1640**

*பூதனைப் பேயின் நஞ்சு முலை சுவைத்த பிள்ளை; ஞானி களால் வணங்கப்படும் தேவன். மதிள் சூழ்ந்த திருக்கோவலூர் இடை கழியில் முதலாழ்வார்கள் நடுவே தோன்றிய மைந்தன் அன்றியும் அந்தணர் நெஞ்சில் நிற்கும் ஈசன். அவர்களை இயக்கும் ஒளிவடிவமான என் தந்தை மரண காலத்தில எனக்கு காப்பீட்டு நிதி ஆனவன். பொன்னையும் மணியையும் ஒத்த இவனைச் சென்று நாடித் திருக்கண்ண மங்கையில் கண்டு கொண்டேன்.* **1641**

ஏற்றினை, இமயத்துள் எம் ஈசனை,
இம்மையை, மறுமைக்கு மருந்தினை,
ஆற்றலை, அண்டத்து அப்புறத்து உய்த்திடும்
ஐயனை, கையில் ஆழி ஒன்று ஏந்திய
கூற்றினை, குரு மா மணிக் குன்றினை,
நின்றவூர் நின்ற நித்திலத் தொத்தினை,
காற்றினை, புனலைச் சென்று நாடி-
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 1642

துப்பனை, துரங்கம் படச் சீறிய
தோன்றலை, சுடர் வான் கலன் பெய்தது ஓர்
செப்பினை, திருமங்கை மணாளனை,
தேவனை, திகழும் பவளத்து ஒளி
ஒப்பனை, உலகு ஏழினை, ஊழியை,
ஆழி ஏந்திய கையனை, அந்தணர்
கற்பினை கழுநீர் மலரும் வயல்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 1643

திருத்தனை, திசை நான்முகன் தந்தையை,
தேவ தேவனை, மூவரில் முன்னிய
விருத்தனை, விளங்கும் சுடர்ச் சோதியை.
விண்ணை, மண்ணினை, கண்ணுதல் கூடிய
அருத்தனை, அரியை, பரி கீறிய
அப்பனை. அப்பில் ஆர் அழல் ஆய் நின்ற
கருத்தனை-களி வண்டு அறையும் பொழில்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 1644

வெஞ்சினக் களிற்றை, விளங்காய் விழக்
கன்று வீசிய ஈசனை, பேய் மகள்
துஞ்ச நஞ்சு சுவைத்து உண்ட தோன்றலை,
தோன்றல் வாள் அரக்கன் கெடத் தோன்றிய
நஞ்சினை, அமுதத்தினை, நாதனை,
நச்சுவார் உச்சிமேல் நிற்கும் நம்பியை
கஞ்சனைத் துஞ்ச வஞ்சித்த வஞ்சனை
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 1645

பண்ணினை, பண்ணில் நின்றது ஓர் பான்மையை,
பாலுள் நெய்யினை, மால் உரு ஆய் நின்ற
விண்ணினை, விளங்கும் சுடர்ச்சோதியை,
வேள்வியை விளக்கின் ஒளி தன்னை,
மண்ணினை, மலையை அலை நீரினை,
மாலை மா மதியை அறையோர் தங்கள்
கண்ணினை கண்கள் ஆரளவும் நின்று
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 1646





காளை போன்றவன்; இமயத்திருப்பிரிதியில் எழுந்தருளிய என் இறைவன்; இம்மை மறுமைக்கு மருந்தானவன்; மிடுக்குடன் உலகங்களையும் பரமபதத்தையும் ஆள்பவன். கையில் சக்கரம் ஏந்திய என் ஐயன் பகைவர்க்கு யமன் ஆவான். நீலமணி போல் உள்ள அவன் திருநின்றவூரில் எழுந்தருளினான். முத்துக் குவியல் போன்றவன். காற்றாகவும் நீராகவும் உள்ள இப்பெருமானை நான் சென்று நாடித் திருக்கண்ணமங்கையில் கண்டு கொண்டேன். 1642

குதிரையாய் வந்த பலமுடைய கேசியை அழித்தவன்; ஒளியுள்ள அழகான ஆபரணங்களை வைக்கும் செப்புப் போன்றவன்; பவள ஒளி கூடிய அத்தேவனே திருமகள் நாயகன் ஆவான். ஊழிக் காலமான அவனே ஏழுலகத் தலைவன். அந்தணரால் துதிக்கப் படும் அச்சக்கரக் கையனை செங்கழு நீர்ப் பூக்கள்மலரும் திருக்கண்ண மங்கையில் நான் கண்டு கொண்டேன். 1643

முழுதும் மகிழ்ச்சி வடிவானவன்; பிரமனின் தந்தையாய்த் தேவர்களால் வணங்கப் படுபவன்; சிவன் பிரமன் இருவர்க்கும் முதல்வனாய் அவர்களை நியமிப்பவன்; ஒளி விடும் ஜோதியாய் விண், மண் இரண்டையும் ஆள்கிறான். தன் உடலில் சிவனைப் பாதியாகக் கொண்டவன்; குதிரையாய் வந்த கேசியைச் சிங்கம் போல் தாக்கிக் கிழித்துப் போட்டான். நீரிலும் நெருப்பிலும் நிற்கும் அப்பன் ஆன பேரிறைவனை நான் வண்டொலிக்கும் சோலைகள் சூழ்ந்த திருக்கண்ண மங்கையில் கண்டேன். 1644

சினம் கொண்ட யானை போன்ற கண்ணன், விளாவாய் நின்ற அசுரனைக் கொல்லக் கன்றாக வந்த அசுரனை வீசி எறிந்தான். இவனே, பூதனைப் பேய் அழிய, நஞ்சைப் பருகிய பாலன் ஆவான். வாள் ஏந்திய இராவணன் அழிவதற்கென்றே தோன்றிய நஞ்சு ஆவான்; ஆயின் அடியார்க்கோ அமுது ஆவான். தன்னை விரும்பும் அடியார்கள் தலைகளில் எழுந்தருளுவான். கம்சனைக் கொன்ற இப் பெருமானை திருக் கண்ண மங்கையில் கண்டேன். 1645

இசையாகவும் இசைத் தன்மை ஆகவும் உள்ள எம் பெருமான் பாலில் மறைந்துள்ள நெய் போன்றவன்; பரமபதநாதன்; ஒளிமிகுந்த சோதியாய் வேள்விகளுக்கு நாயகன்; விளக்கொளி போன்றவன். பூமியைப் போல் எல்லோர்க்கும் ஆதாராமாய் மலைபோல் நிலை ஆனவன். அலை நீர் போல் கலந்து பரிமாறுபவன். இத் திருமால் ஞானத்தைத் தருபவன். அந்தணர்கள் கண்களான இவனை என் கண்கள் ஆர, நான் திருக் கண்ண மங்கையில் கண்டு கொண்டேன். 1646

கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன் என்று
காதலால் கலிகன்றி உரைசெய்த
வண்ண ஒண் தமிழ் ஒன்பதோடு ஒன்று இவை
வல்லர் ஆய் உரைப்பார் மதியம் தவழ்
விண்ணில் விண்ணவர் ஆய், மகிழ்வு எய்துவர்;
மெய்ம்மை சொல்லில், வெண் சங்கம் ஒன்று ஏந்திய
கண்ணா! நின் தனக்கும் குறிப்பு ஆகில்
கற்கலாம் கவியின் பொருள் தானே. 1647

## திருக்கண்ணபுரம் –1

### தலைவன்பால் ஈடுபட்ட தலைவியின் செயல்களைத் தாய் வியந்து கூறுதல்

சிலைஇலங்கு பொன் ஆழி, திண் படை தண்டு ஒண் சங்கம்
என்கின்றாளால்;
மலைஇலங்கு தோள் நான்கே மற்று அவனுக்கு; எற்றே! காண்
என்கிறாளால்;
முலைஇலங்கு பூம் பயலை முன்பு ஓட, அன்பு ஓடி
இருக்கின்றாளால்;
கலை இலங்கு மொழியாளர் கண்ணபுரத்து அம்மானைக்
கண்டாள்கொலோ? 1648

செருவரை முன் ஆசு அறுத்த சிலை அன்றோ? கைத்தலத்தது
என்கின்றாளால்;
பொரு வரை முன் போர் தொலைத்த பொன் ஆழி மற்று ஒரு கை
என்கின்றாளால்;
ஒருவரையும் நின் ஒப்பார்; ஒப்பு இலா என் அப்பா!
என்கின்றாளால்
கருவரைபோல் நின்றானை, கண்ணபுரத்து அம்மானைக்
கண்டாள்கொலோ? 1649

துன்னு மா மணி முடிமேல் துழாய் அலங்கல் தோன்றுமால்
என்கின்றாளால்;
மின்னு மா மணி மகர குண்டலங்கள் வில் வீசும்
என்கின்றாளால்;
பொன்னின் மா மணி ஆரம் அணி ஆகத்து இலங்குமால்
என்கின்றாளால்
கன்னி மா மதிள் புடை சூழ் கண்ணபுரத்து அம்மானைக்
கண்டாள்கொலோ? 1650





கலிகன்றி ஆகிய திருமங்கை ஆழ்வார் திருக்கண்ண மங்கையில் பெரு மானைக் கண்டதை இப் பத்துப் பாசுரங்களில் அருளினார். இவற் றைப் பயிப்பவர், சந்திரன் தவழும் விண்ணை அடைந்து, தேவர்களாக மகிழ்வர். உண்மை உரைத்தால், வெண் சங்கு ஏந்திய திருமாலே! திருவுள்ளம் ஆகில், இக் கவிப்பொருள் உனக்கும் பயிலத் தக்கதே. 1647

## திருக்கண்ணபுரம் –1

### தலைவன்பால் ஈடுபட்ட தலைவியின் செயல்களைத் தாய் வியந்து கூறுதல்

என் மகள், சார்ங்கம், ஒளிச் சக்கரம், திண்மையான நாந்தகவாள், கதை, அழகிய பாஞ்சசன்னியம் என்று, பெருமானின் ஆயுதங்களின் பெயர்கள் கூறிப் புலம்புகிறாள். அவனுக்கு மலை போலே நான்கு தோள்கள் உண்டு என்றும் பேசுகிறாள். இதென்ன வியப்பாக இருக்கிறதே! பாருங்கள்! 'காதல் தோன்றிப் பசலை பூக்கும்!' என்னும் உலக வழக்குக்கு எதிராக என் மகளுக்கு மார்புகளில் பசலை பூத்து முன் செல்ல, அதன் பின்னே அவள் காதல் செல்கிறதே! கலையில் தேர்ந்த சொல்லாளர்கள் வாழும் திருக்கண்ணபுரம் பெருமானைக் கண்டு வணங்கினாளோ? 1648

"போரில் எதிரிகளை அழித்த வில்லன்றோ திருக்கையில் உள்ளது!" என்று என் மகள் பேசுகிறாள். 'போரில் மலைகளை அழித்த சக்கரம் இன்னொரு கையில் உள்ளதே!' என்கிறாள். "என் ஐயனே! உன்னை ஒத்தவர் எவரும் இல்லை" என்றும் பேசுகிறாள். கறுத்த மலை போல் நிற்கும் கண்ணபுரத்துச் சவரிப்பெருமானை என் மகள் தன் கண் முன்னே கண்டாளோ? 1649

'நெருக்கமாக மணிகள் பதிக்கப்பட்ட திருமுடியில் திருத்துழாய் மாலை தோன்றுகிறதே! என்று என் மகள் பேசுகிறாள். 'மணிகள் பொருந்திய திரு மகர குண்டலங்கள் ஒளி வீசி மின்னுகின்றன' என்று கூறுகிறாள். 'தங்கத்தால் செய்யப் பட்டு மணிகள் அழுத்திய மாலை மார்பில் விளங்குகிறது' என்றும் சொல்கிறாள். அழிக்க முடியாத பெரிய மதிள் சூழ்ந்த திருக்கண்ணபுரத்தில் உள்ள சவரிப் பெருமானை இப் பெண் கண்டாளோ? 1650

தார்ஆய தண் துளப வண்டு உழுத வரை மார்பன்
என்கின்றாளால்;
போர்ஆனைக் கொம்பு ஒசித்த புட்பாகன், என் அம்மான்
என்கின்றாளால்;
ஆரானும் காண்மின்கள் அம் பவளம் வாய் அவனுக்கு
என்கின்றாளால்
கார்வானம் நின்று அதிரும் கண்ணபுரத்து அம்மானைக்
கண்டாள்கொலோ? 1651

அடித்தலமும் தாமரையே, அம் கைகளும் பங்கயமே
என்கின்றாளால்;
முடித்தலமும் பொன் பூணும் என் நெஞ்சத்துள் அகலா
என்கின்றாளால்;
வடித்தடங் கண் மலரவளோ வரை ஆகத்துள் இருப்பாள்
என்கின்றாளால்
கடிக்கமலம் கள் உகுக்கும் கண்ணபுரத்து அம்மானைக்
கண்டாள்கொலோ? 1652

பேர்ஆயிரம் உடைய பேராளன், பேராளன்
என்கின்றாளால்;
ஏர்ஆர் கன மகர குண்டலத்தன், எண் தோளன்
என்கின்றாளால்;
நீர்ஆர் மழை முகிலே, நீள் வரையே ஒக்குமால்
என்கின்றாளால்
கார்ஆர் வயல் மருவும் கண்ணபுரத்து அம்மானைக்
கண்டாள்கொலோ? 1653

செவ்அரத்த உடை ஆடை அதன்மேல் ஓர் சிவளிகைக் கச்சு
என்கின்றாளால்;
அவ்அரத்த அடி இணையும் அம் கைகளும் பங்கயமே
என்கின்றாளால்;
மைவளர்க்கும் மணி உருவம் மரகதமோ? மழை முகிலோ?
என்கின்றாளால்
கைவளர்க்கும் அழலாளர் கண்ணபுரத்து அம்மானைக்
கண்டாள்கொலோ? 1654

கொற்றப் புள் ஒன்று ஏறி, மன்றூடே வருகின்றான்
என்கின்றாளால்;
வெற்றிப் போர் இந்திரற்கும் இந்திரனே ஒக்குமால்
என்கின்றாளால்;
பெற்றக்கால் அவன் ஆகம் பெண் பிறந்தோம் உய்யோமோ
என்கின்றாளால்
கற்றநூல் மறையாளர் கண்ணபுரத்து அம்மானைக்
கண்டாள்கொலோ? 1655





'மலை போன்ற அவன் மார்பில் பூத்து விளங்கும் திருத்துழாய் மாலையில் வண்டு உலாவுகிறதே! நான் ஆசைப்படும் மார்பு அதற்கா?' என்று என் மகள் புலம்புகிறாள். 'போரிடவந்த குவலயா பீடத்தின் கொம்பொடித்த கருடவாகனன் என் சுவாமி அன்றோ! நன்மை கூறுவதாய் என்னை விலக்கும் நீங்கள், அவன் அழகிய பவள உதடுகளைப் பார்த்தால் விலகத் தோன்றுமா?' என்று கேட்கிறாள். கறுத்த மேகங்கள் அதிரும் திருக்கண்ணபுரத்தில் உள்ள பெருமானைக் கண்டாளோ? 1651

'அவன் திருவடிகள் தாமரைகளே! அங்கே தோற்று விழுந்ததும் எடுத்தணைத்த அவன் கைகளும் தாமரைகளே! தழுவும் பொழுது நான் மேல் நோக்கிப் பார்த்த திருமுடியும் ஆபரணமும் என் நெஞ்சை விட்டுப் போக வில்லையே! ஆகவே உங்கள் பேச்சு என் நெஞ்சிற் படவில்லை. மலை போன்ற அவன் மார்பில் வாழும் மலர்க் கண்களுடைய திருமகள் என்னையும் அவனிடம் சேர்க்க மாட்டாளா?' இவ்வாறு என் மகள் புலம்புகிறாள். தேன்பெருகும் தாமரைகள் உள்ள திருக்கண்ணபுரத்தில் உள்ள பெருமானை இவள் கண்டாளோ? 1652

"அவன் ஆயிரம் திருநாமங்கள் பெற்ற பெருமை உடையவர்; மிகப் பெரியவன்; மணிகள் பதித்த மகரகுண்டலங்களுடன் எட்டுத் தோள்களை உடையவனே; நீருண்ட மேகத்தையும் அஞ்சன மலையையும் ஒத்தவன்." என்று என்மகள் பேசுகிறாள். செழித்த பயிர்கள் சூழும் திருக்கண்ணபுரப் பெருமானை இவள் கண்டாளோ? 1653

'திருவரை பூத்தது போல அணிந்த அவன் திருப் பரியட்டமும் பீதாம்பரத்தின் மேலே பொன்னால் இழைத்த கச்சும் என்ன அழகு!' என்று வியக்கிறாள். 'சிவந்த திருவடிகளும் திருக் கைகளும் மலர்ந்த தாமரை போல் அல்லவா உள்ளன!' என்று மயங்குகிறாள். 'மைந் நிறமான அவன் திருமேனி மரகதமணியோ? நீலமேகமா!' என்கிறாள். தம் கைகளால் வேள்வி செய்யும் அந்தணர்கள் வாழும் திருக்கண்ண புரத்தில் உள்ள சவரிப் பெருமானை இப் பெண் கண்டாளோ? 1654

'ஆகா! ஆளுமை உடைய கருடன் மீதேறி அவன் வரும் அழகு தான் என்னே! வெற்றிப் போர் செய்யும் இந்திரனுக்கும் தலைவனான மகேந்திரனை ஒத்தவன் அன்றோ இவன்! இப் பெருமானின் திருமார்பில் அணையப் பெற்றால், பெண்ணாகப் பிறந்த பயன் பெற்று உய்வேனே! என்று என் மகள் பேசுகிறாள். கல்வி நூல்களிலும் வேதங்களிலும் வல்ல அந்தணர்கள் வாழும் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளிய சவரிப் பெருமானை இவள் கண்டாளோ? 1655

வண்டுஅமரும் வனமாலை மணி முடிமேல் மண நாறும்
என்கின்றாளால்;
உண்டுஇவர்பால் அன்பு எனக்கு என்று, ஒருகாலும் பிரிகிலேன்
என்கின்றாளால்;
பண்டுஇவரைக் கண்டு அறிவது எவ் ஊரில்? யாம் என்றே
பயில்கின்றாளால்
கண்டவர் தம் மனம் வழங்கும் கண்ணபுரத்து அம்மானைக்
கண்டாள்கொலோ? 1656

மாவளரும் மென் நோக்கி மாதராள் மாயவனைக்
கண்டாள் என்று,
காவளரும் கடி பொழில் சூழ் கண்ணபுரத்து அம்மானைக்
கலியன் சொன்ன
பாவளரும் தமிழ் மாலை பன்னிய நூல் இவை ஐந்தும்
ஐந்தும் வல்லார்
பூவளரும் கற்பகம் சேர் பொன் உலகில் மன்னவர் ஆய்ப்
புகழ் தக்கோரே. 1657

## திருக்கண்ணபுரம் – ௨

### தம் மகள் நிலை கண்ட தாய் அவள் இளமைக்கு இரங்கிக் கூறுதல்

தெள்ளியீர்! தேவர்க்கும் தேவர்! திருத் தக்கீர்!
வெள்ளியீர்! வெய்ய விழு நிதி வண்ணர்! ஓ!
துள்ளு நீர்க் கண்ணபுரம் தொழுதாள்; இவள்
கள்வியோ? கை வளை கொள்வது தக்கதே? 1658

நீள் நிலாமுற்றத்து நின்று இவள் நோக்கினாள்;
காணுமோ, கண்ணபுரம்! என்று காட்டினாள்;
பாணனார் திண்ணம் இருக்க இனி இவள்
நாணுமோ? நன்று நன்று நறையூரர்க்கே. 1659

அருவி சோர் வேங்கடம், நீர்மலை என்று வாய்
வெருவினாள்; மெய்யம் வினவி இருக்கின்றாள்;
பெருகு சீர்க் கண்ணபுரம் என்று பேசினாள்;
உருகினாள்; உள்மெலிந்தாள்; இது என்கொலோ? 1660





*இவர் மணிமுடிமேல் வண்டுகள் படியும் திருத்துழாய் மாலை மணம் வீசுகிறதே! இவரிடத்தே காதல் உள்ளதால் நான் ஒரு பொழுதும் பிரிய மாட்டேன். முன்பே நாம் இப் பெருமானை எத் தலத்தில் கண்ணாரக் கண்டு அறிந்தோம்? இல்லை காண வில்லையோ! இவ்வாறு என் மகள் வாய்விட்டு மறுகுகிறாள். சவரிப் பெருமானைக் கண்டவர்கள் தம் மனத்தை இழந்து விடுவார்கள். இந்த அழகனை என் மகள் திருக்கண்ணபுரத்தில் கண்டாளோ?* **1656**

*'மான் பார்வை உடைய பெண், மணம் வீசும் சோலைகள் சூழ்ந்த திருக்கண்ணபுரத்தில் உள்ள சவரிப் பெருமானைக் கண்டு வணங்கினாள். என்று கலியன் இப்பாசுரங்களில் அருளினார். இவற்றைப் பயில்பவர், பூக்கள் உள்ள கற்பக மரங்கள் நிறைந்த பரமபதத்தில் மன்னராகிப் புகழ் பெறுவர்.* **1657**

## திருக்கண்ணபுரம் –௨

### தம் மகள் நிலைகண்ட தாய் அவள் இளமைக்கு இரங்கிக் கூறுதல்

*தெளிந்த ஞானத்துடன் நித்திய சூரிகள் தலைவராய் உள்ள நீர், திருமகளுக்குத் தக்கவராய், சுத்தமான இயல்புடையீர். சுட்டுரைத்த பொன் மேனி உடையீர். என் மகளின் கை வளையைக் கவர்வது உமக்குத் தகுமோ! நீர்வளமுடைய திருக்கண்ணபுரத்தைத் தொழுத இவள் கள்ளமுடையளா? உம் செயல் முறையானதா!* **1658**

*இப்பெண் நிலா முற்றத்திலிருந்து வெளியே பார்த்த பொழுது 'திருக்கண்ணபுரத்தைப் பாருங்கள்' என்று காட்டி னால் பாடும் பாணர்கள் உறுதியாக இருக்கும் பொழுது இனியும் இவள் மீளக்கூடுமோ? இவளை மடலூரச் செய்த நறையூர்ப் பெருமானுக்கே நன்றாகத் தலைக் கட்டிற்றே!* **1659**

*மலை அருவிகொட்டும் திருவேங்கடம் என்றும் திரு நீர்மலை என்றும் இவள் வாய்விட்டு அரற்றுகிறாள். திருமெய்யம் எங்கே என்று கேட்கிறாள். ஆறுபோல் செல்வம் பெருகும் திருக்கண்ணபுரம் என்று பேசுகிறாள். நீராய் உருகுகிறாள். உள் மெலிந்து வாடினாள். இதென்ன துன்பம் அம்மா!* **1660**

உண்ணும் நாள் இல்லை; உறக்கமும் தான் இல்லை;
பெண்மையும் சால நிறைந்திலள், பேதை தான்;
கண்ணன் ஊர் கண்ணபுரம் தொழும்; கார்க் கடல்
வண்ணர்மேல் எண்ணம் இவட்கு இது என்கொலோ? 1661

கண்ணன் ஊர் கண்ணபுரம் தொழும் காரிகை
பெண்மை என்? தன்னுடை உண்மை உரைக்கின்றாள்;
வெண்ணெய் உண்டு ஆப்புண்ட வண்ணம் விளிம்பினாள்,
வண்ணமும் பொன் நிறம் ஆவது ஒழியுமே. 1662

வடவரை நின்றும் வந்து, இன்று கணபுரம்
இடவகை கொள்வது யாம் என்று பேசினாள்;
மடவரல் மாதர் என் பேதை இவர்க்கு இவள்
கடவது என்? கண் துயில் இன்று இவர் கொள்ளவே. 1663

தரங்க நீர் பேசினும், தண் மதி காயினும்,
இரங்குமோ? எத்தனை நாள் இருந்து எள்கினாள்!
துரங்கம் வாய் கீண்டு உகந்தானது தொன்மை ஊர்
அரங்கமே என்பது இவள் தனக்கு ஆசையே. 1664

தொண்டு எல்லாம் நின் அடியே தொழுது உய்யுமா
கண்டு, தான் கண்ணபுரம் தொழப் போயினாள்;
வண்டு உலாம் கோதை என் பேதை மணி நிறம்
கொண்டு தான் கோயின்மை செய்வது தக்கதே? 1665

முள் எயிறு ஏய்ந்தில; கூழை முடிகொடா;
தெள்ளியள் என்பது ஓர் தேசு இலள்; என் செய்கேன்!
கள் அவிழ் சோலைக் கணபுரம் கை தொழும்
பிள்ளையைப் பிள்ளை என்று எண்ணப் பெறுவரே? 1666

கார் மலி கண்ணபுரத்து எம் அடிகளைப்
பார் மலி மங்கையர் கோன், பரகாலன் சொல்,
சீர் மலி பாடல் இவை பத்தும் வல்லவர்
நீர் மலி வையத்து நீடு நிற்பார்களே. 1667





*பிரிவுத் துயரால் என் மகளுக்கு உண்ணும் நாள் இல்லை; உறக்கமும் கூட இல்லை. அப்படியாவது பெண்மை முதிர்ந்த வயதாயிற்றா? இன்னமும் அவள் சிறுமிதானே; இருந்தும் கண்ணன் எழுந்தருளிய திருக்கண்ணபுரத்தைத் தொழுகிறாள். அக் கரு நிறப்பெருமானிடம் ஆசை வைத்தாள். இதென்ன வியப்பு!* 1661

*கண்ணனின் தலமான திருக்கண்ணபுரத்தைத் தொழும் இப் பெண் தன்னுடைய பெண்மையையும் உண்மையையும் பேசுகிறாள். வெண்ணெய் உண்டு கட்டுப்பட்ட கண்ணனைப் பற்றிக் கூறினால், இவள் வெட்கமுற்று பொன்னிறப் பசலை மீதுரப் பெறுகிறாள். உடலின் நிறம் வெளுத்து விடுகிறது.* 1662

*“வட வேங்கடத்தினின்று நாம் இன்று திருக்கண்ண புரத்தை இடமாகக் கொள்ள வந்தோம்” என்று இப்பெண் பேசுகிறாள். மடப்ப குணம் உடைய இப்பெண் இப்பெருமானுக்குச் செய்யக் கடவது யாது? இவனும் இன்று இவள் உறக்கத்தைக் கொண்டு போனானே! இதென்ன ஆச்சரியம்!* 1663

*அலைகடல் ஒலித்தாலும் குளிர்ந்த சந்திரன் காய்ந்தாலும் இவள் புதிதாக இளைத்தும் போகவில்லை; ஏன் எனில் முன்பேயே எத்தனையோ நாள்களில் இளைத்தாயிற்று. குதிரையாய் வந்த கேசியின் வாயைக் கிழித்து உகந்த கண்ணனின் மிகப் பழைய திவ்விய தேசமான திருவரங்கமே இப்பொழுது இவளுக்கு ஆசையாக உள்ளது.* 1664

*எல்லா பாகவதர்களும் உம்முடைய திருவடியையே வணங்கி உய்வதைக் கண்டு என்மகளும் உம் இருப்பிடமான திருக்கண்ணபுரத்துக்கே போனாள். வண்டுகள் உலாவும் கூந்தலுடைய இப் பேதையின் மணி நிறத்தைக் கவர்ந்து நீர் அநீதி செய்வது உமக்குத் தகுமோ!* 1665

*என் சிறுமிக்கு இன்னும் பற்கள் அரும்பி நிறையவில்லை; கூந்தலோ முடிவதற்கு ஏற்றபடி வளரவில்லை; தெளிவான ஒளியையும் பெறவில்லை. என் செய்வேன்? இவளோ, தேன் ஒழுகும் சோலைகள் உள்ள திருக்கண்ணபுரத்தைத் தொழுகிறாள். இத்தகைய, மகளைத் தன் வயிற்றில் பிறந்த பிள்ளை என்று எண்ணப் பெறுவளோ?* 1666

*மேகங்கள் நிறைந்த திருக்கண்ணபுரத்தில், எழுந்தருளிய சுவாமியை பூமியில் புகழுடைய திருமங்கை நாட்டு மன்னரான பரகாலன் எனும் ஆழ்வார் பாடிய இப் பாசுரங்களைப் பயில்பவர் கடல் சூழ்ந்த உலகில் நெடுங்காலம் வாழப் பெறுவர்.* 1667

## திருக்கண்ணபுரம் – 3

### தலைவனைப் பிரிந்த தலைவி இரங்கிக் கூறுதல்

கரை எடுத்த சுரி சங்கும், கன பவளத்து எழு கொடியும்
திரை எடுத்து வரு புனல் சூழ் திருக்கண்ணபுரத்து உறையும்
விரை எடுத்த துழாய் அலங்கல் விறல் வரைத் தோள் புடைபெயர
வரை எடுத்த பெருமானுக்கு இழந்தேன்-என் வரி வளையே. 1668

அரி வரவு முகில் கணத்தால், அகில் புகையால், வரையோடும்
தெரிவு அரிய மணி மாடத் திருக்கண்ணபுரத்து உறையும்
வரி அரவின் அணைத் துயின்று, மழை மதத்த சிறு தரு கண்
கரி வெருவ, மருப்பு ஒசித்தாற்கு இழந்தேன்-என் கன வளையே. 1669

துங்க மா மணி மாட நெடு முகட்டின் சூலிகை போம்
திங்கள் மா முகில் துணிக்கும் திருக்கண்ணபுரத்து உறையும்
பைங் கண் மால் விடை அடர்த்து பனி மதி கோள் விடுத்து உகந்த
செங் கண் மால் அம்மானுக்கு இழந்தேன்-என் செறி வளையே. 1670

கண மருவு மயில் அகவு கடி பொழில் சூழ் நெடு மறுகின்
திண மருவு கன மதிள் சூழ் திருக்கண்ணபுரத்து உறையும்,
மண மருவு தோள் ஆய்ச்சி ஆர்க்க, போய் உரலோடும்,
புணர் மருதம் இற நடந்தாற்கு இழந்தேன்-என் பொன் வளையே. 1671

வாய் எடுத்த மந்திரத்தால் அந்தணர், தம் செய் தொழில்கள்
தீ எடுத்து மறை வளர்க்கும் திருக்கண்ணபுரத்து உறையும்,
தாய் எடுத்து சிறு கோலுக்கு உளைந்து ஓடித் தயிர் உண்ட
வாய் துடைத்த மைந்தனுக்கு இழந்தேன்-என் வரி வளையே. 1672

மடல் எடுத்த நெடுந் தாழை மருங்கு எல்லாம் வளர் பவளம்
திடல் எடுத்து சுடர் இமைக்கும் திருக்கண்ணபுரத்து உறையும்,
அடல் அடர்த்து, அன்று, இரணியனை முரண் அழிய அணி உகிரால்
உடல் எடுத்த பெருமானுக்கு இழந்தேன்-என் ஒளி வளையே. 1673

வண்டு அமரும் மலர்ப் புன்னை வரி நீழல் அணி முத்தம்
தெண் திரைகள் வரத் திரட்டும் திருக்கண்ணபுரத்து உறையும்
எண் திசையும் எழு கடலும், இரு நிலனும், பெரு விசும்பும்,
உண்டு உமிழ்ந்த பெருமானுக்கு இழந்தேன்-என் ஒளி வளையே 1674





## திருக்கண்ணபுரம் –3

### தலைவனைப் பிரிந்த தலைவி இரங்கிக் கூறுதல்

ஒலிக்கும் வளைந்த சங்குகளையும், பவளக் கொடிகளையும் தள்ளி, ஓடி வரும் நீர் வளம் உடைய திருக்கண்ணபுரத்தில், மணமுடைய துழாய் மாலை அணிந்த பெருமான் உள்ளான். மலை போன்ற தோள்கள் அசைய, கோவர்த்தன மலையைத் தூக்கிய இப் பெருமானுக்கு நான் என் கைவளையை இழந்தேன். 1668

மேகங்களும் அகில் புகையும் கலந்ததால், மலைகளுக்கும் மாடங்களுக்கும் வேறுபாடு தெரியாத திருக்கண்ணபுரத்தில் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டவன் எழுந்தருளி உள்ளான். கொடிய கண்களும் மதமும் கொண்ட குவலயா பீட யானையின் கொம்புகளை ஒடித்தவனை எண்ணி நான் கனமான கைவளையை இழந்தேன். 1669

மாடங்களின் உச்சிகள் சந்திரனையும் மேகத்தையும் ஊடுருவும் திருக்கண்ணபுரத்தில், பசுங் கண்காளைகளை அடக்கிய கண்ணன் எழுந்தருளினான். சந்திரனின் நோய் தீர்த்த இச் செங்கண் மாலுக்கு, என் செறிந்த கைவளையை இழந்தேன். 1670

பெரிய வீதிகளும் மதிளும் உள்ள திருக்கண்ணபுரச் சோலைகளில் மயில்கள் ஆடும். மணம் நாறும் தோள்களை உடைய யசோதை, உரலுடன் கட்டவும், அதை இழுத்தபடி, மருதமரங்கள் இற்று விழ நடந்த கண்ணன் இங்கே உள்ளான். இப் பெருமானுக்கு, நான் பொன் வளையை இழந்தேன். 1671

மந்திரங்கள் ஓதித் தீ வளர்த்து, வேத வேள்விகள் செய்யும், அந்தணர் வாழும் திருக்கண்ணபுரத்தில் கண்ணன் உள்ளான். யசோதையின் சிறு கோலுக்கு அஞ்சி ஓடித் தயிரை உண்டு, வாயைத் துடைத்துக் கொண்ட மைந்தனுக்கு என் வளையை இழந்தேன். 1672

திருக்கண்ணபுரத்தில் மடல்களுடைய தாழம்பூக்கள் வளர்ந்த இடங்களில் பவளம் மேடுகளில் படரும். போரில், இரணியன் உடலைத் தன் நகங்களால் பிளந்த நரசிம்மன் இவ் வூரில் உள்ளான். அவனுக்கு என் ஒளி வளையை இழந்தேன். 1673

திருக்கண்ணபுரத்தில் வண்டுகள் அமரும், பூக்களை உடைய, புன்னை மரத்து நிழலில், தண்ணீர் பாய்வதால், முத்துக்கள் சேரும். எண் திசைகளையும், சூரிய சந்திரர்களையும், பூமியையும், வானையும், பிரளய காலத்தில் உண்டு. பின் உமிழ்ந்து காத்த எம் பெருமான் இங்கு உள்ளான். இவனுக்கு என்ஒளி வளையை இழந்தேன். 1674

கொங்கு மலி கருங் குவளை கண் ஆகத் தெண் கயங்கள்
செங் கமல முகம் அலர்த்தும் திருக்கண்ணபுரத்து உறையும்,
வங்கமலி தடங் கடலுள் வரி அரவின் அணைத் துயின்ற
செங்கமலநாபனுக்கு இழந்தேன்-என் செறி வளையே. 1675

வார் ஆளும் இளங் கொங்கை நெடும் பணைத் தோள், மடப் பாவை
சீர் ஆளும் வரை மார்வன் திருக்கண்ணபுரத்து உறையும்
பேராளன், ஆயிரம் பேர் ஆயிர வாய் அரவு அணைமேல்
பேராளர் பெருமானுக்கு இழந்தேன் என் பெய் வளையே. 1676

தே மருவு பொழில் புடை சூழ் திருக்கண்ணபுரத்து உறையும்
வாமனனை மறி கடல் சூழ் வயல் ஆலி வள நாடன்,
காமரு சீர்க் கலிகன்றி கண்டு உரைத்த தமிழ் மாலை
நா மருவி இவை பாட, வினை ஆய நண்ணாவே. 1677

## திருக்கண்ணபுரம் – 4

### தலைவி தும்பியிடம் கூறியது

விண்ணவர்-தங்கள் பெருமான், திருமார்வன்,
மண்ணவர் எல்லாம் வணங்கும் மலி புகழ் சேர்
கண்ணபுரத்து எம் பெருமான் கதிர் முடிமேல்
வண்ண நறுந் துழாய் வந்து ஊதாய்-கோல் தும்பீ! 1678

வேத முதல்வன், விளங்கு புரி நூலன்,
பாதம் பரவிப் பலரும் பணிந்து ஏத்தி,
காதன்மை செய்யும் கண்ணபுரத்து எம் பெருமான்
தாது நறுந் துழாய் தாழ்ந்து ஊதாய்-கோல் தும்பீ! 1679

விண்ட மலர் எல்லாம் ஊதி, நீ என் பெறுதி?
அண்ட முதல்வன், அமரர்கள் எல்லாரும்
கண்டு வணங்கும் கண்ணபுரத்து எம் பெருமான்
வண்டு நறுந் துழாய் வந்து, ஊதாய்-கோல் தும்பீ! 1680





*திருக்கண்ணபுரக் குளங்களில் மணம் வீசும் குவளைகள் கண்கள் போன்றும், தாமரைப் பூக்கள் முகம் போலவும் மலர்வன. கொப்பூழில் தாமரையுடன், பாற்கடலில் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டவன் இங்கே எழுந்தருளினான். என் கைவளையை இப்பெருமானுக்கு இழந்தேன்.* 1675

*கச்சணிந்த மார்புகளையும் மூங்கிலை ஒத்த தோள்களையும் உடைய மஹா லக்ஷ்மி வாழும் மார்புடைய திருமால் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளினான். ஆயிரம் பெயர்களுடைய பெருமையோன் ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்டவனுக்கு நான் என் கைவளையை இழந்தேன்.* 1676

*வயல் சூழ்ந்த திருவாலி நாட்டு மன்னர் தேன் சோலைகள் சூழ்ந்த திருக்கண்ணபுரப் பெருமானைப் பற்றிப் பாடினார். வைணவத் திரு வாய்க்கப்பெற்ற இவ் வாழ்வாரின் பாசுரங்களை நாவால் பாடுபவர்களுக்குப் பாவங்கள் வாரா.* 1677

## திருக்கண்ணபுரம் –4

### தலைவி தும்பியிடம் கூறியது

*கொம்புகளில் வாழும் தும்பியே! நித்திய சூரிகள் தலைவன்; திருமகள் மார்பன்; உலகத்தவர் வணங்கும் புகழ் மிகுத் திருக்குணங்கள் உடையவன்; திருக்கண்ணபுரத்து எம் பெருமானின் ஒளி முடியில் வண்ணத்துடனும் மணத்துடனும் உள்ள திருத் துழாய் மேல் படிந்து, அந்த வாசனையுடன் இங்கே வந்து ஊத வேண்டும்.* 1678

*கோல் தும்பியே! வேத முதல்வனாய்த் திருமேனியில் பூணூல் உடையவனாய், எல்லோரும் பாதத்தில் வணங்கிப் பக்தியுடன் துதிக்கும் படியான, திருக்கண்ணபுரத்துப் பெருமானின் மணம் வீசும் மகரந்தத் திருத்துழாயில் படிந்து இங்கே வந்து ஊத வேண்டும்.* 1679

*கோல் தும்பீ! மலர்ந்த பூக்களில் ஊதி நீ என்ன பயன் பெற்றாய்? உலக முதல்வனாய்த் தேவர்கள் யாவரும் கண்டு வணங்கும்படியான திருக்கண்ணபுரத்துப் பெருமானின், வண்டுகள் படிந்த திருத்துழாய் மணத்தை இங்கே கொண்டு வந்து ஊது.* 1680

நீர் மலிகின்றது ஓர் மீன் ஆய், ஓர் ஆமையும் ஆய்,
சீர் மலிகின்றது ஓர் சிங்க உரு ஆகி,
கார் மலி வண்ணன் கண்ணபுரத்து எம் பெருமான்
தார் மலி தண் துழாய் தாழ்ந்து, ஊதாய்-கோல் தும்பீ! 1681

ஏர் ஆர் மலர் எல்லாம் ஊதி, நீ என் பெறுதி?
பார் ஆர் உலகம் பரவப் பெருங் கடலுள்
கார் ஆமை ஆன கண்ணபுரத்து எம் பெருமான்
தார் ஆர் நறுந் துழாய் தாழ்ந்து, ஊதாய்-கோல் தும்பீ! 1682

மார்வில் திருவன், வலன் ஏந்து சக்கரத்தன்,
பாரைப் பிளந்த பரமன், பரஞ்சோதி,
காரில் திகழ் காயா வண்ணன் கதிர் முடிமேல்
தாரில் நறுந் துழாய் தாழ்ந்து ஊதாய்-கோல் தும்பீ! 1683

வாமனன், கற்கி, மதுசூதன், மாதவன்,
தார் மன்னு தாசரதி ஆய தடமார்வன்,
காமன் தன் தாதை, கண்ணபுரத்து எம் பெருமான்
தாம நறுந் துழாய் தாழ்ந்து ஊதாய்-கோல் தும்பீ! 1684

நீல மலர்கள் நெடு நீர் வயல் மருங்கில்
சால மலர் எல்லாம் ஊதாதே; வாள் அரக்கர்
காலன், கண்ணபுரத்து எம் பெருமான் கதிர் முடிமேல்
கோல நறுந் துழாய் கொண்டு, ஊதாய்-கோல் தும்பீ! 1685

நந்தன் மதலை, நில மங்கை நல் துணைவன்,
அந்தம், முதல்வன், அமரர்கள் தம் பெருமான்,
கந்தம் கமழ் காயா வண்ணன் கதிர் முடிமேல்
கொந்து நறுந் துழாய் கொண்டு, ஊதாய்-கோல் தும்பீ! 1686

வண்டு அமரும் சோலை வயல் ஆலி நல் நாடன்,
கண்ட சீர் வென்றிக் கலியன் ஒலி மாலை
கொண்டல் நிற வண்ணன் கண்ணபுரத்தானைத்
தொண்டரோம் பாட நினைந்து ஊதாய்-கோல் தும்பீ! 1687





எம்பெருமான் கடலில் மலிந்த மீன் வடிவெடுத்தான்; கூர்மாவதாரம் செய்தான்; வீரம் மிகு நரசிம்மம் ஆனான். கோல் தும்பீ! திருக்கண்ணபுரத்துப் பெருமானின் அழகு நிறைந்த திருமேனியில் உள்ள குளிர்ந்த திருத்துழாய் மாலையின் வாசனையில் படிந்து வந்து ஊதுவாய். 1681

கோல் தும்பீ! அழகான மலர்களில் எல்லாம் அமர்ந்து ஊதி என்ன பயன் அடைந்தாய்? உலகு முழுவதும் பரவிய கடலிலே பெரிய ஆமையாய்த் தோன்றியவன் திருக்கண்ணபுரத்தில் கோவில் கொண்டான். அவன் மணம் மிக்க திருத்துழாய் மாலையிலே படிந்து வந்து என்னிடம் ஊதுவாய். 1682

கோல்தும்பீ! வலக்கைச் சக்கரம் ஏந்திய திருமகள் நாதன், பூமியை அண்ட பித்தியிலிருந்து எடுத்துக் காத்த மேன்மையன். காயாம் பூ நிறமுடைய பரஞ் சோதியான பெருமானின் ஒளி முடிமேல், மணம் வீசும் திருத் துழாய் மாலையில் படிந்து வந்து என்னிடம் ஊதுவாய். 1683

வாமனனாய் வந்தவன் கல்கியாய் வருபவன், மதுசூதன், திருமகள் கேள்வன், தசரத சக்கரவர்த்தித் திருமகன் ஆகிய திருமால் அகன்ற மார்புடைய மன்மதனின் தந்தை ஆவான். கோல் தும்பீ! திருக்கண்ணபுரத்துப் பெருமானின் மணம் வீசும் திருத் துழாய் மாலையில் படிந்து வந்து ஊதுவாய். 1684

கோல்தும்பீ! நீண்ட நீர் வயல்களிலும் நீலப் பூக்களிலும் இன்னும் பல மலர்களில் படிந்து நீ ஊத வேண்டாம். வாள் ஏந்திய அரக்கர்களுக்கு யமனான திருக்கண்ணபுரத்துப் பெருமான் முடிமேல் உள்ள திருத்துழாய் மணத்தைக் கொண்டு வந்து என்னிடம் ஊதுவாய். 1685

கோல் தும்பீ! நந்த கோபர் திருமகனாய்ப் பூமா தேவியின் துணைவனாய் உலகத்துக்கு முதல்வனாய் நித்திய சூரிகள் தலைவனான எம் பெருமான் மணம் வீசும் காயாம்பூ நிறத்தவன். இவன் திருமுடிமேல் கொத்தாகப் பூத்த படி விளங்கும் திருத் துழாயின் மணத்தை இங்கே கொண்டு வந்து ஊது. 1686

மேக நிறமுடைய திருக்கண்ணபுரப் பெருமானை, வண்டு அமரும் சோலை வயல்கள் உள்ள திருவாலி நாட்டு அரசர் வெற்றிக் கலியன் இப் பாசுரங்களில் பாடினார். கோல்தும்பீ! தொண்டர்களான நாங்கள் இவற்றைப் பாடும் படி, உன் மனம் கொண்டு ஊதுவாய். 1687

## திருக்கண்ணபுரம் – 5

### தலைவி மாலைப் பொழுதில் பிரிவுக்கு ஆற்றாது வருந்துதல்

தந்தை காலில் விலங்கு அற, வந்து தோன்றிய
தோன்றல் பின் தமியேன் தன்
சிந்தை போயிற்று; திருவருள் அவனிடைப்
பெறும் அளவு இருந்தேனை,
அந்திகாவலன் அமுது உறு பசுங் கதிர்
அவை சுட, அதனோடும்
மந்தமாருதம் வன முலை தடவந்து
வலி செய்வது ஒழியாதே. 1688

மாரி, மாக் கடல், வளைவணற்கு இளையவன்
வரை புரை திருமார்வில்
தாரின் ஆசையில் போயின நெஞ்சமும்
தாழ்ந்தது; ஓர் துணை காணேன்;
ஊரும் துஞ்சிற்று; உலகமும் துயின்றது;
ஒளியவன் விசும்பு இயங்கும்
தேரும் போயிற்று; திசைகளும் மறைந்தன;
செய்வது ஒன்று அறியேனே! 1689

ஆயன் மாயமே அன்றி, மற்று என் கையில்
வளைகளும் இறை நில்லா;
பேயின் ஆர் உயிர் உண்டிடும் பிள்ளை நம்
பெண் உயிர்க்கு இரங்குமோ?
தூய மா மதிக் கதிர் சுட, துணை இல்லை;
இணை முலை வேகின்றதால்;
ஆயன் வேயினுக்கு அழிகின்றது உள்ளமும்;
அஞ்சேல் என்பார் இலையே! 1690

கயம் கொள் புண் தலைக் களிறு உந்து, வெம் திறல்,
கழல் மன்னர் பெரும் போரில்
மயங்க, வெண் சங்கம் வாய் வைத்த மைந்தனும்
வந்திலன்; மறி கடல் நீர்
தயங்கு வெண் திரைத் திவலை நுண் பனி எனும்
தழல் முகந்து, இள முலைமேல்
இயங்கும் மாருதம் விலங்கில், என் ஆவியை
எனக்கு எனப் பெறலாமே. 1691





## திருக்கண்ணபுரம் –5

### தலைவி மாலைப் பொழுதில் பிரிவுக்கு ஆற்றாது வருந்துதல்

*தந்தையான வசுதேவன் கால்விலங்கு கழலும்படி அவதரித்த, கண்ணன் பின்னே, தனியாய் இருக்கும் என் மனம் போய் விட்டது. அவன் திருவருளைப் பெறும் காலம் பார்த்திருக்கையில், சந்திரனின் அமுத கிரணங்கள் சுடுகின்றன. மெல்லிய தென்றல் என் மார்புகளில் பட்டு இடை விடாமல் என்னைத் துன்புறுத்துகின்றது.* 1688

*பலதேவன், மேகத்தையும் கடலையும் ஒத்தவன்; சங்கு போல் வெண்மை நிறமுடையவன். இவன் தம்பியான கண்ணனின், மலை போன்ற மார்பில் உள்ள மாலையை என் மனம் ஆசைப்பட்டுக் கால்தாழ்ந்தது. ஒரு துணையும் காணேன்; ஊரார் உறங்கினர்; உலகினரும் உறங்கினர். சூரியனும் தன் தேருடன் வானில் மறைந்தான். திசைகளும் வெறிச்சிட்டன. நான் என்ன செய்வதென்று அறியேன்.* 1689

*கண்ணனின் வஞ்சனையாலேயே, என் கைவளையல்கள் நொடிப் பொழுதும் நிற்பதில்லை. பூதனையின் உயிர் உண்ட அவன் பெண்ணான என் உயிர்க்கு, இரங்குவானோ? தூய சந்திரனின் கதிர்கள் சுடுகின்றன. துணையும் இல்லை. என் இள மார்பகங்கள் வேகின்றன. ஐயோ! கண்ணனின் வேய்ங்குழல் இசைக்கு என் நெஞ்சு ஏங்கி அழிகிறது. "பயப்படாதே!" என்று தேற்றுவார் இல்லையே!* 1690

*புண்பட்ட மத்தகங்கள் உடைய யானைகள் மீதேறிப் போரிடும் அரசர்கள், கலங்கும்படி, வெண் சங்கு ஊதிய கண்ணபிரான், இன்னும் வரவில்லையே! கடல் அலைகள் மோதி வரும் பனித் திவலைகள் எனக்கு நெருப்பாகி விட்டன. அத்திவலைகள் மீது பட்டு வீசும் தென்றல் என் மார்புகளில் பட்டால் கொதிக்கிறதே! இத் தென்றல் வீசாமல் திரும்பினால் தான், என் உயிர் என்னிடத்தில் தங்கும்.* 1691

ஏழு மா மரம் துளைபட, சிலை வளைத்து
இலங்கையை மலங்குவித்த
ஆழியான் நமக்கு அருளிய அருளொடும்
பகல் எல்லை கழிகின்றதால் ;
தோழி! நாம் இதற்கு என் செய்தும் ? துணை இல்லை:
சுடர் படு முதுநீரில்
ஆழ ஆழ்கின்ற ஆவியை அடுவது ஓர்
அந்தி வந்து அடைகின்றதே ! 1692

முரியும் வெண் திரை முது கயம் தீப்பட,
முழங்கு அழல் எரி அம்பின்
வரிகொள் வெம் சிலை வளைவித்த மைந்தனும்
வந்திலன்; என் செய்கேன்?
எரியும்வெம் கதிர் துயின்றது; பாவியேன்
இணை நெடுங் கண் துயிலா;
கரிய நாழிகை ஊழியின் பெரியன
கழியும் ஆறு அறியேனே ! 1693

கலங்க மாக்கடல் கடைந்து அடைத்து, இலங்கையர்
கோனது வரை ஆகம்
மலங்க, வெம் சமத்து அடு சரம் துரந்த எம்
அடிகளும் வாரானால்;
இலங்கு வெம் கதிர் இள மதி அதனொடும்
விடை மணி அடும் ; ஆயன்
விலங்கல் வேயினது ஓசையும் ஆய், இனி
விளைவது ஒன்று அறியேனே! 1694

முழுது இவ் வையகம் முறை கெட மறைதலும்,
முனிவனும் முனிவு எய்தி,
மழுவினால் மன்னர் ஆர் உயிர் வவ்விய
மைந்தனும் வாரானால் ;
ஒழுகு நுண் பனிக்கு ஒடுங்கிய பேடையை
அடங்க அம் சிறை கோலித்
தழுவும் நள் இருள் தனிமையின் கடியது ஓர்
கொடு வினை அறியேனே! 1695

கனம்செய் மா மதிள் கணபுரத்தவனொடும்
கனவினில் அவன் தந்த
மனம்செய் இன்பம் வந்து உள் புக, வெள்கி, என்
வளை நெக இருந்தேனை,
சினம்செய் மால் விடைச் சிறு மணி ஓசை என்
சிந்தையைச் சிந்துவிக்கும்;
அனந்தல் அன்றிலின் அரி குரல் பாவியேன்
ஆவியை அடுகின்றதே! 1696





ஏழு மராமரங்களைத் துளைத்த வில்லால், இலங்கையைக் கலக்கின இராமனின் திருவாழி மோதிரத்தால் நான் துவண்டேன். அவன் நமக்கு அருளிய பகல் எல்லையும் போய் விட்டது. தோழி! இனி நான் என் செய்வேன்? துணையும் இல்லை. சூரியனும் கடலில் மூழ்கி மறைந்தான். இந்த அந்தி வேளை என் உயிரை முடிக்கவா வந்து தோன்றியது? 1692

கிளரும் அலைகடல் தீப்படும்படி, நெருப்புமிழும் அம்பை வில் வளைத்துத் தொடுத்த இராமனும் வரவில்லை. என் செய்வேன்? ஒளி தரும் சூரியன் மறைந்தான். பாவியேன் இணைக் கண்கள் துயில வில்லை. ஊழிக் காலத்தை விடவும் நீண்டு வளரும் இரவு நாழிகைகள் ஒழிவதைக் காண்கிலேன். 1693

திருமகளைப் பெறப் பாற்கடலைக் கடைந்தானே! சீதையைப் பெறக் கடலில் அணை கட்டி இலங்கை மன்னன் இராவணன் மார்பைப் பிளக்கும் அம்பு எய்தானே! இந்த என் சுவாமி வரவில்லையே! ஐயோ! சந்திரனின் நிலாக் கதிர்களும் காளை மணி ஓசையும் என் உயிரைக் குலைக்கின்றன. கண்ணன் ஊதும் மூங்கில் குழல் இசையும் என்னைத் துன்புறுத்துகிறது. இனி விளைவதை நான் அறியேன். 1694

உலக முறை குலைந்ததால் சினம் கொண்ட ஜமதக்கினி முனிவருக்காக,மழு ஏந்தி, அரசர்களை அழித்த பரசுராமன் வரவில்லையே! பெருகிப் பாயும் நுண் பனிக்கு ஒடுங்கும், பெண் பறவையை, ஆண் பறவை தன் சிறகுகளின் கீழே அணைக்கும் இந் நள்ளிரவில் நான் தனியாய் இருப்பது மிகக் கொடுமையாய் உள்ளது. அடியேன் கொடிய பாவத்தை அறியேன். 1695

திண்மையான மதிள் சூழ்ந்த திருக்கண்ணபுரத்துப் பெருமானுடன் கனவில் நான் பெற்ற மனத்தின்பம் என்னுள் புகுந்து கைவளையல்கள் கழலும்படி செய்தது. சீற்றமுடைய காளையின் மணியோசை என் மனத்தாலும் சிதைக்கிறது. மேலும், தூக்கத்தில் தழுதழுத்துப் பேசும் அன்றில் குரலும் பாவியான என் உயிரை வாட்டுகிறது. 1696

வார் கொள் மென் முலை மடந்தையர் தடங் கடல்
வண்ணனைத் தாள் நயந்து,
ஆர்வத்தால், அவர் புலம்பிய புலம்பலை
அறிந்து, முன் உரைசெய்த
கார் கொள் பைம் பொழில் மங்கையர் காவலன்,
கலிகன்றி ஒலி வல்லார்
ஏர் கொள் வைகுந்த மா நகர் புக்கு, இமை-
யவரொடும் கூடுவரே. 1697

## திருக்கண்ணபுரம் – 6

தொண்டீர்! உய்யும் வகை கண்டேன்; துளங்கா அரக்கர் துளங்க முன்,
திண் தோள் நிமிரச் சிலை வளைய, சிறிதே முனிந்த திருமார்பன்,
வண்டு ஆர் கூந்தல் மலர்மங்கை வடிக்கண் மடந்தை மா நோக்கம்
கண்டான், கண்டு கொண்டு உகந்த கண்ணபுரம் நாம் தொழுதுமே. 1698

பொருந்தா அரக்கர் வெம் சமத்துப் பொன்ற, அன்று புள் ஊர்ந்து
பெருந் தோள் மாலி தலை புரள, பேர்ந்த அரக்கர் தென் இலங்கை
இருந்தார் தம்மை உடன் கொண்டு, அங்கு எழில் ஆர் பிலத்துப் புக்கு ஒளிப்ப
கருந்தாள் சிலை கைக் கொண்டான் ஊர், கண்ணபுரம் நாம் தொழுதுமே. 1699

வல்லி இடையாள் பொருட்டாக, மதிள் நீர் இலங்கையார்கோவை
அல்லல் செய்து, வெம் சமத்துள் ஆற்றல் மிகுத்த ஆற்றலான்,
வல் ஆள் அரக்கர் குலப்பாவை வாட, முனி தன் வேள்வியைக்
கல்விச் சிலையால் காத்தான் ஊர், கண்ணபுரம் நாம் தொழுதுமே 1700

மல்லை முந்நீர் அதர்பட வரி வெம் சிலை கால் வளைவித்து
கொல்லை விலங்கு பணி செய்ய, கொடியோன் இலங்கை புகல் உற்று,
தொல்லை மரங்கள் புகப் பெய்து துவலை நிமிர்ந்து வான் அணவ,
கல்லால் கடலை அடைத்தான் ஊர், கண்ணபுரம் நாம் தொழுதுமே. 1701

ஆமை ஆகி, அரி ஆகி, அன்னம் ஆகி, அந்தணர் தம்
ஓமம் ஆகி, ஊழி ஆகி. உலகு சூழ்ந்த நெடும் புணரி
சேம மதிள் சூழ் இலங்கைக் கோன் சிரமும், கரமும், துணித்து முன்
காமற் பயந்தான் கருதும் ஊர், கண்ணபுரம் நாம் தொழுதுமே. 1702





கச்சுடன் பொருந்திய மார்புகளை உடைய பெண்கள், கடல் நிறப் பெருமானின் திருவடிகளை ஆசைப்பட்டுக் காதலில் புலம்பியதை அறிந்து, தலைவி பேச்சாலே கலியன் பாடினார். பூஞ்சோலைகள் உள்ள திருமங்கை நகர்க்கு மன்னரான ஆழ்வாரின் இப் பாசுரங்களைப் பயில்பவர் வைகுந்தம் புகுந்து, நித்திய சூரிகளுடன் கூடுவர். 1697

## திருக்கண்ணபுரம் – 6

தொண்டர்களே! உய்வதற்குரிய வழியைக் கண்டேன். நடுங்காத அரக்கர் அஞ்சும்படி, தோளை நிமிர்த்தி, வில்லை வளைத்த இராமன் அவ்வரக்கர்களை அழித்து, மார்பில் வீரத் திருவுடன் விளங்கினான். வண்டு அமரும் கூந்தலுடைய திருமகளுடனும் கூரிய கண்கள் பெற்ற பூமி தேவியுடனும் சேர்ந்திருக்க முடிவு செய்த பெருமான் திருக்கண்ண புரத்தில் எழுந்தருளினான். நாம் அங்கே சென்று தொழுவோம். 1698

எம் பெருமான், கருடன் மீதேறிப் போரில், தன்னை எதிர்த்த, அரக்கர் அழியும்படியும், மாலியின் தலை புரளும்படியும் வில்லைக் கைக் கொண்டான். மற்றும் சில அரக்கர்கள் தென்னிலங்கையில் இருந்த வருடன் பாதாளம் சென்று மறைந்தனர். இத்தகைய வீரமிக்க பெருமானைத் திருக்கண்ணபுரத்தில் நாம் வணங்குவோம். 1699

கொடி போன்ற இடை உடைய சீதைக்காக, இராமன் கடலும் மதிளும் சூழ்ந்த இலங்கை அரசன் இராவணனைத் தாக்கிப் போரில் ஆற்றலைக் காட்டினான். அரக்கர் குடியில் பிறந்த தாடகை அழியும்படி, விசுவாமித்திர முனிவரின் யாகத்தை வில் ஆற்றலால் காத்தான். இப் பெருமான் எழுந்தருளிய திருக்கண்ணபுரத்தைத் தொழுவோம். 1700

கொடிய இராவணின் இலங்கைக்குள் புக, இராமன், கடல், வழி விடும்படி, வில்லை வளைத்தான். காட்டு வானரங்கள் பணி செய்யப் பழைய மரங்களைக் கடலில் போடச் செய்து, நீர்த் துளிகள் வானைத் தொடும்படி மலைகளை இட்டு, அணை கட்டினான். இப்பெருமானின் திருத்தலமான திருக்கண்ணபுரத்தை நாம் தொழுவோம். 1701

ஆமை, நரசிம்மம், அன்னம் ஆகிய அவதாரங்கள் செய்தவன்; அந்தணரின் வேள்வி வடிவானவன்; காலமே அவன். அகன்ற கடல் சூழ்ந்த இலங்கைக் கோன் தலைகளை அறுத்த இராமனும் அவனே. மன்மதன் தந்தையான கண்ணன் கோவில் கொண்ட திருக்கண்ணபுரத்தை நாம் தொழுவோம். 1702

**வருந்தாது இருநீ, மட நெஞ்சே! நம் வினைகள் வாரா; முன்,**
**திருந்தா அரக்கர் தென் இலங்கை செந் தீ உண்ண, சிவந்து ஒரு நாள்**
**பெருந்தோள் வாணற்கு அருள் புரிந்து பின்னை மணாளன் ஆகி முன்**
**கருந்தாள் களிறு ஒன்று ஒசித்தான் ஊர், கண்ணபுரம் நாம் தொழுதுமே. 1703**

**இலைஆர் மலர்ப் பூம் பொய்கைவாய் முதலை தன்னால் அடர்ப்புண்டு**
**கொலை ஆர் வேழம் நடுக்கு உற்றுக் குலைய, அதனுக்கு அருள் புரிந்தான்.**
**அலைநீர் இலங்கை தசக்கிரீவற்கு இளையோற்கு அரசை அருளி முன்**
**கலை மாச் சிலையால் எய்தான் ஊர், கண்ணபுரம் நாம் தொழுதுமே. 1704**

மால்ஆய், மனமே! அருந் துயரில் வருந்தாது இரு நீ; வலி மிக்க
கால்ஆர் மருதும் காய் சினத்த கழுதும் கத மா, கழுதையும்
மால் ஆர் விடையும், மத கரியும், மல்லர் உயிரும் மடிவித்து,
காலால் சகடம் பாய்ந்தான் ஊர், கண்ணபுரம் நாம் தொழுதுமே. 1705

குன்றால் மாரி பழுது ஆக்கி, கொடி ஏர் இடையாள் பொருட்டாக,
வன்தாள் விடை ஏழ் அன்று அடர்த்த வானோர் பெருமான் மா மாயன்
சென்றான் தூது பஞ்சவர்க்கு ஆய், திரி கால் சகடம் சினம் அழித்து,
கன்றால் விளங்காய் எறிந்தான் ஊர், கண்ணபுரம் நாம் தொழுதுமே. 1706

கருமா முகில் தோய் நெடு மாடக் கண்ணபுரத்து எம் அடிகளை,
திருமா மகளால் அருள்மாரி, செழுநீர் ஆலி வள நாடன்,
மருவு ஆர்புயல் கைக் கலிகன்றி மங்கை வேந்தன் ஒலி வல்லார்
இருமா நிலத்துக்கு அரசு ஆகி, இமையோர் இறைஞ்ச வாழ்வாரே. 1707

### திருக்கண்ணபுரம் – 7

வியம்உடை விடை இனம் உடைதர, மட மகள்
குய மிடை தட வரை அகலம் அது உடையவர்
நயம் உடை நடை அனம் இளையவர் நடை பயில்
கய மிடை கணபுரம் -அடிகள் தம் இடமே. 1708





நெஞ்சமே! நீ வருந்தாதே! நம் மேல் பாவங்கள் வாரா. திருந்தாத அரக்கரின் இலங்கையை இராமன் தீக்கிரை யாக்கினான். பாணாசுரனின் இரு கைகளை மட்டும் விட்டு வைத்து அருளிய கண்ணன் குவலயாபீடத்தைக் கொன்றான். நப்பின்னை நாயகனின் திருக்கண்ணபுரத்தை நாம் தொழுவோம். 1703

இலைகளும் பூக்களும் படர்ந்த பொய்கையில் முதலை வாய்ப்பட்ட யானையின் துன்பத்தை எம்பெருமான் நீக்கி அருளினான். அலைகடல் இலங்கை அரசர் தம்பியான வீடணனுக்கு அரசு அளித்தவனும் மாய மானை வில்லால் கொன்றவனும் ஆன இராமனின் திருக்கண்ணபுரத்தை நாம் தொழுவோம். 1704

நெஞ்சமே! நீ பித்துப் பிடித்துத் துயரில் வருந்தாதே! மருதமரங்கள், பூதனைப் பேய், குதிரை. கழுதை வடிவில் வந்த அசுரர்கள். எருதுகள், மல்லர்கள், குவலயாபீட யானை, சகடாசுரன் ஆகியோரைக் கொன்ற கண்ணபிரான் எழுந் தருளிய திருக்கண்ணபுரத்தை நாம் வணங்குவோம். 1705

கண்ணன் மலை எடுத்து மழையைத் தடுத்தான்; கொடி இடையோள் நப்பின்னையைப் பெற ஏழு எருதுகளைக் கொன்றான். நித்திய சூரிகள் தலைவனான மாயன், பாண்டவர்க்காகத் தூது சென்றான். சகடாசுரனை வதைத்தான். கன்றாய் வந்த அசுரனை வீசி, விளாமர அசுரனைக் கொன்றவனின் திருக்கண்ணபுரத்தை நாம் தொழுவோம். 1706

மேகங்கள் தங்கும் மாடங்கள் உயர்ந்த திருக்கண்ணபுரப் பெருமானை, திருமகள் அருளால் 'அருள்மாரி' எனப் பெயர் கொண்ட ஆலி நாடர் பாடினார். மேகம் போலும் கொடைத் தன்மை உடைய திருமங்கை ஆழ்வாரின் இப்பாசுரங்களைப் பயில்பவர். பூவுலக அரசர் ஆவதுடன் நித்திய சூரிகள் திருவடிகளையும் வணங்குவர். 1707

### திருக்கண்ணபுரம் –7

திருக்கண்ணபுரத்துப் பொய்கைகளில் உள்ள அன்னங்கள், அவ்வூர்ப் பெண்களின் நடை அழகைப் பயின்று மகிழும். ஏழு எருதுகளைக் கொன்று மடப்ப குணமுடைய நம்பின்னையை அடைந்த கண்ணன் அவள் மார்பகங்களுடன் தழுவப்பட்ட மலை போன்ற மார்புடையவன். இப் பெருமானுடைய இடம் திருக்கண்ணபுரம் ஆகும். 1708

இணை மலி மருது இற, எருதினோடு இகல் செய்து
துணை மலி முலையவள் மணம் மிகு கலவியுள்
மணமலி விழவினொடு அடியவர் அளவிய
கணமலி கணபுரம் -அடிகள்- தம் இடமே. 1709

புயல் உறு வரை மழை பொழிதர, மணி நிரை
மயல் உற, வரை குடை எடுவிய நெடியவர்
முயல் துளர் மிளை முயல் துள, வள விளை வயல்
கயல் துளு கணபுரம் -அடிகள் - தம் இடமே. 1710

ஏதலர் நகைசெய, இளையவர் அளை வெணெய்
போது செய்து அமரிய புனிதர் -நல் விரை மலர்
கோதிய மதுகரம் குலவிய மலர் மகள்
காதல்செய் கணபுரம் -அடிகள் - தம் இடமே. 1711

தொண்டரும் அமரரும் முனிவரும் தொழுது எழ,
அண்டமொடு அகல் இடம் அளந்தவர்; அமர் செய்து
விண்டவர் பட, மதிள் இலங்கை முன், எரி எழக்
கண்டவர் கணபுரம் -அடிகள் - தம் இடமே. 1712

மழுவு இயல் படை உடையவன் இடம்: மழை முகில்
தழுவிய உருவினர் - திருமகள் மருவிய
கொழுவிய செழு மலர் முழுசிய பறவை பண்
எழுவிய கணபுரம் -அடிகள் - தம் இடமே. 1713

பரிதியொடு அணி மதி, பனி வரை, திசை, நிலம்,
எரி தியொடு என இன இயல்வினர், செலவினர்
சுருதியொடு அரு மறை முறை சொலும் அடியவர்
கருதிய கணபுரம் -அடிகள் - தம் இடமே. 1714

படி புல்கும் அடி இணை பலர் தொழு, மலர் வைகு
கொடி புல்கு தட வரை அகலம் அது உடையவர்
முடி புல்கு நெடு வயல் படை செல அடி மலர்
கடி புல்கு கணபுரம் -அடிகள் - தம் இடமே 1715





இணை மருதமரங்கள் ஒடிந்து விழும்படி, இடையே நடந்த கண்ணன், அழகிய மார்புகளை உடைய நப்பின்னையைத் திருமணம் செய்து கொள்ள, எருதுகளுடன் போரிட்டான். இப்பெருமானின் திருக்கண்ணபுரத்தில் வைணவ அடியார்களின் கூட்டம் திரண்டு அளவளாவும் விழா நாள்கள் சிறப்புறும். 1709

மேகங்கள் கூடிக் கல் மழை பெய்த பொழுது, கலங்கிய பசுக்களைக் காக்கக் கண்ணன் மலையைக் குடையாகத் தூக்கினான். இப் பெருமானின் திருக்கண்ணபுரத்து வயல்களில், களைக் கொட்டு களைக் கையில் ஏந்திய உழவர்கள் முகங்களில் தூறுகளிலிருந்து எழுந்த முயல்கள் துள்ளும்; மீன்களும் துள்ளி விழும். 1710

தனக்கு வேண்டாதவர் சிரிக்கவும், அளைந்த வெண்ணெய்யை உண்டு மகிழ்ந்த கண்ணன் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளி உள்ளான். வண்டுகள் தேன் அருந்தும் மலரில் உள்ள திருமகளும் இத் தலத்தை உகந்து, உடன் உறைகிறாள். 1711

பகைவர் அழிய, மதிள் சூழ்ந்த இலங்கையில் போரிட்டு அதைத் தீக்கு இரையாக்கிய பெருமான் திருக்கண்ணபுரத்தில் உள்ளான். ஸ்ரீவைணவத் தொண்டர்களும், தேவர்களும், முனிவர்களும் தொழுது உய்வடையும் தலம் இது. 1712

மழுப்படை ஏந்திய, மேக நிற மேனி உடைய சுவாமி எழுந்தருளிய திருக்கண்ணபுரத்தில் பெரிய பிராட்டியாரும் நித்திய வாசம் செய்கிறாள். அதனால், செழித்த அழகிய தாமரைப் பூவில் முழுகிக் கிடக்கும் வண்டுகள் பாடும் பண்கள் எங்கும் பரவும். 1713

சூரியன், சந்திரன், பனிமலைகள். திசைகள், பூமி, தீ ஆகியவற்றைத் தன் பகுதிகளாகக் கொண்டு நியமிக்கும் எம் பெருமான் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளி உள்ளான். வேதங்களை முறையாக ஒலிக் குறிப்புகளுடன் ஓதும் அடியார்கள் இத் தலத்தையே உய்விடமாகக் கொண்டு வாழ்கிறார்கள். 1714

திருமகள் தழுவும் மலை போன்ற அகன்ற மார்புடைய எம் பெருமான், உலகளந்த திருவடிகளை யாவரும் தொழும்படி, திருக் கண்ணபுரத்தில் எழுந்தருளி உள்ளான். இவ்வூரில், நாற்று முடிகள் கூடிய வயல்களில், கலப்பை செலுத்துவதாலும் காலால் சமட்டுவ தாலும், அருகுள்ள தாமரைப் பூக்களின் மணம் எங்கும் பரவும். 1715

புலமனு மலர்மிசை மலர் மகள், புணரிய
நிலமகள் என இன, மகளிர்கள் இவரொடும்
வலமனு படையுடை மணி வணர் - நிதி குவைக்
கலமனு கணபுரம் -அடிகள் - தம் இடமே. 1716

மலி புகழ் கணபுரம் உடைய எம் அடிகளை
வலி கெழு மதிள் அயல் வயல் அணி மங்கையர்
கலியன தமிழ் இவை விழுமிய இசையினொடு
ஒலி சொலும் அடியவர் உறு துயர் இலரே. 1717

## திருக்கண்ணபுரம் – 8

வானோர் அளவும் முது முந்நீர் வளர்ந்த காலம் வலி உருவின்
மீன் ஆய்வந்து வியந்து உய்யக் கொண்ட தண் தாமரைக் கண்ணன்;
ஆனா உருவில் ஆன் ஆயன் அவனை அம் மா விளை வயலுள்
கான் ஆர் புறவின் கண்ணபுரத்து-அடியேன் கண்டு கொண்டேனே. 1718

மலங்கு விலங்கு நெடு வெள்ளம் மறுக, அங்கு ஓர் வரை நட்டு,
இலங்கு சோதி ஆர் அமுதம் எய்தும் அளவு ஓர் ஆமை ஆய்,
விலங்கல் திரியத் தடங் கடலுள் சுமந்து கிடந்த வித்தகனை
கலங்கல் முந்நீர்க் கண்ணபுரத்து-அடியேன் கண்டு கொண்டேனே. 1719

பார் ஆர் அளவும் முது முந்நீர் பரந்த காலம், வளை மருப்பில்
ஏர் ஆர் உருவத்து ஏனம் ஆய் எடுத்த ஆற்றல் அம்மானை
கூர் ஆர் ஆரல் இரை கருதி, குருகு பாய, கயல் இரியும்
கார் ஆர் புறவிற் கண்ணபுரத்து-அடியேன் கண்டுகொண்டேனே. 1720

உளைந்த அரியும் மானிடமும் உடனாய்த் தோன்ற ஒன்றுவித்து,
விளைந்த சீற்றம் விண் வெதும்ப வேற்றோன் அகலம் வெம் சமத்துப்
பிளந்து வளைந்த உகிரானைப் பெருந் தண் செந்நெற் குலை தடிந்து
களம் செய் புறவில் கண்ணபுரத்து-அடியேன் கண்டுகொண்டேனே. 1721





வலக்கையில் சக்கரம் ஏந்திய நீலமணி நிறப் பெருமானின் திருத்தலம் திருக்கண்ணபுரம் ஆகும். புலன்களைக் கவரும் தாமரையில் வாழும் திருமகளும் பூமாதேவியும், பெருமானைப் பிரியாதபடி என்றும் கூடி உள்ளனர். இங்குள்ள கடற்கரை எங்கும் நிதிக் குவியல்களைக் கொண்டு வரும் மரக் கலங்கள் பரந்துள்ளன. 1716

புகழுடைய திருக்கண்ணபுரப் பெருமானை, மதிளும் வயல்களும் சூழ்ந்த திருமங்கை நகர்க்கு அரசரான கலியன் பாடினார். இந்த இசைத் தமிழ்ப் பாசுரங்களை ஒலியுடன் பயிலும் அடியவர்களுக்குப் பாவங்கள் சேரா. 1717

## திருக்கண்ணபுரம் – 8

தேவர்கள் எல்லை வரையும் கடல் பொங்கிய காலத்தில் தாமரைக் கண்ணன் திருமால், மீன் உருவெடுத்து உலகைக் காத்தான். அழியாத திருமேனியுடன் இடைக் குலத்தில் கண்ணனாக வந்தவனை அடியேன் அகன்ற வயல்களும் காடுகளும் உள்ள திருக்கண்ணபுரத்தில் கண்டு கொண்டேன். 1718

வித்தகனான எம்பெருமான், மலங்கு முதலிய மீன்கள் தடுமாறக் கடல் கலங்க, அதன் நடுவே மந்தர மலையை நிறுத்தினான். நாற்புறமும் சுழலும் அம் மலையைத் தாங்கிய படி, அமுதம் தோன்றும் வரை, ஆமையாய்க் கிடந்து சுமந்தான். இவனைக் கடல் படரும் திருக்கண்ணபுரத்தில் கண்டேன். 1719

பூமி முழுவதும் கடல் சூழ்ந்த காலத்தில் ஆற்றல் மிகுந்த இறைவன், வராஹ வடிவம் கொண்டு தன் கொம்பில் பூமியை எடுத்துக் காத்தான். இப்பெருமானை மேகம் பரவும் புறவுகள் உள்ள திருக்கண்ணபுரத்தில் கண்டு கொண்டேன். இங்குக் கூர்மையான அலகுகள் கொண்ட குருகுகள் தமக்கு உணவான ஆரல் மீன்கள் மீது பாயும் பொழுது, கயல் மீன்கள் பயந்து ஓடும். 1720

உளை மயிருடன் அச்சுறுத்தும் சிங்க வடிவமும் மனித உருவமும் கலந்த நரசிம்மமாகத் தோன்றிய பெருமான் சீற்றத்துடன் பொங்கித் தேவருலகம் அஞ்ச, இரணியனுடன் போரிட்டு அவன் மார்பைத் தன் நகத்தால் இருகூறாகப் பிளந்தான். வளர்ந்த நெற்குலைகளை வெட்டிய பிறகும் வயிரம் முற்றிப் பரவிக் கிடக்கும் களங்களை உடைய திருக்கண்ணபுரத்தில் இப்பெருமானைக் கண்டேன். 1721

தொழு நீர் வடிவின் குறள் உருவு ஆய் வந்து தோன்றி, மாவலிபால்
முழு நீர் வையம் முன் கொண்ட மூவா உருவின் அம்மானை
உழு நீர் வயலுள் பொன் கிளைப்ப, ஒரு பால் முல்லை முகையோடும்
கழுநீர் மலரும் கண்ணபுரத்து-அடியேன் கண்டு கொண்டேனே. 1722

வடி வாய் மழுவே படை ஆக வந்து தோன்றி, மூவெழுகால்
படி ஆர் அரசு களைகட்ட பாழியானை, அம்மானை
குடியா வண்டு கொண்டு உண்ண, கோல நீலம் மட்டு உகுக்கும்
கடி ஆர் புறவிற் கண்ணபுரத்து-அடியேன் கண்டு கொண்டேனே. 1723

வையம் எல்லாம் உடன் வணங்க, வணங்கா மன்னனாய்த் தோன்றி
வெய்ய சீற்றக் கடி இலங்கை குடிகொண்டு ஓட, வெம் சமத்து
செய்த வெம்போர் நம்பரனைச் செழுந் தண் கானல் மண நாறும்,
கைதை வேலிக் கண்ணபுரத்து-அடியேன் கண்டுகொண்டேனே. 1724

ஒற்றைக் குழையும் நாஞ்சிலும் ஒருபால் தோன்றத் தான் தோன்றி,
வெற்றித் தொழிலார் வேல் வேந்தர் விண்பால் செல்ல, வெம் சமத்துச்
செற்ற கொற்றத் தொழிலானை செந்தீ மூன்றும் இல் இருப்ப,
கற்ற மறையோர் கண்ணபுரத்து-அடியேன் கண்டுகொண்டேனே. 1725

துவரிக் கனிவாய் நில மங்கை துயர் தீர்ந்து, உய்ய, பாரதத்துள்
இவரித்து அரசர் தடுமாற, இருள் நாள் பிறந்த அம்மானை
உவரி ஓதம் முத்து உந்த ஒருபால் ஒருபால் ஒண் செந்நெல்
கவரி வீசும் கண்ணபுரத்து -அடியேன் கண்டுகொண்டேனே. 1726

மீனோடு ஆமை, கேழல் அரி, குறள் ஆய், முன்னும் இராமன் ஆய்,
தான் ஆய், பின்னும் இராமன் ஆய் தாமோதரன் ஆய், கற்கியும்
ஆனான் தன்னைக் கண்ணபுரத்து அடியன், கலியன் ஒலி செய்த
தேன் ஆர் இன் சொல் தமிழ் மாலை செப்பப் பாவம் நில்லாவே. 1727





என்றும் மாறா நிலையுள்ள எம் பெருமான், யாவரும் வணங்கும் தன்மை உடைய வாமனனாய்த் தோன்றி, மாவலி இடத்தே, கடல் சூழ்ந்த உலகை யாசித்துப் பெற்றான். இவனைத் திருக்கண்ணபுரத்தில் கண்டேன். இவ்வூர் வயல்களில் பொன்னே போல, முல்லை, கருமுகை, செங்கழுநீர் முதலிய பூக்கள் மலர்ந்து காணப்படும். 1722

கூர்மையான மழுப்படையுடன் இருபத்தொரு தடவை அரசர்களைக் கொன்ற பலம் பொருந்திய பரசுராமனைத் திருக்கண்ணபுரத்தில் அடியேன் கண்டு கொண்டேன். இங்குள்ள தோட்டங்களில் வண்டுகள் மது அருந்தும் பொழுது நீல மலர்கள் தேன் உகுப்பதால் எங்கும் மணம் பரவும். 1723

உலகமெல்லாம் திருவடிகளில் வணங்கும் பெருமையுடன், தான் எவரையும் வணங்காத தனித் தலைமை உடைய இறைவன் சக்கரவர்த்தித் திருமகனாக அவதரித்தான். இலங்கைக் குடிகள் ஓடுமாறு, சீற்றத்துடன் கொடும் போர் செய்த இராமபிரானைத் தாழை வேலியாக அமைந்து மணம் வீசும் நெய்தல் நிலத் திருக்கண்ணபுரத்தில் அடியேன் கண்டு கொண்டேன். 1724

ஒரு காதில் குண்டலம் தொங்க, மறு பக்கம் கலப்பை தோன்றப் பலராமனாக அவதரித்த பெருமான், வெற்றி பெறும் மன்னர்களையும் தோற்கச் செய்து வீரசுவர்க்கம் அடையச் செய்து, கொற்றமே தொழிலாகக் கொண்டான். முத்தீ வளர்க்கும் வேதியர்கள் வாழும் திருக்கண்ணபுரத்தில் இப்பெருமானைக் கண்டேன். 1725

இலந்தைப் பழத்தையும் கோவைக் கனியையும் ஒத்த உதடுடைய பூமி தேவியின் பாரம் தீர்ந்து உய்வு பெறப் பாரதப் போரில் எதிர்த்த அரசர்கள் தடுமாறுவதற்கு என்றே, கண்ணன் இருண்ட அட்டமி இரவில் தோன்றினான். இப் பெருமானை அடியேன் திருக்கண்ணபுரத்தில் கண்டேன். இவ்வூரில் ஒரு பக்கம் கடல் அலைகள் முத்துக்களைக் கரையில் ஒதுக்கும்; செந்நெல் சாமரம் வீசும். 1726

மீன், ஆமை, வராஹம், நரசிம்மம், வாமனன், இராமன், பரசுராமன், பலராமன், கண்ணன், கல்கி அவதாரங்கள் செய்த பெருமானைத் திருக்கண்ணபுரத்தான் ஆன கலியன் பாடினார். தேன் போன்ற இப்பாசுரங்களைப் பயில்பவர்க்குப் பாவங்கள் நில்லா. 1727

## திருக்கண்ணபுரம் – 9

கைம் மான மத யானை இடர் தீர்த்த கரு முகிலை,
மைம் மான மணியை அணி கொள் மரகதத்தை,
எம்மானை, எம் பிரானை, ஈசனை, என் மனத்துள்
அம்மானை-அடியேன் அடைந்து உய்ந்துபோனேனே. 1728

தரு மான மழை முகிலைப் பிரியாது தன் அடைந்தார்
வரு மானம் தவிர்க்கும் மணியை அணி உருவில்
திருமாலை, அம்மானை, அமுதத்தை கடல் கிடந்த
பெருமானை-அடியேன் அடைந்து உய்ந்து பிழைத்தேனே. 1729

விடை ஏழ் அன்று அடர்த்து வெகுண்டு விலங்கல் உறப்
படையால் ஆழி தட்ட பரமன், பரஞ்சோதி,
மடை ஆர் நீலம் மல்கும் வயல் சூழ் கண்ணபுரம் ஒன்று
உடையானுக்கு அடியேன்; ஒருவர்க்கு உரியேனோ? 1730

மிக்கானை; மறை ஆய் விரிந்த விளக்கை; என்னுள்
புக்கானை; புகழ் சேர் பொலிகின்ற பொன் மலையை;
தக்கானை; கடிகைத் தடங் குன்றின்மிசை இருந்த
அக்காரக் கனியை -அடைந்து உய்ந்துபோனேனே. 1731

வந்தாய், என் மனத்தே ; வந்து நீ புகுந்த பின்னை,
எந்தாய்! போய் அறியாய்; இதுவே அமையாதோ?
கொந்து ஆர் பைம் பொழில் சூழ் குடந்தைக் கிடந்து உகந்த
மைந்தா!உன்னை என்றும் மறவாமை பெற்றேனே. 1732

எஞ்சா வெம் நரகத்து அழுந்தி நடுங்குகின்றேற்கு
அஞ்சேல் என்று அடியேனை ஆட்கொள்ள வல்லானை
நெஞ்சே! நீ நினையாது இறைப்பொழுதும் இருத்திகண்டாய்
மஞ்சு ஆர் மாளிகை சூழ் வயல் ஆலி மைந்தனையே. 1733





## திருக்கண்ணபுரம் –9

மையையும் மணியையும் மரகதத்தையும் ஒத்த என் சுவாமி, துதிக்கையால் பெருமை உடைய கஜேந்திரனின் துயரத்தைப் போக்கினான். என் மனத்துள் எப்பொழுதும் வாழும் இந்த எம்பிரானான ஈசனை அடைந்த அடியேன் உய்வு பெற்றேன். 1728

கற்பகத்தையும் காளமேகத்தையும் ஒத்த கொடையாளன் ஆன, திருமால், தன்னை அடைந்தார்கள் படும் அவமானத்தைப் போக்குவான். சிந்தாமணியையும் அமுதத்தையும் ஒத்த அவன் திருப்பாற்கடலில் கண் வளர்ந்தான். அடியேன் இப்பெருமானை அடைந்து உய்வு பெற்றுப் பிழைத்தேன். 1729

கண்ணன் சீற்றத்துடன் ஏழு எருதுகளை அடக்கினான். இராமன் திரிகூட மலையில் வானரங்களைச் சேர்த்துக் கடலில் அணை கட்டினான். இப் பரமன் ஆன ஒளி வடிவினன் திருக்கண்ணபுரத்தில் உள்ளான். இப் பெருமானுக்கு மட்டுமே அடியவன் ஆன நான், வேறு எவர்க்கும் உரியவன் ஆவேனோ? மாட்டேன். 1730

மிக்கவனாய் வேதப் பொருளாய் அளவிட இயலாத சுய ஒளி ஆன இறைவன் என்னுள் புகுந்தான். புகழ் விளங்கும் பொன் மலை போன்ற அந்த அருளாளன் திருக் கடிகை மலை உச்சியில் எழுந்தருளினான். அக்காரக் கனி போன்ற இப் பெருமானை அடியேன் அடைந்து உய்ந்தேன். 1731

எந்தாய்! நீயே வந்து என் மனத்துள் புகுந்தாய். புகுந்த பிறகு நித்திய சூரிகள் பக்கம் போகாய். என்னுடைய இப் பேறுதான் என்னே! கொத்தாகப் பூக்கள் மலரும் சோலைகள் சூழ்ந்த திருக்குடந்தையில் கண் வளரும் மைந்தா! உன்னை என்றும் மறவாதிருக்கும்படி அடியேன் அருள் பெற்றேன். 1732

கொடுமை நீளும் நரகத்தில் அழுந்தி நடுங்கும் எனக்கு 'அஞ்சாதே!' என்று கூறி அடியேனைப் பெருமான் ஆட் கொண்டான். மேகத்தைத் தொடும் உயர்ந்த மாளிகைகள் சூழ்ந்த வயல்கள் உள்ள திருவாலியில் எழுந்தருளிய இறைவனை, மனமே! நீ நொடிப் பொழுதும் நினைக்காமல் இருப்பாயோ? 1733

பெற்றார் பெற்று ஒழிந்தார்; பின்னும் நின்று அடியேனுக்கு
உற்றான் ஆய், வளர்த்து, என் உயிர் ஆகி நின்றானை,
முற்றா மா மதி கோள் விடுத்தானை, எம்மானை
எத்தால் யான் மறக்கேன்? இது சொல், என் ஏழை நெஞ்சே! 1734

கற்றார் பற்று அறுக்கும் பிறவிப் பெருங் கடலே
பற்றா வந்து அடியேன் பிறந்தேன்; பிறந்த பின்னை,
வற்றா நீர் வயல் சூழ் வயல் ஆலி அம்மானைப்
பெற்றேன்; பெற்றதுவும் பிறவாமை பெற்றேனே. 1735

கண் ஆர் கண்ணபுரம் கடிகை, கடி கமழும்
தண் ஆர் தாமரை சூழ் தலைச்சங்க மேல்திசையுள்
விண்ணோர் நாண்மதியை; விரிகின்ற வெம் சுடரை
கண் ஆரக் கண்டுகொண்டு களிக்கின்றது இங்கு என்றுகொலோ? 1736

செரு நீர வேல் வலவன் கலிகன்றி மங்கையர் கோன்
கரு நீர் முகில் வண்ணன் கண்ணபுரத்தானை
இரு நீர் இன் தமிழ் இன் இசை மாலைகள் கொண்டு, தொண்டீர்!
வரும் நீர் வையம் உய்ய, இவை பாடி ஆடுமினே. 1737

### திருக்கண்ணபுரம் – 10

வண்டு ஆர் பூ மா மலர் மங்கை மண நோக்கம்
உண்டானே! உன்னை உகந்து உகந்தது உன் தனக்கே
தொண்டு ஆனேற்கு என் செய்கின்றாய் ? சொல்லு - நால்வேதம்
கண்டானே! கண்ணபுரத்து உறை அம்மானே! 1738

பெரு நீரும், விண்ணும், மலையும் உலகு ஏழும்
ஒரு தாரா நின்னுள் ஒடுக்கிய நின்னை அல்லால்,
வரு தேவர் மற்று உளர் என்று என் மனத்து இறையும்
கருதேன். நான்- கண்ணபுரத்து உறை அம்மானே! 1739





பெற்றோர்கள் அடியேனைப் பெற்ற பின்னர் விட்டு அகன்றனர். பிறகு அடியேனுக்கு எல்லாவித உறவாகி, உயிருக்குள் புகுந்தவன் எம் பெருமான் அன்றோ! இளந் சந்திரனின் நோயைப் போக்கிய, சுவாமியை நான் எவ்வாறு மறப்பேன்? அறியாமை உள்ள மனமே! நீ இதுபற்றிக் கூறு. 1734

அடியேன், ஞானிகள் கூட்டில்லாத, வாழ்க்கைக் கடலில், ஒரு காரணம் கொண்டு பிறந்தேன். பிறந்த பின்பு, வற்றாத நீர் வளம் உடைய வயல்கள் சூழ்ந்த திருவாலியில் உள்ள அம்மானைப் பெற்றேன். அப்பேற்றால், இனிப் பிறவாத தன்மையை அடைந்தேன். 1735

கண் கவரும் திருக்கண்ணபுரத்திலும் திருக் கடிகையிலும் மணம் வீசும் தாமரைகள் சூழ்ந்த தலைச்சங்காட்டில் மேல் திசையிலும், எழுந்தருளி உள்ள பெருமான் நித்திய சூரிகளுக்குச் சந்திரன் போல் இனியவன். ஒளிச் சுடராக உள்ள அவனைக் கண்களார வணங்கிக் களிப்பது எக்காலமோ? 1736

கருமேக நிறத்தான் திருக்கண்ணபுரப் பெருமானை, வேல் ஏந்திய வெற்றிக் கலியன் ஆன திருமங்கை மன்னர், இப் பாசுரங்களில் பாடினார். தொண்டர்களே! கடல் சூழ்ந்த உலகம் உய்வடைய, இத்தமிழிசைப் பாசுரங்களைப் பாடி ஆடுங்கள். 1737

### திருக்கண்ணபுரம் – 10

வண்டு அமரும் தாமரையில் வாழும் திருமகளின் மங்கலப் பார்வையையே, தன் பேறாக உடையவனே! நான்கு வேதங்களை வெளியிட்டவனே! திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளிய அம்மானே! உம்மை விரும்பி உமக்கே அடிமை செய்ய விழையும் அடியேனிடத்தில் நீர் என்ன செய்ய எண்ணி உள்ளீர்? 1738

திருக்கண்ணபுரத்தில் உள்ள அம்மானே! கடல்கள், வானம், மலைகள், ஏழு உலகங்கள் யாவற்றையும் ஒரு சேர அடக்கிக் கொண்டுள்ள உன்னை விட்டு, வேறு தெய்வங்கள் உள்ளனர் என்பதை நான் என் மனத்தில் மிகச் சிறிதும் நினைந்து அறியேன். 1739

மற்றும் ஓர் தெய்வம் உளது என்று இருப்பாரோடு
உற்றிலேன்;உற்றதும் உன் அடியார்க்கு அடிமை,
மற்று எல்லாம் பேசிலும், நின் திரு எட்டு எழுத்தும்
கற்று நான்- கண்ணபுரத்து உறை அம்மனே! 1740

பெண் ஆனாள் பேர் இளங் கொங்கையின் ஆர் அழல்போல்
உண்ணா நஞ்சு உண்டு உகந்தாயை உகந்தேன் நான்
மண் ஆளா! வாள் நெடுங் கண்ணி மது மலராள்
கண்ணாளா! கண்ணபுரத்து உறை அம்மானே! 1741

பெற்றாரும் சுற்றமும் என்று இவை பேணேன் நான்;
மற்று ஆரும் பற்று இலேன்; ஆதலால் நின் அடைந்தேன்;
உற்றான் என்று உள்ளத்து வைத்து, அருள்செய் கண்டாய்
கற்றார் சேர் கண்ணபுரத்து உறை அம்மானே! 1742

ஏத்தி உன் சேவடி எண்ணி இருப்பாரைப்
பார்த்திருந்து அங்கு நமன் தமர் பற்றாது
சோத்தம் நாம் அஞ்சுதும் என்று தொடாமை, நீ
காத்திபோல் -கண்ணபுரத்து உறை அம்மானே! 1743

வெள்ளை நீர் வெள்ளத்து அணைந்த அரவு அணை மேல்
துள்ளு நீர் மெள்ளத் துயின்ற பெருமானே!
வள்ளலே! உன் தமர்க்கு என்றும் நமன் தமர்
கள்ளர்போல் - கண்ணபுரத்து உறை அம்மானே! 1744

மாண் ஆகி வையம் அளந்ததுவும் வாள் அவுணன்
பூண் ஆகம் கீண்டதுவும் ஈண்டு நினைந்து இருந்தேன்;
பேணாத வல்வினையேன் இடர் எத்தனையும்
காணேன் நான் - கண்ணபுரத்து உறை அம்மானே! 1745

நாட்டினாய் என்னை, உனக்கு முன் தொண்டு ஆக;
மாட்டினேன் அத்தனையே கொண்டு என் வல்வினையை
பாட்டினால் உன்னை என் நெஞ்சத்து இருந்தமை
காட்டினாய் - கண்ணபுரத்து உறை அம்மானே! 1746





திருக்கண்ணபுரத்துறை அம்மானே! உம்மை விட வேறான தெய்வம் ஒன்றுண்டு என்று கூறுபவருடன் அடியேன் தொடர்பு கொள்ளேன். உம்முடைய திரு எட்டெழுத்தைக் கற்றேன். அது மற்றுமுள்ள பல பொருள்களை வெளியிட்டாலும் நான் முடிவாக அறிந்து கொண்டது உம் அடியார்களான பாகவதர்களுக்கு அடிமையாக இருப்பேன் என்பதே ஆகும். 1740

பூமாதேவிக்கும் ஒளிவிடும் நீண்ட கண்களுடைய திருமகளுக்கும் நாயகனே! திருக்கண்ணபுரத்தில் உள்ளவனே! பெண் வடிவில் வந்த பூதனைப் பேயின் முலையில் இருந்த நெருப்பான நஞ்சை உண்டு உகந்தவனே. உன்னை நான் உகந்தேன். 1741

சாத்திரங்களில் வல்லவர் வாழும் திருக்கண்ணபுரத்தில் உள்ளவனே! பெற்றோர் உறவினர் என்னும் தொடர்புடையவர்களை அடியேன் விரும்பவில்லை. வேறு யாரிடத்திலும் சேர்வதும் இல்லை. ஆதலால் உம்மையே அடைக்கலமாக அடைந்தேன். 'இவன் நம் உறவு' என்று நீர் அருள வேண்டும். 1742

திருக்கண்ணபுரத்துறை அம்மானே! உம் திருவடிகளை வணங்கித் தொண்டு புரிய எண்ணுபவரின் இறுதிக் காலத்தில் யமதூதர்கள் அணுகாமல், "நாங்கள் தாழ்ந்தவர்கள்; அஞ்சுகிறோம்'' என்று கூறித் தொடாதபடி இருக்க, நீரே காவலராய் இருக்கிறீர். 1743

பாற்கடலில் திவலைகள் துள்ளிப்படவும், திருவனந்தாழ்வான் மேல் கண் வளரும் பெருமானே! வள்ளலே! திருக்கண்ண புரத்தில் உள்ளவனே! உன் அடியார்களிடத்தே யமபடர்கள் திருடர்களைப் போல் அஞ்சி ஒதுங்குவார்கள். 1744

திருக்கண்ணபுரத்தில் உள்ளவரே! நீர் பிரமசாரியாய் உலகங்களை அளந்ததையும் இரணியனுடைய மார்பைக் கிழித்ததையும் இப்போது நான் எண்ணுகிறேன். அதனால், ஆத்மாவைப் பேணாமல் பாவங்கள் செய்த அடியேன் இப்போது எல்லாப் பாவங்களும் தீர்ந்து போனதைக் காண்கிறேன். 1745

திருக்கண்ணபுரத்து அம்மானே! முதல் முன்னையே, என்னை உமக்கு அடியவன் ஆகநிலைப்படுத்தினீர். அந்த அருளால் என் கொடிய வினைகள் போகப் பெற்றேன். அடியேனைப் பாசுரங்கள் பாடச் செயது, தேவரீர் அடியேன் மனத்தில் இருப்பதை அறிவித்து விட்டீர். 1746

கண்ட சீர்க் கண்ணபுரத்து உறை அம்மானை,
கொண்ட சீர்த் தொண்டன் கலியன் ஒலி மாலை
பண்டமாய்ப் பாடும் அடியவர்க்கு எஞ்ஞான்றும்
அண்டம் போய் ஆட்சி அவர்க்கு; அது அறிந்தோமே. 1747

## திருக்கண்ணங்குடி

வங்க மா முந்நீர், வரி நிறப் பெரிய
வாள் அரவின் அணை மேவி,
சங்கம் ஆர் அம் கைத் தட மலர் உந்தி,
சாம மா மேனி என் தலைவன்
அங்கம் ஆறு ஐந்து வேள்வி, நால் வேதம்,
அருங் கலை பயின்று எரி மூன்றும்
செங் கையால் வளர்க்கும் துளக்கம் இல் மனத்தோர்
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 1748

கவள மா கதத்த கரி உய்யப் பொய்கைக்
கராம் கொளக் கலங்கி உள் நினைந்து
துவள, மேல் வந்து தோன்றி, வன் முதலை
துணிபடச் சுடு படை துரந்தோன்
குவளை நீள் முளரி, குமுதம் ஒண் கழுநீர்
கொய்ம் மலர் நெய்தல் ஒண் கழனி
திவளும் மாளிகை சூழ் செழு மணிப் புரிசைத்
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 1749

வாதை வந்து அடர, வானமும் நிலனும்
மலைகளும் அலை கடல் குளிப்ப,
மீது கொண்டு உகளும் மீன் உரு ஆகி,
விரி புனல் வரி அகட்டு ஒளித்தோன்
போது அலர் புன்னை மல்லிகை மௌவல்
புது விரை மது மலர் அணைந்து
சீத ஒண் தென்றல் திசைதொறும் கமழும்
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 1750

வென்றி சேர் திண்மை, விலங்கல் மா மேனி,
வெள் எயிற்று ஒள் எரித் தறு கண்
பன்றி ஆய், அன்று பார் மகள் பயலை
தீர்த்தவன்; பஞ்சவர் பாகன்
ஒன்று அலா உருவத்து உலப்பு இல் பல் காலத்து,
உயர் கொடி ஒளி வளர் மதியம்
சென்று சேர் சென்னிச் சிகர நன் மாடத்
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 1751





கண்ணாரக் காணப்பெறும் சீர்மை உடைய திருக்கண்ணபுரப் பெருமானைத் தொண்டரான கலியன் ஒலிநயத்துடன் பாடினார். இவற்றைச் செல்வமாக் கொண்டு பாடும் அடியவர்களுக்கு, எக்காலத்திலும் பரமபதம் ஆளும்பேறு உண்டாகும் என்று அறிந்தோம். 1747

## திருக்கண்ணங்குடி

மரக்கலன்கள் ஓடும் கடலில், வரிகளுடைய ஒளி மிகுந்த ஆதிசேஷன் மேல் கண்வளரும் என் சுவாமி, கையில் சங்கேந்தியவனாய்க் கொப்பூழத் தாமரையுடன் விளங்குகிறான். இப்பெருமான் திருக்கண்ணங்குடியில் எழுந்தருளி உள்ளான். நான்கு வேதங்கள் ஆறு அங்கங்கள் இதிகாசங்கள் ஆகியவற்றில் தேர்ந்த அந்தணர்கள் இவ்வூரில் மூவகைத் தீயால் வேள்விகள் செய்வர். பிரபன்னர்களான இவர்கள் நல்ல மனத்துடன் வாழ்கிறார்கள். 1748

கவள உணவைப் பெறும் மதநீருடைய யானை, பொய்கையில் முதலை வாய்ப்பட்டுக் கலங்கித் துவண்டு, பக்தியுடன் தியானித்த பொழுது, திருமால் அங்கே தோன்றிச் சக்கரப்படையை ஏவி, முதலையைத் துண்டாக்கினான். இப்பெருமான் எழுந்தருளிய திருக்கண்ணங்குடியில், குவளை, தாமரை, ஆம்பல், செங்கழுநீர், நெய்தல் முதலிய பூக்கள் மலர்ந்த வயல்கள் உள்ளன. மணிமயமான மதிள்கள் சூழ்ந்த இவ்வூரில் ஒளிவீசும் மாளிகைகள் உள்ளன. 1749

பிரளய காலத்தில் வானமும் பூமியும் மலைகளும் அலை கடலில் முழுகவும் எம் பெருமான் மீன்வடிவெடுத்து நீருடன் அவற்றைத் தன் அடிவயிற்றில் அடக்கிக் காத்தான். இப்பெருமான் எழுந்தருளிய திருக்கண்ணங்குடியில் புன்னை, மல்லிகை, முல்லை, முதலிய பூக்கள் மலரும். தென்றல் காற்று இப் பூக்களின் மீது பட்டுத் திசைகள் எல்லாம் மணம் பரப்பும். 1750

மலை போன்ற வடிவத்துடன், வெண்மையான தந்தங்களையும் தீ உமிழும் கண்களையும் பெற்ற வலிய வராஹ மூர்த்தியாய், எம் பெருமான் பிரளயத்தில் பூமிப் பிராட்டியைக் காத்து, அவள் பசலையைப் போக்கினான். பஞ்சபாண்டவர்க்குத் தேரோட்டியான இந்த பகவான், திருக்கண்ணங்குடியில் எழுந்தருளினான். இங்குள்ள மாடங்கள் சந்திரனைத் தொடும் அளவு உயர்ந்துள்ளன. பலவகை வடிவில், நிலைக்கும் கொடிகள் இம் மாடங்களில் உள்ளன. 1751

மன்னவன் பெரிய வேள்வியில் குறள் ஆய்,
மூவடி நீரொடும் கொண்டு,
பின்னும் ஏழ் உலகும் ஈர் அடி ஆக,
பெருந் திசை அடங்கிட நிமிர்ந்தோன்
அன்னம், மென் கமலத்து அணி மலர்ப் பீடத்து
அலை புனல் இலைக் குடை நீழல்,
செந்நெல் ஒண் கவரி அசைய, வீற்றிருக்கும்
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 1752

மழுவினால் அவனி அரசை மூவெழுகால்
மணி முடி பொடிபடுத்து உதிரக்
குழுவு வார் புனலுள் குளித்து வெம் கோபம்
தவிர்ந்தவன்-குலை மலி கதலிக்
குழுவும் வார் கழுகும் குரவும் நற் பலவும்
குளிர் தரு சூதம், மாதவியும்
செழுமை ஆர் பொழில்கள் தழுவும் நன் மாடத்
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 1753

வான் உளார் அவரை வலிமையால் நலியும்
மறி கடல் இலங்கையார் கோனை,
பானு நேர் சரத்தால் பனங்கனிபோலப்
பரு முடி உதிர வில் வளைத்தோன்
கான் உலா மயிலின் கணங்கள் நின்று ஆடக்
கண முகில் முரசம் நின்று அதிர,
தேன் உலாம் வரி வண்டு இன் இசை முரலும்
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 1754

அரவ நீள் கொடியோன் அவையுள் ஆசனத்தை
அஞ்சிடாதே இட அதற்கு,
பெரிய மாமேனி அண்டம் ஊடுருவ,
பெருந் திசை அடங்கிட நிமிர்ந்தோன்
வரையின் மா மணியும் மரகதத் திரளும்
வயிரமும், வெதிர் உதிர் முத்தும்
திரை கொணர்ந்து உந்தி வயல்தொறும் குவிக்கும்
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 1755

பன்னிய பாரம் பார் மகட்கு ஒழியப்
பாரத மா பெரும் போரில்
மன்னர்கள் மடிய, மணி நெடுந் திண் தேர்
மைத்துனற்கு உய்த்த மா மாயன்
துன்னு மாதவியும் சுரபுனைப் பொழிலும்
சூழ்ந்து எழு செண்பக மலர்வாய்,
தென்ன என்று அளிகள் முரன்று இசைபாடும்
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 1756





மாவலி மன்னன் வேள்விச் சாலை சென்ற வாமன மூர்த்தி, நீர் ஏற்று, மூன்றடி மண் கொண்டு ஏழுலகங்களையும் இரண்டடியில் அளந்து, திசைகள் தனக்குள் அடங்கும்படி திரிவிக்கிரமனாக வளர்ந்தான். இப்பெருமானின், திருக்கண்ணங்குடியில், தாமரையில் அன்னம் அமரும்; நீரில் படர்ந்த இலைகள் குடை போல் நிழல் தரும்; செந்நெற்கதிர்கள் சாமரை வீசும். 1752

இருபத்தொரு தலைமுறைகள் அரசர்களின் மணிமுடி களைத் தன் மழுவால் பொடியாக்கி, இரத்த வெள்ளத்தில் குளித்துச் சினத்தைப் போக்கிக் கொண்ட பரசுராமர் திருக்கண்ணங் குடியில் எழுந்தருளி உள்ளார். குலைகள் செறிந்த வாழைத் தோட்டங்களும், பாக்கு, குரவம், பலா, மா, குருகத்தி, முதலிய மரங்கள் வளர்ந்த சோலைகளால் இத்தலம் சூழப்பட்டது. 1753

கடல் சூழ்ந்த இலங்கை மன்னன் இராவணன் இந்திரன் முதலிய தேவர்களைத் தன் வலிமையால் துன்புறுத்தினான். அவன் முடிகள் பத்தும் பனம்பழங்கள் போல் அறுந்து விழும்படி வில்லை வளைத்து அம்பெய்த இராமபிரான் திருக்கண்ணங் குடியில் எழுந்தருளி உள்ளான். இங்கே கான மயில்கள் ஆடும்; மேகங்கள் முரசு போல் ஒலிக்கும்; தேன் பருகும் வண்டுகள் இசைபாடும். 1754

பாம்புக் கொடியோன் துரியோதனன், பொய் ஆசனத்தை, அவையில் இட்ட பொழுது, கண்ணன், அஞ்சாமல், திசைகள் அடங்கும்படி அண்டங்களை ஊடுருவி, விசுவரூபம் எடுத்தான். இப்பெருமானின் திருக்கண்ணங்குடியில் மலைமணிகளும், மரகதமும், வயிரங்களும், மூங்கில் முத்துக்களும், ஆற்று நீருடன் ஓடி வந்து, வயல்களில் குவிந்திடும். 1755

பூமா தேவியின் பாரம் போகும்படி, பாரதப் போரில், மன்னர்கள் மடிய அர்ச்சுனனுக்காகத் தேர் ஓட்டிய மாயன் கண்ணன், திருக்கண்ணங்குடியில் எழுந்தருளி உள்ளான். மாதவி, சுரபுன்னை மரங்கள் வளர்ந்த சோலைகள் சூழ்ந்த இத் தலத்தில் செண்பகப் பூக்களில் வண்டுகள் இசைபாடும். 1756

கலைஉலா அல்குல் காரிகைதிறத்துக்
கடல்பெரும் படையொடும் சென்று
சிலையினால் இலங்கை தீ எழச் செற்ற
திருக்கண்ணங்குடியுள் நின்றானை
மலைகுலா மாட மங்கையர் தலைவன்
மானவேல் கலியன் வாய் ஒலிகள்
உலவுசொல் மாலை ஒன்பதோடு ஒன்றும்
வல்லவர்க்கு இல்லை நல்குரவே. 1757

## திருநாகை – அச்சோப்பதிகம்

### தலைவனது உருவெளிப்பாட்டில் நலியும் தலைவி தோழியிடம் கூறுதல்

பொன் இவர் மேனி; மரகதத்தின்
பொங்கு இளஞ் சோதி அகலத்து ஆரம்
மின்; இவர் வாயில் நல் வேதம் ஓதும்
வேதியர்; வானவர் ஆவர்; தோழீ!
என்னையும் நோக்கி, என் அல்குல் நோக்கி,
ஏந்து இளங் கொங்கையும் நோக்குகின்றார்;
அன்னை என் நோக்கும் என்று அஞ்சுகின்றேன் -
அச்சோ, ஒருவர் அழகியவா! 1758

தோடுஅவிழ் நீலம் மணம் கொடுக்கும்
சூழ் புனல் சூழ் குடந்தைக் கிடந்த
சேடர்கொல் என்று தெரிக்கமாட்டேன்;
செஞ் சுடர் ஆழியும் சங்கும் ஏந்தி,
பாடகமெல் அடியார் வணங்க,
பல் மணி முத்தொடு இலங்கு சோதி
ஆடகம் பூண்டு ஒரு நான்கு தோளும் -
அச்சோ ஒருவர் அழகியவா! 1759

வேய்இருஞ் சோலை விலங்கல் சூழ்ந்த
மெய்ய மணாளர் இவ் வையம் எல்லாம்
தாயின நாயகர் ஆவர், தோழீ!
தாமரைக் கண்கள் இருந்த ஆறு
சேய்இருங் குன்றம் திகழ்ந்தது ஒப்பச்
செவ்விய ஆகி மலர்ந்த சோதி
ஆயிரம் தோளொடு இலங்கு பூணும் -
அச்சோ, ஒருவர் அழகியவா! 1760





ஆடை அழகு பொலியும் இடையுடைய சீதைக்காகப் படையுடன் சென்று இலங்கையில் நெருப்பைக் கிளரி, அரக்கரை அழித்த இராமன், திருக்கண்ணங்குடியில் எழுந்தருளினான். மலை போன்ற மாடங்கள் உள்ள திருமங்கை நகர்க்கு மன்னரான கலியன், இப்பெருமானைப் பற்றிப் பாடிய பாசுரங்களைப் பயில்பவருக்கு இறைவனைப் பற்றாத ஏழ்மை இல்லை. 1757

## திருநாகை

### தலைவனது உருவெளிப்பாட்டில் நலியும் தலைவி தோழியிடம் கூறுதல்

இப் பெருமானின் திருமேனி பொன் போல் உள்ளது; மரகதம் போல் ஒளி வீசும் மார்பு ஆரம் மின்னலைப் போல் உள்ளது. தோழீ! வாயால் ஸாம வேதம் பாடும் அந்தணரா இவர்? அன்றித் தேவரா? என்னைப் பார்த்து என் இடையையும் மார்பகங்களையும் நோக்கும் இவரைப் பற்றி என் தாய் என்ன விதம் பார்ப்பாளோ? அதற்காக நான் அஞ்சுகிறேன். இவருடைய ஒப்பற்ற அழகு இருந்தபடி தான் என்னே! ஆச்சரியம்! 1758

இதழ்கள் விரிந்து மணம் வீசும் நீலமலர்கள் உள்ள நீர் நிலைகள் சூழ்ந்த, திருக்குடந்தையில் கண் வளரும் இளைஞரோ இவர்? ஆயின் செஞ் சுடர்ச் சக்கரமும் சங்கும் ஏந்தியவர் அன்றோ இவர்? பாடங்கள் அணிந்த பாதங்களுடைய பெண்கள் வணங்கும் இவர் முத்துக்களையும் மணிகளையும் உடைய ஆபரணங்கள் அணிந்துள்ளார். நான்கு தோள்களுடைய ஒப்பற்ற இவர் அழகு இருந்தபடிதான் என்னே! ஆச்சரியம்!’ 1759

தோழீ! மூங்கில் சோலைகள் உள்ள மலைகளால் சூழப்பட்ட திருமெய்யத்தில் எழுந்தருளியவர், இவ்வுலகு முழுவதையும் அளந்து கொண்டவர் அன்றோ! அவருடைய தாமரைக் கண்களின் அழகுதான் என்னே! உயர்ந்து, பரந்த குன்றுகள் போல் விளங்கும் புகழுடைய ஆயிரம் தோள்களுடன், தோள்வளையையும் அணிந்து நிற்கும் இவர் அழகுதான் என்னே! ஆச்சரியம்! 1760

வம்புஅவிழும் துழாய் மாலை தோள்மேல்;
கையன ஆழியும் சங்கும் ஏந்தி;
நம்பர்நம் இல்லம் புகுந்து நின்றார்;
நாகரிகர்; பெரிதும் இளையர்;
செம்பவளம் இவர் வாயின் வண்ணம்;
தேவர் இவரது உருவம் சொல்லில்,
அம்பவளத் திரளேயும் ஒப்பர் -
அச்சோ, ஒருவர் அழகியவா! 1761

கோழியும் கூடலும் கோயில் கொண்ட
கோவலரே ஒப்பர்; குன்றம் அன்ன
பாழிஅம் தோளும் ஓர் நான்கு உடையர்;
பண்டு இவர் தம்மையும் கண்டறியோம்;
வாழியரோ இவர் வண்ணம் எண்ணில்
மா கடல் போன்று உளர்; கையில் வெய்ய
ஆழி ஒன்று ஏந்தி ஓர் சங்கு பற்றி -
அச்சோ, ஒருவர் அழகியவா! 1762

வெஞ்சின வேழ மருப்பு ஒசித்த
வேந்தர்கொல்? ஏந்திழையார் மனத்தைத்
தஞ்சு உடையாளர்கொல் ? யான் அறியேன்;
தாமரைக் கண்கள் இருந்த ஆறு
கஞ்சனை அஞ்ச முன் கால் விசைத்த
காளையர் ஆவர்; கண்டார் வணங்கும்
அஞ்சன மா மலையேயும் ஒப்பர்
அச்சோ,ஒருவர் அழகியவா! 1763

பிணிஅவிழ் தாமரை மொட்டு அலர்த்தும்
பேர் அருளாளர்கொல் ? யான் அறியேன் ;
பணியும் என் நெஞ்சம்; இது என்கொல் ? தோழீ!
பண்டு இவர்-தம்மையும் கண்டறியோம்;
அணிகெழுதா மரை அன்ன கண்ணும்;
அம் கையும் பங்கயம் ; மேனி வானத்து
அணிகெழு மாமுகிலேயும் ஒப்பர்-
அச்சோ,ஒருவர் அழகியவா! 1764

மஞ்சுஉயர் மா மதி தீண்ட நீண்ட
மாலிருஞ்சோலை மணாளர் வந்து என்
நெஞ்சுள்ளும் கண்ணுள்ளும் என்று, நீங்கார்;
நீர்மலையார்கொல் ? நினைக்கமாட்டேன்;
மஞ்சு உயர் பொன் மலைமேலெழுந்த
மாமுகில் போன்று உளர்; வந்து காணீர்!
அம்சிறைப் புள்ளும் ஒன்று ஏறி வந்தார் -
அச்சோ, ஒருவர் அழகியவா! 1765





*மணம் வீசும் திருத்துழாய் மாலையை இவர் தம் தோள்களில் சூடி உள்ளார்; கைகளில் சங்கு சக்கரம் ஏந்திய இவர் நம்மிடம் மிகுந்த காதல் கொண்டவர். தாமே நமது இல்லம் தேடிவந்தார். நல்ல ரஸிகராக உள்ள இந்த இளைஞரின் உதடு பவளம் போன்றது. யாவர்க்கும் தலைவரான இவர் திருமேனி இயல்பு பவளத்துக்கு ஒப்பாகும். இவர் அழகுதான் என்னே! ஆசசரியம்!* **1761**

*உறையூரையும் மதுரையையும் வாழிடமாக உடையவர் இக் கோவலர்; குன்றம் போன்ற வலிமை உடைய அழகிய நான்கு தோள்கள் உடையவர். இதற்கு முன்பு இவரை நாம் பார்த்தறியோம். வாழ்க இவர் பல்லாண்டு! இவர் வடிவத்தின் பெருமை கடல் போல் பரந்தது. ஒரு கையில் சக்கரமும் மறு கையில் சங்கும் ஏந்திய இவர் அழகுதான் என்னே! ஆச்சரியம்!* **1762**

*சினம் கொண்ட கொடிய குவலயாபீட யானையின் வெண்மையான கொம்பை ஒடித்த மன்னர் இவர் தாமோ! பெண்களின் நெஞ்சைத் தஞ்சமாக உடையவரோ? அறியேன். இவருடைய தாமரைக் கண்களின் அழகுதான் என்னே! கம்சன் அஞ்ச, உதைத்த திருவடிகளைப் பெற்ற இக் காளை கண்டவர் வணங்கும் நீல மலை போல் உள்ளார். இவர் அழகுதான் என்னே! ஆச்சரியம்!* **1763**

*தாமரை மலரச் செய்யும் சூரியனைப் போன்ற பேர் அருளாளர் இவர் தாமோ? நான் அறியேன். தோழீ! என் நெஞ்சம் இவரையே வணங்குகிறது. இதென்ன விந்தை! இதற்கு முன் இவரை நான் கண்டதில்லை. கண்களும் கைகளும் தாமரை போல அழகாக உள்ளன. திருமேனியோ வானத்து நீலமேகம் போன்றது. இவர் அழகுதான் என்னே! ஆச்சரியம்!* **1764**

*மேக மண்டலத்துச் சந்திரனைத் தொடும் அளவு உயர்ந்துள்ள திருமாலிருஞ்சோலை மலையில் உள்ள மணாளர் தாமே வந்து என் நெஞ்சிலும் கண்ணிலும் நீங்காமல் நிற்கிறார். திருநீர் மலையை வாழிடமாகக் கொண்ட இவரை என்னால் உள்ளபடி அறிய முடியவில்லை. அழகிய சிறகுடைய கருடன் மீது ஏறிவந்த இவர் பொன் மலையில் தவழும் மேகம் போல் உள்ளார். தோழியரே! நீங்களும் வந்து காணுங்கள். இவர் அழகுதான் என்னே! ஆச்சரியம்!* **1765**

எண்திசையும் எறி நீர்க் கடலும்
ஏழ் உலகும் உடனே விழுங்கி,
மண்டி ஓர் ஆல்இலைப் பள்ளி கொள்ளும்
மாயர்கொல்? மாயம் அறிய மாட்டேன்;
கொண்டல் நல் மால்வரையேயும் ஒப்பர்;
கொங்கு அலர் தாமரை, கண்ணும் வாயும்;
அண்டத்து அமரர் பணிய நின்றார் -
அச்சோ, ஒருவர் அழகியவா! 1766

அன்னமும் கேழலும் மீனும் ஆய
ஆதியை நாகை அழகியாரை,
கன்னிநன் மா மதிள் மங்கை வேந்தன்,
காமரு சீர்க் கலிகன்றி குன்றா
இன்இசையால் சொன்ன செஞ்சொல் மாலை
ஏழும் இரண்டும் ஒரு ஒன்றும் வல்லார்
மன்னவர் ஆய் உலகு ஆண்டு மீண்டும்
வானவர் ஆய், மகிழ்வு எய்துவரே. 1767

## திருப்புல்லாணி – 1

### ஆற்றாமை மிகுந்த தலைவி, தலைவனிடம் செல்ல, நெஞ்சையும் தோழியையும் துணை வேண்டல்

தன்னை நைவிக்கிலேன்; வல்வினையேன்; தொழுதும் எழு -
பொன்னை நைவிக்கும் அப் பூஞ் செருந்தி மண நீழல்வாய்
என்னை நைவித்து எழில் கொண்டு அகன்ற பெருமான் இடம்
புன்னை முத்தம் பொழில் சூழ்ந்து அழகு ஆய புல்லாணியே. 1768

உருகி,நெஞ்சே! நினைந்து, இங்கு இருந்து என்? தொழுதும் எழு -
முருகு வண்டு உண் மலர்க் கைதையின் நீழலில், முன் ஒருநாள்,
பெருகு காதன்மை என் உள்ளம் எய்தப் பிரிந்தான் இடம்.
பொருது முந்நீர் கரைக்கே மணி உந்து புல்லாணியே. 1769

ஏது செய்தால் மறக்கேன்? மனமே! தொழுதும் எழு -
தாது மல்கு தடம் சூழ் பொழில் தாழ்வர் தொடர்ந்து பின்,
பேதை நின்னைப் பிரியேன் இனி என்று அகன்றான் இடம்.
போது நாளும் கமழும் பொழில் சூழ்ந்த புல்லாணியே. 1770





எண் திசைகள், நீர் மிகுந்த கடல்கள், ஏழுலகங்கள் ஆகியவற்றை ஒரே சமயத்தில் விழுங்கி ஆலந்தளிரில் பள்ளி கொண்ட ஆச்சரிய சக்தி உடையவர் இவரே! இவருடைய மாயையை நான் அறியேன். மேகத்தையும் மலையையும் ஒத்த இவர் திருக்கண்களும் உதடுகளும் தாமரை போல் உள்ளன. நித்திய சூரிகள் வணங்கும் இவர் அழகுதான் என்னே! 1766

அன்னம், வராஹம், மீன், வடிவங்கள் கொண்ட உலககாரணன் ஆன, திருநாகை அழகியாரை, மதிள் சூழ்ந்த திருமங்கை நகர்க்கு மன்னரான கலியன் இனிய இசையில் பாடினார். இப்பத்துப் பாசுரங்களைப் பயில வல்லவர் மன்னராய் உலகாண்டு, மீண்டு, நித்தியசூரிகள் ஆகி மகிழ்வார்கள். 1767

## திருப்புல்லாணி –1

### ஆற்றாமை மிகுந்த தலைவி, தலைவனிடம் செல்ல, நெஞ்சையும் தோழியையும் துணை வேண்டல்

பிரிவுத் துயரால் முடிய வேண்டிய நான் வாழும் படியான பாவங்களைச் செய்துள்ளேன். என்னை நான் அறிந்து கொள்ளவும் இல்லை. மனமே! பொன்னைத் தோற்கடிக்கும்படி பூத்த, செருந்தியின் மணம் வீசும் நிழலில் என்னைப் பிரிந்து, நைவித்து என் வண்ணத்தை எடுத்துச் சென்ற பெருமான் திருப்புல்லாணியில் உள்ளான். முத்துப் போல் பூக்கும் புன்னை மரச் சோலைகள் உள்ள அத் தலத்தை நீ தொழுது உய்வடைவாய். 1768

மனமே! நீ இங்கிருந்து வருந்துவதால் என் பயன்? தேன் உண்ணும் வண்டு அமரும் பூக்களுடைய தாழை நிழலில், முன்பொருநாள், என் நெஞ்சில் காதல் வளர்த்தவன், என்னைப் பிரிந்தான். மணிகள் கொழிக்கும் கடற்கரை உள்ள திருப்புல்லாணி சென்று அவனைத் தொழுது எழு. 1769

மனமே! நீ எதைச் செய்தால் அவரை மறக்க முடியும்? பூக்களின் மகரந்தம் மிதக்கும் குளங்களால் சூழப்பட்ட சோலைப் புறங்களில் என்னைத் தொடர்ந்து வந்து காதலித்தாரே! 'இனி உன்னைப் பிரியேன்' என்று கூறியவர் பிரிந்தார். மணம் வீசும் மலர்ச் சோலைகளால் சூழப்பட்ட திருப்புல்லாணி சென்று தொழுது உய்வடைவாய். 1770

கொங்கு உண் வண்டே கரியாக வந்தான். கொடியேற்கு முன்,
நங்கள் ஈசன் நமக்கே பணித்த மொழி செய்திலன்;
மங்கை நல்லாய்! தொழுதும் எழு-போய் அவன் மன்னும் ஊர்.
பொங்கு முந்நீர் கரைக்கே மணி உந்து புல்லாணியே. 1771

உணரில் உள்ளம் சுடுமால்; வினையேன்; தொழுதும் எழு -
துணரி நாழல் நறும்போது நம் சூழ் குழல் பெய்து பின்,
தணரில் ஆவி தளரும் என அன்பு தந்தான் இடம்
புணரி ஓதம் பணிலம் மணி உந்து புல்லாணியே. 1772

எள்கி. நெஞ்சே! நினைந்து இங்கு இருந்து என்? தொழுதும் எழு -
வள்ளல் மாயன், மணிவண்ணன், எம்மான் மருவும் இடம்,
கள் அவிழும் மலர்க் காவியும் தூ மடல் கைதையும்
புள்ளும் அள்ளல் பழனங்களும் சூழ்ந்த புல்லாணியே. 1773

பரவி, நெஞ்சே! தொழுதும் எழு -போய் அவன் பாலம் ஆய்
இரவும் நாளும் இனி கண் துயிலாது இருந்து என் பயன் ?
விரவி முத்தம் நெடு வெண் மணல் மேல் கொண்டு வெண் திரை
புரவி என்னப் பதம் செய்து வந்து உந்து புல்லாணியே. 1774

அலமும் ஆழிப் படையும் உடையார் நமக்கு அன்பர் ஆய்,
சலம் அது ஆகி தகவு ஒன்று இலர்; நாம் தொழுதும் எழு -
உலவு கால் நற் கழி ஓங்கு தண் பைம் பொழிலூடு இசை
புலவு கானல் களி வண்டு இனம் பாடு புல்லாணியே. 1775

ஓதி நாமம், குளித்து, உச்சி தன்னால் ஒளி மா மலர்ப்
பாதம் நாளும் பணிவோம். நமக்கே நலம் ஆதலின்;
ஆது தாரான் எனிலும் தரும்; அன்றியும் அன்பர் ஆய்ப்
போதும்; மாதே! தொழுதும் அவன் மன்னு புல்லாணியே. 1776

இலங்கு முத்தும், பவளக் கொழுந்தும் எழில் தாமரைப்
புலங்கள் முற்றும் பொழில் சூழ்ந்து அழகு ஆய புல்லாணிமேல்,
கலங்கல் இல்லாப் புகழான் கலியன் ஒலிமாலை
வலங்கொள் தொண்டர்க்கு இடம் ஆவது -பாடு இல் வைகுந்தமே. 1777





என் நாயகன் என்னுடன் கலந்து பழகியதற்குச் சாட்சியாக உள்ளது, தேன் உண்ணும் வண்டு ஒன்று தான். பாவியேனிடம் அவர், 'பிரிந்தால் தரியேன்' என்று கூறியபடி நடக்கவில்லை. கடல் அலை மணி கொழிக்கும் திருப்புல்லாணியில் அவர் உள்ளார். தோழீ! நாம் அங்குச் சென்று தொழுது உய்வடைவோம். 1771

அவரை நினைத்தவாறே பாவியேன் நெஞ்சு கொதிக்கிறது. முன்பு அவர், என் கூந்தலில் கோங்கும் பூக்களைச் சூடி 'உன்னைப் பிரிந்தால் என் உயிர் போகும்' என்று கூறிக் காதல் செய்தார். கடல் அலைகள் சங்குகளையும் முத்துக்களையும் கொழிக்கும் திருப்புல்லாணியில் அவர் உள்ளார். அங்குச் சென்று தொழுது உய்வு பெறுவோம். 1772

மனமே! அவரிடம் ஈடுபட்டு உருகுவதால் என்ன பயன்? வள்ளலான அம் மாயன் நீல மணிநிறம் உடைய என் சுவாமி ஆவார். தேன் நிறைந்த செங்கழுநீர்ப் பூக்களும் மடல் தாழைகளும், பறவைகளும் காணப்படும். மருதநிலம் சூழ்ந்த திருப்புல்லாணியில் அவர் உள்ளார். அங்குச் சென்று தொழுது உய்வடைவாய். 1773

நெஞ்சமே! உன்னைப் பிரிந்த அவரை எண்ணித் துதித்துப் பகலும் இரவும் உறக்கமில்லாமல் உழல்வதால் என்ன பயன்? வெண்மையான அலைகள் குதிரைகள் போல் தாவிப் பாய்ந்து முத்துக்களை மணல்மேல் தள்ளும் கடற்கரையில் உள்ள திருப்புல்லாணியே அவர் வாழிடம். நீ அங்குச் சென்று தொழுது எழு. 1774

கலப்பையையும் சக்கரத்தையும் படையாகக் கொண்ட என் காதலர், கபடமாக இரக்கமின்றிப் பிரிந்தார். அவர், தென்றல் வீசும் உப்பங்கழிகள் உள்ள, கடற்கரை ஊரான திருப்புல்லாணியில் உள்ளார். இங்குள்ள சோலைகளில் மது உண்ணும் வண்டினங்கள் இசைபாடும். இத் தலத்தைத் தொழுது உய்வு பெறுவோம். 1775

பெண்ணே! நாம் தினமும் நீராடிய பின் அவன் திருநாமம் ஓதி, அவனுடைய திருவடித் தாமரைகளைத் தொழுவோம். இதுவே நமக்கு உறுதிப் பொருள். அவர் நமக்கு நலத்தைத் தராவிட்டாலும் நம் ஸாதனம் பயன் தரும். நாம் அவருக்கே இசைந்த அன்பர் ஆகிவிட்டதால், அப்பெருமானின் திருப்புல்லாணியைத் தொழுவோம். 1776

முத்துக்களும் பவளக் கொழுந்துகளும் தாமரைப் பொய்கைகளும் சோலைகளும் உள்ள திருப்புலலாணி மேல் புகழ் மிக்க கலியன் இச் சந்தப்பாக்களைப் பாடினார். இவற்றைப் பயிலும் பக்தர்கள் வைகுந்த மாநகரில் நித்தியவாசம் செய்யப்பெறுவர். 1777

## திருப்புல்லாணி – ௨

### தலைவி பறவைகளைத் தூது விட்டும் பிறை, தென்றல் முதலியவற்றுடன் வருந்துதல்.

காஆர் மடல்பெண்ணை அன்றில் அரிகுரலும்
ஏவாயினூடு இயங்கும் எஃகின் கொடிதாலோ!
பூ ஆர் மணம் கமழும் புல்லாணி கைதொழுதேன்;
பாவாய்! இது நமக்கு ஓர் பான்மையே ஆகாதே? 1778

முன்னம் குறள் உரு ஆய், மூவடி மண் கொண்டு அளந்த
மன்னன் சரிதைக்கே மால் ஆகிப் பொன் பயந்தேன்;
பொன்னம் கழிக் கானல் புள் இனங்காள்; புல்லாணி,
அன்னம் ஆய் நூல் பயந்தாற்கு ஆங்கு இதனைச் செப்புமினே. 1779

வவ்வித் துழாய் அதன்மேல், சென்ற தனி நெஞ்சம்
செவ்வி அறியாது நிற்கும் கொல் ? நித்திலங்கள்
பவ்வத் திரை உலவு புல்லாணி கைதொழுதேன்;
தெய்வச் சிலையாற்கு என் சிந்தை நோய் செப்புமினே. 1780

பரிய இரணியனது ஆகம் அணி உகிரால்
அரி உரு ஆய்க் கீண்டான் அருள் தந்தவா நமக்கு !
பொரு திரைகள் போந்து உலவு புல்லாணி கைதொழுதேன்;
அரி மலர்க் கண் நீர் ததும்ப அம் துகிலும் நில்லாவே. 1781

வில்லால், இலங்கை மலங்கச் சரம் துரந்த
வல்லாளன் பின் போன நெஞ்சம் வரும் அளவும்
எல்லாரும் என் தன்னை ஏசிலும் பேசிடினும்
புல்லாணி எம் பெருமான் பொய் கேட்டு இருந்தேனே 1782

சுழன்று இலங்கு வெம் கதிரோன் தேரோடும் போய் மறைந்தான் ;
அழன்று கொடிது ஆகி, அம் சுடரில் தான் அடுமால்;
செழுந் தடம் பூஞ் சோலை சூழ் புல்லாணி கைதொழுதேன்;
இழந்திருந்தேன் என் தன் எழில் நிறமும் சங்குமே. 1783





## திருப்புல்லாணி –௨

### தலைவி பறவைகளைத் தூது விட்டும் பிறை, தென்றல் முதலியவற்றுடன் வருந்துதல்.

*பாவை போன்ற தோழியே! சோலைகளில் உள்ள மடல் விரிந்த பனை மரங்களில் வாழும் அன்றிலின் தழுதழுத்த குரல். மன்மதன் அம்பால் ஏற்பட்ட புண்ணில் வேல் நுழைந்தது போலக் கொடுமை யாய்க் கேட்கிறது. பூக்கள் மணம் கமழும் திருப்புல்லாணியைத் தொழுகிறேன். இத்துன்பம் நமக்கு இயல்பாயிற்றே.* **1778**

*பொன்னங்கழி என்னும் கடற்கரையில் வாழும் பறவைகளே! முன்பு, வாமனனாய் மூவடி மண் பெற்று உலகளந்த மன்னன் செயலுக்கு நான் மயங்கிப் பித்தாகி, என் பொன் நிறத்தை இழந்தேன். இதனை, ஹம்ஸாவதாரம் செய்து வேதங்களைக் கொடுத்த திருப்புல்லாணிப் பெருமானிடம் அறிவியுங்கள்.* **1779**

*எம் பெருமான் தோளில் உள்ள திருத்துழாய் மாலையைப் பற்றிப் போன என் மனம், என் அழகு அழியும் என்று அறியாமல் அங்கேயே நிற்குமோ?முத்துக்களை ஒதுக்கும் கடல் அலைகள் உலவும் திருப்புல்லாணியைக் கை தொழுதேன். என் சிந்தை நோயை அழகிய வில் ஏந்திய அப்பெருமானிடம் அறிவியுங்கள்.* **1780**

*பருத்த இரணியனுடைய மார்பைத் தம் அழகான நகங்களால் கிழித்த நரசிம்மப் பிரான் நமக்குச் செய்த அருளின்படி தான் என்னே! அலைகள் மோதும் திருப்புல்லாணியைக் கைதொழுதேன். வண்டு தங்கும் பூப் போன்ற கண்களில் நீர் ததும்ப. என் ஆடையும் அரையில் தங்காமல் விழுகிறது.* **1781**

*வில்லால் இலங்கையைக் கலங்கச் செய்து அம்புகளை ஏவின வல்லவன் ஆன இராமன் பின்னே என் நெஞ்சம் போயிற்று. அது திரும்பி வரும் வரை, எல்லோரும் என்னைப் பழித்துப் பலபடியாய்ப் பேசினாலும் நான், திருப்புல்லாணிப் பெருமானின் பொய்ச் சொற்களை நம்பிக் காத்திருக்கிறேன்.* **1782**

*மேருவைச் சுற்றி வரும் ஒளி உடைய சூரியன் தன் தேருடன் மறைந்தான். சந்திரனோ, தன் அழகிய கிரணங்களுடன் என் மீது வெப்பத்தை வீசித் துன்புறுத்துகிறான். ஐயோ! செழித்த பூஞ்சோலை களாலும் குளங்களாலும் சூழப்பட்ட திருப்புல்லாணியைக் கைதொழுதேன். பிரிவாய் நான், என் அழகிய நிறத்தையும் சங்கு வளையையும் இழந்தேன்.* **1783**

கனைஆர் இடி குரலின் கார் மணியின் நா ஆடல்
தினையேனும் நில்லாது; தீயில் கொடிதாலோ!
புனை ஆர் மணி மாடப் புல்லாணி கைதொழுதேன்:
வினையேன்மேல் வேலையும் வெம் தழலே வீசுமே. 1784

தூம்பு உடைக் கை வேழம் வெருவ, மருப்பு ஒசித்த
பாம்பின் அணையான் அருள் தந்தவா நமக்கு!
பூஞ் செருந்தி பொன் சொரியும் புல்லாணி கைதொழுதேன்;
தேம்பல் இளம் பிறையும் என் தனக்கு ஓர் வெம் தழலே. 1785

வேதமும், வேள்வியும் விண்ணும் இரு சுடரும்,
ஆதியும் ஆனான் அருள்தந்தவா நமக்கு!
போது அலரும் புன்னை சூழ் புல்லாணி கைதொழுதேன்;
ஓதமும் நானும் உறங்காது இருந்தேனே. 1786

பொன்அலரும் புன்னை சூழ் புல்லாணி அம்மானை
மின் இடையார் வேட்கை நோய் கூர இருந்ததனை,
கல்நவிலும் திண் தோள் கலியன் ஒலிவல்லார்
மன்னவர் ஆய் மண் ஆண்டு வான் நாடும் முன்னுவரே. 1787

## திருக்குறுங்குடி – 1

### தலைவனிடத்தே தன்னைக் கொண்டு விடும்படி, தலைவி, உற்றாரை வேண்டுதல்

தவள இளம் பிறை துள்ளும் முந்நீர்,
தண் மலர்த் தென்றலோடு அன்றில் ஒன்றி,
துவள, என் நெஞ்சகம் சோர ஈரும்;
சூழ் பனி நாள் துயிலாதிருப்பேன்;
இவளும் ஓர் பெண்கொடி என்று இரங்கார்;
என் நலம் ஐந்தும் முன் கொண்டு போன
குவளை மலர் நிற வண்ணர் மன்னு
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 1788





இடிபோல் கனைக்கும் குரலுடைய கருத்த காளையின், மணி நா ஓசை, தீயை விடவும் கொடியதாய், சிறிதும் நில்லாமல் என்னைச் சுடுகிறது. மணிமயமான மாடங்கள் உள்ள புல்லாணித் தலத்தைக் கை தொழுதேன். பாவியான என் மேல், கடல் அலைகள் கொடிய நெருப்பை அள்ளி வீசுகின்றன. 1784

துளைகளுடைய துதிக்கை உடைய குவலயாபீட யானை அஞ்ச, அதன் கொம்புகளைப் பிடுங்கிய,பாம்பணையான் நமக்குச் செய்த அருள் தான் என்னே! செருந்தி மரங்கள் பொன்போல பூக்களைச் சொரியும் திருப்புல்லாணியைக் கை தொழுதேன். தேமல் உடைய சந்திரனும் என் மீது வெப்பத்தை வீசுகிறானே! 1785

வேதங்கள், வேள்விகள், சுவர்க்கங்கள்,சூரியன், சந்திரன் ஆகிய யாவற்றையும் படைத்த எம் பெருமான் என்னிடத்தே அருள் செய்த படி தான் என்னே! புன்னை மரங்கள் பூத்திருக்கும் திருப்புல்லாணியைக் கை தொழுதேன். நானும் கடல் அலைகள் போலே கண் உறங்காமல் துன்புறுகிறேன். 1786

பொன் போல் பூக்கும் புன்னை மரங்கள் உள்ள திருப்புல்லாணியில் எழுந்தருளியவனிடம், பெண்களுக்கு ஏற்படும் காதல் வேட்கை மிகுதலைக் கலியன் இப் பாசுரங்களில் அருளினார். இவற்றைப் பயில்பவர் மன்னர்களாய்ப் பூவுலகில் ஆண்டு, பின் பரம பதத்தையும் ஆள்வார்கள். 1787

## திருக்குறுங்குடி – 1

### தலைவனிடத்தே தன்னைக் கொண்டு விடும்படி, தலைவி, உற்றாரை வேண்டுதல்

தூய இளம்பிறைச் சந்திரன், அலைகடல், பூக்களில்பட்டு வீசும் தென்றல், அன்றில் பறவை ஆகிய யாவும் சேர்ந்து என் நெஞ்சு துவண்டு வாடும்படி அறுக்கின்றன. பனிக்காலம்; நானோ தூங்க வில்லை. அவரோ 'இவளும் ஒரு பெண் தானே!' என்று அருள் செய்ய வில்லை. என் ஐம்புல நலன்களையும் முன்பே கொண்டு போய்விட்டார். குவளை நிறமுடைய அப்பெருமான் எழுந்தருளிய திருக்குறுங்குடிக்கு என்னைக் கொண்டு போய்ச் சேருங்கள். 1788

தாது அவிழ் மல்லிகை புல்லி வந்த,
தண் மதியின், இள வாடை, இன்னே,
ஊதை திரிதந்து உழறி உண்ண,
ஓர் இரவும் உறங்கேன்; உறங்கும்
பேதையர் பேதைமையால் இருந்து
பேசிலும் பேசுக; பெய்வளையார்
கோதை நறு மலர் மங்கை மார்வன்
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 1789

காலையும் மாலை ஒத்துண்டு, கங்குல்
நாழிகை ஊழியில் நீண்டு உலாவும்
போல்வது ஓர் தன்மை புகுந்து நிற்கும்;
பொங்கு அழலே ஒக்கும் வாடை சொல்லில்;
மாலவன் மா மணி வண்ணன் மாயம்
மற்றும் உள; அவை வந்திடாமுன்
கோல மயில் பயிலும் புறவின்
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 1790

கருமணி பூண்டு வெண் நாகு அணைந்து,
கார் இமில் ஏற்று அணார் தாழ்ந்து உலாவும்
ஒரு மணி ஓசை என் உள்ளம் தள்ள,
ஓர் இரவும் உறங்காதிருப்பேன்
பெரு மணி வானவர் உச்சி வைத்த
பேர் அருளாளன் பெருமை பேசி;
குரு மணி நீர் கொழிக்கும் புறவின்
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 1791

திண் திமில் ஏற்றின் மணியும் ஆயன்
தீம் குழல் ஓசையும் தென்றலோடு
கொண்டது ஓர் மாலையும் அந்தி ஈன்ற
கோல இளம்பிறையோடு கூடி
பண்டைய அல்ல இவை நமக்கு;
பாவியேன் ஆவியை வாட்டம் செய்யும்;
கொண்டல் மணி நிற வண்ணர் மன்னு
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 1792

எல்லியும் நன் பகலும் இருந்தே
ஏசிலும் ஏசுக; ஏந்திழையார்
நல்லர்; அவர் திறம் நாம் அறியோம்;
நாண் மடம் அச்சம் நமக்கு இங்கு இல்லை;
வல்லன சொல்லி மகிழ்வரேலும்,
மா மணி வண்ணரை நாம் மறவோம்;
கொல்லை வளர் இள முல்லை புல்கு
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின் 1793





வாடை யாகிற குளிர் காற்று மலரும் மல்லிகைப் பூக்களில் பட்டுச் சந்திரன் ஒளியுடன் கலந்து எங்கும் திரிந்து வந்து என்னைத் துன்புறுத்துகிறது. நானோ இரவில் தூங்காமல் கிடக்கிறேன். ஆனால் தூக்கமே இயல்பாக உடைய வளையல் அணிந்த பெண்கள் என்னைப் பழிக்கிறார்கள். மலர் சூடிய திருமகளை மார்பில் பெற்றவனின் திருக்குறுங்குடிக்கு என்னைக் கொண்டு செல்லுங்கள். 1789

காலையும் மாலையைப் போலவே துன்புறுத்துகிறது. இரவோ கல்ப காலமாய் நீள்கிறது. வாடைக் காற்று வடவைக் கனல் போல் வீசுகிறது. மணிவண்ணன் திருமாலின் மாயங்களோ இவை! இன்னும் கூட இவை போல் பல உண்டு. இத் துன்பங்களினின்று மீள, என்னை, மயில்கள் வாழும் புனங்கள் உள்ள திருக்குறுங்குடிக்கு இட்டுச் செல்லுங்கள். 1790

கருமணி அணிந்த வெள்ளைப் பசுக்களைத் தழுவும் காளைகளின் கழுத்தில் கட்டப்பட்ட மணி ஓசை கேட்டதும் என் நெஞ்சு தளர்கிறது. நித்திய சூரிகள் வணங்கும் மணி முடி உடைய பேரருளாளனின் பெருமையைப் பேசி இரவில் தூக்கமின்றி நொந்தேன். விலையுயர்ந்த மணிகளை இழுத்து வரும் நீர்வளப் புறங்கள் உள்ள திருக்குறுங்குடிக்கு என்னைக் கொண்டு செல்லுங்கள். 1791

காளையின் திண்மையான கழுத்தின் மணி ஓசையும் கண்ணனின் குழல் ஓசையும் தென்றலும் சேர்ந்து இம் மாலையில் வாட்டுகின்றன.. கோல இளம் பிறையும் கூடி, நலிகிறது. பாவியேன் உயிரோ துடிக்கிறது. முன்பு போல் அன்றி இவை இப்பொழுது மாறி விட்டன. மேகத்தையும் நீல மணியையும் ஒத்த எம்பெருமானின் திருக்குறுங்குடிக்கு என்னை இட்டுச் செல்லுங்கள். 1792

என்னை என் தோழியர் இரவும் பகலும் ஏசினால் ஏசட்டும். நல்லவரான அவர்கள் திறத்தை நான் அறியேன். எனக்கோ, வெட்கம், மடம், பயம் எதுவும் இல்லை. வாய் போனபடி பேசி, அவர்கள் சிரிக்கட்டும். அதற்காக நான் மணிவண்ணனை ஒரு பொழுதும் மறக்க மாட்டேன். முல்லைப் பூந் தோட்டங்கள் உள்ள திருக்குறுங்குடிக்கு என்னை அழைத்துச் செல்லுங்கள். 1793

செங் கண் நெடிய கரிய மேனித்
தேவர் ஒருவர் இங்கே புகுந்து என்
அங்கம் மெலிய வளை கழல,
ஆதுகொலோ? என்று சொன்ன பின்னை,
ஐங்கணை வில்லி தன் ஆண்மை என்னோடு
ஆடும் அதனை அறியமாட்டேன்;
கொங்கு அலர் தண் பணை சூழ் புறவின்
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 1794

கேவலம் அன்று கடலின் ஓசை;
கேண்மின்கள் ; ஆயன் கை ஆம்பல் வந்து, என்
ஆவி அளவும் அணைந்து நிற்கும்;
அன்றியும் ஐந்து கணை தெரிந்திட்டு,
ஏ வலம் காட்டி இவன் ஒருவன்
இப்படியே புகுந்து எய்திடாமுன்,
கோவலர் கூத்தன் குறிப்பு அறிந்து
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 1795

சோத்து என நின்று தொழ இரங்கான் ;
தொல் நலம் கொண்டு எனக்கு இன்றுகாறும்
போர்ப்பது ஓர் பொன் படம் தந்து போனான்;
போயின ஊர் அறியேன்; என் கொங்கை
மூத்திடுகின்றன மற்று அவன் தன்
மொய் அகலம் அணையாது வாளா;
கூத்தன் இமையவர் கோன் விரும்பும்
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 1796

செற்றவன் தென் இலங்கை மலங்க,
தேவர் பிரான் திரு மா மகளைப்
பெற்றும் என் நெஞ்சகம் கோயில் கொண்ட
பேர் அருளாளன் பெருமை பேசக்
கற்றவன் காமரு சீர்க் கலியன்
கண் அகத்தும் மனத்தும் அகலாக்
கொற்றவன் முற்று உலகு ஆளி நின்ற
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின் 1797

## திருக்குறுங்குடி – உ

அக்கும் புலியின் அதளும் உடையார் அவர் ஒருவர்
பக்கம் நிற்க நின்ற பண்பர் ஊர்போலும்
தக்க மரத்தின் தாழ் சினை ஏறி, தாய் வாயில்
கொக்கின் பிள்ளை வெள் இறவுஉண்ணும் குறுங்குடியே. 1798





அகன்று சிவந்த கண்களும் கறுத்த மேனியும் உடைய தேவர் ஒருவர் இங்கு வந்து என் உடல் மெலிய, வளைகள் கழலும்படி செய்தார். பிரியேன் என்று கூறிய அவர் பிரிந்தார். அதன்பின் மன்மதன் தன் ஆண்மையை ஐந்து அம்புகள் மூலம் காட்டுவதை அறியேன். தேன் துளிர்க்கும் சோலைகள் உள்ள குறுங்குடிக்கு என்னைக் கொண்டு செல்லுங்கள். 1794

கடலோசை சாமானியமாகவா கேட்கிறது! கண்ணனின் புல்லாங்குழல் இசை என் உயிரைக் கவர்ந்து விட்டது. மன்மதனும் ஐந்து அம்புகளை எய்து என்னை முடிக்க முயலுகிறான். அவன் தன் அம்புகளை எய்வதற்கு முன்னே, கோவலர் கூத்தனான கண்ணனின் திருக் குறுங்குடிக்கு என்னை அழைத்துச் செல்லுங்கள். 1795

'சோத்தம்' என்று கூறித் தோற்றதை நான் ஒப்புக் கொண்டு தொழுதாலும் அவன் இரங்க வில்லையே! முன்பு என் பெண்மையைக் கொண்ட அவன், போர்த்துக் கொள்ள பொன்னாடை தருவது போல, என் மேல் பசலை படரச் செய்து பிரிந்தான். அவன் சென்ற ஊர் அறியேன். என் முலைகளும் அவனைத் தழுவாமல் மூத்து விட்டன. கூத்தனான நித்தியசூரிகள் தலைவனின் குறுங்குடிக்கு என்னைக் கொண்டு செல்லுங்கள் 1796

தென்னிலங்கை இராவணனைக் கலங்கச் செய்த தேவபிரான், திருமகளைப் பெற்றிருப்பினும், என் நெஞ்சையும் கோவிலாகக் கொண்டான். அப் பேரருளாளனின் பெருமையைப் பேசக் கற்ற வைணவச் செல்வமுடைய கலியனின் கண்களிலும் நெஞ்சிலும் பிரியாமல் உள்ள உபய விபூதி நாதன் விரும்பி வாழும் திருக்குறுங்குடிக்கு என்னைச் சேர்த்து விடுங்கள். 1797

## திருக்குறுங்குடி – உ

எலும்பையும் புலித்தோலையும் அணிந்த சிவன் அருகே நிற்க, கல்யாண குணங்களுடைய எம்பெருமான் நின்ற திருக்கோலத்தில் திருக்குறுங்குடியில் காட்சி தருகிறான். இத்திவ்விய தேசத்தில் கொக்குக் குஞ்சு, தான் ஏறத் தகுந்த மரக்கிளை மீதேறித் தாயின் வாயில் உள்ள 'வெள்ளிறால்' என்னும் மீனை உண்ணும். 1798

துங்க ஆர் அரவத் திரை வந்து உலவத்தொடு கடலுள்
பொங்கு ஆர் அரவில் துயிலும் புனிதர் ஊர்போலும் -
செங் கால் அன்னம் திகழ் தண் பணையில் பெடையோடும்
கொங்கு ஆர் கமலத்து அலரில் சேரும் குறுங்குடியே. 1799

வாழக் கண்டோம்; வந்து காண்மின் தொண்டீர்காள்!
கேழல் செங்கண் மா முகில் வண்ணர் மருவும் ஊர் -
ஏழைச் செங்கால் இன் துணை நாரைக்கு இரை தேடி
கூழைப் பார்வைக் கார் வயல் மேயும் குறுங்குடியே. 1800

சிரம் முன் ஐந்தும் ஐந்தும் சிந்தச் சென்று அரக்கன்.
உரமும் கரமும் துணித்த உரவோன் ஊர்போலும் -
இரவும் பகலும் ஈன் தேன் முரல, மன்று எல்லாம்
குரவின் பூவே - தான் மணம் நாறும் குறுங்குடியே. 1801

கவ்வைக் களிற்று மன்னர் மாள, கலி மாத் தேர்
ஐவர்க்கு ஆய், அன்று அமரில் உய்த்தான் ஊர்போலும்-
மை வைத்து இலங்கு கண்ணார் தங்கள் மொழி ஒப்பான்
கொவ்வைக் கனி வாய்க் கிள்ளை பேசும் குறுங்குடியே. 1802

தீ, நீர் வண்ண மா மலர் கொண்டு விரை ஏந்தி,
தூ நீர் பரவித் தொழுமின்; எழுமின்; தொண்டீர்காள்!
மா நீர் வண்ணர் மருவி உறையும் இடம் வானில்
கூன் நீர் மதியை மாடம் தீண்டும் குறுங்குடியே. 1803

வல்லிச் சிறு நுண் இடையாரிடை நீர் வைக்கின்ற
அல்லல் சிந்தை தவிர, அடைமின், அடியீர்காள்!
சொல்லில் திருவே அனையார் கனி வாய் எயிறு ஒப்பான்
கொல்லை முல்லை மெல் அரும்பு ஈனும் குறுங்குடியே. 1804

நார் ஆர் இண்டை நாள் மலர் கொண்டு, நம் தமர்காள்
ஆரா அன்போடு எம்பெருமான் ஊர் அடைமின்கள்
தாரா ஆரும் வார் புனல் மேய்ந்து வயல் வாழும்
கூர் வாய் நாரை பேடையொடு ஆடும் குறுங்குடியே. 1805





ஓங்கிய ஆரவாரத்துடன் அலைகள் குதிக்கும் ஆழமான பாற்கடலில் திருவனந்தாழ்வான் மீது கண் வளர்ந்த புனிதன், திருக்குறுங்குடியில் எழுந்தருளி உள்ளான். இங்கே செங்கால் அன்னம் தன் பெடையுடன், நீர் நிலைத் தாமரையில் அணைந்து ஒன்றி நிற்கும். 1799

தொண்டர்களே! வாழும் வழிகண்டோம்; வந்து பாருங்கள். வராகவடிவெடுத்த சிவந்த கண்களுடைய மேகநிறப் பிரான், திருக்குறுங்குடியில் எழுந்தருளினான். இங்கே, மென்மையான சிவந்த கால்களுடைய ஆண் நாரைக்கு குனிந்து பார்க்கும் பெண் நாரை, செழித்த வயல்களில் மேய்ந்து, உணவு தேடிக் கொடுக்கும். 1800

இலங்கை சென்று இராவணனின் பத்துத் தலைகளையும் கைகளையும் துணித்த திறமுடைய இராமபிரான் திருக்குறுங்குடியில் எழுந்தருளினான். இத்தலத்தில் உள்ள மணம் வீசும் குரவ மரப் பூக்களில் இரவும் பகலும் வண்டுகள் மது அருந்தி முரலும். 1801

பெருத்த ஒலி எழுப்பும் யானைப் படைகள் கொண்ட அரசர்கள் மாளும்படி, பாரதப் போரில் பாண்டவர்க்காகத் தேரோட்டிய கண்ணன் திருக்குறுங்குடியில் எழுந்தருளி உள்ளான். இவ்வூரில், மைக்கண் பெண்கள் பேசுவது போலச் சிவந்த உதடுகளுடைய கிளிகள் கொஞ்சிப் பேசும். 1802

கைங்கர்யம் செய்பவர்களே! தூய்மையான நீங்கள், தூபம், தண்ணீர், பூக்கள், மணப்பொருள்கள் ஆகியவற்றுடன் இறைவனை வழிபட்டுத் தொழுது உய்வு பெறுங்கள். கடல் நிறப் பிரானின் திருக்குறுங்குடியில், மாடங்கள் வானத்துச் சந்திரனைத் தொடும் அளவு உயர்ந்துள்ளன. 1803

எம் பெருமானுக்கு ஆட்படுபவர்களே! கொடி போன்ற நுட்பமான இடை உடைய பெண்களிடத்தே வைத்த, துன்பந்தரும் ஆசைச் சிந்தையைத் தவிர்த்து விட்டுத் திருக்குறுங்குடியை அடைந்து உய்வடையுங்கள். திருமகள் போலே பேசும் பெண்களின் கனிவாயில் ஒளிவிடும் பற்களைப் போல, இவ்வூரில், முல்லைப் பூக்கள் கொல்லையில் மெல்லரும்பு விடும். 1804

அன்பர்களே! நாரில் தொடுக்கப்பட்ட பூ மாலைகளையும் பூக்களையும் எடுத்துக் கொண்டு திருக்குறுங்குடி சென்று பரமபக்தியுடன் வழிபடுங்கள். அங்கே, தாராக் கோழிகள் நீர் நிலைகளில் மேயும். வயல்களில் வாழும் கூரிய அலகுகள் உடைய நாரைகள் தம் பேடைகளுடன் கலந்து ஆடும். 1805

நின்ற வினையும் துயரும் கெட, மா மலர் ஏந்தி,
சென்று பணிமின் எழுமின், தொழுமின், தொண்டீர்காள்;
என்றும் இரவும் பகலும் வரி வண்டு இசை பாட
குன்றின் முல்லை மன்றிடை நாறும் குறுங்குடியே. 1806

சிலையால் இலங்கை செற்றான், மற்று ஓர் சின வேழம்
கொலை ஆர் கொம்பு கொண்டான் மேய குறுங்குடிமேல்
கலை ஆர் பனுவல் வல்லான் கலியன் ஒலி மாலை
நிலை ஆர் பாடல் பாடப் பாவம் நில்லாவே. 1807

## திருவல்லவாழ்

தந்தை தாய் மக்களே சுற்றம் என்று உற்றவர் பற்றி நின்ற
பந்தம் ஆர் வாழ்க்கையை நொந்து, நீ பழி எனக் கருதினாயேல்.
அந்தம் ஆய், ஆதி ஆய் ஆதிக்கும் ஆதி ஆய், ஆயன் ஆய
மைந்தனார் வல்லவாழ் சொல்லுமா வல்லை ஆய், மருவு, நெஞ்சே! 1808

மின்னும் மா வல்லியும் வஞ்சியும் வென்ற நுண் இடை நுடங்கும்
அன்ன மென் நடையினார்கலவியை அருவருத்து அஞ்சினாயேல்,
துன்னு மா மணி முடிப் பஞ்சவர்க்கு ஆகி, முன் தூது சென்ற
மன்னனார் வல்லவாழ் சொல்லுமா வல்லை ஆய், மருவு நெஞ்சே! 1809

பூண் உலாம் மென் முலைப் பாவைமார் பொய்யினை மெய் இது என்று,
பேணுவார் பேசும் அப் பேச்சை நீ பிழை எனக் கருதினாயேல்,
நீள் நிலா வெண் குடை வாணனார் வேள்வியில் மண் இரந்த
மாணியார் வல்லவாழ் சொல்லுமா வல்லை ஆய், மருவு, நெஞ்சே 1810

பண் உலாம் மென் மொழிப் பாவைமார் பணை முலை அணைதும் நாம் என்று
எண்ணுவார் எண்ணம் அது ஒழித்து நீ பிழைத்து உயக்கருதினாயேல்
விண் உளார், விண்ணின் மீது இயன்ற வேங்கடத்து உளார், வளங்கொள் முந்நீர்
வண்ணனார் வல்லவாழ் சொல்லுமா வல்லை ஆய், மருவு நெஞ்சே! 1811





*தொண்டர்களே! செய்யும் பாவங்களும் செய்த வினைகளாகிய துயர்களும் கெட வேண்டுமாயின் திருக்குறுங்குடி சென்று, பூக்களை இட்டு, எம் பெருமானைத் தொழுது உய்வடையுங்கள் அங்கே. இரவும் பகலும் வண்டுகள் இசைபாடும்; குன்றத்து முல்லை மலர்கள் வெளி நிலங்களில் மணம் பரப்பும்.* 1806

*அம்புகளால் இலங்கையை அழித்தவனும் சினங் கொண்ட குவலயாபீட யானையின் கொம்புகளை முறித்தவனும் ஆன எம்பெருமானின் திருக்குறுங்குடி மேல், கலை மிகுந்த கவிக்ள் பாட வல்ல கலியன், இப்பாசுரங்களை அருளினார். இவற்றைப் பாடுபவரின் பாவங்கள் நில்லா.* 1807

## திருவல்லவாழ்

*மனமே! தந்தை, தாய், மக்கள், உற்றார், என்று பற்றி நிற்கிற பந்த பாசம் நிறைந்த வாழ்க்கையை, நீ, வெறுத்துத் தவறு என எண்ணினால், திருவல்லவாழ் என்னும் திவ்விய தேசத்தைக் கூறும்படி வல்லவனாகப் பொருந்துவாய். அங்குள்ள எம் பெருமான், படைப்பின் மூலப்பொருளாய், அதனால் உண்டாகும் சித்து, அசித்துக்களை நியமிப்பவன் ஆவான். அவனே மிடுக்குடைய கண்ணனாக அவதரித்தான்.* 1808

*நெஞ்சமே! மின்னல், வஞ்சிக் கொடி ஆகியவற்றை வெல்லும் நுண்ணிடை துவள, அன்னம் போல் நடக்கும் பெண்களின் கலவியை வெறுத்து நீ அஞ்சினால், திருவல்லவாழை வாயால் கூறி நெஞ்சால் பொருந்துவாய். மணிமுடி மன்னர் பாண்டவர்க்காகத் தூது சென்ற கண்ணன் எழுந்தருளியது இத் தலம்.* 1809

*மனமே! மார்பில் முத்துமாலை அணிந்த பெண்களின் பொய்ப் பேச்சை மெய்யென்று உரைப்பார்களின் சொற்களைத் தவறு என்று நீ கருதினால், 'திருவல்லவாழ்' பெயரை உச்சரித்து உய்வு பெறும் வல்லமை பெறுவாய். நிலாப் போன்ற வெளுத்த குடையுடன் மாவலி வேள்விச் சாலை சென்று மூவடி மண் யாசித்த வாமனன் இங்கே எழுந்தருளி உள்ளான்.* 1810

*நெஞ்சமே! இசை மிகுந்த மென்மைப் பேச்சுடைய பெண்களின் திரண்ட முலைகளைத் தழுவி வாழ ஆசைப்படும் எண்ணத்தை, நீ தவறு என எண்ணி உய்ய விழைந்தால், திருவல்லவாழை வாயால் பிதற்றவல்லவன் ஆவாய். பரமபதநாதன் திருவேங்கடத்தில் நின்றபடி அருள்கிறான். அந்தக் கடல்நிறப் பெருமானே, திருவல்லவாழில் எழுந்தருளி உள்ளான்.* 1811

மஞ்சு தோய் வெண் குடை மன்னர் ஆய், வாரணம் சூழவாழ்ந்தார்
துஞ்சினார் என்பது ஓர் சொல்லை நீ துயர் எனக் கருதினாயேல்,
நஞ்சு தோய் கொங்கைமேல் அம் கை வாய் வைத்து, அவள் நாளை உண்ட
மஞ்சனார் வல்லவாழ் சொல்லுமா வல்லை ஆய், மருவு நெஞ்சே! 1812

உருவின் ஆர் பிறவி சேர் ஊன் பொதி நரம்பு தோல் குரம்பையுள் புக்கு,
அருவி நோய் செய்து நின்று ஐவர் தாம் வாழ்வதற்கு அஞ்சினா யேல்,
திருவின் ஆர் வேதம் நான்கு ஐந்து தீ வேள்வியோடு அங்கம் ஆறும்
மருவினார் வல்லவாழ் சொல்லுமா வல்லை ஆய், மருவு, நெஞ்சே! 1813

நோய் எலாம் பெய்தது ஓர் ஆக்கையை மெய் எனக் கொண்டு வாளா
பேயர்தாம் பேசும் அப் பேச்சை நீ பிழை எனக் கருதினாயேல்
தீ உலாம் வெம் கதிர், திங்கள் ஆய், மங்குல் வான் ஆகி நின்ற
மாயனார் வல்லவாழ் சொல்லுமா வல்லை ஆய், மருவு நெஞ்சே! 1814

மஞ்சு சேர் வான், எரி, நீர், நிலம், கால் இவை மயங்கி நின்ற
அஞ்சு சேர் ஆக்கையை அரணம் அன்று என்று உய்யக் கருதினாயேல்,
சந்து சேர் மென் முலைப் பொன் மலர்ப் பாவையும் தாமும் நாளும்
வந்து சேர் வல்லவாழ் சொல்லுமா வல்லை ஆய், மருவு, நெஞ்சே! 1815

வெள்ளியார் பிண்டியார் போதியார் என்று இவர் ஓதுகின்ற
கள்ளநூல் தன்னையும் கருமம் அன்று என்று உயக் கருதினாயேல்,
தெள்ளியார் கைதொழும் தேவனார் மா முநீர் அமுது தந்த
வள்ளலார் வல்லவாழ் சொல்லுமா வல்லை ஆய் மருவு, நெஞ்சே! 1816

மறைவலார் குறைவு இலார் உறையும் ஊர் வல்லவாழ் அடிகள் தம்மைச்
சிறை குலாம் வண்டு அறை சோலை சூழ் கோல நீள் ஆலி நாடன்
கறை உலாம் வேல்வல்ல கலியன் வாய் ஒலி இவை கற்று வல்லார்
இறைவர் ஆய், இரு நிலம் காவல் பூண்டு இன்பம் நன்கு எய்துவாரே. 1817





*மனமே! மேகத்தைத் தொடும் வெண்குடைக் கீழ், யானைகள் சூழ, அரசராய் ஆண்டவர்களும் இறந்து போவார்கள் என்பதை நீ துயரம் என்று எண்ணினால் திருவல்லவாழை உச்சரிக்கும் வல்லவன் ஆவாய். பூதனையின் நஞ்சு முலையில் கையையும் வாயையும் வைத்து உயிர் உண்ட கண்ணன் இங்கே எழுந்தருளினான்.* **1812**

*மனமே! நித்தியமான ஆத்மா, நுண்வடிவில், பருத்த உடலில் புகுந்து ஜன்மம் எடுக்கிறது. தசை பொதிந்த நரம்பும தோலும் கூடிய குடிசையான உடலில் புகுந்ததும் ஐம்புலன்களால் ஆத்மா துன்புறுவதை எண்ணி நீ அஞ்சினால், திருவல்லவாழைச் சொல்லும் வல்லவன் ஆவாய். நான்கு வேதங்கள், ஐவகை வேள்விகள், ஆறு அங்கங்கள் ஆகியவற்றில் வல்லவர் திரு உடையவராய் அங்கே வாழ்கிறார்கள்.* **1813**

*மனமே! நோய்களால் ஆன உடம்பை உண்மை என்று பேசும் அறிவிலிகள் கருத்தை நீ பிழை எனக் கருதினால், திருவல்லவாழைச் சொல்வதில் வல்லவன் ஆவாய். தீ உமிழும் சூரியன், சந்திரன், மேகங்கள், வானம் ஆகியவற்றில் நின்று, அவற்றை நியமிக்கும் மாயன் இத் தலத்தில் எழுந்தருளி உள்ளான்.* **1814**

*மனமே! மேகம் பரவும் வானம், தீ, நீர், பூமி, காற்று ஆகியவற்றில் ஒன்றிய உடல், நம்மைக் காக்கும் அரண் ஆகாது என்று உணர்ந்தால், திருவல்லவாழ் பெயரைக் கூறி உய்வு பெறுவாய். சந்தனம் பூசிய மார்புடைய திருமகளுடன் எம் பெருமான் இங்கே நித்திய வாசம் செய்கிறான்.* **1815**

*நெஞ்சமே! சமணர், பௌத்தர் ஓதும் வஞ்சனையான நூல்களை ஒதுக்கி, அவை உறுதிப் பொருள் அன்று என உய்வு பெறக் கருதினால், திருவல்லவாழை உச்சரிப்பதில் வல்லவன் ஆவாய். பாற்கடல் அமுதைத் தேவர்க்கு அளித்த வள்ளல், தெளிவுடைய ஞானிகளால் தொழப்படும் தேவபிரான், இங்கு எழுந்தருளி உள்ளான்.* **1816**

*வேதம் வல்ல, குறைவற்ற அந்தணர் வாழும் திருவல்ல வாழ்ப் பெருமானை வண்டுகள் வாழும் சோலைகள் சூழ்ந்த திருவாலி நாட்டரசர் இப் பாசுரங்களில் பாடினார். வேல் ஏந்திய கலியனின் இப் பாசுரங்களைப் பயில்பவர் பூமியில் அரசராய்த் திகழ்ந்து பிறகு பரமபதத்தை ஆளும் இன்பம் பெறுவர்.* **1817**

திருமாலிருஞ்சோலை –1

முந்துற உரைக்கேன்;விரைக் குழல் மடவார்
கலவியை விடு தடுமாறல்;
அந்தரம் ஏழும், அலை கடல் ஏழும்
ஆய எம் அடிகள் தம் கோயில்
சந்தொடு மணியும் அணி மயில் தழையும்
தழுவி வந்து, அருவிகள் நிரந்து,
வந்து இழி சாரல் மாலிருஞ்சோலை -
வணங்குதும் வா, மடநெஞ்சே! 1818

இண்டையும் புனலும் கொண்டு இடை இன்றி,
எழுமினோ தொழுதும் என்று இமையோர்,
அண்டரும் பரவ,அரவணைத் துயின்ற
சுடர் முடிக் கடவுள் தம் கோயில்
விண்டு அலர் தூளி வேய் வளர் புறவில்
விரை மலர் குறிஞ்சியின் நறுந் தேன்
வண்டு அமர் சாரல் மாலிருஞ்சோலை-
வணங்குதும் வா, மட நெஞ்சே! 1819

பிணி வளர் ஆக்கை நீங்க நின்று ஏத்த,
பெருநிலம் அருளின் முன் அருளி
அணி வளர்குறள் ஆய், அகல் இடம் முழுதும்
அளந்த எம் அடிகள் தம் கோயில்
கணி வளர் வேங்கை நெடு நிலம் அதனில்
குறவர் தம் கவணிடைத் துரந்த
மணி வளர் சாரல் மாலிருஞ்சோலை -
வணங்குதும் வா, மட நெஞ்சே! 1820

சூர்மையில் ஆய பேய் முலை சுவைத்துச்
சுடு சரம் அடு சிலைத் துரந்து,
நீர்மை இலாத தாடகை மாள
நினைந்தவர் மனம் கொண்ட கோயில்
கார் மலி வேங்கை கோங்கு அலர் புறவில்
கடி மலர்க் குறிஞ்சியின் நறுந் தேன்
வூர் புனல் சூழ் தண் மாலிருஞ்சோலை -
வணங்குதும் வா, மட நெஞ்சே! 1821





திருமாலிருஞ்சோலை –1

மடநெஞ்சமே! முதலில் ஒன்றைக் கூறுகிறேன். கேள், மணம் வீசும் கூந்தலுடைய பெண்களின் கலவியால் ஏற்படும் தடுமாற்றத்தை விட்டு விடு, ஏழுலகங்களையும் ஏழு கடல்களையும் உடலாகப் பெற்ற நம் சுவாமியின் திருமாலிருஞ் சோலை மலையை வணங்குவோம் வா. இங்குள்ள மலைப் பக்கங்களில் அருவிகள், சந்தன மரங்களையும் மணிகளையும் மயில் தோகைகளையும் தள்ளி ஓடும். **1818**

அடங்கும் மனமே! பூ மாலையையும் நீரையும் கொண்டு இடைவிடாமல் தொழுது உய்வடைய எழுவாய். நித்திய சூரிகளும் தேவர்களும் வந்து வணங்கும்படி ஆதிசேஷன் மீது கண் வளரும் திருமால், எழுந்தருளிய திருமாலிருஞ் சோலை மலையை வணங்குவோம். சுடர் முடி அணிந்த இப்பெருமானின் தலத்தில், தூள்களைப் பரப்பும் மூங்கில்கள் வளர்ந்துள்ள பகுதிளில், குறிஞ்சிப் பூவின் தேனை வண்டுகள் அருந்தும். **1819**

மடநெஞ்சமே! துன்பத்தை வளர்க்கும் உடலைக் கழிப்பதற்கு நாம் இறைவனைத் துதிப்பதற்காகவே பெரிய பூமியை அவன் நமக்குத் தந்தான். ஆகவே, வாமனனாய்ப் பூமிப் பரப்பை அளந்த நம் சுவாமி எழுந்தருளிய திருமாலிருஞ்சோலை மலையை நீ வணங்குவாய். பூப்பதால் காலக் கணக்கைக் காட்டும் வேங்கை மரங்கள் உள்ள நிலங்களில் இங்கே, குறவர்கள் தம் கவண் கயிற்றால் மணிகளை எறிவர். அதனால் உண்டான ஒளி எங்கும் சிதறும் சிறப்புடையது இம் மலை. **1820**

கொடிய பூதனையின் முலை சுவைத்து வதைத்தவனும், வில்லை வளைத்து நெருப்பு மயமான அம்புகளைத் தொடுத்துப் பெண்மை இல்லாத தாடகையைக் கொன்றவனும் ஆன எம் பெருமான் திருமாலிருஞ்சோலை மலையில் கோயில் கொண்டுள்ளான். மட நெஞ்சமே! இத் தலம் சென்று நீ வணங்கு. மேகத்தைத் தொடும் வேங்கை மரங்களும் கோங்கு மரங்களும் மலரும் நிலங்களில் குறிஞ்சிப் பூவிலிருந்து தேன் வெள்ளமிடும் குளிர்ச்சி பொருந்திய தலம் இது. **1821**

வணங்கல் இல் அரக்கன் செருக்களத்து அவிய,
மணி முடி ஒருபதும் புரள,
அணங்கு எழுந்து அவன் தன் கவந்தம் நின்று ஆட,
அமர் செய்த அடிகள் தம் கோயில்
பிணங்கலில் நெடு வேய் நுதி முகம் கிழிப்ப,
பிரசம் வந்து இழிதர, பெருந் தேன்
மணங் கமழ் சாரல் மாலிருஞ்சோலை-
வணங்குதும் வா, மட நெஞ்சே ! 1822

விடம் கலந்து அமர்ந்த அரவணைத் துயின்று,
விளங்கனிக்கு இளங் கன்று விசிறி
குடம் கலந்து ஆடி குரவை முன் கோத்த
கூத்த எம் அடிகள் தம் கோயில்
தடங் கடல் முகந்து விசும்பிடைப் பிளிறத்
தடவரைக் களிறு என்று முனிந்து,
மடங்கல் நின்று அதிரும் மாலிருஞ்சோலை -
வணங்குதும் வா, மடநெஞ்சே ! 1823

தேனுகன் ஆவி போய் உக, அங்கு ஓர்
செழுந் திரள் பனங்கனி உதிர,
தான் உகந்து எறிந்த தடங் கடல் வண்ணர்
எண்ணி, முன் இடம் கொண்ட கோயில்
வானகச் சோலை மரகதச் சாயல்
மா மணிக் கல் அதர் நிறைந்து
மான் நுகர் சாரல் மாலிருஞ்சோலை -
வணங்குதும் வா, மட நெஞ்சே! 1824

புதம் மிகு விசும்பில் புணரி, சென்று அணவ,
பொரு கடல் அரவணைத் துயின்று,
பதம் மிகு பரியின் மிகு சினம் தவிர்த்த
பனி முகில் வண்ணர் தம் கோயில்
கதம் மிகு சினத்த கட தடக் களிற்றின்
கவுள் வழிக் களி வண்டு பருக,
மதம் மிகு சாரல் மாலிருஞ்சோலை -
வணங்குதும் வா, மட நெஞ்சே ! 1825

புந்தி இல் சமணர் புத்தர் என்று இவர்கள்
ஒத்தன பேசவும், உகந்திட்டு,
எந்தை பெம்மானார், இமையவர் தலைவர்
எண்ணி, முன் இடம் கொண்ட கோயில்
சந்தனப் பொழிலின் தாழ் சினை நீழல்
தாழ்வரை மகளிர்கள் நாளும்
மந்திரத்து இறைஞ்சும் மாலிருஞ்சோலை-
வணங்குதும் வா, மடநெஞ்சே ! 1826





வணங்காத அரக்கனான இராவணனின் மணிமுடிகள் பத்தும் புரளும் படி செய்து அவன் உடல் மட்டும் தனித்துக் கவந்தமாக ஆடச் செய்து போர் செய்த இராமன் திருமாலிருஞ் சோலையில் கொண்டுள்ளான். நெஞ்சமே! இம் மலையை நீ, வணங்கு. இங்குப் பின்னி வளர்ந்த மூங்கில்களின் நுனிகள் மலை உச்சியில் உள்ள தேன்கூட்டைக் கிழிப்பதால், தேனீக்கள் கலைந்து தேன் வெள்ளம் ஓடி மணம் கமழும். 1822

'நஞ்சுமிழும் திருவனந்தாழ்வானைப் படுக்கையாகக் கொண்டவன்; விளங்கனிக்காகக் கன்றாய் வந்த அசுரனை வீசியவன்; குடக்கூத்தாடி இடைச்சிகளுடன், குரவை கோத்தவன், என்னும் சிறப்புடைய நம் சுவாமி எழுந்தருளிய திருமாலிருஞ் சோலை மலையை வணங்குவோம். மடநெஞ்சமே! கடல் நீரை முகந்து வானேறும் மேக ஒலியைக் கேட்டு யானை என்று எண்ணிச் சிங்கம் சீறும் சீர்மை உடையது இம் மலை. 1823

திரண்ட பனம்பழங்களை உதிரச் செய்ய, அம் மரத்தின் மீது தேனுகாசுரனை வீசி எறிந்து, அவனை அழித்த கண்ணன் திருமாலிருஞ் சோலையில் எழுந்தருளினான். மடநெஞ்சே! கடல் நிறப் பெருமானின் இம் மலையை நீ வணங்கு. இங்கே, மான்கள், மரகத ஒளியுடன் வானளாவி வளர்ந்த சோலைகளில் நீலப் பாறைகளின் வழியாகச் சென்று அங்குள்ள தேனைப் பருகும். 1824

மேகவானில் அலைகள் மோதும் பாற்கடலில் ஆதி சேஷன் மீது கண் வளர்ந்த திருமால் கண்ணனாக அவதரித்த பொழுது, பாய்ந்து வந்த குதிரைவடிவக்கேசியை அழித்தான். மடநெஞ்சே! மேக வண்ணனின் திருமாலிருஞ்சோலை மலையை வணங்குவாய். இம் மலையில் உலவும். சினம் மிகுந்த யானைகளின் கன்னங்கள் வழியே மதநீர் பெருகி ஓடவும், வண்டுகள் அதைப் பருகும். 1825

அறிவற்ற சமண பௌத்த மதத்தினர் தங்களுக்கு ஏற்றபடி பேசுவதைக் கேட்டு, அவற்றையும் மகிழ்ந்து உகக்கும் எந்தையாகிய நித்திய சூரிகள் தலைவன், திருமாலிருஞ்சோலையில் கோயில் கொண்டுள்ளான். மடநெஞ்சே! இம் மலையை வணங்குவோம்; வா. இங்குள்ள சந்தனச் சோலையில் மரக் கிளைகளின் நிழலில், மலைப் பெண்கள் வரங்கள் வேண்டி மந்திரம் கூறி, இறைவனை வணங்குவர். 1826

வண்டு அமர் சாரல் மாலிருஞ்சோலை
மா மணி வண்ணரை வணங்கும்
தொண்டரைப் பரவும் சுடர் ஒளி நெடு வேல்
சூழ் வயல் ஆலி நன் நாடன்,
கண்டல் நல் வேலி மங்கையர் தலைவன்,
கலியன் வாய் ஒலிசெய்த பனுவல்
கொண்டு இவை பாடும் தவம் உடையார்கள்
ஆள்வர் இக் குரை கடல் உலகே. 1827

## திருமாலிருஞ்சோலை – ௨

### தலைவியின் நிலை குறித்துத் தாய் இரங்கியது

மூவரில் முன் முதல்வன், முழங்கு ஆர் கடலுள் கிடந்து,
பூ வளர் உந்தி தன்னுள் புவனம் படைத்து உண்டு, உமிழ்ந்த
தேவர்கள் நாயகனை, திருமாலிருஞ்சோலை நின்ற
கோவலர் கோவிந்தனை, கொடி ஏர் இடை கூடும்கொலோ? 1828

புனை வளர் பூம் பொழில் ஆர் பொன்னி சூழ் அரங்கநகருள்
முனைவனை, மூவுலகும் படைத்த முதல் மூர்த்தி தன்னை,
சினை வளர் பூம் பொழில் சூழ் திருமாலிருஞ்சோலை நின்றான்
கனை கழல் காணும்கொலோ-கயல் கண்ணி எம் காரிகையே? 1829

உண்டு உலகு ஏழினையும், ஒரு பாலகன் ஆல்இலைமேல்
கண்துயில் கொண்டு உகந்த கரு மாணிக்க மா மலையை,
திண்திறல் மா கரி சேர் திருமாலிருஞ்சோலை நின்ற
அண்டர்தம் கோவினை, இன்று அணுகும்கொல் என் ஆய் இழையே. 1830

சிங்கம் அது ஆய், அவுணன் திறல் ஆகம் முன் கீண்டு உகந்த
பங்கய மாமலர்க் கண் பரனை, எம் பரம் சுடரை,
திங்கள் நன் மா முகில் சேர் திருமாலிருஞ்சோலை நின்ற
நங்கள் பிரானை, இன்று நணுகும்கொல் என் நன் நுதலே? 1831

தானவன் வேள்வி தன்னில் தனியே குறள் ஆய், நிமிர்ந்து,
வானமும் மண்ணகமும் அளந்த திரிவிக்கிரமன்,
தேன் அமர் பூம் பொழில் சூழ் திருமாலிருஞ் சோலை நின்ற
வானவர் கோனை, இன்று வணங்கித் தொழ வல்லள்கொலோ? 1832





வண்டுகள் அமரும் திருமாலிருஞ்சோலை மலைப் பெருமானை வணங்கும் பாகவதரைத் துதிக்கும் ஆலி நாடர் இப்பாசுரங்களைப் பாடினார். தாழைகளை வேலியாக உடைய திருமங்கை நாட்டு மன்னர் அருளிய இவற்றைப் பாடும் பாக்கியம் உடையார் கடல் சூழ்ந்த இவ்வுலகை ஆளப் பெறுவர். **1827**

## திருமாலிருஞ்சோலை மலை –௨

### தலைவியின் நிலை குறித்துத் தாய் இரங்கியது

மும்மூர்த்திகளுள் முதல்வனாய், நித்திய சூரிகள் தலைவன் அலைகடலில் கண் வளர்ந்தபடி கொப்பூழ்த் தாமரையில் உலகங்களைப் படைத்துப் பின் உண்டு, உமிழ்ந்து காத்தான். திருமாலிருஞ்சோலை மலையில் உள்ள கோவலனான இக் கோவிந்தனை வஞ்சிக் கொடி போன்ற இடை உடைய என் மகள் அணைத்துக் கொள்ள வல்லவளா? **1828**

புன்னை மரச் சோலைகள் உள்ள காவிரி சூழும் திருவரங்கத்தில் உள்ளவன் மூவுலகங்களைப் படைத்த முதல்வன் ஆவான். பூஞ்சோலைகள் சூழ்ந்த திருமாலிருஞ்சோலை மலைப் பிரானை, கயல் கண்ணியான என் மகள் காண்பாளா? **1829**

ஏழுலகங்களையும் உண்டு ஒரு குழந்தையாய் ஆலந்தளிரில் கண் வளர்ந்த கருமாணிக்க மலை போன்ற எம்பெருமான், யானைகள் வாழும் திருமாலிருஞ்சோலை மலையில் எழுந்தருளி னான். இந்த அண்டர் கோமானை என் மகள் இன்று சென்று அணுக வல்லவளா? **1830**

தாமரைக் கண்களுடைய பரம்பரனான சுவாமி, பரஞ்சுடர் ஆவான். நரசிம்மாவதாரம் எடுத்து இரணியன் மார்பைக் கிழித்தவன், மேகங்கள் சந்திரனைத் தொடும் திருமாலிருஞ் சோலையில் எழுந்தருளினான். அழகிய முகம் உடைய என் மகள் இப் பெருமானிடம் சென்று கிட்ட வல்லவளா? **1831**

மாவலியின் வேள்விச் சாலையில் தனியாக வாமன வடிவில் சென்று, வானையும் பூமியையும் அளந்து கொண்ட திரிவிக்கிரமன், தேன் துளிர்க்கும் பூஞ்சோலைகள் சூழ்ந்த திருமாலிருஞ்சோலை மலையில் உள்ளான். என் மகள், நித்திய சூரிகள் தலைவனான இப்பெருமானைக் கண்டு தொழ வல்லவளா? **1832**

நேசம் இலாதவர்க்கும் நினையாதவர்க்கும் அரியான்,
வாச மலர்ப் பொழில் சூழ் வட மா மதுரைப் பிறந்தான்,
தேசம் எல்லாம் வணங்கும் திருமாலிருஞ்சோலை நின்ற
கேசவ நம்பி தன்னைக் கெண்டை ஒண் கண்ணி காணுங்கொலோ? 1833

புள்ளினை வாய் பிளந்து பொரு மா கரி கொம்பு ஒசித்து,
கள்ளச் சகடு உதைத்த கரு மாணிக்க மா மலையை,
தெள் அருவி கொழிக்கும் திருமாலிருஞ்சோலை நின்ற
வள்ளலை வாள் நுதலாள் வணங்கித் தொழ வல்லள்கொலோ? 1834

பார்த்தனுக்கு அன்று, அருளி, பாரதத்து ஒரு தேர் முன் நின்று,
காத்தவன் தன்னை விண்ணோர் கரு மாணிக்க மா மலையை,
தீர்த்தனை, பூம் பொழில் சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற
மூர்த்தியைக் கைதொழவும் முடியும் கொல்-என் மொய் குழற்கே? 1835

வலம்புரி ஆழியனை, வரை ஆர் திரள் தோளன் தன்னை
புலம் புரி நூலவனை, பொழில் வேங்கட வேதியனை,
சிலம்பு இயல் ஆறு உடைய திருமாலிருஞ்சோலை நின்ற
நலம் திகழ் நாரணனை நணுகும் கொல்-என் நுதலே ? 1836

தேடற்கு அரியவனை, திருமாலிருஞ்சோலை நின்ற
ஆடல் பறவையனை அணி ஆய் இழை காணும் என்று
மாடக் கொடி மதிள் சூழ் மங்கையார் கலிகன்றி சொன்ன
பாடல் பனுவல் பத்தும் பயில்வார்க்கு இல்லை பாவங்களே. 1837

## திருக்கோஷ்டியூர்

எங்கள் எம் இறை எம் பிரான்,
இமையோர்க்கு நாயகன் ஏத்து அடியவர்
தங்கள் தம்மனத்துப் பிரியாது அருள் புரிவான்-
பொங்கு தண் அருவி புதம், செய்யப்
பொன்களே சிதற இலங்கு ஒளி
செங்கமலம் மலரும் - திருக்கோட்டியூரானே. 1838





*பரபக்தி இல்லாதவர்க்கும், இறைவன் இல்லை எனக் கருதி நினையாதவர்க்கும் அணுகக் கூடாதவன், மணம் வீசும் சோலைகள் சூழ்ந்த வடமதுரையில், கண்ணனாக அவதாரம் செய்தான். திருமாலிருஞ்சோலை மலையில் எழுந்தருளிய, தேசத்தார் வணங்கும் இத் சேவக நம்பியை, கெண்டை மீன் கண்களுடையை என் மகள் கண்டு கொள்ள வல்லவளா?* 1833

*கரிய மாணிக்க மலை போன்ற கண்ணன் பகாசுரப் பறவையின் வாயைப் பிளந்தான். குவலயாபீட யானையின் கொம்பை முறித்தான். வஞ்சகச் சகடாசுரனை வதைத்தான். தெளிந்த அருவிகள் கொட்டும் திருமாலிருஞ்சோலை மலை வள்ளலை, ஒளி முகமுடைய என் மகள் வணங்கித் தொழ வல்லவளா?* 1834

*நித்திய சூரிகள் தலைவனான மாணிக்க மலை போன்ற கண்ணன், பாரதப் போரில் அர்ச்சுனனுக்குத் தேரோட்டி முன் நின்று காத்தான். தூய வடிவினன் ஆன திருமாலிருஞ்சோலை மலைப் பிரானை, அடர்ந்த கூந்தலுடைய என் மகள் கை தொழக் கூடுமோ?* 1835

*வலம்புரிச் சங்கு, சக்கரம், மலை அனைய தோள்கள், புலன் கவரும் பூணூல், ஆகியவற்றுடன் கூடிய திருவேங்கடமுடையான் வேதப் பொருள் ஆனவன். நூபுர கங்கை பாயும் திருமாலிருஞ் சோலை மலையில் உள்ள, நன்மையாளன் ஸ்ரீமந் நாராயணனை, அழகிய முகமுடைய என் மகள் அணுக வல்லவளா?* 1836

*தன் முயற்சியால் தேடிக் காண முடியாத திருமாலிருஞ் சோலை மலைப் பிரான் பெரிய திருவடியை வாகனமாக உடையவன். இந்த இறைவனை ஆபரணங்கள் அணிந்த, தன் மகள் காணக் கூடுமோ எனத் தாய் உரைத்த பேச்சைத் திருமங்கை ஆழ்வார் அருளினார். இவற்றைப் பாடுபவர்க்குப் பாவங்கள் இல்லை.* 1837

## திருக்கோஷ்டியூர்

*அடியார்களால் துதிக்கப்படும் எம் இறைவனான நித்திய சூரிகள் தலைவன் அவர்கள் மனம் விட்டு பிரியாது அருள் செய்வான். பொங்கி ஓடும் குளிர்ந்த அருவி போல, மேகங்கள், பொன்னைச் சிந்துவதால், ஒளி உள்ள தாமரை மலரும் திருக் கோட்டியூரில் இப் பெருமான் எழுந்தருளி உள்ளான்.* 1838

எவ்வ நோய் தவிர்ப்பான்,எமக்கு இறை
இன் நகைத் துவர்வாய் நிலமகள்
செவ்வி தோய வல்லான் திரு மா மகட்கு இனியான் -
மௌவல் மாலை வண்டு ஆடும் மல்லிகை
மாலையோடும் அணைந்த மாருதம்
தெய்வநாற வரும் - திருக்கோட்டியூரானே. 1839

வெள்ளியான், கரியான், மணி நிற வண்ணன்
விண்ணவர் தமக்குஇறை எமக்கு
ஒள்ளியான், உயர்ந்தான், உலகு ஏழும் உண்டு உமிழ்ந்தான் -
துள்ளு நீர் மொண்டு கொண்டு, சாமரைக் கற்றை
சந்தனம் உந்தி வந்து அசை
தெள்ளு நீர்ப் புறவில் - திருக்கோட்டியூரானே. 1840

ஏறும் ஏறி, இலங்கும் ஒண் மழுப் பற்றும் ஈசற்கு
இசைந்து உடம்பில் ஓர்
கூறு தான் கொடுத்தான், குல மா மகட்கு இனியான் -
நாறு சண்பகம் மல்லிகை மலர் புல்கி
இன்இள வண்டு நல் நறும்
தேறல் வாய்மடுக்கும் - திருக்கோட்டியூரானே. 1841

வங்க மா கடல் வண்ணன், மா மணி வண்ணன்,
விண்ணவர் கோன் மது மலர்த்
தொங்கல் நீள் முடியான் நெடியான் படி கடந்தான் -
மங்குல் தோய் மணி மாட வெண் கொடி
மாக மீது உயர்ந்து ஏறி வான் உயர்
திங்கள் தான் அணவும் - திருக்கோட்டியூரானே. 1842

காவலன்-இலங்கைக்கு இறை கலங்கச்
சரம் செல உய்த்து மற்று அவன்
ஏ வலம் தவிர்த்தான்; என்னை ஆளுடை எம்பிரான் -
நாவலம் புவி மன்னர் வந்து வணங்க மால்
உறைகின்றது இங்கு என,
தேவர் வந்து இறைஞ்சும் - திருக்கோட்டியூரானே. 1843

கன்று கொண்டு விளங்கனி எறிந்து ஆநிரைக்கு
அழிவு என்று மா மழை
நின்று காத்து உகந்தான், நில மா மகட்கு இனியான் -
குன்றில் முல்லையின் வாசமும் குளிர்
மல்லிகை மணமும் அளைந்து இளந்
தென்றல் வந்து உலவும் - திருக்கோட்டியூரானே. 1844





எம் இறைவன் எமது துன்பமான நோய்களைப் போக்க, சிவந்த உதடுகளை உடைய பூமிப் பிராட்டியுடன் கூடிப் பெரிய பிராட்டிக்கு இனியவனாய் இருந்தவாறு அருள் செய்கிறான். வண்டுகள் ஆடும் மல்லிகை மாலையில் பட்ட காற்று தெய்வ மணம் வீசும் திருக்கோட்டியூரில் சிவபெருமான் எழுந்தருளினான். 1839

நித்திய சூரிகள் தலைவனானவன் கிருதயுகத்தில் வெண்மை நிறமுடையான். கலியுகத்தில் கறுமையன். துவாபரயுகத்தில் மணியின் பசுமை நிறம் கொண்டவன். தன்னழகை எனக்குக் காட்டியவன். ஏழுலகங்களையும் உண்டு, உமிழ்ந்து காத்த இப்பெருமான் திருக்கோட்டியூரில் உள்ளான். இவ்வூரில் துள்ளி ஓடும் தண்ணீர் சாமரைத் திரள்களையும் சந்தனத்தையும் அள்ளி வரும் புறங்கள் உள்ளன. 1840

காளையில் ஏறும் மழுஆயுதம் உடைய சிவனுக்குத் தன் உடலில் ஒரு பாகத்தைக் கொடுத்த பெரிய பிராட்டியின் நாயகன் திருக்கோட்டியூரில் எழுந்தருளி உள்ளான். இங்கே மணம் வீசும் செண்பகம், மல்லிகை முதலிய பூக்களில் உள்ள தேனை வண்டுகள் வாய் மடுத்து வாழும். 1841

மரக்கலன்கள் ஓடும் கடல் நிறத்தையும் நீலமணி நிறத்தையும் உடைய நித்திய சூரிகள் தலைவன், பூமாலை அணிந்தவனாய், முடி சூடி உள்ளான். பூமிப் பரப்பைத் திருவடிகளால் அளந்த திருமால் திருக்கோட்டியூரில் எழுந்தருளினான். மேகத்தைத் தொடும் மாடங்கள் உள்ள கொடிகள் சந்திரனை அணைத்தபடி ஓங்கி உள்ளன. 1842

இலங்கை மன்னன் இராவணன் கலங்கும்படி அம்புகளைத் தொடுத்து அவன் மிடுக்கை அழித்த இராமபிரான் அடியேனை அடிமை கொண்டான். இத்திருமால் எழுந்தருளிய திருக்கோட்டியூரில் நாவலம் தீவிலுள்ள மன்னர்களும் பரமன் முதலிய தேவர்களும் வந்து பணிந்து வணங்குவர். 1843

ஸ்ரீகிருஷ்ணன், கன்றாக வந்த அசுரனைக் கொண்டு, விளங்கனி அசுரனை உதிரும்படி கொன்றான். பசுக்களின் துன்பத்தைப் போக்க, மலையைக் குடையாகத் தூக்கிக் காத்து மகிழ்ந்தான். பூமி தேவியின் நாயகன் எழுந்தருளிய திருக்கோட்டியூரில் தென்றல் காற்று மலையின் மல்லிகைப் பூக்களில் தழுவி மணம் வீசும். 1844

பூங்குருந்து ஒசித்து, ஆனை காய்ந்து அரி மாச்
செகுத்து அடியேனைஆள் உகந்து
ஈங்கு என்னுள் புகுந்தான், இமையோர்கள் தம் பெருமான்-
தூங்கு தண் பலவின் கனி தொகு-
வாழையின் கனியொடு மாங்கனி
தேங்கு தண் புனல் சூழ் - திருக்கோட்டியூரானே. 1845

கோவை இன் தமிழ் பாடுவார், குடம் ஆடுவார்,
தட மா மலர்மிசை
மேவுநான்முகனில் விளங்கு புரி நூலர்,
மேவுநான்மறை வாணர், ஐவகை வேள்வி
ஆறு அங்கம் வல்லவர் தொழும்
தேவ தேவபிரான் -திருக்கோட்டியூரானே. 1846

ஆலுமா வலவன், கலிகன்றி மங்கையர்
தலைவன் அணி பொழில்,
சேல்கள் பாய் கழனித் திருக்கோட்டியூரானை,
நீலமா முகில் வண்ணனை, நெடுமாலை,
இன் தமிழால் நினைந்த இந்
நாலும் ஆறும் வல்லார்க்கு இடம் ஆகும் வான் உலகே. 1847

## பல திவ்விய தேசங்கள்

ஒரு நல் சுற்றம் எனக்கு உயிர், ஒண் பொருள்,
வரும் நல் தொல் கதி ஆகிய மைந்தனை
நெருநல் கண்டது நீர்மலை; இன்று போய்,
கரு நெல் சூழ் கண்ணமங்கையுள் காண்டுமே. 1848

பொன்னை, மா மணியை அணி ஆர்ந்தது ஓர்
மின்னைவேங்கடத்து உச்சியில் கண்டு போய்,
என்னை ஆளுடை ஈசனை, எம் பிரான்
தன்னை, யாம் சென்று காண்டும் தண்காவிலே. 1849

வேலை ஆல்இலைப் பள்ளி விரும்பிய
பாலை, ஆர் அமுதத்தினை, பைந் துழாய்
மாலை ஆலியில் கண்டு மகிழ்ந்து போய்,
ஞாலம் உன்னியைக் காண்டும் நாங்கூரிலே. 1850





பூங்குருந்தை முறித்துக் குவலயாபீட யானையை முடித்துக் கேசி என்னும் குதிரையைக் கொன்ற இமையோர் பெருமான் அடியேனை அடிமை கொள்ள விரும்பி என்னுள் புகுந்தான். இப் பெருமானின் திருக்கோட்டியூரில் மாம்பழங்கள், பலாப் பழங்கள், வாழைப் பழங்கள், தேங்காய்கள் ஆகியவைகளை இழுத்து ஓடும் ஆறுகள் சூழ்ந்துள்ளன. 1845

பிரமன் முதலியோர்க்குத் தலைவனான தேவபிரான் திருக்கோட்டியூரில் எழுந்தருளி உள்ளான். நான்முகனை விடவும் ஒளி கூடிய பூணூல் அணிந்த அந்தணர், இவ்வூரில், இக்கோவைத் திருமொழியைப் பாடுவார்; குடக்கூத்தாடுவார்; நால்மறை ஐவகை வேள்வி, ஆறங்கம் இவற்றில் வல்லவராய் பெருமானைத் தொழுவார். 1846

சோலைகளையும் மீன் ஓடும் வயல்களையும் உடைய திருக்கோட்டியூரில் எழுந்தருளிய பெருமானைக் குதிரை ஏற்றம் வல்ல திருமங்கை ஆழ்வார் பாடினார். இப்பாசுரங்களைப் பாடி நீல முகில்வண்ணனான திருமாலைத் துதிப்பவர்க்குப் பரமபதம் இருப்பிடம் ஆகும். 1847

## பல திவ்விய தேசங்கள்

அடியேனுக்கு இயல்பான உண்மைச் சுற்றமாய், ஆத்மாவாய், உறுதிப் பொருளைத் தருபவனாய் வீடுபேற்றை அளிப்பவனாய் உள்ள எம்பெருமானை நேற்று, திருநீர் மலையில் வணங்கினோம். இன்றோ திரண்ட நெற்பயிர் சூழ்ந்த திருக்கண்ணமங்கை சென்று வணங்குவோம். 1848

பொன்போல் பெருவிலையனாய், மணிபோல் அழகு மிகுந்தவனாய் , மின்னல் போல் ஒளி உள்ளவனாய் விளங்கும் பெருமானைத் திருவேங்கட மலை உச்சியில் முன்பு கண்டு தொழுதோம். அடியேனை ஆட்கொண்ட அந்த இறைவனை இன்று திருத்தண்காவிலே சென்று வணங்கக் கடவோம். 1849

பிரளயத்தில் ஆலிலையில கண் வளர்ந்த பால் போல் இனிய அமுதமான திருத்துழாய் மாலை அணிந்தவனை முன்பு திருவாலியில் கண்டு மகிழ்ந்தோம். உலக காரணனான அப்பெருமானை இன்று திருநாங்கூரில் சென்று வணங்குவோம். 1850

துளக்கம் இல் சுடரை, அவுணன் உடல்
பிளக்கும் மைந்தனைப் பேரில் வணங்கிப் போய்,
அளப்பு இல் ஆர் அமுதை அமரர்க்கு அருள்
விளக்கினைச் சென்று வெள்ளறைக் காண்டுமே. 1851

சுடலையில் சுடு நீறன் அமர்ந்தது ஓர்
நடலை தீர்த்தவனை நறையூர்க் கண்டு என்
உடலையுள்புகுந்து உள்ளம் உருக்கி, உண்
விடலையைச் சென்று காண்டும் மெய்யத்துள்ளே. 1852

வானை ஆர் அமுதம் தந்த வள்ளலை,
தேனை நீள் வயல் சேறையில் கண்டு போய்,
ஆனை வாட்டி அருளும் அமரர் தம்
கோனை, யாம் குடந்தைச் சென்று காண்டுமே. 1853

கூந்தலார் மகிழ் கோவலன் ஆய், வெண்ணெய்
மாந்து அழுந்தையில் கண்டு மகிழ்ந்து போய்,
பாந்தள் பாழியில் பள்ளி விரும்பிய
வேந்தனைச் சென்று காண்டும் வெஃகாவுளே. 1854

பத்தர் ஆவியைப் பால் மதியை அணித்
தொத்தை மாலிருஞ் சோலைத் தொழுது போய்,
முத்தினை மணியை மணி மாணிக்க
வித்தினைச் சென்று விண்ணகர்க் காண்டுமே. 1855

கம்ப மா களிறு அஞ்சிக் கலங்க ஓர்
கொம்பு கொண்ட குரை கழல் கூத்தனை,
கொம்பு உலாம் பொழில் கோட்டியூர்க் கண்டு போய்,
நம்பனைச் சென்று காண்டும் நாவாயுளே. 1856

பெற்றம் ஆளியைப் பேரில் மணாளனை,
கற்ற நூல் கலிகன்றி உரை செய்த
சொல் திறம் இவை சொல்லிய தொண்டர்கட்கு
அற்றம் இல்லை; அண்டம் அவர்க்கு ஆட்சியே. 1857





*இரணியன் உடலைப் பிளந்த மிடுக்குடைய நரசிம்மன், நிலையான ஒளி மயமானவன்; திருப்பேர் நகரிலே அடியேன் கண்டு வணங்கிய அப்பெருமான் ஆரா அமுதாய், நித்திய சூரிகளின் விளக்காய், அளவற்ற அருள் வடிவானவன். அப்பெருமானைத் திரு வெள்ளறையில் போய்க் கண்டு தொழுவோம்.* **1851**

*சுடுகாட்டுச் சாம்பல் பூசும் சிவனின் கொடிய துன்பத்தைப் போக்கி அருள் செய்த திருமாலை, முன்பு திருநறையூரிலே சேவித்தோம். என் உடலில் புகுந்து இதயத்தை உருக்கி உண்கின்ற சிறப்புடையவனைத் திருமெய்யத்தில் போய், சேவிக்கக் கடவோம்.* **1852**

*தேவர்களுக்கு அமுதத்தை ஈந்த வள்ளலான தேனின்றும் இனிய பிரானை நீண்ட வயல்களுடைய திருச்சேறையில் முன்பு கண்டு தொழுதோம். குவலயாபீட யானையைக் கொன்று அருள் செய்த அமரர் கோனைத் திருக்குடந்தையில் கண்டு வணங்குவோம்* **1853**

*கூந்தலுடைய இடைச்சிகள் மகிழக் கோவலனாய் வெண்ணெய்யை உண்டவனைத் திருவழுந்தூரில் முன்பு வணங்கினோம். திருவனந்தாழ்வான் மீது கண் வளர்ந்த வேந்தனை இன்று திருவெஃகாவிலே சென்று வணங்கக் கடவோம்.* **1854**

*பக்தர்களின் ஆத்மாவாய், தூய சந்திரனை ஒத்த தண்ணியனாய் நீல மணி போன்ற திருமாலைத் திருமாலிருஞ் சோலை மலையிலே கண்டு தொழுதோம். முத்தாய், மணியாய் மாணிக்கமாய் உள்ள உலககாரணனை திருவிண்ணகரிலே கண்டு வணங்குவோம்.* **1855**

*நடுக்கம் விளைவித்த குவலயாபீட யானை அஞ்சும்படி, அதன் கொம்பை முறித்த வீரக் கழல் அணிந்த கூத்தனாகிய கண்ணனை, சோலைகள் தழைத்த திருக்கோட்டியூரிலே முன்பு கண்டு வணங்கினோம். அடியார்களின் காவலன் ஆன அவனை இன்று திருநாவாயிலே போய்க் கண்டு தொழுவோம்.* **1856**

*பசுக்களைப் பராமரிக்கும் மணவாளப் பிள்ளையான திருப்பேர் நகர் எம்பெருமானை, நூல்களைக் கற்ற கலிகன்றி ஆழ்வார், இப்பாசுரங்களில் பாடினார். இவற்றைச் சொல்ல வல்ல தொண்டர்களுக்கு இறை அநுபவத்தில் குறை உண்டாகாது; பரமபதம் அவர்கள் இட்ட வழக்காகும்.* **1857**

## இராமாவதார ஈடுபாடு –I

### 'பொங்கத்தம் பொங்கோ' - தோற்ற அரக்கர் அபயம் கேட்டு ஆடுதல்.

இரக்கம் இன்றி எம்கோன் செய்த தீமை
இம்மையே எமக்கு எய்திற்றுக் காணீர்;
பரக்க யாம் இன்று உரைத்து என்? இராவணன்
பட்டனன்; இனி யாவர்க்கு உரைக்கோம் ?
குரக்கு நாயகர்காள்! இளங்கோவே !
கோல வல் வில் இராமபிரானே !
அரக்கர் ஆடு அழைப்பார் இல்லை; நாங்கள்
அஞ்சினோம் - தடம் பொங்கத்தம் பொங்கோ. 1858

பத்து நீள் முடியும் அவற்று இரட்டிப்
பாழித் தோளும் படைத்தவன் செல்வம்
சித்தம் மங்கையர்பால் வைத்துக் கெட்டான்;
செய்வது ஒன்று அறியா அடியோங்கள்
ஒத்த தோள் இரண்டும் ஒரு முடியும்
ஒருவர் தம் திறத்தோம் அன்றி வாழ்ந்தோம்;
அத்த ! எம் பெருமான் ! எம்மைக் கொல்லேல்;
அஞ்சினோம் -தடம்பொங்கத்தம் பொங்கோ. 1859

தண்டகாரணியம் புகுந்து அன்று,
தையலை, தகவிலி எம் கோமான்
கொண்டுபோந்து, கெட்டான்; எமக்கு இங்கு ஓர்
குற்றம்இல்லை ;கொல்லேல், குல வேந்தே !
பெண்டிரால் கெடும்இக் குடி தன்னைப்
பேசுகின்றது என்? தாசரதீ !உன்
அண்டவாணர் உகப்பதே செய்தாய் ;
அஞ்சினோம் -தடம் பொங்கத்தம் பொங்கோ. 1860

எஞ்சல் இல் இலங்கைக்கு இறை எம்கோன்
தன்னை முன் பணிந்து எங்கள் கண்முகப்பே
நஞ்சு தான் அரக்கர் குடிக்கு என்று
நங்கையை அவன் தம்பியே சொன்னான்;
விஞ்சை வானவர் வேண்டிற்றே பட்டோம்;
வேரி வார் பொழில் மா மயில் அன்ன
அஞ்சு அல் ஓதியைக் கொண்டு நடமின்;
அஞ்சினோம் - தடம் பொங்கத்தம் பொங்கோ. 1861





இராமாவதார ஈடுபாடு –I

'பொங்கத்தம் பொங்கோ' - தோற்ற அரக்கர் அபயம் கேட்டு ஆடுதல்

எங்கள் அரசன் இராவணன் இரக்கமின்றிச் செய்த தீமை இப்பிறவியிலேயே எங்களுக்குப் பலித்தது. அதை விளக்கி என்ன பயன்! இராவணனோ இறந்தான்; இனி யாரிடம் பேசுவோம்? வானரத் தலைவர்களே! இளையபெருமானே! அழகிய வில் ஏந்திய இராம பிரானே! அரக்கர் குலத்தில் வெற்றி கூற யாருமில்லை; அஞ்சினோம். உங்கள் வெற்றியை முழக்கும் 'பொங்கத்தம் பொங்கோ' என்னும் பறை ஒலி கேட்பதற்கு ஒத்ததே ஆகும். 1858

பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் உடைய இராவணன், பெண்களிடத்தே மனம் செலுத்தித் தன் செல்வத்தை அழித்துக் கொண்டான். அடியோங்கள், இனிச் செய்வது அறியோம். இருதோள்களும் திருமுடியும் கொண்ட ஒப்பற்ற இராமபிரானைப் பெறாததால் கெட்டோம். எந்தையே! எம் பெருமானே! எங்களைக் கொல்ல வேண்டாம்; அஞ்சினோம் 'பொங்கத்தம் பொங்கோ' என்னும் உங்கள் வெற்றி முழக்கம் பொருத்தம் உடையதே. 1859

பண்பே இல்லா எங்கள் அரசன் அன்று தண்டகாரணியம் புகுந்து, சீதாப் பிராட்டியைக் கொண்டு போய், தன்னை அழித்துக் கொண்டான். இதில் எமக்கு ஒரு குற்றமும் இல்லை. நீதி நிலைத்த குலத்து வேந்தே! தசரத குமாரனே! எங்களைக் கொல்ல வேண்டாம். பெண்ணாசையால் கெட்ட அரக்கர் குடியைப் பேசி என்ன பயன்! தேவர்களுக்கு உகந்ததைச் செய்த உனக்கு அஞ்சினோம். 'பொங்கத்தம் பொங்கோ' என்னும் முழக்கத்தை ஏற்றுச் சரண் அடைகிறோம். 1860

குற்றமற்ற இலங்கைக்கு மன்னனான இராவணன் காலில் அவன் தம்பி வீடணன் நாங்கள் காணப் பணிந்து 'நங்கை சீதை அரக்கர் குடிக்கு நஞ்சு' என்று கூறினான். விஞ்சையர் முதலான தேவர்கள் வேண்டிய படி நாங்கள் கெட்டோம். மணம் வீசும் சோலையிலுள்ள மயில் போன்றவளும் இருண்ட கூந்தலுடையவளும் ஆன பிராட்டியை அழைத்துக் கொள்ளுங்கள். அஞ்சும், நாங்கள் 'பொங்கத்தம் பொங்கோ' என்று உறுதியாய் முழங்குகிறோம். 1861

செம்பொன் நீள் முடி எங்கள் இராவணன்
சீதை என்பது ஓர் தெய்வம் கொணர்ந்து,
வம்பு உலாம் கடி காவில் சிறையா
வைத்ததே குற்றம் ஆயிற்றுக் காணீர்;
கும்பனோடு, நிகும்பனும் பட்டான்;
கூற்றம் மானிடமாய் வந்து தோன்றி,
அம்பினால் எம்மைக் கொன்றிடுகின்றது;
அஞ்சினோம் - தடம் பொங்கத்தம் பொங்கோ. 1862

ஓத மா கடலைக் கடந்து ஏறி,
உயர்கொள் மாக் கடி காவை இறுத்து
காதல் மக்களும் சுற்றமும் கொன்று
கடி இலங்கை மலங்களித்து
தூது வந்த குரங்குக்கே உங்கள்
தோன்றல் தேவியை விட்டுக் கொடாதே
ஆதர் நின்று படுகின்றது; அந்தோ!
அஞ்சினோம் - தடம் பொங்கத்தம் பொங்கோ. 1863

தாழம் இன்றி முந்நீரை அஞ்ஞான்று
தகைந்தே கண்டு வஞ்சி நுண் மருங்குல்
மாழை மான் மட நோக்கியை விட்டு,
வாழகில்லா மதி இல் மனத்தானை
ஏழையை இலங்கைக்கு இறை தன்னை,
எங்களை ஒழியக் கொலையவனை,
சூழுமா நினை; மா மணி வண்ணா!
சொல்லினோம் - தடம் பொங்கத்தம் பொங்கோ. 1864

மனம் கொண்டுஏறும் மண்டோதரி முதலா
அம் கயல் கண்ணினார்கள் இருப்ப,
தனம்கொள் மென் முலை நோக்கம் ஒழிந்து,
தஞ்சமே சில தாபதர் என்று,
புனம்கொள் மென் மயிலைச் சிறைவைத்த
புன்மையாளன் நெஞ்சில் புக எய்த,
அனங்கன் அன்ன, திண் தோள் எம் இராமற்கு
அஞ்சினோம் - தடம் பொங்ககத்தம் பொங்கோ. 1865

புரங்கள் மூன்றும் ஓர் மாத்திரைப் போதில்
பொங்கு எரிக்கு இரை கண்டவன் அம்பின்
சரங்களே,கொடிது ஆய், அடுகின்ற;
சாம்பவான் உடன்நிற்கத் தொழுதோம்;
இரங்கு நீ எமக்கு; எந்தை பிரானே!
இலங்கு வெம் கதிரோன் தன்சிறுவா!
குரங்குகட்கு அரசே! எம்மைக் கொல்லேல்;
கூறினோம் - தடம் பொங்கத்தம் பொங்கோ. 1866





பொன் முடி சூடிய எங்கள் இராவணன், சீதை என்னும் தெய்வத்தைக் கொண்டு வந்து மணம் வீசும் அசோக வனத்தில் சிறை வைத்ததே மிகப்பெரிய குற்றமாயிற்று. அதனால் கும்பனும் நிகும்பனும் மாண்டனர். யமனே மனித வடிவில் தோன்றி அம்பினால், எங்களைக் கொல்கின்றான். நாங்கள் அஞ்சி அடைக்கலம் வேண்டி, ‘பொங்கத்தம் பொங்கோ’ என்று கோஷம் இடுகிறோம். 1862

அலைகடலைத் தாண்டிக் கரை ஏறி, மணம் வீசும் அசோகவனம் புகுந்த அனுமான் அக்க குமாரன் முதலிய இராவணின் அன்புப் பிள்ளைகளைக் கொன்றான். இலங்கைக்குத் தீ வைத்தான். அவனைத் தூதனாக ஏற்றுப் பெருமானின் தேவியை விட்டுக் கொடாத நாங்கள் கெட்டு, இன்று துன்புறுகிறோம். ஐயோ! அஞ்சினோம். ‘பொங்கத்தம் பொங்கோ’ என்று ஒலி எழுப்பி அடைக்கலம் அடைகிறோம். 1863

மாமணிவண்ணா! அன்று, நீ கடல் மீது விரைவில் அணை கட்டியதைக் கண்டதுமே, உன் வலிமையை உணராத மதி கெட்ட இலங்கை மன்னன், வஞ்சி இடையையும் மான் பார்வையும் உடைய பிராட்டியை உன்னிடத்தே சேர்ப்பித்து வாழத் தெரிந்து கொள்ள வில்லையே! குற்றமற்ற எங்களை விட்டு விட்டுக் கொல்லத் தகுந்த அவனை மட்டும் சூழ்ந்து கொள் என்று கூறுகிறோம். அபயம் வேண்டிப் ‘பொங்கத்தம் பொங்கோ’ என்று கூத்தாடுகிறோம். 1864

மனத்தொடு பொருந்தும் மண்டோதரி முதலிய, கயற்கண் களுடைய மனைவி மார்கள் இருந்தும், தன் செல்வமான அவர்கள் மார்புடன் பொருந்தாத இராவணன், காட்டிலே மயில் போன்று இருந்த பிராட்டியைக் கவர்ந்தானே! அவருக்கு அடைக்கலம் தருவார் தவசிகள்தானே என நினைத்தானோ அந்த நீசன்! இந்த இராவணன் நெஞ்சிலே அம்பெய்ய வல்ல மன்மதனை ஒத்த இராமபிரானுக்கு நாங்கள் அஞ்சினோம். அபயம் வேண்டிப் பொங்கத்தம் பொங்கோ’ என ஒலிக்கிறோம். 1865

இமைப் பொழுதில் திரிபுரங்களையும் தீக்கிரையாக்கிய சிவனின் அம்புகளை விடவும் இராம பிரானின் அம்புகள் கொடியதாய், நலிகின்றன. உடன் நிற்கும் சாம்பவானுடன் கூடிய உன்னைத் தொழுதோம். சூரியன் புதல்வனான சுக்ரீவனே! வானரர் தலைவா! எங்களிடத்தே இரக்கம் காட்டுக. எங்களைக் கொல்லல் ஆகாது என்று கூறி அபயம் கேட்கிறோம். ‘பொங்கத்தம் பொங்கோ’ என்று கூத்தாடுகிறோம். 1866

அங்கு அவ் வானவர்க்கு ஆகுலம் தீர,
அணி இலங்கைஅழித்தவன் தன்னை,
பொங்கு மா வலவன், கலிகன்றி
புகன்ற பொங்கத்தம் கொண்டு, இவ் உலகினில்
எங்கும் பாடி நின்று, ஆடுமின், தொண்டீர்!
இம்மையே இடர் இல்லை; இறந்தால்,
தங்கும் ஊர் அண்டமே; கண்டு கொண்மின்;
சாற்றினோம் - தடம் பொங்கத்தம் பொங்கோ. 1867

## இராமாவதார ஈடுபாடு –௨

### 'குழமணி தூரம் - தோற்ற அரக்கர் அபயம் வேண்டி ஆடுதல்

ஏத்துகின்றோம் நாத் தழும்ப, இராமன் திருநாமம்;
சோத்தம் நம்பீ! சுக்கிரீவா! உம்மைத் தொழுகின்றோம்;
வார்த்தை பேசீர், எம்மை உங்கள் வானரம் கொல்லாமே;
கூத்தர் போல ஆடுகின்றோம் -குழமணிதூரமே. 1868

எம்பிரான் என்னை ஆள்வாய் என்று அலற்றாதே.
அம்பின் வாய்ப்பட்டு, ஆற்றகில்லாது இந்திரசித்து அழிந்தான்;
நம்பி அநுமா!சுக்கிரீவா! அங்கதனே! நளனே!
கும்பகர்ணன் பட்டுப்போனான் -குழமணிதூரமே. 1869

ஞாலம் ஆளும்உங்கள் கோமான் எங்கள் இராவணற்குக்
காலன் ஆகி வந்தவா கண்டு அஞ்சிக் கரு முகில்போல்
நீலன் வாழ்க! சுடேணன் வாழ்க! அங்கதன் வாழ்க!என்று
கோலம் ஆக ஆடுகின்றோம் -குழமணிதூரமே. 1870

மணங்கள் நாறும் வார் குழலார் மாதர்கள் ஆதரத்தைப்
புணர்ந்த சிந்தைப் புன்மையாளன் பொன்றவரி சிலையால்,
கணங்கள் உண்ண, வாளி ஆண்ட காவலனுக்கு இளையோன்
குணங்கள் பாடி ஆடுகின்றோம் -குழமணிதூரமே. 1871

வென்றி தந்தோம்;மானம் வேண்டோம்; தானம் எமக்கு ஆக
இன்று தம்மின் எங்கள் வாழ்நாள்; எம் பெருமான் தமர்காள்!
நின்று காணீர் கண்கள் ஆர; நீர் எம்மைக் கொல்லாதே.
குன்று போல ஆடுகின்றோம் -குழ மணிதூரமே. 1872





தொண்டர்களே! தேவர்கள் துன்பம் தீர இலங்கையை அழித்த இராமனை 'ஆடல்மா' என்னும் குதிரையை உடைய கலிகன்றி 'பொங்கத்தம் பொங்கோ' என்னும் வெற்றிக் கூத்தாடும் பாசுரங்களைப் பாடினார். நீங்களும் இவற்றைப் பாடி ஆடுங்கள். 'இம்மையில் துன்பம் இல்லை. இறப்புக்குப் பின் பரமபதமே' என்று கண்டு கொள்ளுங்கள் 'பொங்கத்தம் பொங்கோ' என்பது உங்களுக்கு ஒத்ததே. **1867**

## இராமாவதார ஈடுபாடு –௨

### 'குழமணி தூரம்- தோற்ற அரக்கர் அபயம் வேண்டி ஆடுதல்

இராமன் திருநாமங்களை நாத் தழும்பு ஏறும்படி நாங்கள் துதிக்கிறோம். நம்பியான சுக்ரீவரே! தோற்றது தோன்ற உம்மைத் தொழுகிறோம். வானரங்கள் எங்களைக் கொல்லாதபடி பரிந்துரைக்க வேண்டும். குழமணி தூரம் என்னும் தோற்றோர் ஆட்டத்தைக் கூத்தர் போலே நாங்கள் ஆடுகிறோம். **1868**

இந்திரசித்தன், "எம்பிரானே! என்னை ஆட்கொள்க" என்று பணியாமல் அம்பின் வாய்ப்பட்டு ஆற்றாது அழிந்தான். நம்பியாகிய அனுமனே; சுக்ரீவா! அங்கதா! நளனே! எங்கள் கும்பகர்ணனும் இறந்தான். தோற்றவர் கூத்தான குழமணி தூரத்தை நாங்கள் ஆடுகிறோம். **1869**

உலகாளும் அரசரான உங்கள் இராமபிரான் எங்கள் இராவணனுக்கு யமனாக வந்ததைக் கண்டு அஞ்சினோம். கருத்த மேகம் போன்ற நீலன், சுடேணன், அங்கதன் மூவரும் வாழ்க! என்று பாடிக் குழமணிதூரம் ஆடுகிறோம். **1870**

மணம் வீசும் கூந்தல் பெண்கள் மேல் வைத்த ஆசையால் இராவணன் அழியும் படி ஆயிற்று. அவன் உடலை அம்பால் துளைத்துப் பேய்க் கணங்கள் தின்னும்படி செய்த, இராமனின் தம்பியான இலக்குவரே! உம் குணங்களைப் பாடி, நாங்கள் 'குழமணி தூரம்' என்னும் கூத்தை ஆடுகிறோம். **1871**

எம்பெருமானுக்கு உற்றோரே! வெற்றியை உங்களுக்குத் தந்து விட்டோம். எங்கள் மானத்தைக் கைவிட்டோம். இன்று எங்களைக் கொல்லாமல், வாழ்நாளைத் தாருங்கள். எங்கள் தோல்வியை ஏற்று, நாங்கள் குன்றுகள் போல் நின்று ஆடும் 'குழமணிதூரம்' என்னும் கூத்தை நீங்கள் கண்களாரக் காணுங்கள். **1872**

கல்லின் முந்நீர் மாற்றி வந்து,காவல் கடந்து இலங்கை
அல்லல் செய்தான் உங்கள் கோமான் எம்மை; அமர்க்களத்து
வெல்லகில்லாது அஞ்சினோம்காண்; வெம் கதிரோன் சிறுவா!
கொல்லவேண்டா ஆடுகின்றோம் -குழமணிதூரமே. 1873

மாற்றம் ஆவது இத்தனையே; வம்மின் அரக்கர் உள்ளீர்!
சீற்றம் நும்மேல் தீர வேண்டின் சேவகம் பேசாதே.
ஆற்றல் சான்ற தொல் பிறப்பின் அநுமனை வாழ்க என்று
கூற்றம் அன்னார் காண ஆடீர் -குழமணிதூரமே. 1874

கவள யானை, பாய் புரவி, தேரோடு அரக்கர் எல்லாம்
துவள வென்ற வென்றியாளன் தன் தமர் கொல்லாமே.
தவள மாடம்நீடு அயோத்தி காவலன் தன்சிறுவன்
குவளை வண்ணன் காண ஆடீர் -குழமணிதூரமே. 1875

ஏடு ஒத்து ஏந்தும் நீள் இலை வேல் எங்கள் இராவணனார்
ஓடிப்போனார்; நாங்கள் எய்த்தோம்; உய்வது ஓர் காரணத்தால்,
சூடிப் போந்தோம் உங்கள் கோமான் ஆணை; தொடரேன்மின்;
கூடிக் கூடி ஆடுகின்றோம் -குழமணிதூரமே. 1876

வென்ற தொல் சீர்த் தென் இலங்கை வெம் சமத்து, அன்று அரக்கர்
குன்றம் அன்னார் ஆடி உய்ந்த குழமணிதூரத்தைக்
கன்றி நெய்ந்நீர் நின்ற வேல் கைக் கலியன் ஒலிமாலை
ஒன்றும் ஒன்றும் ஐந்தும் மூன்றும் பாடி நின்று ஆடுமினே. 1877

### கண்ணனை முலைப் பால் அருந்த அழைத்தல்

சந்தமலர்க் குழல் தாழத் தான் உகந்து ஓடித் தனியே
வந்து என் முலைத்தடம் தன்னை வாங்கி நின் வாயில் மடுத்து
நந்தன் பெறப் பெற்ற நம்பீ நான் உகந்து உண்ணும் அமுதே!
எந்தை பெருமானே! உண்ணாய்; என் அம்மம் சேமம் உண்ணாயே. 1878

வங்க மறி கடல் வண்ணா! மாமுகிலே ஒக்கும் நம்பீ!
செங்கண் நெடிய திருவே! செங்கமலம் புரை வாயா!
கொங்கை சுரந்திட உன்னைக்கூவியும் காணாதிருந்தேன்;
எங்கு இருந்து ஆயர்களோடும் என் விளையாடுகின்றாயே ? 1879





உங்கள் மன்னரான இராமன் குன்றுகளால் கடல் மீது அணை கட்டி, இலங்கை அரணைக் கடந்து எங்களைப் போரில் அல்லல் செய்தார். வெங்கதிர் உடைய சூரியனின் புதல்வனான சுக்ரீவரே! அஞ்சினோம்; எங்களைக் கொல்ல வேண்டாம். ‘குழமணிதூரம்’ என்னும் கூத்தை ஆடுகிறோம். 1873

அரக்கர்களே! நீங்களும் எங்களைப் போல் சரணம் அடையுங்கள். உய்வுக்கு இதன்றி வேறில்லை. வானரர் சீற்றம் தீர வேண்டுமாயின் உங்கள் கர்வப் பேச்சை விட்டு, ‘ஆற்றல்மிக்க அனுமன் வாழ்க’ என்று பாடுங்கள். யமனைப் போன்ற வானரர் காண, ‘குழமணிதூரம்’ என்னும் கூத்தை ஆடுங்கள். 1874

யானைகள், குதிரைகள், தேர்கள் ஆகியவற்றுடன் அரக்கர் அழியும் படி வெற்றி கொணட இராம பக்தர்களான வானரர் கொல்லாதபடி அடைக்கலம் புகுவோம். உயர்ந்த மாடங்கள் உள்ள அயோத்தியின் சக்கரவர்த்தித் திருமகனும், குவளை நிறமுடையவனும் ஆன இராமபிரான் காணும்படி ‘குழமணிதூரம்’ ஆடுவோம். 1875

பனை ஏட்டை ஒத்த இலை போன்ற வேல் ஏந்திய எங்கள் இராவணனார் போரில் தோற்றார். நாங்களோ இளைத்தோம். உய்வதற்கோ வழி இல்லை. உம் அரசர் இராமனின் ஆணைக்குப் பணிந்தோம். எங்களைத் தொடர்ந்து கொல்லாதீர்! குழமணி தூரம் என்னும் கூத்தாடி அடைக்கலம் புகுகிறோம். 1876

இலங்கைப் போரில் மலைபோன்ற அரக்கர் தம் தோல்வியை ஏற்றுக் ‘குழமணிதூரம்’ என்னும் கூத்தாடியதை வேலேந்திய கலியன் பாசுரங்களில் பாடினார். நீங்களும் உய்வடைய. இவற்றைப் பாடி ஆடுங்கள். 1877

### கண்ணனை முலைப் பால் அருந்த அழைத்தல்

நந்தகோபர் உன்னை மகனாக அடையும் பேற்றை அளித்த நம்பியே! எனக்கு உகந்த அமுதே! என் கண்ணனே! பூச்சூடிய உன் தலைமயிர் தாழ, நீ, தனியே ஓடிவந்து என் மார்புகளில் வாய் பொருந்தி, பால் அருந்த வேண்டும். தாய்ப்பால் உனக்கு நன்மை தருவது. ஆகவே பால் பருக வருவாய். 1878

கப்பல்கள் ஓடும் கடல் நிறமுடைய மேகவண்ணா! செங்கண் கொண்ட நம்பீ! செங்கமலப் பூப் போன்ற திருமுகம் உடையவனே! என் மார்பில் பால் சுரந்து வழிந்தும், உன்னை அழைத்தும் நீ வராமல், இடைப் பிள்ளைகளுடன் கூடி இருந்து என்ன விளையாட்டு வேண்டும்? பால் பருக ஓடி வாராய். 1879

திருவில் பொலிந்த எழில் ஆர் ஆயர் தம் பிள்ளைகளோடு
தெருவில் திளைக்கின்ற நம்பீ செய்கின்ற தீமைகள் கண்டிட்டு
உருகி, என் கொங்கையின் தீம் பால் ஓட்டந்து பாய்ந்திடுகின்ற!
மருவிக் குடங்கால் இருந்து வாய் முலை உண்ண நீ வாராய். 1880

மக்கள்பெறு தவம் போலும் வையத்து வாழும் மடவார்,
மக்கள் பிறர் கண்ணுக்கு ஒக்கும் முதல்வா! மதக் களிறு அன்னாய்!
செக்கர் இளம்பிறை தன்னை வாங்கி நின் கையில் தருவன்;
ஒக்கலைமேல் இருந்து அம்மம் உகந்து இனிது உண்ண நீ வாராய். 1881

மைத்த கருங் குஞ்சி மைந்தா! மா மருது ஊடு நடந்தாய்!
வித்தகனே விரையாதே; வெண்ணெய் விழுங்கும் விகிர்தா!
இத்தனை போது அன்றி, என் தன் கொங்கை சுரந்து இருக்ககில்லா;
உத்தமனே! அம்மம் உண்ணாய்! உலகு அளந்தாய்! அம்மம் உண்ணாய். 1882

பிள்ளைகள் செய்வன செய்யாய்; பேசின் பெரிதும் வலியை;
கள்ளம் மனத்தில் உடையை; காணவே தீமைகள் செய்தி;
உள்ளம் உருகி, என் கொங்கை ஓட்டந்து பாய்ந்திடுகின்ற;
பள்ளிக்குறிப்புச் செய்யாதே; பால் அமுது உண்ண நீ வாராய். 1883

தன் மகன் ஆக வன் பேய்ச்சி தான் முலை உண்ணக் கொடுக்க
வன் மகன் ஆய், அவள் ஆவி வாங்கி முலை உண்ட நம்பீ!
நன்மகள் ஆய்மகளோடு நானில மங்கை மணாளா!
என் மகனே! அம்மம் உண்ணாய்; என் அம்மம் சேமமும் உண்ணாயே. 1884

உந்தம் அடிகள் முனிவர் உன்னை நான் என் கையில் கோலால்
நொந்திட மோதவும் கில்லேன்; நுங்கள் தம் ஆ நிரை எல்லாம்
வந்து புகுதரும் போது வானிடைத் தெய்வங்கள் காண,
அந்திஅம் போது அங்கு நில்லேல், ஆழி அம் கையனே! வாராய். 1885

பெற்றத் தலைவன், எம் கோமான் பேர் அருளாளன் மதலாய்!
சுற்றக் குழாத்து இளங் கோவே! தோன்றிய தொல் புகழாளா!
கற்று இனம் தோறும் மறித்து, கானம் திரிந்த களிறே!
எற்றுக்கு என் அம்மம் உண்ணாதே. எம் பெருமான் இருந்தாயே? 1886





செல்வமும் அழகும் நிறைந்த இடைப் பிள்ளைகளுடன் தெருவில் விளையாடும் நம்பியே! நீ செய்யும் விளையாட்டுக் களைக் கண்டு மகிழ்ந்ததால் என் முலைப் பால், தானே சுரந்து வெள்ளமிட்டு பாழாகிறது. ஆகவே என் மடியில் அமர்ந்து முலைப் பால் அருந்த நீ வர வேண்டும். **1880**

நான் தவம் செய்து பெற்ற வடிவமாக, நாட்டு மாதர்களுக்கும் மற்றவர்க்கும் தோன்றும், முதல்வனே! மதமுடைய யானை போன்றவனே! சிவந்த வானில் உள்ள சந்திரனைக் கூட, உன் கையிலே தருவேன். ஓடாமல் என் இடுப்பில் அமர்ந்து முலைப் பால் அருந்த, நீ வர வேண்டும். **1881**

மை போன்று இருண்ட தலை மயிருடைய மைந்தனே! மருத மரங்களின் இடையே நடந்தவனே! மெள்ள நடந்து வெண்ணெய் உண்டவனே! என் முலைகளிலிருந்து பால் சுரந்து இத்தனை போதும் பொறுத்தது. இனி பொறுக்கலாகாது. உத்தமா! உலகை அளந்தவனே! திருமுலைப் பால் அருந்த வருவாய். **1882**

மற்றக் குழந்தைகள் செய்வதை நீ செய்வதில்லை. உன்னைப் பற்றிப் பேசினால், உன் வலிமையையும் கள்ளத்தனத்தையும் பற்றித் தான் பேச வேண்டும். பிறர் காணக் குறும்புகள் செய்யும் உன்னால் என் நெஞ்சு உருகி, முலைப்பால் சுரந்து பெருகுகிறது. தூங்குவது போலப் பாசாங்கு செய்யாமல் பால் குடிக்க வா. **1883**

பெற்ற தாய் போல நடித்துக் கொண்டு முலை கொடுக்க வந்த பூதனைப் பேயின் உயிரை உண்ட நம்பீ! நங்கையான நம்பின்னைக்கும் பூமிப் பிராட்டிக்கும் மணாளனே! என் மகனே! பால் அருந்தவா. உனக்கு நன்மை உண்டாகட்டும். **1884**

நீ தீமைகள் செய்தால் உன் தந்தை கோபிப்பார். கோலால் உன்னை நான் அடிக்கவும் சக்தியற்றவள். மாலை வேளையில் உங்கள் பசுக் கூட்டங்கள் மேய்ந்து விட்டுத் திரும்பும் பொழுது, வானத்துத் தெய்வங்கள் காணும்படி நாற்சந்தியிலே நில்லாதே. சக்கரத்தை ஏந்திய கையனே! கண்ணா! அருகே வா. **1885**

பசுக்களின் தலைவனும் என் சுவாமியும் ஆன அருளுடைய நந்த கோபர் திருமகனே! சுற்றத்தார்க்கு இளவரசாய் உள்ளவனே! எங்கும் பரவிய புகழ் உடையவனே! காடுதோறும் பசு மேய்த்துத் திரியும் யானை போன்றவனே! நீ ஏன் என் முலைப் பால் அருந்தாமல் இருந்தாய்? **1886**

இம்மை இடர் கெட வேண்டி, ஏந்து எழில் தோள் கலிகன்றி
செம்மைப் பனுவல் நூல்கொண்டு, செங்கண் நெடியவன் தன்னை,
அம்மம் உண் என்று உரைக்கின்ற பாடல் இவை ஐந்தும் ஐந்தும்
மெய்ம்மை மனத்து வைத்து ஏத்த விண்ணவர் ஆகலும் ஆமே. 1887

### கண்ணனைக் கைகொட்டி விளையாடும்படி கூறல்

பூங் கோதை ஆய்ச்சி கடை வெண்ணெய் புக்கு உண்ண,
ஆங்கு அவள் ஆர்த்துப் புடைக்க, புடையுண்டு,
ஏங்கி இருந்து, சிணுங்கி விளையாடும்
ஓங்கு ஓத வண்ணனே ! சப்பாணி;
ஒளி மணி வண்ணனே ! சப்பாணி. 1888

தாயர் மனங்கள் தடிப்ப, தயிர் நெய் உண்டு
ஏய் எம் பிராக்கள்! இரு நிலத்து எங்கள் தம்
ஆயர் அழக!அடிகள் அரவிந்த
வாயவனே! கொட்டாய், சப்பாணி;
மால் வண்ணனே! கொட்டாய் சப்பாணி. 1889

தாம் மோர் உருட்டித் தயிர் நெய் விழுங்கிட்டு,
தாமோ தவழ்வர் என்று ஆய்ச்சியர் தாம்பினால்,
தாம்மோதரக் கையால் ஆர்க்க தழும்பு இருந்த
தாமோதரா! கொட்டாய் சப்பாணி;
தாமரைக் கண்ணனே ! சப்பாணி. 1890

பெற்றார் தளை கழலப் பேர்ந்து அங்கு அயல் இடத்து
உற்றார் ஒருவரும் இன்றி, உலகினில்
மற்றாரும் அஞ்சப் போய் வஞ்சப் பெண் நஞ்சு உண்ட
கற்றாயனே! கொட்டாய், சப்பாணி;
கார் வண்ணனே! கொட்டாய் சப்பபாணி. 1891

சோத்து என நின்னைத் தொழுவன், வரம் தர;
பேய்ச்சி முலை உண்ட பிள்ளாய்! பெரியன
ஆய்ச்சியர் அப்பம் தருவர்;அவர்க்காகச்
சாற்றி ஓர் ஆயிரம் சப்பாணி;
தடங் கைகளால் கொட்டாய், சப்பாணி. 1892





அழகிய தோள்களுடைய கலிகன்றி ஆழ்வார் பிறவித் துயர் ஒழிப்பதற்காக சிறந்த இக் கவிதைகளில், சிவந்த கண்ணுடைய திருமாலை முலைப் பால் அருந்தத் தாய் அழைத்தாகப் பாடினார். இவற்றை மனத்தில் கொண்டு துதிக்க வல்லவர் நித்திய சூரிகள் ஆவார்கள். **1887**

### கண்ணனைக் கைகொட்டி விளையாடும்படி கூறல்

பூச் சூடிய ஆய்ச்சி யசோதை கடைந்து வைத்த வெண்ணெய்யை உணடதால் அவளால் தாம்பால் கட்டி அடிக்கப்பெற்று, அழுத கண்ணனே! பின் சீராட்டப்பட்டு விளையாடிய கடல் நிறப்பெருமானே! மணி நிறத்தோனே! நீ சப்பாணி கொட்டு. **1888**

தாய்மார் நெஞ்சு துடிக்கத் தயிரையும் நெய்யையும் உண்டு, அப்படிச் செய்தது தகுந்தது என்றிருந்த எம்பெருமானே! இப்பூமியில், ஆயர் குலத்தில் அவதரித்த அழகனே! தாமரைத் திருவடிகளையும் உதடுகளையும் பெற்ற கறுத்த நிறத்திருமாலே! நீ கைகொட்டி அருள வேண்டும். **1889**

தானே மோர்க் கலத்தை உருட்டித் தயிரையும் நெய்யையும் விழுங்கி விட்டு, தான் செய்ததை அறியாதவன் போல் தவழ்ந்தானே! உன் குறும்பைக் குறை கூறியவாறு ஆய்ச்சியர் தாம்பினால் அடிக்கவும் கைகளால் கட்டவும், வயிற்றில் தழும்பு ஏறிக் கிடந்த தாமோதரா! நீ சப்பாணி கொட்டு; தாமரைக் கண்ணனே! சப்பாணி கொட்டு. **1890**

பெற்றோர் தாள் விலங்கு கழல அவதரித்தாய்; கிட்டின உறவினர் ஒருவரும் இல்லாத பொழுதும், உலகத்தில் மற்றோர் அஞ்சும்படியும், திருவாய்ப் பாடிக்கும் போனாயே! வஞ்சப் பூதனையின் நஞ்சு உண்டாய். கன்றுகளை மேய்த்த காளமேக நிறம் கொண்ட கண்ணனே! நீ கைகளைத் தட்டிக் கொட்டு. **1891**

பூதனைப் பேயின் நஞ்சு முலை உண்ட பிள்ளையே ! நீ எனக்கு வரம் தர 'வணக்கம்' என்று கூறித் தொழுகிறேன். ஆய்ச்சியர் மிகப் பெரிய அப்பங்களை உனக்குத் தருவார். அவர்களுக்காக என்றாவது உன் அகன்ற கைகளால் சப்பாணி கொட்டு. **1892**

கேவலம் அன்று உன் வயிறு; வயிற்றுக்கு
நான் அவல் அப்பம் தருவன்; கருவிளைப்
பூ அலர் நீள் முடி நந்தன் தன் போர் ஏறே!
கோவலனே! கொட்டாய், சப்பாணி;
குடம் ஆடி கொட்டாய் சப்பாணி. 1893

புள்ளினை வாய் பிளந்து பூங் குருந்தம் சாய்த்து
துள்ளி விளையாடி தூங்கு உறி வெண்ணெயை
அள்ளிய கையால் அடியேன் முலை நெருடும்
பிள்ளைப்பிரான்! கொட்டாய், சப்பாணி;
பேய் முலை உண்டானே! சப்பாணி. 1894

யாயும் பிறரும் அறியாத யாமத்து
மாய வலவைப் பெண் வந்து முலை தர,
பேய் என்று அவளைப் பிடித்து உயிர் உண்ட
வாயவனே!கொட்டாய், சப்பாணி;
மால்வண்ணனே கொட்டாய், சப்பாணி. 1895

கள்ளக் குழவி ஆய்க் காலால் சகடத்தைத்
தள்ளி உதைத்திட்டுத் தாய் ஆய் வருவாளை
மெள்ளத் தொடர்ந்து பிடித்து ஆர் உயிர் உண்ட
வள்ளலே!கொட்டாய, சப்பாணி;
மால் வண்ணனே ! கொட்டாய், சப்பாணி. 1896

கார் ஆர் புயல் கைக் கலிகன்றி மங்கையர் கோன்,
பேராளன் நெஞ்சில் பிரியாது இடம் கொண்ட
சீராளா ! செந்தாமைரைக் கண்ணா! தண் துழாய்த்
தார் ஆளா! கொட்டாய், சப்பாணி;
தட மார்வா ! கொட்டாய் சப்பாணி. 1897

### கிருஷ்ணாவதாரத்துடன் சேர்ந்த மற்றை அவதாரச் சிறப்புகள்

எங்கானும் ஈது ஒப்பது ஓர் மாயம் உண்டே ?
நர நாரணன்ஆய், உலகத்து அறநூல்
சிங்காமை விரித்தவன் எம் பெருமான்;
அது அன்றியும் செஞ்சுடரும், நிலனும்
பொங்கு ஆர் கடலும், பொருப்பும், நெருப்பும்
நெருக்கிப் புக, பொன் மிடறு அத்தனைபோது
அங்காந்தவன் காண்மின்-இன்று, ஆய்ச்சியரால்
அளை, வெண்ணெய்உண்டு, ஆப்புண்டிருந்தவனே. 1898





கருவிளைப் பூவின் நிறம் உடையவனே! திரு முடி சூடியவனே! நந்தகோபன் வளர்த்த போர்க் காளையே! கோவலனே! உன் வயிறு சாதாரணம் ஆனது அன்று போலும்! உன் வயிறு நிரம்பும்படி, அவலையும் அப்பத்தையும் நான் உனக்குத் தருவேன். குடக் கூத்தாடியவனே! நீ சப்பாணி கொட்டுவாய். **1893**

பகாசுரப் பறவையின் வாயைக் கிழித்து, பூத்த குருந்த மரத்தைப் பறித்துத் தள்ளி விளையாடியவனே! தொங்கும் உறியில் இருந்த வெண்ணெய்யை அள்ளிய கைகளால், அடியேன் மார்பை நெருடும் குறும்புக் குழந்தையே! கண்ணா! பேய் முலை உண்டவனே! எனக்குச் சப்பாணி கொட்டிக் காட்டு. **1894**

பெற்ற தாயும் மற்றவரும் அறியாத நடுச் சாமத்தில் மாயப் பெண்ணாக வந்த பூதனை முலை கொடுக்கவும். அவளைப் பேய் என்று அறிந்து, முலை வழியே, அவள் உயிரை உண்டவனே! திருப்பவள வாயை உடைய கண்ணனே! நீ கை கொட்டு. **1895**

பிள்ளைப் பருவத்திலேயே கள்ளத்தனம் வாய்ந்தவனாய், அசுரச் சகடத்தைக் காலால் உதைத்தவனே! தாய் போல் வந்த பூதனைப் பேயை மெள்ளக் கட்டிப்பிடித்து உயிருண்ட வள்ளலே! மாலே! கண்ணா! நீ சப்பாணி கொட்டு. **1896**

மேகம் போல் வள்ளலான திருமங்கை மன்னர், கலிகன்றியின் நெஞ்சில் பிரியாது இடங்கொண்ட சீராளனே! செந்தாமரைக் கண்ணா! திருத்துழாய் மாலை அணிந்தவனே! அகன்ற மார்புடையவனே! நீ சப்பாணி கொட்டு. **1897**

### கிருஷ்ணாவதாரத்துடன் சேர்ந்த மற்றை அவதாரச் சிறப்புகள்

எம் பெருமான், இவ்வுலகத்தில், நரநாராயண வடிவம் கொண்டு வேத நூலில் கூறப்பட்ட அறம் குன்றாதபடி விவரித்தான். அதன்றியும், சூரியன், சந்திரன், பூமி, அலைகடல், மலைகள், நெருப்பு யாவும் நெருக்கும்படியாக, தன் பொன்னான கழுத்துக்குக் கீழே, இவை யாவற்றையும் விழுங்கி, அவற்றை வெளியே காட்ட வாயைத் திறந்தான். இக் கண்ணனே கடைந்து வைத்த வெண்ணெய்யை உண்டு, ஆயச்சியின் தாம்பால் கட்டப்பட்டான். இதை விட ஆச்சரியம் எங்கேனும் உண்டா? **1898**

குன்று ஒன்றுமத்தா, அரவம் அளவிக்
குரை மா கடலைக் கடைந்திட்டு, ஒருகால்,
நின்று உண்டை கொண்டு ஓட்டி வன் கூன் நிமிர
நினைந்த பெருமான்; அது அன்றியும், முன்
நன்று உண்டதொல் சீர் மகரக் கடல் ஏழ்
மலை ஏழ் உலகு ஏழ் ஒழியாமை நம்பி,
அன்று உண்டவன் காண்மின் - இன்று ஆய்ச்சியரால்,
அளை, வெண்ணெய் உண்டு, ஆப்புண்டிருந்தவனே. 1899

உளைந்திட்டு எழுந்த மது கைடவர்கள்
உலப்பு இல் வலியார் அவர்பால் வயிரம்
விளைந்திட்டது என்று எண்ணி விண்ணோர் பரவ,
அவர் நாள் ஒழித்த பெருமான், முன நாள்
வளைந்திட்ட வில்லாளி வல் வாள் எயிற்று
மலை போல் அவுணன் உடல் வள் உகிரால்
அளைந்திட்டவன் காண்மின் - இன்று ஆய்ச்சியரால்,
அளை, வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே. 1900

தளர்ந்திட்டு இமையோர் சரண் தா என, தான்
சரண் ஆய், முரண் ஆயவனை உகிரால்
பிளந்திட்டு அமரர்க்கு அருள்செய்து உகந்த
பெருமான் திருமால், விரி நீர் உலகை
வளர்ந்திட்ட தொல் சீர் விறல் மாவலியை
மண் கொள்ள வஞ்சித்து ஒரு மாண் குறள் ஆய்,
அளந்திட்டவன் காண்மின் - இன்று, ஆய்ச்சியரால்
அளை, வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே. 1901

நீண்டான் குறள் ஆய், நெடு வான் அளவும்;
அடியார் படும் ஆழ் துயர் ஆய எல்லாம்
தீண்டாமை நினைந்து இமையோர் அளவும்
செல வைத்த பிரான் அது அன்றியும் முன்,
வேண்டாமை நமன் தமர் என் தமரை
வினவப் பெறுவார் அலர் என்று உலகு ஏழ்
ஆண்டான் - அவன் காண்மின் - இன்று ஆய்ச்சியரால்,
அளை, வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே. 1902

பழித்திட்ட இன்பப் பயன் பற்று அறுத்துப்
பணிந்து ஏத்த வல்லார் துயர் ஆய எல்லாம்
ஒழிந்திட்டு, அவரைத் தனக்கு ஆக்கவல்ல
பெருமான், திருமால், அது அன்றியும் முன்,
தெழித்திட்டு எழுந்தே எதிர் நின்ற மன்னன்
சினத்தோள் அவை ஆயிரமும் மழுவால்
அழித்திட்டவன் காண்மின் - இன்று ஆய்ச்சியரால்,
அளை, வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே. 1903





*மந்தரமலை மத்தாக, வாசுகியே கயிறாகக் கடல் கடைந்தவனே, இராமனாக, வில் உண்டைகளால் கூனியின் கூனலை நிமிர்த்தினான். பிரளய காலத்தில் முதலைகள் அடங்கிய ஏழு கடல்களையும். ஏழு மலைகளையும், ஏழுலகங்களையும் உண்டு காத்தான். இத்தகைய வல்லவன், வெண்ணெய்யை உண்டதற்காக ஆய்ச்சியின் தாம்பால் கட்டப்பட்டானே! இதென்ன ஆச்சரியம்!* 1899

*எல்லையற்ற வலிமையுடன் கிளர்ந்த மதுகைடபருடன் பகைமை ஏற்பட்டதால் தேவர்கள், திருமாலை வணங்கவும் பெருமான், அவ்விருவரையும் அழித்தான். வில் ஏந்திய வல்லவன் அன்றோ இவன்! ஒளிப் பற்களுடன் மலைபோல் வந்த இரணியன் உடலை நகங்களால் கிழித்த நரசிம்மனும் இவனே. இந்த வல்லவன், வெண்ணெய் உண்டதற்காக ஆய்ச்சியால் கட்டப்பட்டானே. என்ன வியப்பு இது!* 1900

*தேவர்கள் தளர்ந்து சரணம் என்ற பொழுது திருமால், நரசிம்மனாகி வலிய இரணியனை நகங்களால் கிழித்து வதைத்து அவர்களுக்கு அருளினான். இப் பெருமானே, மாவலி முன்னே வாமனனாய் வந்து, திரிவிக்கிரமனாக வளர்ந்து கடல் சூழ் உலகை அளந்தான். இந்த வல்லவனே, வெண்ணெய் உண்டதற்காக, ஆய்ச்சியின் தாம்பால் கட்டப்பட்டானே! என்னே இது!* 1901

*வாமனனாகத் தோன்றியவன் தன் அடியார்களின் பிறவித் துயராகிய பாவங்கள் அவர்களைத் தீண்டலாகாது என்பதற்காக வானளவும் வளர்ந்து, தன் திருவடிகளை வைத்து அருளினான். அதன்றியும் யமபடர்கள் என் அடியார்களை அணுகி வினவக் கூடாது' என்று அருளி ஏழுலகங்களையும் ஆள்கிறான். இப்பெரியவன் அன்றோ, வெண்ணெய் உண்டதற்காக, ஆய்ச்சியின் தாம்பால் கட்டப் பட்டானே! இதென்ன ஆச்சரியம் என்று பாருங்கள்.* 1902

*சாத்திரங்களால் தள்ளத்தக்க இன்பப் பயன்களை வேருடன் களைந்து, திருமால் திருவடிகளில் வணங்குபவரின் பாவங்களைப் பெருமான் போக்கி அருளி, அவர்களைத் தன் தொண்டர்களாக்கிக் கொள்கிறான். பரசுராமனாக வந்த அப்பிரானே, கார்த்த வீரயார்ஜுனனின் ஆயிரம் தோள்களையும் தன் மழுவால் துணித்தான். இவ் வல்லவனே, வெண்ணெய் உண்டதற்காக, ஆயச்சியின் தாம்பால் கட்டப்பட்டான். இது என்ன ஆச்சரியம்!* 1903

படைத்திட்டு, அது, இவ் வையம் உய்ய, முன நாள்
பணிந்துஏத்த வல்லார் துயர் ஆய எல்லாம்
துடைத்திட்டு அவரைத் தனக்கு ஆக்க என்னத்
தெளியா அரக்கர் திறல்போய் அவிய,
மிடைத்திட்டு எழுந்த குரங்கைப் படையா
விலங்கல் புகப் பாய்ச்சி விம்ம,கடலை
அடைத்திட்டவன் காண்மின்-இன்று ஆய்ச்சியரால்
அளை, வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே. 1904

நெறித்திட்ட மென் கூழை நல் நேர் இழையோடு
உடன் ஆய வில் என்ன வல் ஏய் அதனை
இறுத்திட்டு அவள் இன்பம் அன்போடு அணைந்திட்டு,
இளங் கொற்றவன் ஆய், துளங்காத முந்நீர்
செறித்திட்டு இலங்கை மலங்க அரக்கன்
செழு நீள் முடி தோளொடு தாள் துணிய
அறுத்திட்டவன் காண்மின் -இன்று ஆய்ச்சியரால்
அளை, வெண்ணெய் உண்டு, ஆப்புண்டிருந்தவனே. 1905

சுரிந்திட்ட செங் கேழ் உளைப் பொங்கு அரிமாத்
தொலைய, பிரியாது சென்று எய்தி, எய்தாது
இரிந்திட்டு இடங்கொண்டு அடங்காததன் வாய்
இரு கூறு செய்த பெருமான், முன நாள்,
வரிந்திட்ட வில்லால் மரம் ஏழும் எய்து
மலைபோல் உருவத்து ஓர் இராக்கதி மூக்கு
அரிந்திட்டவன் காண்மின்- இன்று ஆய்ச்சியரால்,
அளை, வெண்ணெய் உண்டு, ஆப்புண்டிருந்தவனே. 1906

நின்றார் முகப்புச் சிறிதும் நினையான்
வயிற்றை நிறைப்பான், உறிப்பால், தயிர். நெய்
அன்று, ஆய்ச்சியர் வெண்ணெய் விழுங்கி உரலோடு
ஆப்புண்டிருந்த பெருமான் அடிமேல்
நன்று ஆய தொல் சீர்வயல் மங்கையர் கோன்,
கலியன் ஒலிசெய்த தமிழ் மாலை வல்லார்
என்றானும் எய்தார் இடர்; இன்பம் எய்தி
இமையோர்க்கும் அப்பால் செல எய்துவாரே. 1907





உலகுகளைப் படைத்த இறைவன், தன் திருவடிகளில் பணிந்து துதிப்போரின் பாவங்களைப் போக்கி, அவர்களைத் தன் அடியார்களாக மாற்றுகிறான். இதனை அறியாத அரக்கர் வலிமை அழியும்படி, இராமபிரான், வானரப் படைகளுடன் கடல் மீது மலைகளால் அணை கட்டி அடைத்தான் அன்றோ! இவ்வல்லவனே வெண்ணெய் உண்ட அன்று, ஆய்ச்சி தாம்பால் கட்டப்பட்டான். என்னே இந்த ஆச்சரியம்! 1904

ஸ்ரீ ராமன், இருண்ட மெல்லிய கூந்தலுடைய சீதையை அடைய, அவளுடன் பிறந்த வில்லை முறித்து அவளை மணந்தான். இளவரசனான அவனே கடல் மீது அணை கட்டி இலங்கை கலங்க, இராவணன் முடிகளையும் தோள்களையும் தாள்களையும் துணித்தான். இவ்வல்லவனே, வெண்ணெய் உண்ட அன்று ஆய்ச்சி தாம்பால் கட்டப்பட்டான். என்னே இந்த ஆச்சரியம்! 1905

ஸ்ரீகிருஷ்ணன், இருண்டு சிவந்த பிடரி மயிர்களுடைய குதிரை வடிவான கேசியிடம் சென்று, அவனைத் திரிய விடாதபடி மடக்கி, வாயைப் பிளந்தான். இப்பெருமானே இராமனாக, ஏழு மராமரங்களையும் வில் வளைத்துத் துளைத்தான். மலை போன்ற சூர்பபனகையின் மூக்கை அறுத்தான். இத்தகைய பெரியவனே வெண்ணெய் உண்ட அன்று ஆய்ச்சியின் தாம்பால் கட்டப்பட்டான். என்னே இந்த ஆச்சரியம்! 1906

அருகே நின்றவரைக் கண்டு வெட்கம் அடையாமல், கண்ணபிரான், தன் வயிற்றை நிறைக்க, ஆய்ச்சி உறியில் வைத்த, பால், தயிர், நெய் வெண்ணெய் இவற்றை விழுங்கியதால் அதற்காக, உரலுடன் கட்டப்பட்டான். இப்பெருமானின் திருவடிமேல், திருமங்கை மன்னர் கலியன் அருளிய தமிழ் மாலையான இப் பத்துப் பாசுரங்களை ஓத வல்லவர் துன்பம் அடையார்; பரமபதமே பெறுவார்கள். 1907

### கண்ணனின் தீம்புகள் பற்றி ஆய்ச்சியரும் யசோதையும் முறையிடுதல்

மானம் உடைத்து உங்கள் ஆயர் குலம்;
அதனால், பிறர் மக்கள் தம்மை
ஊனம் உடையன செய்யப் பெறாய் என்று
இரப்பன்; உரப்பகில்லேன்;
நானும் உரைத்திலேன்; நந்தன் பணித்திலன்;
நங்கைகாள்; நான் என் செய்கேன் ?
தானும் ஓர் கன்னியும் கீழை அகத்துத்
தயிர் கடைகின்றான் போலும். 1908

காலை எழுந்து கடைந்த இம் மோர் விற்கப்
போகின்றேன் கண்டே போனேன்;
மாலை நறுங் குஞ்சி நந்தன் மகன் அல்லால்,
மற்று வந்தாரும் இல்லை;
மேலை அகத்து நங்காய்!வந்து காண்மின்கள்;
வெண்ணெயேஅன்று இருந்த
பாலும் பதின் குடம் கண்டிலேன்; பாவியேன்
என் செய்கேன்? என் செய்கேனோ? 1909

தெள்ளிய வாய்ச் சிறியான் நங்கைகாள்!
உறிமேலைத் தடா நிறைந்த
வெள்ளி மலை இருந்தால் ஒத்த வெண்ணெயை
வாரி விழுங்கியிட்டு
கள்வன் உறங்குகின்றான்; வந்து காண்மின்கள்;
கை எல்லாம் நெய்; வயிறு
பிள்ளை பரம் அன்று;இவ் ஏழ் உலகும் கொள்ளும்;
பேதையேன் என் செய்கேனோ? 1910

மைந்நம்பு வேல் கண் நல்லாள் முன்னம் பெற்ற
வளை வண்ண நல மா மேனி
தன் நம்பி நம்பியும் இங்கு வளர்ந்தது;
அவன் இவை செய்தறியான்;
பொய்ந் நம்பி புள்ளுவன், கள்வம் பொதி அறை,
போகின்றவா தவழ்ந்திட்டு
இந் நம்பி நம்பியா ஆய்ச்சியர்க்கு உய்வு இல்லை;
என் செய்கேன் ? என் செய்கேனோ? 1911





### கண்ணனின் தீம்புகள் பற்றி ஆய்ச்சியரும் யசோதையும் முறையிடுதல்

உங்களுடைய இடைக் குலம் மானமுடையது ஆகையால் "பிறர் பெண்களிடத்தே இழிவானவற்றைச் செய்யாதே" என்று கண்ணன் காலைப் பிடித்து வேண்டுவேன். நானோ கடிந்து பேச அறியேன்; தகப்பன் நந்தகோபரும் எதுவும் சொல்ல வில்லை. நங்கைமார்களே! நான் என்ன செய்வேன்! இக் கண்ணன் தானும் ஒரு கன்னிப் பெண்ணுடன் கீழை வீட்டில் தயிர் கடைகிறான்போலும்! **1908**

கடைந்த மோரைத் தெருவில் விற்கப் போன பொழுது, எதிரே கண்ணனைக் கண்டதுமே அஞ்சினேன். தலையில் பூச்சூடிய நந்தகோபன் மகன் அன்றி வேறுயாரும் என் வீடு புகுந்ததில்லை. மேலை வீட்டிலுள்ள யசோதைப் பிராட்டியே! உன் மகன் என் வீடு புகுந்து செய்ததைப் பார். நான் கடைந்து வைத்த வெண்ணெய்யை மட்டுமின்றி, மேலும் கடைவதற்காகச் சேமித்து வைத்த பத்துக் குடங்களில் இருந்த பாலையும் காணவில்லை. பாவியேன் என் செய்வேன்? **1909**

நங்கைமார்களே! தெளிந்த வாயுடைய இந்தச் சிறிய கண்ணன், உறிமேல் வைக்கப்பட்ட மிடாவில் இருந்த, வெள்ளி மலை போன்ற வெண்ணெய் முழுவதையும் வாரி விழுங்கி விட்டுக் கள்ளத்தனமாய் உறங்குகிறான். பாருங்கள்! இவன் கைகளில் நெய் தெரிகிறது. குழந்தைக்கு ஏற்ற வயிறு இல்லையா? வெண்ணெய் அன்றிக்கே இவ்வேழுலகும் இவன் வயிற்றில் கொள்ளுமோ? பேதையான நான் என் செய்வேன்? **1910**

வேல் போன்ற மைக்கண்களுடைய நல்லவளான தேவகி பெற்ற, நம்பி மூத்தபிரானான, பல ராமனும் இவ்வாய்ப்பாடியில் தான் வளர்ந்தான். சங்கு போன்ற வெண்மையான மேனியுடைய அவன், இந்தக் கண்ணன் போலே, தீம்புகள் செய்து அறியான். ஆனால், கள்ளத் தனமே குடி கொண்டவனாய், நல்லவன் போலே, தவழ்ந்து போகிறான். இந்த நம்பியால், இடைச்சிகளுக்கு இனிமேல் உய்வடைய வழியில்லை. நான் என் செய்வேன்! **1911**

தந்தை புகுந்திலன்; நான் இங்கு இருந்திலேன்;
 தோழிமார் ஆரும் இல்லை
சந்த மலர்க் குழலாள் தனியே
 விளையாடும் இடம் குறுகி,
பந்து பறித்துத் துகில் பற்றிக் கீறிப்
 படிறன், படிறு செய்யும்
நந்தன் மதலைக்கு இங்கு என் கடவோம்? நங்காய்!
 என் செய்கேன்? என் செய்கேனோ? 1912

மண்மகள் கேள்வன், மலர் மங்கை நாயகன்
 நந்தன் பெற்ற மதலை,
அண்ணல் இலைக் குழல் ஊதி நம் சேரிக்கே
 அல்லில் தான் வந்த பின்னை,
கண்மலர் சோர்ந்து முலை வந்து விம்மி,
 கமலச் செல்வாய் வெளுப்ப,
என்மகள் வண்ணம் இருக்கின்றவா, நங்காய்
 என் செய்கேன்? என் செய்கேனோ? 1913

ஆயிரம் கண் உடை இந்திரனாருக்கு
 அன்று, ஆயர் விழவு எடுப்ப
பாசனம் நல்லன பண்டிகளால் புகப்
 பெய்த அதனை எல்லாம்
போயிருந்து அங்கு ஒரு பூத வடிவுகொண்டு
 உன் மகன்,இன்று நங்காய்!
மாயன் அதனை எல்லாம் முற்ற வாரி
 வளைத்து உண்டு, இருந்தான் போலும். 1914

தோய்த்த தயிரும் நறு நெய்யும் பாலும்
 ஓர் ஓர் குடம் துற்றிடும் என்று
ஆய்ச்சியர் கூடி அழைக்கவும் நான் இதற்கு
 எள்கி, இவனை நங்காய்!
சோத்தம் பிரான் இவை செய்யப் பெறாய் என்று
 இரப்பன் ; உரப்பகில்லேன்;
பேய்ச்சி முலை உண்ட பின்னை இப்
 பிள்ளையைப் பேசுவது அஞ்சுவனே. 1915

ஈடும் வலியும் உடைய இந் நம்பி
 பிறந்த ஏழு திங்களில்
ஏடு அலர் கண்ணியினானை வளர்த்தி,
 யமுனை நீராடப் போனேன்;
சேடன் திரு மறு மார்வன் கிடந்து
 திருவடியால் மலைபோல்
ஓடும் சகடத்தைச் சாடிய பின்னை,
 உரப்புவது அஞ்சுவனே. 1916





யசோதை நங்காய்! இப்பெண்ணின் தந்தையும், தாயான நானும் வீட்டில் இல்லாத நேரம்! தோழிகளில் ஒருத்தியும் இங்கே இல்லை. இச் சமயம் பார்த்துக் கண்ணன், மணம் வீசும் பூச்சூடிய இப்பெண் விளையாடும் இடம் சென்றிருக்கிறான்; அவள் பந்தைப் பறித்து ஆடையைக் கிழித்துப் பல தீம்புகளைச் செய்துள்ளான். இந்தத் திருடன்! நந்தகோபர் மகனாயிற்றே என்று எண்ணி நாங்கள் என் செய்வோம்! 1912

நங்கை யசோதாய்! பூமி தேவிக்கும் திருமகளுக்கும் நாயகனான நந்த கோபன் மகன் கண்ணன், இரவில், இலையாலான குழலை ஊதியபடி நம் சேரிக்கு வந்தான். அதனால் என் மகள் பட்டபாடு தெரியுமா? அவள் கண் மலர் வாடி, முலைகள் கிளர்ந்து தாமரை போன்று சிவந்த உதடுகள் வெளுத்துப் பசலை படரும்படி ஆனாள். ஏன் இவள் இவ்வாறு ஆனாள்? இதற்கு நான் என் செய்கேன்? 1913

நங்காய்! அன்று இடையர்கள் ஆயிரம் கண்ணுடைய இந்திரனுக்கு விழா எடுத்தபொழுது பாத்திரங்களில் வைத்து வண்டிகளால் கொண்டு வரப்பட்ட எல்லா உணவையும் கண்ணன் பூத வடிவில் உண்டான். உன் மகனான இந்த மாயன் எல்லா உணவையும் வாரி உண்டதுதான் எவ்வளவு ஆச்சரியம்! ஆயினும் ஒன்றும் அறியாத மற்றவர் போலவே நின்றானே! 1914

நங்காய்! இடைச்சிகள் கூடி, என்னை அழைத்து உன் பிள்ளை கண்ணன், தோய்த்த தயிர், உருக்கிய நெய், பால் இவற்றை ஒவ்வொரு தடாவிலிருந்தும் எடுத்து உண்டு விடுவான் என்று முறையிட்டனர். இதனால் நான் வெட்கப்பட்டு பிள்ளையை நோக்கி, "கண்ணா! உன்னை வணங்கிக் கேட்கிறேன். இனி இத் தீம்புகளைச் செய்யாதே!" என்று வேண்டினேன். ஆனாலும் சீற மாட்டேன். பூதனைப் பேயின் முலை உண்ட, இப்பிள்ளையை நான் கோபித்துப் பேச அஞ்சுகிறேன். 1915

உடல் வலிமை உடைய நம்பியான என் பிள்ளை பிறந்த ஏழாம் மாதம் அது, குழந்தையை நீராட்டி விட்டுப் பூச்சூடித் தூங்கச் செய்து விட்டு, நான் நீராட, யமுனை சென்றேன். ஆனால் நடந்தது என்ன? பிராட்டியையும் ஸ்ரீவத்ஸத்தையும் மார்பிலே உடைய இக் குழந்தை, மலை போலே ஓடி வந்து கிடந்த சகடத்தைத் தன் திருவடியால் சாடி, முறித்தானே! இப்படிப் பட்டவனை நான் எவ்வாறு சினந்து பேசுவேன்? 1916

அஞ்சுவன் சொல்லி அழைத்திட, நங்கைகாள்!
ஆயிரம் நாழி நெய்யை
பஞ்சிய மெல் அடிப் பிள்ளைகள் உண்கின்று
பாகம் தான் வையார்களே;
கஞ்சன் கடியன்; கறவு எட்டு நாளில்; என்
கைவலத்து ஆதும் இல்லை;
நெஞ்சத்து இருப்பன செய்துவைத்தாய் நம்பீ
என் செய்கேன்? என் செய்கேனோ? 1917

அங்ஙனம் தீமைகள் செய்வர்களோ
நம்பீ! ஆயர் மட மக்களை ?
பங்கய நீர் குடைந்து ஆடுகின்றார்கள்
பின்னே சென்று ஒளித்திருந்து,
அங்கு அவர் பூந் துகில் வாரிக்கொண்டிட்டு,
அரவு ஏர் இடையார் இரப்ப,
மங்கை நல்லீர்! வந்து கொண்மின் என்று
மரம் ஏறி இருந்தாய் போலும். 1918

அச்சம் தினைத்தனை இல்லை, இப்பிள்ளைக்கு;
ஆண்மையும் சேவகமும்;
உச்சியில் முத்தி வளர்த்து எடுத்தேனுக்கு
உரைத்திலன் தான் இன்று போய்,
பச்சிலைப் பூங் கடம்பு ஏறி விசை கொண்டு
பாய்ந்து புக்கு ஆயிர வாய்
நச்சு அழல் பொய்கையில் நாகத்தினோடு
பிணங்கி நீ வந்தாய் போலும். 1919

தம்பரம் அல்லன் ஆண்மைகளைத்
தனியேநின்று தாம் செய்வரோ ?
எம்பெருமான்! உன்னைப் பெற்ற வயிறு உடையேன்;
இனி யான் என் செய்கேன் ?
அம்பரம் ஏழும் அதிரும் இடி குரல்,
அங்கு அனற் செங் கண் உடை
வம்புஅவிழ் கானத்து மால் விடையோடு
பிணங்கி நீ வந்தாய் போலும். 1920

அன்ன நடை மட ஆய்ச்சி வயிறு அடித்து,
அஞ்ச அரு வரை போல்,
மன்னு கருங் களிற்றுஆர் உயிர் வவ்விய
மைந்தனை மா கடல் சூழ்
கன்னி நன் மா மதிள் மங்கையர் காவலன்,
காமரு சீர்க் கலிகன்றி
இன்இசை மாலைகள் ஈர் ஏழும் வல்லவர்க்கு
ஏதும் இடர் இல்லையே. 1921





*நங்கைகளே! கண்ணன் செய்த குறும்புகளைச் சொல்லி அழைக்க அஞ்சுகிறேன். கண்ணா! பஞ்சு போன்ற மெல்லிய பாதங்கள் கொண்ட பல குழந்தைகள் உண்பதற்கு ஆயிரம் நாழிகளில் வைத்த நெய்யில் பாதியையும் கூட மீதம் வைக்காமல் உண்டாயே! கம்சனோ கொடியவன்; கப்பத்தை எட்டு நாளில் கட்ட வேண்டும். எனக்கு வேறு கைம்முதலும் இல்லை. இப்படி என் நெஞ்சு புண்படும் செயல்களைச் செய்கிறாயே! என்ன செய்வேன் நான்?* **1917**

*கண்ணா! இடையர்க்கு அடங்கி நடக்கும் பெண்களிடத்தே தீமை செய்யலாமா? தாமரைக் குளத்தில் நீராடச் சென்ற பெண்கள் பின் சென்று, ஒளிந்திருந்து அவர்களுடைய ஆடைகளை வாரிக் கொண்டு கவரலாமா? அப்பெண்கள் உன்னை வேண்டியதும், நீ, "பெண்களே! நானிருக்கும் இடம் வந்து உங்கள் ஆடைகளைப் பெற்றுக் கொள்ளுங்கள்!" என்று கூறி மரத்தின் உச்சியில் ஏறி இருந்தாயாமே! இது சரியா?* **1918**

*இப்பிள்ளைக்குக் கொஞ்சம் கூடப் பயமில்லை; ஆண்மையும் அதிகாரமும் உள்ளன. உச்சி மோந்து வளர்த்த தாயான எனக்கு அவன் ஒன்றும் கூறமாட்டேன் என்கிறான். இன்று பூத்த பச்சைக் கடம்ப மரம் ஏறிவேகத்துடன் மடுவில் பாய்ந்து, ஆயிரம் வாயால் நஞ்சு உமிழும் காளிய நாகத்துடன் போர் செய்து வந்தாயோ!* **1919**

*எம் பெருமானே! தம்மால் செய்ய முடியாத வீரச் செயல்களை ஒருவர் தனியாக நின்று செய்தால் ஆபத்தில்லையா? உன்னைப் பெற்ற என் வயிறு கலங்கும்படி செய்யாதே! இனி என் செய்வேன்? ஏழுலகங்களும் மணம் வீசும் சோலையில் நீ, போரிட்டு வந்தது போல் தெரிகிறதே! இப்படிச் செய்யலாமா?* **1920**

*அன்னநடையும் மடப்ப குணமும் உடைய யசோதை வயிற்றில் அடித்துக் கொண்டு அஞ்சும்படி,மலை போன்ற கருமையான குவலயாபீட யானையைக் கொன்ற மைந்தனான கண்ணனின் சாகசங்கள் பற்றி திருமங்கை ஆழ்வார் பாடினார். நற்குணங்கள் உடைய கலிகன்றி ஆழ்வார் அருளிய இசை மாலையான இப்பாசுரங்களை ஓத வல்லவர்களுக்குத் துன்பம் ஏதும் இல்லை.* **1921**

## ஆய்ப்பெண் கண்ணனுடன் ஊடுதல்

காதில் கடிப்பு இட்டு, கலிங்கம் உடுத்து
தாது நல்ல தண் அம் துழாய்கொடு அணிந்து
போது மறுத்து புறமே வந்து நின்றீர்
ஏதுக்கு? இது ஏன் ? இது என்? இது என்னோ ? 1922

துவர் ஆடை உடுத்து ஒரு செண்டு சிலுப்பி
கவர் ஆக முடித்துக் கலிக் கச்சுக் கட்டி
சுவர் ஆர் கதவின் புறமே வந்து நின்றீர்
இவர் ஆர்? இது என்? இது என்? இது என்னோ? 1923

கருளக் கொடி ஒன்று உடையீர்! தனிப் பாகீர்!
உருளச் சகடம் அது உறுக்கில் நிமிர்த்தீர்!
மருளைக் கொடு பாடி வந்து இல்லம் புகுந்தீர்
இருளத்து இது என்? இது என்? இது என்னோ? 1924

நாமம் பலவும் உடை நாரண நம்பீ!
தாமத் துளவம் மிக நாறிடுகின்றீர்;
காமன் எனப் பாடி வந்து இல்லம் புகுந்தீர்
ஏமத்து இது என்? இது என்? இது என்னோ? 1925

சுற்றும் குழல் தாழச் சுரிகை அணைத்து ,
மற்றும் பல மாமணி பொன் கொடு அணிந்து
முற்றம் புகுந்து முறுவல் செய்து நின்றீர்
எற்றுக்கு? இது என்? இது என்? இது என்னோ? 1926

ஆன் ஆயரும் ஆநிரையும் அங்கு ஒழியக்
கூன் ஆயது ஓர் கொற்ற வில் ஒன்று கை ஏந்தி,
போனார் இருந்தாரையும் பார்த்து புகுதீர்
ஏனோர்கள் முன் என்? இது என்? இது என்னோ? 1927





## ஆய்ப்பெண் கண்ணனுடன் ஊடுதல்

காதில் கடுக்கன் அணிந்து கொண்டு, கறுப்பு ஆடை உடுத்தியபடி, இதழுடன் கூடிய திருத்துழாய் மாலையைத் தலையில் சூடியபடி வந்தவரே! நீர் காலம் கடந்து வந்த பிறகு எதற்காக எனக்குப் பின்புறத்தில் வந்து நிற்கிறீர்? இதென்ன ஒளிவு? இதென்ன செயல்? ஏன் இப்படி நடப்பது! 1922

சிவப்பு ஆடையை உடுத்தியபடி ஒரு பூச்செண்டையும் கையில் எடுத்துக் கொண்டு தலைமயிரைக் கவராக வாரி முடித்துக் கட்டியவாறு, அரையில் கச்சுப்பட்டையைக் கட்டிக் கொண்டு, சுவேராடு பொருந்திய கதவுப் பக்கமாக வந்து நிற்கிறீரே! இப்படிப் புறம்பே நின்றவர் யார்? இதுவென்ன முறைமை? 1923

கருடக் கொடி உடையவரே! அக்கருடன் மீது நன்கு சவாரி செய்ய வல்லவரே! கள்ளத் தூக்கத்தில் அசுரவடிவக் சகடத்தை உருளச் செய்து தூள் ஆக்கி உம் திருவடிகளை நிமிர்த்தினீர். இரவிலே, பெண்ணான என்னை மயங்கச் செய்ய பாட்டுப் பாடிக் கொண்டு வீட்டில் புகுந்தீரே! இதென்ன தன்மை? முறையா! 1924

பலபல பெயர்களுடைய குறை ஒன்றுமில்லாத ஸ்ரீமந் நாராயணனே! உம் திருத்துழாய் மாலை, மூக்கைத் துளைக்கும் மணம் வீசுகிறது. இந்த இரவிலே மன்மதனோ என்னும்படி பாட்டுப் பாடிக் கொண்டு, காவலைக் கடந்து வீட்டினுள் புகுந்தீரே! இது தகுமா! இதென்ன காரியம்! 1925

உம் தலைமயிர்த்தொகுதி, பிடரியைச் சுற்றித் தாழ்ந்து அலையும் அழகுதான் என்னே! உடைவாளைத் தரித்தப்படி பலவகை மணிகளாலும் பொன்னாலும் செய்யப்பட்ட ஆபரணங்களை அணிந்துள்ளீர். எங்கள் முற்றம் புகுந்து, புன்முறுவல் செய்து கொண்டு நிற்கும் காரணம் என்ன? எதற்காக இங்கு வந்தீர்? ஏன்? 1926

பசுமேய்க்கும் இடைப் பிள்ளைகளும் பசுக் கூட்டங்களும் இங்கில்லாமல், வேறு இடத்தில் இருக்கின்றன. நீரோ, வளைந்த வில்லைக் கையில் ஏந்தியபடி, இங்கு வந்து நின்று கொண்டு, வருவோர் போவோரைப் பார்ப்பது போலப் பாசாங்கு செய்தபடி, திருட்டுத்தனமாக,இல்லத்துள் புகுந்தீர். உம் பகைவர் முன் அன்றோ ஆயுதத்துடன் வர வேண்டும்; காதலி இடத்தே ஆயுதம் எதற்கு? இடம் அறிந்து வர வேண்டாமா? 1927

மல்லே பொருத திரள் தோள் மணவாளீர்!
அல்லே அறிந்தோம் நும் மனத்தின் கருத்தை;
சொல்லாது ஒழியீர்; சொன்னபோதினால் வாரீர்
எல்லே! இது என்? இது என்? இது என்னோ ? 1928

புக்கு ஆடு அரவம் பிடித்து ஆட்டும் புனிதீர்!
இக் காலங்கள் யாம் உமக்கு ஏதொன்றும் அல்லோம்;
தக்கார் பலர் தேவிமார் சால உடையீர்
எக்கே இது என்? இது என்? இதுஎன்னோ ? 1929

ஆடி அசைந்து ஆய் மடவாரொடு நீ போய்க்
கூடிக் குரவை பிணை கோமளப் பிள்ளாய்!
தேடித் திரு மா மகள், மண்மகள் நிற்ப
ஏடி! இது என்? இது என்? இது என்னோ? 1930

அல்லிக் கமலக் கண்ணனை அங்கு ஓர் ஆய்ச்சி
எல்லிப் பொழுது ஊடிய ஊடல் திறத்தைக்
கல்லின் மலி தோள் கலியன் சொன்ன மாலை
சொல்லித் துதிப்பார் அவர் துக்கம் இலரே. 1931

**பெண்ணின் ஆற்றாமை கண்டு இரங்கிய தாய்,**
**தலைவனை வேண்டுதல்**

புள் உரு ஆகி, நள் இருள் வந்த
பூதனை மாள, இலங்கை
ஒள்ளரி மண்டி உண்ணப் பணித்த
ஊக்கம் அதனை நினைந்தோ?
கள் அவிழ் கோதை காதலும் எங்கள்
காரிகை மாதர் கருத்தும்
பிள்ளை தன் கையில் கிண்ணமே ஒக்கப்
பேசுவது எந்தை பிரானே! 1932





*மல்லருடன் போரிட்ட திரண்ட தோள்களை உடைய மணவாளனே! உம் மனக் கருத்தை நேற்று இரவே அறிந்து கொண்டோம். நீர் வரும் காலத்தைக் குறிப்பிடாமலே போய் விடுகிறீர். சொன்ன காலத்தில் வருவதும் இல்லை. சுதந்திரரான நீர் உறவுமுறையார் போலக் காலம் குறிப்பிடுகிறீர். ஆனால் அதைக் கடைப்பிடிப்பதும் இல்லை. உம்மை நீர் அறிகிறீரா? அல்லது எங்களை அறிந்தீரா?* **1928**

*பொய்கையில் புகுந்து, படமெடுத்த காளியனைப் பிடித்து ஆட்டி அடக்கினீர்! புனிதரே! இப்போதெல்லாம் நாங்கள் உம் சரக்கு இல்லைபோலும். தகுதி உடைய பலரை உம், தேவிமார்களாய்ப் பட்டங் கட்டிக் கொண்டுள்ளீர். இப்படிச் சாகசங்களைச் செய்யும் நீர் இங்கு வந்தது ஏன்? குறைவற்ற நீர் வரலாமா?* **1929**

*திருமகளும் பூமாதேவியும் தேடிக் கொண்டிருக்க நீ அவர்களை விட்டு விட்டு இடைப் பெண்களுடன் கூடி அசைந்து குரவைக் கூத்து ஆடினாயே! அழகிய கண்ணா! ஏடீ! தோழீ! இப்படிப்பட்டவரை உள்ளே புகவிட்டது யார்? எதற்காக இவர் இங்கே வந்தார்?* **1930**

*தாமரைக் கண்களுடைய கண்ணபிரானை, இராக் கலத்தில் இடைப்பெண் ஒருத்தி பாடிப் பேசிய ஊடல் விஷயமாய், கல்லை ஒத்த தோளுடைய கலியன் இப் பாசுரங்களை அருளினார். இவற்றைப் பாடித் துதிப்பவர் துன்பமின்றி வாழ்வார்கள்.* **1931**

**பெண்ணின் ஆற்றாமை கண்டு இரங்கிய தாய்,**
**தலைவனை வேண்டுதல்**

*எந்தை பிரானே! கண்ணா! தேன் துளிர்க்கும் பூச்சூடிய கூந்தலுடைய என் மகளின் காதலை அறிந்து ஆறி இருக்கலாமா? அழகு மிகுந்த அவள் தோழிப் பெண்கள், துணிந்து அவள் காதலைப் பழிப்பதை நீ அறியாயோ? கிண்ணத்தை நினைத்த போது வாங்கிப் போடுவது போல இதை எண்ணலாமா? நள்ளிருளிலே அச்சுறுத்தும் காக்கை வடிவில் வந்த பூதனை இறந்துபடச் செய்தவனே! இலங்கையை நெருப்பில் அழியச் செய்த வல்லவனே! நீ என் பெண்ணைப் பற்றி என்ன நினைக்கின்றாயோ?* **1932**

மன்றில் மலிந்து கூத்துஉவந்து ஆடி
மால் விடை ஏழும் அடர்த்து ஆயர்
அன்று நடுங்க ஆ நிரை காத்த
ஆண்மை கொலோ? அறியேன், நான்
நின்ற பிரானே! நீள் கடல் வண்ணா!
நீ இவள் தன்னைநின் கோயில்
முன்றில் எழுந்த முருங்கையில் தேனா
முன்கை வளை கவர்ந்தாயே. 1933

ஆர் மலி ஆழி சங்கொடு பற்றி
ஆற்றலை ஆற்றல் மிகுத்து
கார் முகில் வண்ணா! கஞ்சனை முன்னம்
கடந்த நின் கடுந் திறல் தானோ?
நேர் இழை மாதை நித்திலத் தொத்தை
நெடுங் கடல் அமுதம் அனையாளை,
ஆர் எழில் வண்ணா! அம் கையில் வட்டு ஆம்
இவள் எனக் கருதுகின்றாயே? 1934

மல்கிய தோளும் மான் உரி அதளும்
உடையவர் தமக்கும் ஓர் பாகம்
நல்கியநலமோ? நரகனைத் தொலைத்த
கரதலத்து அமைதியின் கருத்தோ?
அல்லி அம் கோதை அணி நிறம் கொண்டு
வந்து முன்னே நின்று போகாய்;
சொல்லி என்? நம்பி! இவளை நீ உங்கள்
தொண்டர் கைத் தண்டு என்ற ஆறே. 1935

செரு அழியாத மன்னர்கள் மாள,
தேர் வலம் கொண்டு, அவர் செல்லும்
அரு வழி வானம் அதர்படக் கண்ட
ஆண்மை கொலோ? அறியேன் நான்
திருமொழி எங்கள் தே மலர்க் கோதை
சீர்மையை நினைந்திலை அந்தோ!
பெரு வழி நாவற் கனியினும் எளியள்
இவள் எனப் பேசுகின்றாயே! 1936

அரக்கியர் ஆகம் புல் என வில்லால்
அணி மதிள் இலங்கையார் கோனைச்
செருக்கு அழித்து அமரர் பணிய, முன் நின்ற
சேவகமோ? செய்தது இன்று
முருக்கு இதழ் வாய்ச்சி முன் கை வெண் சங்கம்
கொண்டு முன்னே நின்று போகாய்;
எருக்கு இலைக்கு ஆக எறிமழு ஓச்சல்
என் செய்வது? எந்தை பிரானே! 1937





*திருமலையில் நிற்கிற பெருமானே! கடல் நிறத்தவனே! மன்றத்தில் குடக் கூத்தாடிய திருமாலே! ஏழு எருதுகளை அடக்கியவனே! ஆநிரைகளையும் ஆயர்களையும் இந்திரன் பெய்வித்த மழையிலிருந்து காத்தவனே! என் மகளின் முன் கைவளையை மிக எளிதாகக் கவர்ந்து கொண்டாயே! உன் ஆண்மையா இது?கோயில் முற்றத்தில் உள்ள முருங்கை மரத்தேன் போல், இவள் எளியவள் ஆகி விட்டாள்.* **1933**

*காளமேக நிறமுடைய அழகிய கண்ணா! கூர்மையான சக்கரத்தையும் சங்கையும் ஏந்திய நீ ஆற்றலுடன் கம்சனை அழித்த உன் ஆண்மையைப் பெற்றதாக நினைத்தோ, என் மகளை எளியவளாகக் கருதுகிறாய்? ஆபரணங்கள் அணிந்தவளாய், முத்து மாலை போலவும் அமுதம் போலவும் உள்ள என் பெண்ணை, கையில் கருப்புக் கட்டி போல எண்ணுகிறாயோ? தின்னவும் தூக்கிப் போடவும் படி மிக எளிதாக எண்ணுகிறாயே!* **1934**

*பல தோள்களையும், மான் தோல் ஆடையும் பெற்ற சிவனுக்கு, உன் திருமேனியில் ஒரு பகுதியைக் கொடுத்த சீலத்தை எண்ணுகிறாயோ? அன்றி, நரகாசுரனைக் கொன்ற உன் கை வலிமையைக் கருதுகிறாயோ? அழகிய மாலை சூடிய கூந்தலுடைய என் பெண்ணின் மாமை நிறத்தை ஏன் கவர்ந்தாய்? இவள் முன்னே வந்து உன் அழகைக் காட்டிவிட்டு, உன் தொண்டர் கையிலுள்ள வில்லைப் போல எளிதாக எண்ணுகிறாயே! நம்பீ! என்பேச்சால் பயன் உண்டா!* **1935**

*பாரதப் போரில், தோல்வியடையாத மன்னர் தோற்று இறக்கும்படி செய்து, உன் தேர் வலிமையால், அவர்கள் சென்ற வீர சுவர்க்கத்தைப் பெரிய பழி ஆக்கினாய். இந்த ஆண்மையை நினைத்து, என் மகளையும் எளியவளாக எண்ணுகிறாயோ? இனிய பேச்சுடையே, மலர் மாலை அணிந்த என் மகளின் சீர்மையைத் தெரிந்து கொள். பெருவழிக் கரையில் கிடக்கும் நாவல் பழம் என எண்ணாதே.* **1936**

*அரக்கியர் மார்பில் மங்கல அணிகள் இல்லாதபடி செய்து, மதிள் இலங்கை மன்னனை வில்லால் அழியச் செய்த ஆண்மையோ? தேவர்கள் பணிந்து வணங்கிய உன் வீரமோ?- இப்பொழுது என் மகளை மிக எளியவளாகக் கருதுவது? முருக்கம் பூப் போன்ற உதடுடைய இவள் கைவளையலைப் பறித்துக் கொண்டாய். உன் வடிவைக் காட்டாமல் இவளைத் துன்புறுத்துகிறாய். எருக்கிலையை எறியக் கோடாலியையா எடுப்பார்கள்? இது என்ன?* **1937**

ஆழிஅம் திண் தேர் அரசர் வந்து இறைஞ்ச,
அலை கடல் உலகம் முன் ஆண்ட
பாழிஅம் தோள் ஓர் ஆயிரம் வீழப்
படை மழுப் பற்றிய வலியோ?
மாழைமென் நோக்கி மணி நிறம் கொண்டு,
வந்து முன்னே நின்று போகாய்
கோழிவெண் முட்டைக்கு என் செய்வது எந்தாய்
குறுந்தடி நெடுங் கடல் வண்ணா ! 1938

பொருந்தலன் ஆகம் புள் உவந்து ஏற,
வள் உகிரால் பிளந்து அன்று
பெருந்தகைக்கு இரங்கி வாலியை முனிந்த
பெருமைகொலோ? செய்தது இன்று
பெருந் தடங் கண்ணி சுரும்பு உறு கோதை
பெருமையை நினைந்திலை; பேசில்
கருங்கடல் வண்ணா! கவுள் கொண்ட நீர் ஆம்
இவள் எனக் கருதுகின்றாயே. 1939

நீர் அழல் வான் ஆய், நெடு நிலம், கால்ஆய்
நின்ற நின் நீர்மையை நினைந்தோ?
சீர்கெழு கோதை என் அலது இலள் என்று
அன்னது ஓர் தேற்றன்மை தானோ?
பார்கெழு பவ்வத்து ஆர் அமுது அனைய
பாவையைப் பாவம் செய்தேனுக்கு
ஆர்அழல் ஓம்பும் அந்தணன் தோட்டம்
ஆக நின் மனத்து வைத்தாயே. 1940

வேட்டத்தைக் கருதாது அடி இணை வணங்கி,
மெய்ம்மை நின்று எம் பெருமானை,
வாள்திறல் தானை மங்கையர்தலைவன்
மானவேல் கலியன் வாய் ஒலிகள்
தோட்டு அலர் பைந்தார்ச் சுடர்முடியானைப்
பழமொழியால் பணிந்து உரைத்த
பாட்டு இவைபாட பத்திமை பெருகிச்
சித்தமும் திருவொடு மிகுமே. 1941

## பிரிவால் வருந்திய தலைவி ஆற்றாது கூறியது

திருத்தாய், செம்போத்தே!
திரு மாமகள் தன் கணவன்
மருத் தார் தொல் புகழ் மாதவனை வரத்
திருத்தாய், செம்போத்தே! 1942





வலிமையான தேர்களில் வந்த மன்னர் பலரும் பணிய கடல் கீழ் உலகாண்ட கார்த்தவீர்யாச்சுனனின் ஆயிரம் தோள்களையும் உன் மழுவால் வெட்டிய வீரமோ, என் மகனை எளியவளாக எண்ணியது? மான் பார்வை கொண்ட என் மகளின் மன நிறத்தைக் கவர்ந்த நீ, ஏன் அவள் முன்வந்து தோன்ற வில்லை? கடல் வண்ணா! கோழி முட்டையை உடைக்கக் குறுந்தடியா தேவை? 1938

பணியாத இரணியனை நகங்களால் கிழித்து, அவன் உடலைப் பறவைகள் தின்னும்படி செய்த வீரமா! அன்றியும் சுக்ரீவனுக்கு இரங்கி வாலியைக் கொன்ற மிடுக்கா! இன்று, அகன்ற கண்களுடைய என் மகளின் பெருமையை உணராமல் புறக்கணிக்காதே! கடல் வண்ணா! வண்டு படியும் கூந்தலுடைய இப் பெண்ணை, வாயில் விடும் தண்ணீரைக் கொப்பளிப்பதும், பருகுவதும் போல, அலட்சியம் செய்யாதே. 1939

நீர், நெருப்பு, வான், நிலம், காற்று ஆகியவையாய் நின்ற உன் நீர்மையால் என் மகளை ஏளனம் செய்யாதே. "இக்கோதைக்கு நம்மை விட்டால் வேறு கதி இல்லை" என்று எண்ணுகிறாயோ? அமுதம் போன்ற இப் பெண்ணைப் பாவியேன் பெற்றேன். வேள்வியையே காலமெல்லாம் செய்யும் அந்தணன், தோட்டத்தைப் புறக்கணித்துப் பாழாக்குவது போல, இவளை நீ அலட்சியம் செய்யலாமா? 1940

பகவானிடம் ஆசை மிகுந்தாலும், அடிமை உணர்வாலே, அவன் அருளையே எதிர் பார்த்து வணங்குபவர்க்கு எம் பெருமான் அருள் செய்கிறான். முடியில் மாலை சூடிய இப் பெருமானைப் பணிந்து, வாள் வலி உடைய திருமங்கை மன்னர் பழமொழிகளால், இப் பாசுரங்களைப் பாடினார். இவற்றைப் பயில்பவர்கள் பரமபக்தி பெற்றுக் கைங்கரியத்திருவை அடைவார்கள். 1941

## பிரிவால் வருந்திய தலைவி ஆற்றாது கூறியது

செம்போத்துப் பறவையே! மணம் வீசும் மாலை அணிந்தவனாய், நிறைந்த புகழுடைய, திருமகள் கேள்வனான மாதவப் பெருமானை, என்னிடம் வரும்படி அழைப்பாய். செம்போத்தே! நீ எனக்கு உதவ வேண்டும். 1942

கரையாய், காக்கைப் பிள்ளாய்!
கரு மாமுகில் போல் நிறத்தன்
உரைஆர் தொல் புகழ் உத்தமனை வரக்
கரையாய், காக்கைப் பிள்ளாய்! 1943

கூவாய் பூங் குயிலே!
குளிர் மாரி தடுத்து உகந்த
மா வாய்கீண்டமணி வண்ணனை வரக்
கூவாய் பூங் குயிலே ! 1944

கொட்டாய், பல்லிக் குட்டி!
குடம்ஆடி உலகு அளந்த
மட்டு ஆர் பூங்குழல் மாதவனை வரக்
கொட்டாய், பல்லிக்குட்டி! 1945

சொல்லாய், பைங் கிளியே!
சுடர் ஆழி வலன் உயர்த்த
மல் ஆர்தோள் வட வேங்கடவனை வரச்
சொல்லாய், பைங் கிளியே! 1946

கோழி கூ என்னுமால்;
தோழி நான் என் செய்கேன்?
ஆழி வண்ணர் வரும் பொழுது ஆயிற்று
கோழி கூ என்னுமால். 1947

காமற்கு என் கடவேன்?
கரு மா முகில் வண்ணற்கு அல்லால்,
பூ மேல் ஐங்கணை கோத்துப் புகுந்து எய்யக்
காமற்கு என் கடவேன்? 1948

இங்கே போதும்கொலோ?
இனவேல் நெடுங் கண் களிப்ப
கொங்கு ஆர் சோலைக் குடந்தைக் கிடந்த மால்
இங்கே போதும்கொலோ? 1949





காக்கைப் பிள்ளையே! காளமேக நிறமுடையவனும் சொல்வல்லானும் நித்தியமான புகழும் உடைய உத்தமனான இராம பிரானை என்னிடம் வரும்படி நீ கூப்பிடு. காக்கையே எனக்காக அதற்குக் கரைவாய் ஆக. **1943**

பூங்குயிலே! குளிர் மழையிலிருந்து பசுக்களைக் காத்தவனும் பகாசுரனுடைய வாயைக் கிழித்தவனும் ஆன மணிநிறக் கண்ணனை என்னிடம் வரும்படி கூவ வேண்டும். குயிலே அவனை அழைத்துக் கூவு. **1944**

ஏ! பல்லிக் குட்டி! குடக் கூத்தாடியவனும் உலகளந்தவனும், தேன் துளிர்க்கும் பூச்சூடிய திருக்குழல் உடையவனும் ஆன மாதவனை என்னிடம் வரும்படி நீ ஒலி எழுப்பிக் கொட்ட வேண்டும். பல்லிக் குட்டி! அவனை அழைத்துக் கொட்டு. **1945**

பசுங்கிளியே! ஒளி மிகுந்த சக்கரத்தை வலக்கரத்தில் ஏந்தியுள்ளபடி ஆற்றல் மிக்க தோள்களுடைய வடதிருவேங்கட மலையில் நின்றருளும் திருமாலை என்னிடம் வரும்படி கூறு. கிளியே அவனை அழைத்து வா. **1946**

தோழீ! கடல் நிறக் கண்ணன் வரவைக் குறிக்கும்படி, சாமப் பொழுதில் கோழி கூவிற்று; மகிழ்ந்தேன். அதற்குள் ளாகவா காலம் கடந்தது? என் செய்வேன்! அவன் பிரியப் போகிறான் என்பதைக் குறிக்கும்படி, மறுபடியும் கோழி கூவி விட்டதே! இனி அவன் பிரிந்து விடுவானே! நான் என் செய்வேன்! **1947**

காளமேக நிறம் கொண்ட கண்ணனுக்குக் கடமைப்பட்ட மன்மதன், மலர்களாகிய ஐந்து அம்புகளைத தொடுத்து என் உள்ளே புகுந்து,துன்புறுத்துகிறான். அந்த மன்மதனுக்கு நான் என்ன செய்ய வல்லேன்? **1948**

தேன் மிகுந்த சோலைகள் உள்ள திருக்குடந்தையில் பள்ளி கொண்ட திருமால், வேல் போன்ற என் இணைக் கண்களும் களிப்படைய இங்கு எழுந்தருளுவானோ? அவன் இங்கே வருவானோ? அறியேன். **1949**

இன்னார் என்று அறியேன்;
அன்னே! ஆழியொடும்
பொன் ஆர் சார்ங்கம் உடையஅடிகளை
இன்னார் என்று அறியேன். 1950

தொண்டீர்! பாடுமினோ;
சுரும்பு ஆர் பொழில் மங்கையர் கோன்
ஒண் தார் வேல் கலியன் ஒலி மாலைகள்
தொண்டீர்! பாடுமினோ. 1951

### பிரிவு ஆற்றாத தலைவி இரங்கிக் கூறியது

குன்றம் ஒன்று எடுத்து, ஏந்தி, மா மழை
அன்று காத்த அம்மான், அரக்கரை
வென்ற வில்லியார் வீரமே கொலோ?
தென்றல் வந்து தீ வீசும் ? என் செய்கேன்? 1952

காரும், வார் பனிக் கடலும் அன்னவன்
தாரும் மார்வமும் கண்ட தண்டமோ?
சோரு மா முகில் துளியினூடு வந்து
ஈர வாடை தான் ஈரும் என்னையே? 1953

சங்கும் மாமையும் தளரும் மேனிமேல்
திங்கள் வெம் கதிர் சீறும் என் செய்கேன்?
பொங்கு வெண் திரைப் புணரி வண்ணனார்?
கொங்கு அலர்ந்த தார் கூவும் என்னையே. 1954

அங்கு ஓர் ஆய்க்குலத்துள் வளர்ந்து சென்று
அங்கு ஓர் தாய் உரு ஆகி வந்தவள்
கொங்கை நஞ்சு உண்ட கோயின்மை கொலோ?
திங்கள் வெம் கதிர் சீறுகின்றதே? 1955

அங்கு ஓர் ஆள்அரி ஆய், அவுணனைப்
பங்கமா இரு கூறு செய்தவன்
மங்குல் மா மதில் வாங்கவே கொலோ?
பொங்கு மா கடல் புலம்புகின்றதே 1956





அம்மா! திருச்சக்கரத்தையும் பொன் மயமான சார்ங்க வில்லையும் கையில் உடைய சுவாமியை நான் இப்படிப்பட்டவர் என்று அடையாளம் கூற அறியேன். அவரை இன்னார் என்று அறியேன். 1950

தொண்டர்களே! வண்டுகள் வாழும் சோலைகள் உள்ள திருமங்கை நாட்டு மன்னரும் மாலை சூடிய வேற்கலியனும் ஆன ஆழ்வார் பாடிய இவற்றை நீங்கள் வாயாரப் பாடுங்கள். இவற்றின் பயன் பாடுவதே ஆகும். 1951

### பிரிவு ஆற்றாத தலைவி இரங்கிக் கூறியது

மலையைத் தூக்கி மழையினின்று பசுக்களைக் காத்த கண்ணனும் அரக்கரை வென்ற வில்லை உடைய இராமனும் ஆகிய சுவாமியின் வீரத்தின் பின்னே சென்ற தென்றல் காற்று, என்னிடம் வந்து நெருப்பை வீசுகிறது! என் செய்கேன்? 1952

மேகத்தையும் பனிக் கடலையும் ஒத்த நிறமுடையவனின் திருத்துழாய் மாலைக்கும் மார்புக்கும் ஆசைப்பட்டு சென்ற எனக்கு இது தண்டனையோ! மழை பொழியும் மேகங்களின் ஊடே பாய்ந்து வரும் வாடைக் காற்று விரகத்தில் தவிக்கும் என உடலை நலிகிறதே! 1953

கைவளையும் மாமை நிறமும் தளர்ந்து போன என் உடல் மீது, சந்திரனின் கதிர்கள் வெம்மையாகப் பட்டுச் சிதறுகின்றன. என் செய்கேன்! பொங்கும் கடல் நிறமுடைய அவர் அணிந்த மணம் வீசும் திருத்துழாய் மாலை என் பெண்மைக்குச் சவால் விட்டு புறப்படு என அழைக்கிறது. 1954

திருவாய்ப்பாடியில் வளரும் பொழுது, தாயின் வடிவில், வஞ்சனையுடன் வந்த பூதனையின் நஞ்சுமுலையை உண்ட மாயச் செயலைப் பின்பற்றியோ சந்திரனின் வெம்மையான கதிர்கள் என் மேல் சீறுகின்றன! 1955

பிரகலாதனைக் காக்க, நரசிம்மப் பிரான் இரணியனை மானபங்கம் செய்து அவன் உடலை இரு கூறாகக் கிழித்துப் போட்டான். இப்படி அரிதாகச் செய்ய வல்லவன், தன்னை நெருக்கிக் கடைந்து உள் உண்டான சந்திரனை வாங்கியதாலேயோ, இக் கடலும் புலம்புகிறது! என்னைப் போல் மதி இழந்ததோ! 1956

சென்று வார் சிலை வளைத்து இலங்கையை
வென்ற வில்லியார் வீரமே கொலோ?
முன்றில் பெண்ணைமேல் முளரிக் கூட்டகத்து
அன்றிலின் குரல் அடரும் என்னையே 1957

பூவை வண்ணனார் புள்ளின்மேல் வர
மேவி நின்று நான் கண்ட தண்டமோ?
வீவு இல் ஐங்கணை வில்லி அம்பு கோத்து
ஆவியே இலக்கு ஆக எய்வதே! 1958

மால் இனம் துழாய் வரும் என் நெஞ்சகம்
மாலின் அம் துழாய் வந்து என் உள்புக
கோல வாடையும் கொண்டு வந்தது ஓர்
ஆலி வந்ததால் அரிது காவலே! 1959

கெண்டை ஒண் கணும் துயிலும்; என் நிறம்
பண்டு பண்டு போல் ஒக்கும் மிக்க சீர்த்
தொண்டர் இட்ட பூந்துளவின் வாசமே
வண்டு கொண்டு வந்து ஊதுமாகிலே. 1960

அன்று பாரதத்து ஐவர் தூதனாய்ச்
சென்ற மாயனை, செங் கண் மாலினை,
மன்றில் ஆர் புகழ் மங்கை வாள் கலி
கன்றி சொல் வல்லார்க்கு அல்லல் இல்லையே. 1961

## பிரிவு ஆற்றாத தலைவி வருந்துதல்

குன்றம் எடுத்து மழை தடுத்து, இளையாரொடும்
மன்றில் குரவை பிணைந்த மால் என்னை மால் செய்தான்;
முன்றில் தனி நின்ற பெண்ணைமேல் கிடந்து ஈர்கின்ற
அன்றிலின் கூட்டைப் பிரிக்ககிற்பவர் ஆர்கொலோ? 1962

பூங் குருந்து ஒசித்து ஆனை காய்ந்து, அரி மாச் செகுத்து,
ஆங்கு வேழத்தின் கொம்பு கொண்டு வன் பேய் முலை
வாங்கி உண்ட அவ் வாயன் நிற்க இவ் ஆயன் வாய்
ஏங்கு வேய்ங்குழல் என்னோடு ஆடும், இளமையே. 1963





பகைவர் இடம் சென்று வில் வளைத்து இலங்கையை அழித்த இராமனுடைய வீரத்தைப் பின்பற்றியோ, வாசலில் நிற்கும் பனைமீது உள்ள தாமரைக் கூட்டிலே கிடக்கும் அன்றில் பறவை, குரல் கொடுத்து என்னை வருத்துகிறது? 1957

காயாம்பூ நிறமுடைய திருமால் கருடன் மேல் எழுந்தருளும் பொழுது, நான் மனம் இழந்து, ஆசைப்பட்டதற்கு தீ தண்டனை இது தானோ? என் எனில், ஐந்து விற்களை உடைய மன்மதன் அம்பு கோத்து என் ஆவியையே இலக்காக எய்கிறான். 1958

என் இதயம் அவனிடம் மயங்கி, மோகமுற்றதாய், அவனையே எங்கும் தேடுகிறது. அத் திருமாலின் திருத்துழாய் வாசனையும், வாடைக் காற்றுடன் கலந்து வந்தது. வாடையின் சிறு துளியும் வந்து விரகதாபத்தை மேலாக்குகிறது. இவற்றுக்குக் காவல் இடுவது மிக அரிதே. 1959

சீரிய வைணவத் தொண்டர்கள் இட்ட திருத்துழாய்ப் பூவின் மணத்தை வண்டு வந்து என்னிடம் ஊதுமாகில், கெண்டை போன்ற என் கண்கள்உறக்கம் பெறும். என் மாமை நிறமும் பழைய படி ஒளி பெறும். 1960

பாரதப் போரில் பஞ்ச பாண்டவர்க்காகத் தூது சென்ற மாயனான செங்கண் மாலினை, மன்றங்களெல்லாம் புகழும் பெருமை உடைய திருமங்கை மன்னரான கலியன் பாடிய இப் பாசுரங்களை ஓதுபவர்க்கு இறைவனைப் பிரியும் துன்பம் உண்டாகாது. 1961

## பிரிவு ஆற்றாத தலைவி வருந்துதல்

மலையைக் குடையாய் எடுத்து மழை தடுத்துக் காத்தவனும், மன்றில் இடைப் பெண்களுடன் குரவைக் கூத்தாடியவனும் ஆன திருமால் என்னை மயக்கி, மோகத்தில் வீழ்த்தி விட்டான். வாசலில், பனை மரத்தில் இருந்து கொண்டு என்னை நலியும் அன்றில் பறவை களைக் கூட்டிலிருந்து யாராவது பிரித்து விடுபவர் உண்டோ! 1962

பூத்த குருந்த மரத்தை முறித்தான்; எருதுகளை அடக்கினான்; குதிரை வடிவில் வந்த கேசியின் வாயைப் பிளந்தான்; குவலயாபீட யானையின் கொம்புகளை ஒடித்தான்; பூதனைப் பேயின் நஞ்சுமுலை உண்டு வதைத்தான். இந்தக் கண்ணன் மட்டுமின்றி, பலராமனான இடைப்பிள்ளையும் ஊதுகிற புல்லாங்குழல் ஓசை என் இளமையைத் தூண்டித் துன்புறுத்துகிறது. 1963

மல்லொடு கஞ்சனும் துஞ்ச வென்ற மணிவண்ணன்
அல்லி மலர்த் தண் துழாய் நினைந்திருந்தேனையே,
எல்லியில் மாருதம் வந்து அடும்; அது அன்றியும்
கொல்லை வல் ஏற்றின் மணியும் கோயின்மை செய்யுமே. 1964

பொருந்து மா மரம் ஏழும் எய்த புனிதனார்
திருந்து சேவடி என் மனத்து நினைதொறும்
கருந் தண் மா கடல் கங்குல் ஆர்க்கும்; அது அன்றியும்
வருந்த வாடை வரும்; இதற்கு இனி என் செய்கேன்? 1965

அன்னை முனிவதும், அன்றிலின் குரல் ஈர்வதும்,
மன்னு மறிகடல் ஆர்ப்பதும் வளை சோர்வதும்
பொன் அம் கலை அல்குல், அன்ன மென் நடை பூங் குழல்
பின்னை மணாளர் திறத்தம் ஆயின பின்னையே. 1966

ஆழியும் சங்கும் உடைய நங்கள் அடிகள் தாம்
பாழிமையான கனவில் நம்மைப் பகர்வித்தார்;
தோழியும் நானும் ஒழிய வையம் துயின்றது;
கோழியும் கூகின்றது இல்லை; கூர் இருள் ஆயிற்றே. 1967

காமன் தனக்கு முறை அல்லேன்; கடல் வண்ணனார்
மா மணவாளர்; எனக்குத் தானும் மகன், சொல்லில்;
யாமங்கள் தோறு எரி வீசும் என் இளங் கொங்கைகள்
மா மணி வண்ணர்திறத்தவாய் வளர்கின்றவே. 1968

மஞ்சு உறு மாலிருஞ்சோலை நின்ற மணாளனார்
நெஞ்சம் நிறைகொண்டு போயினார்; நினைகின்றிலர்
வெம் சுடர் போய்,விடியாமல் எவ்விடம் புக்கதோ?
நஞ்சு உடலம் துயின்றால் நமக்கு இனி நல்லதே. 1969

காமன் கணைக்கு ஓர் இலக்கம் ஆய், நலத்தின் மிகு
பூ மரு கோலம் நம் பெண்மை சிந்தித்து இராது போய்,
தூ மலர் நீர் கொடு தோழி! நாம் தொழுது ஏத்தினால்
கார் முகில் வண்ணரைக் கண்களால் காணல் ஆம்கொலோ? 1970





மல்லர்களையும் கம்சனையும் கொன்று வெற்றி பெற்ற மணிவண்ணனின் இதழ்கூடிய திருத்துழாய் மாலையை விரும்பி, அதையே நினைத்துக் கொண்டு இருக்கிறேன். மாலையில் வீசும் தென்றல் என்னைச் சுடுகிறது. கொல்லையில் உள்ள எருதுகளின் மணி ஓசை என் காதில் பட்டு, என்னை அலைக் கழிக்கிறது. 1964

மராமரங்கள் ஏழும் ஒன்றுபடும் படி அம்பு எய்த புனிதரின், திருவடிகளை என் மனம் நினைக்கும் தொறும், கறுத்த கடல் ஓசை காதிற்பட்டுத் துன்புறுத்துகிறது. அன்றியும் வாடையும் என்னை அறுக்கிறது. இனி நான் என்ன செய்வேன்? 1965

அன்னையோ சீறுகிறாள்; அன்றில் குரல் அறுக்கிறது; கடல் ஓசை துன்புறுத்துகிறது; என் கை வளையல்களோ கழலுகின்றன. இவையெல்லாம் ஏற்படக் காரணம் எதுவென்றால் கண்ணன் மேல் உண்டான காதலே ஆகும். அப்பெருமான், அழகிய ஆடை உடுத்திய இடையையும் அன்ன நடையையும் பூங்குழலையும் உடைய நப்பின்னைப் பிராட்டியின் மணாளன் அன்றோ! 1966

சங்கு, சக்கரம் ஏந்திய நம் சுவாமி, பரந்த கனவில், நம்மை அழைத்தார். தோழியும் நானும் தவிர, உலகத்தவர் உறங்கி விட்டனர். கோழியோ இன்னும் கூவ வில்லை. இந்த இரவின் கூரிய இருள் நீண்டு கொண்டே போகிறதே! என் செய்வேன்? 1967

மன்மதன் என்னைத் துன்புறுத்துவது முறை அன்று. ஏன் என்றால், கடல் நிறம் உடைய கண்ணபிரான் என் மணவாளர் ஆகையால் மன்மதன் மகன் ஆகிறானே! இரவின் சாமங்கள் தோறும் இவன் நெருப்பை வீசுகிறான். என் மார்புகளோ நீல மணி நிறப் பெருமாள் திறத்துப் பயன் அடைய மேலும் விம்முகின்றன. 1968

மேக மண்டலத்தைத் தொடும் திருமாலிருஞ்சோலை மலையில் எழுந்தருளியவன் என் நெஞ்சின் நிறையைக் கொண்டு போனான். இது பற்றி அவன் எண்ணுவதும் இல்லை. சூரியன் உதிக்காமல் எங்கு சென்றானோ? என் உடல் இனி நொந்து அழிந்தால் அன்றி எனக்கு நல்ல வாழ்வு இனி இல்லை. 1969

தோழீ! மன்மதனின் அம்புக்கு இலக்காகித் துன்புறும் பொழுது, பெண்மைக்கே சோதனை ஏற்பட்டு விட்டது. பெருமான் வரும்வரை காத்திருக்கும் அடக்கத்தை விட்டு விட்டு, தாமே அவனிடம் சென்று, தூமலர், நீர் கொண்டு, அக் காளமேகப் பெருமானைத தொழுது வணங்குவோம். அப்பொழுதாவது அவன் தன் கண்களால் நோக்கி அருள் செய்வானா? 1970

வென்றி விடை உடன் ஏழ் அடர்த்த அடிகளை
மன்றில் மலி புகழ் மங்கை மன் கலிகன்றி சொல்
ஒன்று நின்ற ஒன்பதும் உரைப்பவர் தங்கள் மேல்
என்றும் நில்லா, வினைஒன்றும் ; சொல்லில்,உலகிலே. 1971

### தலைவி, இரங்கி, அறத்தொடு நிற்றல்

மன் இலங்கு பாரதத்துத் தேர் ஊர்ந்து மாவலியைப்
பொன் இலங்கு திண் விலங்கில் வைத்து, பொரு கடல் சூழ்
தென் இலங்கைஈடு அழித்த தேவர்க்கு இது காணீர்
என் இலங்கு சங்கோடு எழில் தோற்றிருந்தேனே. 1972

இருந்தான் என் உள்ளத்து இறைவன் கறை சேர்
பருந் தாள் களிற்றுக்கு அருள் செய்த செங் கண்
பெருந் தோள் நெடு மாலைப் பேர் பாடி ஆட
வருந்தாது என் கொங்கை ஒளி மன்னும் அன்னே ! 1973

அன்னே! இவரை அறிவன்; மறை நான்கும்
முன்னே உரைத்த முனிவர்; இவர் வந்து
பொன் ஏய் வளை கவர்ந்து போகார் மனம் புகுந்து;
என்னே? இவர் எண்ணும் எண்ணம் அறியோமே! 1974

அறியோமே என்று உரைக்கல் ஆமே? எமக்கு
வெறி ஆர் பொழில் சூழ் வியன் குடந்தை மேவி,
சிறியான் ஓர் பிள்ளை ஆய், மெள்ள நடந்திட்டு
உறி ஆர் நறு வெண்ணெய் உண்டு உகந்தார் தம்மையே. 1975

தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத்
தம்மையே ஒக்க அருள் செய்வர்; ஆதலால்
தம்மையே நாளும் வணங்கித் தொழுது இறைஞ்சி
தம்மையே பற்றா மனத்து என்றும் வைத்தோமே. 1976





ஏழு காளைகளை வென்ற கண்ணனைப் பற்றி, மன்றங்கள் புகழும் பெருமை உடைய திருமங்கை மன்னரான கலிகன்றி அருளிய இப்பாசுரங்களைப் பயில்பவரின் வினைகள் நில்லா. அவர்கள் நிலங்களிலும் வினைகள் நில்லா. 1971

### தலைவி, இரங்கி, அறத்தொடு நிற்றல்

அரசர்கள் பலரும் பங்கேற்ற, பாரதப் போரில் கண்ணன் தேர் ஓட்டினான்; மாவலியைப் பொன் விலங்கில் சிறை இட்டான்; கடல் சூழ் இலங்கையை அழித்தான். இந்த எம்பெருமானுக்கு என் ஒளி வளையுடன் உடல் நிறத்தையும் இழந்தேன். இதுதானா அவனுடைய அருள்? 1972

தாய் போன்ற தோழியே! என் இதயத்தில் இறைவன் எப்பொழுதும் இருக்கிறான். சிவந்த கண்களும் பெருந் தோள்களும் உடைய திருமால், உரல் போன்ற கால்களை உடைய கஜேந்திரனுக்கு அருள் செய்தான். இப்பெருமானின் திருநாமங்களை வாயால் பாடி, ஆடி, என் முலைகள் குலையாமல் தம் நிறம் பெற்றன. 1973

தோழி! இவரை நான் நன்கு அறிவேன். இவர்தாம், பிரளயகாலத்தில், நான்கு வேதங்களை எடுத்துக் காத்துப் பிரமனுக்கு அருளிய வேத சீலர். இவரே என்னிடம் வந்து பொன் மயமான என் கைவளையல்களை விரும்பினார்; என் நெஞ்சில் புகுந்தபின், போகாமல் நிலைத்துள்ளார். இவர் எண்ணம் எதுவோ? அறியோம். 1974

மணம் வீசும் சோலைகள் சூழ்ந்த திருக் குடந்தையில் சாய்ந்தருளின, திருமாலே, சிறிய பிள்ளை வடிவில் கண்ணனாக, மெள்ள நடந்து, உறியில் இருந்த வெண்ணெய்யை உண்டு மகிழ்ந்தார். இப் பெருமானை, 'அறியவில்லை' என்று நாம் சொல்லல் ஆகுமோ? 1975

இவர் தம்மையே தினமும் வணங்கித் தொழுபவர்க்கு அவர்கள் தம்மைப் போலே ஆகும்படி அருள் செய்வார். ஆகையால், அவரையே தினமும் தொழுது எந்நாளும் பற்றி, மனத்தில் வைத்து, அடைக்கலம் புகுகிறோம். 1976

வைத்தார், அடியார் மனத்தினில்; வைத்து இன்பம்
உய்த்தார் ஒளிவிசும்பில் ஓர் அடி வைத்து ஓர் அடிக்கும்
எய்த்தாது மண் என்று இமையோர் தொழுது ஏத்தி,
கைத்தாமரை குவிக்கும் கண்ணன், என் கண்ணனையே 1977

கண்ணன் மனத்துள்ளே நிற்கவும், கை வளைகள்
என்னோ கழன்ற ? இவை என்ன மாயங்கள் ?
பெண் ஆனோம் பெண்மையோம் நிற்க அவன் மேய
அண்ணல் மலையும் அரங்கமும் பாடோமே 1978

பாடோமே? எந்தை பெருமானை பாடி நின்று,
ஆடோமே? ஆயிரம் பேரானை பேர் நினைந்து
சூடோமே? சூடும் துழாய் அலங்கல் சூடி நாம்
கூடோமே? கூடக் குறிப்பு ஆகில் நல் நெஞ்சே! 1979

நல்நெஞ்சே! நம் பெருமான் நாளும் இனிது அமரும்
அன்னம் சேர் கானல் அணி ஆலி கைதொழுது,
முன்னம் சேர் வல்வினைகள் போக, முகில் வண்ணன்
பொன்னம் சேர் சேவடிமேல் போது அணியப் பெற்றோமே. 1980

பெற்று ஆரார் ஆயிரம் பேரானைப் பேர் பாட;
பெற்றான் கலியன் ஒலி செய் தமிழ் மாலை
கற்றார் ஓ! முற்று உலகு ஆள்வர்; இவை கேட்கல்
உற்றார்க்கு உறு துயர் இல்லை, உலகத்தே 1981

### அவதாரங்களின் மேன்மை

நிலை இடம் எங்கும் இன்றி, நெடு வெள்ளம் உம்பர்
வள நாடு மூட இமையோர்
தலை இட, மற்று எமக்கு ஓர் சரண் இல்லை என்ன,
அரண் ஆவன் என்னும்அருளால்,
அலை கடல் நீர் குழம்ப அகடு ஆட ஓடி
அகல் வான் உரிஞ்ச, முதுகில்
மலைகளைமீது கொண்டு வரும்மீனை, மாலை
மறவாது இறைஞ்சு, என் மனனே! 1982





திரிவிக்கிரமனான பகவான், ஒளி மிகுந்த வானில் ஒரு காலை வைத்து மற்றொரு திருவடியைப் பூமியில் வைத்து அதுவும் போதாதாய் இருப்பதைக் கண்டு, பிரமன் முதலானோர் தம் தாமரைக் கைகளைக் குவித்து வணங்கித் துதித்தனர். இத்தகைய கண்ணனை அடியார்கள் தம் மனத்தில் வைத்து பேரின்பம் பெற்று உய்ந்தார்கள். **1977**

கண்ணன் என் மனத்தில் இருந்தும் கூட, என் கை வளையல்கள் கழன்ற காரணம் ஏனோ? இது என்ன மாயம்! பெண்ணாகப் பிறந்த நாம், பெண்மையை இழந்தோமா? இது நீற்க; அப் பெருமான் எழுந்தருளிய திருவேங்கட மலையையும் திருவரங்கத்தையும் பாடுவோம் அன்றோ! ஆம்; பாடுவோம். **1978**

நல்ல நெஞ்சே! எந்தை பெருமானைப் பாடோமோ? ஆயிரம் திருநாமங்களை உடைய அவனை வாயாரப் பாடி நின்று ஆடோமோ? அவ்வாறு நினைந்து, அவன் சூடிய திருத்துழாய் மாலையைச் சூடோமோ? இவை கூடுமாயின், அவன் திருவுள்ளம் உண்டாகி அவனையே சேர்வோமே. **1979**

நன்னெஞ்சே! நம் பெருமான் மகிழ்ந்து எழுந்தருளும் திருவாலியைக் கைதொழுது, பழைய நம் வினைகளைப் போக்குவோம். இத் திருவாலியில் அன்னங்கள் வாழும் நெய்தல் நிலங்கள் உள்ளன. காளமேகம் போன்ற எம் பெருமானின் பொன்னான திருவடிகளில் பூக்களை இட்டு வணங்குவோம். **1980**

எம்பெருமானின் ஆயிரம் திருநாமங்களைப் பாடப் பெற்றவரான கலியன் அருளிய இப்பாசுரங்களைக் கற்பவர் நாமங்கள் ஓதும் பயனைப் பெற்று உலகங்கள் அனைத்தையும் ஆளப்பெறுவர். இவற்றைக் கேட்டவர்க்கு உலகெங்கும் துயர் உண்டாகாது. **1981**

### அவதாரங்களின் மேன்மை

எங்கும் நிலைத்து நிற்காமல் பிரளய வெள்ளம் தேவருலகம் முழுவதும் புகுந்ததும், அவர்கள் இருப்பிடம் இல்லாமல் பகவானை நோக்கி " எங்களைக் காப்பாற்ற உம்மை அன்றி வேறு யாரும் இலர்" என்று முறையிட்டனர். 'நான் அரண் ஆவேன்' என்று அருளிய திருமால், கடல் குழம்பும் படியாக மீன் வடிவெடுத்துத் தன் கீழ் வயிற்றில் அலை எறிய, வானம் வரை ஓடி மலைகளைத் தன் முதுகிலே தாங்கி, எல்லாவற்றையும் காத்தான். என் மனமே! இந்தத் திருமாலை மறவாமல் வணங்கு. **1982**

செரு மிகு வாள் எயிற்ற அரவு ஒன்று சுற்றி,
திசை மண்ணும் விண்ணும் உடனே
வெருவர வெள்ளை வெள்ளம் முழுதும் குழம்ப,
இமையோர்கள் நின்று கடைய,
பரு வரை ஒன்று நின்று முதுகில் பரந்து
சுழலக் கிடந்து துயிலும்
அரு வரை அன்ன தன்மை அடல் ஆமை ஆன
திருமால் நமக்கு ஓர் அரணே. 1983

தீது அறு திங்கள் பொங்கு சுடர், உம்பர்,
உம்பர் உலகு ஏழினோடும் உடனே,
மாதிர மண் சுமந்த வட குன்றும், நின்ற
மலை ஆறும் ஏழு கடலும்
பாதமர் சூழ் குளம்பின் அக மண்டலத்தின்
ஒருபால் ஒடுங்க வளர் சேர்
ஆதி முன் ஏனம் ஆகி, அரண் ஆய மூர்த்தி
அது நம்மை ஆளும் அரசே. 1984

தளை அவிழ் கோதை மாலை இருபால் தயங்க
எரி கான்று இரண்டு தறு கண்
அளவு எழ, வெம்மை மிக்க அரி ஆகி அன்று
பரியோன் சினங்கள் அவிழ,
வளை உகிர் ஆளி மொய்ம்பின் மறவோனது ஆகம்
மதியாது சென்று ஒரு உகிரால்
பிளவு எழ விட்ட குட்டம் அது வையம் மூடு
பெரு நீரில் மும்மை பெரிதே. 1985

வெந் திறல் வாணன் வேள்வியிடம் எய்தி, அங்கு
ஓர் குறள் ஆகி, மெய்ம்மை உணர
செந் தொழில் வேத நாவின் முனி ஆகி வையம்
அடி மூன்று இரந்து பெறினும்,
மந்தரமீது போகி மதி நின்று இறைஞ்ச
மலரோன் வணங்க வளர் சேர்
அந்தரம் ஏழினூடு செல உய்த்த பாதம்
அது நம்மை ஆளும் அரசே. 1986

இரு நில மன்னர் தம்மை இரு நாலும் எட்டும்
ஒரு நாலும் ஒன்றும் உடனே
செரு நுதலூடு போகி, அவர் ஆவி மங்க
மழுவாளில் வென்ற திறலோன்,
பெரு நில மங்கை மன்னர் மலர் மங்கை நாதர்,
புலமங்கை கேள்வர், புகழ் சேர்
பெரு நிலம் உண்டு உமிழ்ந்த பெரு வாயர் ஆகி-
யவர் நம்மை ஆள்வர் பெரிதே. 1987





வலிமை மிகுந்த ஒளிப் பற்களுடைய வாசுகியைக் கயிறாகச் சுற்றித் தேவர்கள், வெள்ளையான பாற்கடலைக் கடைந்தார்கள். திசைகளும் மண்ணும் விண்ணும் அப்பொழுது நடுங்கின. கடலில் மத்தாக நின்ற பெரிய மந்தர மலை சுழல்வதற்காக, அதைத் தாங்க வேண்டித் திருமால், ஆமை வடிவம் கொண்டு அதற்குக் கீழே பெரிய மலையாகப் படுத்துப் பாற்கடலைக் கடைய உதவினான். இந்தத் திருமால் நமக்கு ஒப்பற்ற காவலன் ஆவான். 1983

வராக கல்பத்தில், திருமால், வராக வடிவம் கொண்டு உலகுகளைக் காத்தான் அப்பொழுது, குற்றமற்ற சந்திரன், கொளுத்தும் சூரியன், தேவர்கள். அவர்கள் உலகுகள், திசைகள், பூமி, பூமியைத் தாங்கும் மேருமலை, ஆறு மலைகள். ஏழு கடல்கள் ஆகிய யாவும் வராஹ மூர்த்தியின் திருவடிக் குளம்புகளில் அடங்கின. இவ்வாறு அகண்ட உருவம் கொண்ட அம் மூர்த்தி நம்மை அடிமை கொண்டு காப்பான். 1984

தோள்மாலையும் கழுத்து மாலையும் இருபுறத்திலும் அசைய, நரசிம்மப் பிரான் நெருப்பு உமிழும் இரு வட்டக் கண்களுடன் இரணியன் முன்னே தோன்றினான். மிகுந்த சினத்துடன் தன் வளைந்த நகங்களால், அசுரனின் உடலை இரு பாகமாகப் பிளந்து சென்றான். அப்பொழுது ஓடிய இரத்த வெள்ளம் பூவுலகம் முழுவதும் மூடிப் பிரளய காலத்திலும் மூன்று மடங்கு பெருகியதே! 1985

திருமால், வலிமை பெற்ற மாவலியின் வேள்விச் சாலைக்குக் குட்டையான வாமன மூர்த்தியாய்ச் சென்றான். மெய்ம்மை உணர்வுடன் வேத வாக்கியங்களை ஓதும் முனிவனாக, மூன்றடி மண்ணை யாசித்ததும், திரிவிக்கிரமனாக வளர்ந்தான். அவன் பாதங்கள் மந்தர மலைக்கு மேலே சந்திரன் இடம் வரை வளர்ந்து பிரமன் வணங்கும்படியாக ஓங்கி, ஏழுலகங்களையும் கடந்தது. இப்படி வியாபித்த அப்பெருமானின் திருவடிகளே நம்மைக் காத்து ஆட்சி செய்யும். 1986

மழு ஏந்திய பரசுராமன், பூவுலக மன்னர்களை இருபத்தொரு தலை முறை போர்களத்தில் எதிர்த்து அவர்கள் உயிரைத் தன் கோடாலியால் வாங்கினான். இந்த அவதாரம் எடுத்த திருமால், பூமி தேவிக்கும் திருமகளுக்கும் நீளாதேவிக்கும் கணவர் ஆவார். எல்லா உலகங்களையும் பிரளயத்தில் உண்டு, உமிழ்ந்து காத்த பெரிய வாயை உடைய, அப்பெருமான் நம்மை ஆண்டு காப்பாற்றுகிறார். 1987

இலை மலி பள்ளி எய்தி இது மாயம் என்ன,
இனம் ஆய மான் பின், எழில் சேர்
அலை மலி வேல்கணாளை அகல்விப்பதற்கு
ஓர் உரு ஆய மானை அமையா,
கொலை மலி எய்துவித்த கொடியோன் இலங்கை
பொடி ஆக, வென்றி அமருள்
சிலை மலி செஞ் சரங்கள் செலஉய்த்த நங்கள்
திருமால் நமக்கு ஓர் அரணே. 1988

முன், உலகங்கள் ஏழும் இருள்மண்டி உண்ண,
முதலோடு வீடும் அறியாது
என் இது வந்தது? என்ன, இமையோர் திசைப்ப,
எழில் வேதம் இன்றி மறைய,
பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும்நல்கி,
இருள் தீர்ந்து இவ் வையம் மகிழ
அன்னம் அது ஆய் இருந்து அங்கு அற நூல் உரைத்த
அது நம்மை ஆளும் அரசே. 1989

துணைநிலை மற்று எமக்கு ஓர் உளது என்று இராது
தொழுமின்கள் தொண்டர்! தொலைய
உண முலை முன் கொடுத்த உரவோளது ஆவி
உக உண்டு, வெண்ணெய் மருவி,
பணை முலை ஆயர் மாதர் உரலோடு கட்ட
அதனோடும் ஓடி அடல் சேர்
இணை மருது இற்று வீழ நடைகற்ற தெற்றல்
வினைப் பற்று அறுக்கும் விதியே. 1990

கொலை கெழு செம் முகத்த களிறு ஒன்று கொன்று
கொடியோன் இலங்கை பொடியா
சிலை கெழு செஞ்சரங்கள் செல உய்த்த நங்கள்
திருமாலை வேலை புடை சூழ்
கலி கெழு மாட வீதி வயல் மங்கை மன்னு
கலிகன்றி சொன்ன பனுவல்
ஒலி கெழு பாடல் பாடி உழல்கின்ற தொண்டர்
அவர் ஆள்வர் உம்பர் உலகே. 1991





அழகாய்க் கவரும் வேள் போன்ற கண்களுடைய சீதையைப் பிரிப்பதற்காக, மாரீசன் மாயவடிவான ஒப்பற்ற பொன்மான் ஆனான். அது பர்ண சாலையின் அருகே சென்று மற்ற மான்களின் பின்னே "இந்த மான் மட்டும் மிகவும் ஆசசரியமாய் இருக்கிறது" என்று கூறும்படி நின்றது. இராமபிரான் அதன்பின் சென்று கொன்று பின் கொடியவனான, இராவணனின் இலங்கை பொடியாகப் போர்களத்தில் வில் வளைத்து அம்புகளை எய்தான். திருமகளிடத்தே பேரன்பு கொண்ட இப்பெருமானே, நமக்கு ஒப்பற்ற காவலன் ஆவார். **1988**

முன்பு ஏழுலகங்களிலும் இருள் மண்டிப் பரவிட தேவர்கள் இருளின் தொடக்கமும் முடிவும் தெரியாமல் 'நமக்கு வந்தது என்?' என்று திகைக்கவும் வேதமும் மறைந்து கிடக்கவும், திருமால் அன்ன வடிவம் கொண்டார். தேவர்க்கும் முனிவர்க்கும் வேதத்தைத் தேடிக் கொடுத்து இருள் தீரச் செய்து அறநூல்களை அருளினார். இப்படி அன்னமாய் வந்த பரஞ்சோதியே நம்மை ஆளும் அரசு. **1989**

பாகவதர்களே! நமக்கு வேறு துணை உண்டு' என்று எண்ணாமல் திருமாலையே வணங்குங்கள். தன்னை முடிக்க வந்த பூதனைப பேயின் நஞ்சுமுலையை உணடு வதைத்த கண்ணன் வெண்ணெய்யை விரும்பி அதற்காகத் திருடவும் யசோதை அவனை உரலுடன் கட்டி வைத்தாள். அவ்வுரலை இழுத்தவாறு அவன், மருத மரங்கள் முறிந்து விழும்படி நடந்தானே! தெளிவான இந்த எம் பெருமான் நம் பாவங்களை வேருடன் போக்கி அருளுவான் என்பது உறுதியே. **1990**

கொலை செய்ய வல்ல, சிவந்த முகமுடைய குவலயா பீட யானையைக் கொன்றவனும் கொடிய இலங்கை பொடி யாகும்படி வில்லால் அம்பெய்து இராவணனை அழித்தவனும் ஆன நம் தலைவனான திருமாலை காவிரியும் மாடவீதிகளும் உள்ள திருமங்கை நகர் மன்னர் பாடினார். இக் கலிகன்றி ஆழ்வாரின் ஒலி மிகுந்த இப் பாசுரங்களைப் பாடி உழலும் பாகவதர்கள் பரமபதத்தை ஆளப்பெறுவார்கள். **1991**

## திருச்சாழல் – (ஒருவகை வரிப் பாடல்)

### இரு பெண்கள் இறைவனின் நீர்மையையும் மேன்மையையும் எதிர் எதிர் கூறுதல்

மான் அமரும் மென் நோக்கி வைதேவி இன் துணையா,
கான் அமரும் கல் அதர் போய்க் காடு உறைந்தான் காண், ஏடீ
கான் அமரும் கல் அதர் போய் காடு உறைந்த பொன் அடிக்கள்
வானவர் தம் சென்னி மலர் கண்டாய், சாழலே! 1992

தந்தை தளை கழலத் தோன்றிப் போய்,ஆய்ப்பாடி
நந்தன் குல மதலையாய் வளர்ந்தான் காண், ஏடீ -
நந்தன் குல மதலையாய் வளர்ந்தான் நான்முகற்குத்
தந்தை காண், எந்தை பெருமான் காண், சாழலே! 1993

ஆழ் கடல் சூழ் வையகத்தார் ஏசப் போய் ஆய்ப்பாடித்
தாழ் குழலார் வைத்த தயிர் உண்டான் காண், ஏடீ-
தாழ் குழலார் வைத்த தயிர் உண்ட பொன் வயிறு இவ்
ஏழ் உலகும் உண்டும் இடம் உடைத்தால், சாழலே! 1994

அறியாதார்க்கு ஆன் ஆயன் ஆகிப் போய், ஆய்ப்பாடி
உறி ஆர் நறு வெண்ணெய் உண்டு உகந்தான் காண், ஏடீ-
உறி ஆர் நறு வெண்ணெய் உண்டு உகந்த பொன் வயிற்றுக்கு
ஏறி நீர் உலகு அனைத்தும் எய்தாதால், சாழலே! 1995

வண்ணக் கருங் குழல் ஆய்ச்சியால் மொத்துண்டு,
கண்ணிக் குறுங் கயிற்றால் கட்டுண்டான் காண், ஏடீ-
கண்ணிக் குறுங் கயிற்றால் கட்டுண்டான் ஆகிலும்
எண்ணற்கு அரியன் இமையோர்க்கும்,சாழலே! 1996

கன்றப் பறை கறங்கக் கண்டவர் தம் கண் களிப்ப,
மன்றில் மரக்கால் கூத்து ஆடினான் காண், ஏடீ -
மன்றில் மரக்கால் கூத்து ஆடினான் ஆகிலும்
என்றும் அரியன் இமையோர்க்கும், சாழலே! 1997





## திருச்சாழல் – (ஒருவகை வரிப் பாடல்)

### இரு பெண்கள் இறைவனின் நீர்மையையும் மேன்மையையும் எதிர் எதிர் கூறுதல்

**ஒரு பெண்:–** *தோழீ! மான் போலே மென்மையான பார்வை உடைய வைதேகியைத் துணையாகக் கொண்டு காட்டில், கற்கள் வழியே, நீரும் நிழலு மற்ற இடங்களில் வாழ்ந்தானே! இது வாழ்க்கையா?*

**மற்றவள்:–** *ஏடீ தோழீ! காட்டில் தவவழியில் உலாவிய திருவடிகள், தேவர்களின் திருமுடியில் அணியத் தக்க பூக்கள் என்று மேன்மையைத் தெரிந்து கொள்.* 1992

**ஒரு பெண்:–** *தந்தை கால் விலங்கு அவிழும்படி அவதரித்துத் திருவாய்ப்பாடி போய் நந்த கோபன் குலத்துக்கு குழந்தையாய் வளர்ந்தானே!*

**மற்றவள்:–** *நந்த கோபன் குழந்தையாய் வளர்ந்தவனே, பிரமனுக்கும் தந்தை ஆவான். எம் சுவாமியின் மேன்மையை நீ தெரிந்து கொள் அடீ.* 1993

**ஒருபெண்:–** *கடல் சூழ்ந்த உலகோர் ஏசும்படி ஆய்ப்பாடியில் தாழ்ந்த கூந்தல் உடைய ஆய்ச்சியர் வைத்திருந்த தயிரை உண்டானே!*

**மற்றவள்:–** *ஆய்ச்சியர் வைத்த தயிரை உண்ட வயிறே, ஏழுலகங்களையும் அமுது செய்தும் இன்னும் உலகங்களை அடக்க இடங்கொண்டதேடீ!* 1994

**ஒருபெண் :–** *ஏ! தோழீ! அறியாதவர்க்குப் பசு மேய்ப்பவனாய் ஆய்ப்பாடி போய், உறிகளில் இருந்த மணமான வெண்ணெய்யைத் திருடி உண்டானே!*

**மற்றவள்:–** *உறிகளில் இருந்த வெண்ணெய்யை உண்டு உகந்த கண்ணனின் திரு வயிற்றுக்குக் கடல் சூழ்ந்த உலகங்கள் எல்லாம் போதாது என்ற மேன்மையை அறிந்து கொள்.* 1995

**ஒருபெண்:–** *ஏடீ அழகிய கூந்தலுடைய யசோதையால் அடிபட்டுக் கண்ணிகளால் ஆன குறுங்கயிற்றால் கட்டப்பட்டுக் கிடந்தானே! காணீ.*

**மற்றவள்:–** *கண்ணிக் கயிற்றால் கட்டப்பட்டாலும் தேவர்களால் அவன், இப்படிப் பட்டவன் என்று எண்ணி உணர முடியாத மேன்மையன் எனத் தெரிந்து கொள்.* 1996

**ஒரு பெண்:–** *ஏடீ!நெஞ்சு கன்றும்டி, பறை ஒலிக்கக் கண்டோர் களிக்க, மன்றில் மரக்கால் கூத்து ஆடினானே!*

**மற்றவள்:–** *மன்றில் மரக்கால் கூத்து ஆடினாலும் தேவர்களால் அவன் என்றைக்கும் அறிந்து கொள்ள இயலாத மேலான பரம்பொருள் ஆவான்.* 1997

கோதை வேல் ஐவர்க்கு ஆய், மண் அகலம் கூறு இடுவான்,
தூதன் ஆய், மன்னவனால் சொல்லுண்டான் காண், ஏடீ-
தூதன் ஆய் மன்னவனால் சொல்லுண்டான் ஆகிலும்,
ஓத நீர் வையகம் முன் உண்டு உமிழ்ந்தான், சாழலே! 1998

பார் மன்னர் மங்கப் படைதொட்டு, வெம் சமத்துத்
தேர் மன்னற்கு ஆய் அன்று தேர் ஊர்ந்தான் காண், ஏடீ-
தேர் மன்னற்கு ஆய் அன்று தேர் ஊர்ந்தான் ஆகிலும்
தார் மன்னர் தங்கள் தலைமேலான், சாழலே! 1999

கண்டார் இரங்கக் கழியக் குறள் உரு ஆய்,
வண் தாரான் வேள்வியில் மண் இரந்தான் காண், ஏடீ-
வண் தாரான் வேள்வியில் மண் இரந்தான் ஆகிலும்
விண்டு ஏழ் உலகுக்கும் மிக்கான் காண், சாழலே! 2000

கள்ளத்தால் மாவலியை மூவடி மண் கொண்டு அளந்தான்
வெள்ளத்தான்; வேங்கடத்தான் என்பரால் காண், ஏடீ-
வெள்ளத்தான் வேங்கடத்தானேலும் கலிகன்றி
உள்ளத்தின் உள்ளே உளன் கண்டாய், சாழலே! 2001

**பிரளயத்தில் உலகைக் காத்த பகவானை வணங்கி உலகோரை அறிவுறுத்தல்.**

மைந் நின்ற கருங் கடல்வாய் உலகு இன்றி
வானவரும் யாமும் எல்லாம்
நெய்ந் நின்ற சக்கரத்தன் திருவயிற்றில்
நெடுங் காலம் கிடந்தது ஓரீர்;
எந் நன்றி செய்தாரா ஏதிலோர்
தெய்வத்தை ஏத்துகின்றீர்?
செய்ந்நன்றி குன்றேன்மின், தொண்டர்காள்!
அண்டனையே ஏத்தீர்களே. 2002





**ஒருபெண்:–** *ஏடீ! மாலையும் வேலையும் உடைய பஞ்சபாண்டவர்க்காகப் பூமியைப் பங்கிடத் தூது போன பொழுது துரியோதனனால் பழிக்கப்பட்டானே!*

**மற்றவள்:–** *தூதனாக, மன்னன் வசை ஏற்றாலும், கடல் சூழ்ந்த உலகத்தைத் தன் திருவயிற்றில் வைத்து வெளிக் கொணர்ந்து காத்த இறைவன் அவன்.* 1998

**ஒருபெண்:–** *ஏடீ! பாரதப்போரில், மன்னர் மாள, ஆயுதம் எடுத்து, அர்ச்சுனனுக்குத் துணையாகத் தேர் ஓட்டினானே!*

**மற்றவள்:–** *தேர் மன்னருக்காகத் தேரோட்டி ஆனாலும், தோள் மாலை மன்னர்கள் தலை மேலே வீற்றிருந்த மேன்மை உடையவன் அப் பகவான்.* 1999

**ஒருபெண்:–** *ஏடீ! பார்த்தவர்கள் இரங்கும்படி குள்ள வடிவில், தோள்மாலை உடைய மாவலியின் வேள்வியில் மூவடி மண்ணை யாசித்தானே! கண்டாயா?*

**மற்றவள்:–** *தார் அணிந்த மன்னன் வேள்வியில் யாசித்தவன், பல்வகையான ஏழுலகங்களையும் கடந்த பரம்பொருள் ஆவான்.* 2000

**ஒருபெண்:–-** *ஏடீ! வஞ்சனையாக மாவலியிடம் மூவடி மண் பெற்று உலகளந்தவன் திருப்பாற்கடலிலும் திருவேங்கட மலையிலும் உள்ளவன் என்பார்களே!*

**மற்றவள்:–** *தோழீ! பாற்கடலில் பள்ளி கொண்டவனும் வேங்கடத்தில் நின்றவனும், கலிகன்றி ஆழ்வாரின் உள்ளத்தில் நீங்காமல் உள்ள பரமபத நாதன் ஆவான்.* 2001

**பிரளயத்தில் உலகைக் காத்த பகவானை வணங்கி உலகோரை அறிவுறுத்தல்.**

*தொண்டர்களே! மைந்நிறமுடைய கறுத்த கடல் இடத்து உலகங்கள் ஒன்றும் இல்லாத காலத்தில், தேவர்களும், மனிதர்களான நாமும், மற்றும் எல்லாமும், நெய் பூசப்பட்ட சக்கரத்தைத் தரித்த திருமாலின் வயிற்றில், நெடுங்காலம் அடங்கிக் கிடந்ததை நீங்கள் அறிய மாட்டீர். எதற்காக மற்றவரின் தாழ்ந்த தேவதைகளை எப்பயனுக்காகத் துதிக்கிறீர்கள்? செய்ந் நன்றியுடன் நீங்கள் எல்லாத் தேவதைகளுக்கும் தலைவராய் உலக நாதனான, திருமாலைத் துதித்து வணங்குங்கள்.* 2002

நில்லாத பெரு வெள்ளம் நெடு விசும்பின் மீது
ஓடி நிமிர்ந்த காலம்
மல் ஆண்ட தடக் கையால் பகிரண்டம்
அகப்படுத்த காலத்து, அன்று
எல்லாரும் அறியாரோ? எம் பெருமான்
உண்டு உமிழ்ந்த எச்சில் தேவர்
அல்லாதார் தாம் உளரே? அவன் அருளே
உலகு ஆவது அறியீர்களே? 2003

நெற்றிமேல் கண்ணானும் நிறை மொழி வாய்
நான்முகனும் நீண்ட நால் வாய்
ஒற்றைக் கை வெண் பகட்டின் ஒருவனையும்
உள்ளிட்ட அமரரோடும்
வெற்றிப் போர்க் கடல் அரையன் விழுங்காமல்
தான் விழுங்கி உய்யக் கொண்ட
கொற்றப் போர் ஆழியான் குணம் பரவாச்
சிறு தொண்டர் கொடிய ஆறே! 2004

பனிப் பரவைத் திரை ததும்ப, பார் எல்லாம்
நெடுங் கடலே ஆன காலம்,
இனிக் களைகண் இவர்க்கு இல்லை என்று உலகம்
ஏழினையும் ஊழில் வாங்கி,
முனித் தலைவன் முழங்கு ஒளி சேர் திரு வயிற்றில்
வைத்து உம்மை உய்யக் கொண்ட
கனிக் களவத் திரு உருவத்து ஒருவனையே
கழல் தொழுமா கல்லீர்களே. 2005

பார் ஆரும் காணாமே, பரவை மா
நெடுங் கடலே ஆன காலம்
ஆரானும் அவனுடைய திரு வயிற்றில்
நெடுங்காலம் கிடந்தது உள்ளத்து
ஓராத உணர்விலீர்! உணருதிரேல்,
உலகு அளந்த உம்பர் கோமான்
பேராளன் பேரான பேர்கள்
ஆயிரங்களுமே பேசீர்களே. 2006

பேய் இருக்கும் நெடு வெள்ளம் பெரு விசும்பின் மீது
ஓடிப் பெருகு காலம்,
தாய் இருக்கும் வண்ணமே உம்மைத் தன்
வயிற்று இருத்தி உய்யக்கொண்டான்
போய் இருக்க, மற்று இங்கு ஓர் புதுத் தெய்வம்
கொண்டாடும் தொண்டீர்! பெற்ற
தாய் இருக்க, மணை வெந்நீர் ஆட்டுதிரோ?
மாட்டாத தகவு அற்றீரே? 2007





*பிரளயத்தில் பெரிய வெள்ளம் நில்லாமல், பெருக்கெடுத்து ஆகாயம் வரை வழிந்தோடிய பொழுது, வன்மையான தன் திருக்கைகளால் அண்டத்தைப் பிரளயம் விழுங்காதபடி பகவான் பாதுகாத்தான். அக்காலத்தை எல்லோரும் அறியீரோ? அவன், உண்டு, உமிழ்ந்த எச்சியாக அன்றோ தேவர்களும் ஆனார்கள்! உலகு உள்ளது என்பது அவன் அருளாலேயே என்பதை அறியீர்களோ!* **2003**

*நெற்றிக் கண்ணுடைய சிவனையும், நிறை மொழி வேதங்களை, வாயால் உச்சரிக்கும் பிரமனையும் தொங்கும் வாயுடைய துதிக்கை பெற்ற வெள்ளை யானை மேல் செல்லும், இந்திரனையும், மற்ற தேவர்களையும், கடல் அரசன் விழுங்காதபடி, பகவான் தன் திருவயிற்றில் வைத்துக் காத்தான். போரில் வெற்றி பெறும் சக்கரப் படை உடைய திருமாலின கலியாண குணங்களைத் துதிக்காத சிறிய தொண்டர்களின் கொடுமை தான் என்னே!* **2004**

*பூமி எங்கும் அலை ததும்பும் நெடுங்கடல் வியாபித்து விழுங்கிய காலத்தில், "இவ்வுலகோர்க்கு இனிக், காவலர் யாரும் இல்லை" என்று திருமால், முறையாக, உலகங்களைத் தன் திருவயிற்றில் வைத்துக் காத்தான். இவ்வாறு உங்களை உய்யக் கொண்ட, முனிவர்கள் தலைவனான, களாப்பழம் போன்ற வடிவுடைய ஒப்பற்ற திருமாலின் திருவடிகளைத் தொழுவதற்குக் கற்க மாட்டீர்களோ?* **2005**

*ஒருவராலும் பூமியைக் காண முடியாதபடி, பிரளயம் கொண்ட காலத்தில், எல்லோரும் திருமாலின் திருவயிற்றில் நெடுங்காலம் அடங்கிக் கிடந்தார்கள். இதனை நெஞ்சிலே கொண்டு உணராத அறிவு கேடர்களே! நீங்கள் பகுத்தறியும் உணர்வுடையவர்கள் ஆகில், உலகளந்த, நித்திய சூரிகள் தலைவனான பேராளனின் ஆயிரம் திருநாமங்களைக் கூறித் துதித்துப் பேசுங்கள்.* **2006**

*மனிதர்கள் இல்லாமல், பேய்களே இருந்த பிரளய காலத்தில், வெள்ளம் வானம் வரை ஓடி விழுங்கிய பொழுது, தாயைப் போல, உம்மை எல்லாம் திருமால் தன் வயிற்றிலே வைத்து உய்யக் கொண்டான். இவ்வுயிர்கள் நம்மைப் பற்ற வில்லையே! அவன் வெறுக்கும்படி மற்ற புதிய தாழ்ந்த தேவதைகளைக் கொண்டாடும் தொண்டர்களே! பெற்ற தாய் இருக்க, வெறும் மணைக் கட்டையைக் கொண்டாடுவீர்களோ? ஏற்றதைச் செய்ய இயலா, இரக்கம் அற்றவரா நீங்கள்?* **2007**

மண்நாடும், விண் நாடும், வானவரும்
தானவரும், மற்றும் எல்லாம்
உண்ணாத பெரு வெள்ளம் உண்ணாமல்
தான் விழுங்கி உய்யக் கொண்ட
கண்ணாளன், கண்ணமங்கை நகராளன்,
கழல் சூடி அவனை உள்ளத்து
எண்ணாத மானிடத்தை எண்ணாத
போது எல்லாம் இனிய ஆறே. 2008

மறம் கிளர்ந்து கருங் கடல் நீர் உரம் துரந்து,
பரந்து ஏறி, அண்டத்து அப்பால்
புறம் கிளர்ந்த காலத்து, பொன் உலகம்
ஏழினையும் ஊழில் வாங்கி
அறம் கிளந்த திரு வயிற்றின் அகம்படியில்
வைத்து உம்மை உய்யக் கொண்ட
நிறம் கிளர்ந்த கருஞ் சோதி நெடுந்தகையை
நினையாதார் நீசர் தாமே. 2009

அண்டத்தின் முகடு அழுந்த, அலை முந்நீர்த்
திரை ததும்ப ஆ ஆ! என்று
தொண்டர்க்கும் அமரர்க்கும் முனிவர்க்கும்
தான் அருளி உலகம் ஏழும்
உண்டு, ஒத்த திருவயிற்றின் அகம்படியில்
வைத்து, உம்மை உய்யக்கொண்ட
கொண்டற் கை மணி வண்ணன் தண்
குடந்தை நகர் பாடி ஆடீர்களே. 2010

தேவரையும் அசுரரையும் திசைகளையும்
கடல்களையும் மற்றும் முற்றும்
யாவரையும் ஒழியாமே. எம் பெருமான்
உண்டு உமிழ்ந்தது அறிந்து சொன்ன
கா வளரும் பொழில் மங்கைக் கலிகன்றி
ஒலி மாலை கற்று வல்லார்
பூ வளரும் திருமகளால் அருள்பெற்றுப்
பொன் உலகில் பொலிவர் தாமே. 2011





பூவுலகம், சுவர்க்கம், தேவர்கள், அசுரர்கள், மற்றுமுள்ளன ஆகிய எல்லாம், தகைய முடியாத பெரிய வெள்ளத்தில் அகப்பட்ட பொழுது, அவ்வெள்ளம் விழுங்காதபடி, இவற்றைத் தானே விழுங்கிய திருமால், உய்வடையச் செய்தான். அருளாளனாய்த் திருக்கண்ண மங்கை நகரில் எழுந்தருளிய இப்பெருமானின் திருவடிகளைத் தலையிலே சூடி, நெஞ்சால் நினையாத மனிதர்களை நான் எண்ணாத காலமே இனிமை ஆகும். 2008

கொடிய கருங்கடல் வெள்ளம் வேகத்துடன் ஓடிப் பரந்து, அண்டபித்திகைக்கு அப்பால் சென்று கிளர்ந்த காலத்தில், எம் பெருமான் அழகிய உலகங்கள் அனைத்தையும் முறைப்படி வாங்கித் திருவயிற்றில் வைத்துக் காத்த, அறமே நம்மை உய்யக் கொண்டது. கரிய பெருமானான, சோதிச் சுடராய் உள்ள அந்த நெடுந்தகையை நினைக்காதவர் மிகவும் தாழ்ந்தவர்களே ஆவர். 2009

அண்டபித்தி உள்ளே அழுந்த, அலைகடல், கிளர்ந்த பிரளயத்தில் "ஐயோ! ஐயோ! என்று அரற்றிச் சரண் அடைந்தவர்களுக்கும் தேவர்களுக்கும், முனிவர்க்கும் அருள் செய்ய எம் பெருமான் உலகம் ஏழினையும் உண்டு, வயிற்றின் உள்ளே வைத்துக் காத்தான். மேகத்தையும் மணியையும் ஒத்த நிறமுடைய திருமால் பள்ளிக் கொண்ட திருக்குடந்தைத் திருப்பதியை வாயாரப் பாடி ஆடுங்கள். 2010

தேவர்கள், அசுரர்கள், திசைகள், ஏழு கடல்கள், மற்றுமுள்ள எல்லாப் பொருள்கள் ஆகிய யாவற்றையும் ஒன்று விடாமல், எம் பெருமான், உண்டு உமிழ்ந்து காத்த அருளைப் பற்றி, பூஞ்சோலைகள் உள்ள திருமங்கை நகர்க்கு மன்னரான கலிகன்றி இப் பாசுரங்களில் பாடினார். இந்த ஒலி மாலையைக் கற்று பொருள் உணர்பவர்கள். திருமகளின் அருளைப் பெற்றுப் பரமபதத்தில் விளங்கப் பெறுவார்கள். 2011

## இறைவனிடம் ஈடுபடாத உடல் உறுப்புகள் பயன் அற்றன

நீள் நாகம் சுற்றி, நெடு வரை நட்டு, ஆழ் கடலைப்
பேணான் கடைந்து, அமுதம் கொண்டு, உகந்த பெம்மானை
பூண் ஆர மார்வனை; புள் ஊரும் பொன் மலையை
காணாதார் கண் என்றும் கண் அல்ல; கண்டாமே. 2012

நீள்வான், குறள் உரு ஆய் நின்று இரந்து மாவலி மண்
தாளால் அளவிட்ட தக்கணைக்கு மிக்கானை;
தோளாத மா மணியை; தொண்டர்க்கு இனியானை
கேளாச் செவிகள் செவி அல்ல; கேட்டாமே. 2013

தூயானை; தூய மறையானை; தென் ஆலி
மேயானை ; மேவாள் உயிர் உண்டு அமுது உண்ட
வாயானை ; மாலை வணங்கி அவன் பெருமை
பேசாதார் பேச்சு என்றும் பேச்சு அல்ல; கேட்டாமே. 2014

கூடா இரணியனைக் கூர் உகிரால் மார்வு இடந்த
ஓடா அடல் அரியை உம்பரார் கோமானை;
தோடு ஆர் நறுந் துழாய் மார்வனை ஆர்வத்தால்
பாடாதார் பாட்டு என்றும் பாட்டு அல்ல; கேட்டாமே. 2015

மை ஆர் கடலும் மணி வரையும், மா முகிலும்
கொய் ஆர் குவளையும் காயாவும் போன்று இருண்ட
மெய்யானை; மெய்ய மலையானை; சங்கு ஏந்தும்
கையானை கை தொழா, கை அல்ல; கண்டாமே. 2016

கள் ஆர் துழாயும், கணவலரும் கூவிளையும்,
முள் ஆர் முளரியும் ஆம்பலும் முன் கண்டக்கால்,
புள் ஆய், ஓர் ஏனம் ஆய்ப் புக்கு இடந்தான் பொன்அடிக்கு என்று
உள்ளாதார் உள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே. 2017





## இறைவனிடம் ஈடுபடாத உடல் உறுப்புகள் பயன் அற்றன

பாற்கடல் தன் படுக்கையாயிருப்பதைப் பேணாமல், திருமால், வாசுகிப் பாம்பைக் கயிறாகச் சுற்றி மந்தரமலையை மத்தாக நட்டுக் கடைந்து அமுதத்தைத் தேவர்களுக்குக் கொடுத்தான். மாலை மார்பனாய்க் கருடன் மீது ஏறும், பொன் மலையான அப்பெருமானைக் காணாத கண்கள் என்றும் கண்கள் அல்ல. இதை நாம் அறிவோம். 2012

வாமனனாய் மாவலியிடத்தில் மண் வேண்டித் தன் திருவடிகளால் உலகை அளந்தும், மாவலியின் கொடை போராதென்று வளர்ந்த எம்பெருமான் மழுங்காத நீலமணி போன்றவன்; பாகவதர்களுக்கு இனியவன்; இப்பெருமானைப் பற்றிக் கேளாத காதுகள் உண்மையில் காதுகள் அல்ல என்று கேட்டறிந்தோம். 2013

தூய்மைக்கும் தூயவனாய், வேதப் பொருளாய்த் தென் திருவாலி நகரில் எழுந்தருளிய பகவான், தன்னிடம் பொருந்தாத பூதனையின் உயிரை உண்டு, யசோதையிடம் பால் பருகிய வாயை உடையவன். இத்திருமாலை வணங்கி, அவன் பெருமையைப் பேசாதவர்களின் பேச்சு என்றும் பேச்சு ஆகாது என்று கேட்டறிந்தோம். 2014

கூடாத இரணியன் மார்பை வீரநரசிம்மப் பிரான் தன் கூரிய நகங்களால் பிளந்து அழித்தான். நித்திய சூரிகள் தலைவனாய், இதழுடன் கூடிய திருத்துழாய் மாலை அணிந்த மார்புடையனை ஆர்வத்தால் பாடாதார், பாடுகிற மற்றைப் பாட்டுகள் என்றும் பாட்டு ஆகாது என்று கேட்டோம். 2015

மை போன்ற கடலையும், நீலமணி மயமான மலையையும், காள மேகத்தையும், பறிக்கத் தகுந்த குவளைப் பூவையும், காயாம் பூவையும் ஒத்து இருண்ட திருமேனி, உடைய திருமால், திருமெய்யத்திலே எழுந்தருளி உள்ளான். இங்கு ஏந்திய கையுடைய இப்பெருமானைத் தொழாத கைகள், உண்மையில் கைகள் அல்ல என்று கண்டோம். 2016

தேன் துளிர்க்கும் திருத்துழாய், அலரி, வில்வம், முள் கூடிய தாமரை, ஆம்பல் ஆகிய மலர்களைக் கண் எதிரில் கண்டால், இவை, அன்ன மாயும் வராகமாயும் தோன்றிப் பூமியை எடுத்துக் காத்த திருமாலின் திருவடிகளுக்கே என்று எண்ண வேண்டும். இவ்வாறு நினையாத நெஞ்சை, நெஞ்சாகக் கொள்ளோம். 2017

கனை ஆர் கடலும், கருவிளையும், காயாவும்
அனையானை அன்பினால், ஆர்வத்தால், என்றும்
சுனை ஆர் மலர் இட்டு, தொண்டராய் நின்று
நினையாதார் நெஞ்சு என்றும் நெஞ்சு அல்ல; கண்டாமே. 2018

வெறி ஆர் கருங் கூந்தல் ஆய்ச்சியர் வைத்த
உறி ஆர் நறு வெண்ணெய் தான் உகந்து உண்ட
சிறியானை, செங் கண் நெடியானை சிந்தித்து
அறியாதார் என்றும் அறியாதார்; கண்டாமே. 2019

தேனொடு வண்டு ஆலும் திருமாலிருஞ்சோலை
தான் இடமாக் கொண்டான்,தட மலர்க் கண்ணிக்காய்,
ஆன் விடை ஏழ் அன்று அடர்த்தாற்கு ஆள் ஆனார் அல்லாதார்
மானிடவர் அல்லர் என்று என் மனத்தே வைத்தேனே. 2020

மெய்ந் நின்ற பாவம் அகல, திருமாலைக்
கைந் நின்ற ஆழியான் சூழும் கழல் சூடிக்
கைந் நின்ற வேல் கைக் கலியன் ஒலி மாலை
ஐயொன்றும் ஐந்தும் இவை பாடி ஆடுமினே. 2021

## உடல் உறவை நீக்கிப் பிறவி இல்லாதிருக்க அருளுமாறு வேண்டுதல்

மாற்றம் உள ஆகிலும் சொல்லுவன்;மக்கள்
தோற்றக் குழி தோற்றுவிப்பாய்கொல்? என்று இன்னம்
ஆற்றங்கரை வாழ் மரம்போல் அஞ்சுகின்றேன்;
நாற்றம், சுவை ஊறு, ஒலி ஆகிய நம்பீ! 2022

சீற்றம் உள ஆகிலும் செப்புவன்; மக்கள்
தோற்றக் குழி தோற்றுவிப்பாய்கொல் என்று அஞ்சி
காற்றத்திடைப்பட்ட கலவர் மனம்போல்
ஆற்றத் துளங்கா நிற்பன், ஆழி வலவா! 2023





*ஒலி மிகுந்த கடலையும், கருவினைப் பூவையும், காயாம் பூவையும், ஒத்த திருமேனி உடைய திருமாலைப் பக்தி மிகுந்த ஆர்வத்துடன் பொய்கைப் பூக்களைக் கொண்டு, வழிபட்டு, அடியார்களாக இருக்க என்றும் நினையாதார் நெஞ்சு உண்மையில் நெஞ்சல்ல. இதனை நன்கு கண்டோம்.* **2018**

*மணம் வீசும் கூந்தலுடைய இடைச்சிகள் வைத்திருந்த உறிகளில் நிறைந்த நறு வெண்ணெய்யை மகிழ்ந்து உண்ட, கண்ணபெருமான், தன் நீர்மை மிகுந்த குணத்தால் சிறியவன் ஆனான். சிவந்த கண்களுடைய நெடியவன் ஆன இத்திருமாலை நெஞ்சில் எண்ணாதவர் எப்பொழுதுமே ஆத்ம ஞானம் இல்லாதவர்களே.* **2019**

*தேன் பருகிய வண்டுகள் ஆரவார்க்கும் திருமாலிருஞ் சோலை மலையில் எழுந்தருளிய திருமால், கண்ணனாக அவதரித்த காலத்தில், நெய்தல் பூக்களுடைய நப்பின்னைக்காக ஏழு எருதுகளை அடக்கினான். இப்பெருமானுக்கு ஆட்படாதவரை மனிதர்கள் அல்லர் என்று நான் மனத்தே உறுதியாய் எண்ணுகிறேன்.* **2020**

*உலகில் அனுபவிக்க வேண்டிய பாவங்கள் தொலைவதற்காகத் திருவாழி ஏந்திய கையுடைய திருமாலின் திருவடிகளைத் திருமங்கை ஆழ்வார் தம் தலையில் சூடினார். கையில் வேல் ஏந்திய கலியனின் இப்பாசுரங்களைப் பாடி ஆடுங்கள்.* **2021**

## உடல் உறவை நீக்கிப் பிறவி இல்லாதிருக்க அருளுமாறு வேண்டுதல்

*வாசனை, சுவை, தொடுதல், ஓசை, ஆகிய தன்மைகளாய் நின்ற நம்பீ! உன்னிடம் கூறும் மறு வார்த்தை உண்டு. நீ கூறும் பதிலுக்கும் பதில் உணடு. மனிதர்கள் தோன்றும் குழியாகிய கருப்பையில் இன்னமும் என்னைப் போட்டுப் பிறப்பித்து, உலக வாழ்வில் தள்ளுவாயோ என்று ஆற்றங்கரையில் நிற்கும் மரம் போலே பயப்படுகிறேன்.* **2022**

*சக்கரத்தைக் கையில் ஏந்திய திருமாலே! நீ கோபம் கொண்டாலும் நான் கூறும் வார்த்தைகளைக் கேட்பாயாக. மக்கள் பிறக்கும் கருப்பைக் குழியில் என்னைத் தள்ளிப் பிறவித் துன்பத்தைத் தந்து விடுவாயோ என்று, சூறைக் காற்றில் அகப்பட்ட மரக்கலத்தில் இருப்பவர் போலே மிகவும் நெஞ்சு நடுங்குகிறேன்.* **2023**

தூங்கு ஆர் பிறவிக்கள் இன்னம் புகப் பெய்து
வாங்காய் என்று சிந்தித்து, நான் அதற்கு அஞ்சி
பாம்போடு ஒரு கூரையிலே பயின்றால்போல்
தாங்காது உள்ளம் தள்ளும், என் தாமரைக்கண்ணா! 2024

உரு ஆர் பிறவிக்கள் இன்னம் புகப் பெய்து
திரிவாய் என்று சிந்தித்தி என்று அதற்கு அஞ்சி
இருபாடு எரி கொள்ளியினுள் எறும்பேபோல்
உருகாநிற்கும் என் உள்ளம், ஊழி முதல்வா! 2025

கொள்ளக் குறையாத இடும்பைக் குழியில்
தள்ளிப் புகப் பெய்திகொல்? என்று அதற்கு அஞ்சி
வெள்ளத்திடைப்பட்ட நரி இனம்போலே
உள்ளம் துளங்காநிற்பன், ஊழி முதல்வா! 2026

படை நின்ற பைந்தாமரையோடு அணி நீலம்
மடை நின்று அலரும் வயல் ஆலி மணாளா
இடையன் எறிந்த மரமே ஒத்து இராமே
அடைய அருளாய், எனக்கு உன் தன் அருளே. 2027

வேம்பின் புழு வேம்பு அன்றி உண்ணாது அடியேன்
நான் பின்னும் உன் சேவடி அன்றி நயவேன்;
தேம்பல் இளந் திங்கள் சிறைவிடுத்து ஐவாய்ப்
பாம்பின் அணைப் பள்ளிகொண்டாய் பரஞ்சோதீ! 2028

அணி ஆர் பொழில் சூழ் அரங்க நகர் அப்பா
துணியேன் இனி நின் அருள் அல்லது எனக்கு;
மணியே! மணி மாணிக்கமே! மதுசூதா
பணியாய் எனக்கு உய்யும் வகை பரஞ்சோதீ! 2029

நந்தா நரகத்து அழுந்தாவகை நாளும்
எந்தாய்! தொண்டர் ஆனவர்க்கு இன் அருள் செய்வாய்!
சந்தோகா! தலைவனே ! தாமரைக் கண்ணா
அந்தோ! அடியேற்கு அருளாய், உன் அருளே. 2030





என் தாமரைக் கண்ணனே! இனிமேலாவது, என்னைத் தூக்கமயமான பிறவிகளிலே புகாதவாறு மீட்கமாட்டாயா என்று நினைத்துப் பயப்படுகிறேன். பிறவி என்பது, ஒரு கூரை வீட்டில் பாம்புடன் கூடி வாழ்வது போல் உள்ளது. என் மனம் தாங்காமல் தடுமாறுகிறது. **2024**

ஊழிக் காலத்தில் நின்று காக்கும் முதல்வனே! ‘இனிமேலும் பலவிதமான பிறவிகளிலே புகுந்து நீ சுற்றிச் சுழல வேண்டும்’ என்று என்னைப் பற்றி நினைக்க மாட்டாய் அன்றோ! இரண்டு பக்கங்களிலும் நெருப்பு எரியும் கொள்ளிக் கட்டையின் உள்ளே அகப்பட்ட எறும்பு போல என் மனம் உருகுகிறது. **2025**

ஊழி முதல்வனே! எவ்வளவு அனுபவித்தாலும் குறையாது வளரும் பிறவிக் குழியான கர்ப்பத்திலே என்னைத் தள்ளி மேலும் மேலும் ஓடுமாறு செய்வாயோ என்று அஞ்சுகிறேன். வெள்ளத்தில் அகப்பட்ட நரிக் கூட்டம் போல, என் உள்ளம் தடுமாறுகிறது. **2026**

கலப்பைக்குத் தப்பிய தாமரைப் பூக்களும் நீல மலர்களும் நீர் பாயும் மடைகளில் மலர்ந்து காணப்படும் வயல்கள் உள்ள திருவாலி நகரில் எழுந்தருளிய மணவாளனே! இடையன் அடிக்கடி வெட்டிப் போடும் மரம் ஓரிடம் பச்சையாயும் இன்னொரு இடம் உலர்ந்தும் காணப்படுதல் போல், பிறவித் துயரில் நான் சிக்காமல், உன்னை அடையும்படி எனக்கு அருள் செய்ய வேண்டும். **2027**

தேய்ந்த சந்திரனின் நோய் தீர்த்தவனே; ஐந்தலைப் பாம்பின் மீது பள்ளி கொண்ட பரம்சோதீ! வேம்பின் புழு, அந்த வேம்பை அன்றி வேறு தின்னாதது போல அடியேன் உனக்கு வேம்பானாலும் உன் திருவடிகளை அன்றி வேறு ஒன்றை விரும்பேன். என்னைக் காத்து அருள் செய்வாய். **2028**

அழகுள்ள சோலைகளால் சூழப்பட்ட திருவரங்கத்தில் எழுந்தருளியவனே! இனிமேல் உன் அருள் அன்றி எனக்கு வேறு புகல் எதுவும் இல்லை. மற்றைய எதிலும் நான் துணியேன். நீலமணி போன்றவனே! மாணிக்கமே! மதுசூதனா! பரஞ்சோதி! அடியேனுக்கு உய்யும் வகையை நீயே அருள வேண்டும். **2029**

எந்தாய்! அடியவர்களுக்கு இனிதாக அருள் செய்பவனே! சாந்தோக்கிய வேதப்பொருளே! தலைவா! தாமரைக் கண்ணனே! அடியேன் இனிமேல் பிறவியாகிற நரகத்தில் அழுந்தாமல் இருக்கவும், உன்னை அனுபவிக்கவும் அருள வேண்டும். **2030**

குன்றம் எடுத்து ஆ நிரை காத்தவன் தன்னை
மன்றில் புகழ் மங்கை மன், கலிகன்றி சொல்
ஒன்று நின்றஒன்பதும் வல்லவர் தம்மேல்
என்றும் வினை ஆயின சாரகில்லாவே. 2031

## பெரிய திருமொழி முற்றும்

### திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்த திருக்குறுந் தாண்டகம்

நிதியினை, பவளத் தூணை, நெறிமையால் நினைய வல்லார்
கதியினை, கஞ்சன் மாளக் கண்டு முன் அண்டம் ஆளும்
மதியினை, மாலை வாழ்த்தி வணங்கி என் மனத்து வந்த
விதியினைக் கண்டுகொண்ட தொண்டனேன் விடுகிலேனே. 2032

காற்றினை, புனலை, தீயைக் கடி மதிள் இலங்கை செற்ற
ஏற்றினை, இமயம் ஏய எழில் மணித் திரளை இன்ப
ஆற்றினை,அமுதம் தன்னை அவுணன் ஆர் உயிரை உண்ட
கூற்றினை குணங்கொண்டு, உள்ளம்! கூறு நீ கூறுமாறே! 2033

பா இரும் பரவை தன்னுள் பரு வரை திரித்து, வானோர்க்கு
ஆய் இருந்து அமுதம் கொண்ட அப்பனை; எம் பிரானை;
வேய் இருஞ் சோலை சூழ்ந்து விரி கதிர் இரிய நின்ற
மா இருஞ் சோலை மேய மைந்தனை வணங்கினேனே. 2034

கேட்க யான் உற்றது உண்டு; கேழல் ஆய் உலகம் கொண்ட
பூக் கெழு வண்ணனாரைப் போதரக் கனவில் கண்டு
வாக்கினால் கருமம் தன்னால், மனத்தினால், சிரத்தை தன்னால்
வேட்கை மீதூர, வாங்கி, விழுங்கினேற்கு இனியவாறே! 2035

இரும்பு அனன்று உண்ட நீர்போல், எம் பெருமானுக்கு என் தன்
அரும் பெறல் அன்பு புக்கிட்டு அடிமைபூண்டு உய்ந்து போனேன்;
வரும் புயல் வண்ணனாரை மருவி, என் மனத்து வைத்து,
கரும்பின் இன் சாறு போலப் பருகினேற்கு இனியவாறே! 2036





மலையைத் தூக்கிப் பசுக்களைக் காத்தவனை, மன்றங்களில் புகழுடைய திருமங்கை மன்னர் பாடினார். கலிகன்றி ஆழ்வார் அருளிய இவற்றை ஓத வல்லவர்களிடம் வினைகள் என்றும் அணுகா. 2031

## பெரிய திருமொழி முற்றும்

### திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்த திருக்குறுந் தாண்டகம்

திருமால், வேண்டும்பொழுது உதவும் நிதி ஆவான்; பவளத்தூண் போல் இனிய ஆதாரம் இவன். முறையாக அவனை எண்ணுபவர்க்குக் கதி ஆவான். கம்சனின் ஆயுள் முடியச் செய்து உலகைக் காத்த அவன் தன் அடியார்களை அன்புடன் என்றும் நினைக்கிறான். இப்பெருமானை வாயாரத் துதித்து, வணங்கிக் கண்டு கொண்டேன். கருணையுடன் என் நெஞ்சில் உள்ள அவனை நான் ஒருபொழுதும் விடேன். 2032

காற்று, நீர், நெருப்பு இவற்றின் உள் உறைபவன் அவன். மதிள் சூழ்ந்த இலங்கையை அழித்த காளையான அவன் இமயத்தில் திருப்பிரிதியில் உள்ளான். அழகிய மணித் திரள் போல் இனிமையான அவன் எனக்கு மகிழ்ச்சி வெள்ளம் ஆவான். கண்ணால் பருகும் அமுதமாய் உள்ள அவனே இரணியனின் உயிரைக் குடித்த யமன் ஆனான். நெஞ்சமே! இப்பெருமானின் திருக் குணங்களை எண்ணிப் பேசு. இது போல் பேறுண்டோ? 2033

அகலமும் ஆழமும் உடைய பாற்கடலில், பெரிய மந்தரமலையைச் சுழலச் செய்து தேவர்க்கு அமுதம் அளித்த அப்பன், அடியேனுக்கு அமுதானான். இப்பெருமான் சூரிய கிரணங்கள் புகாத, மூங்கில் சோலைகள் சூழ்ந்த, திருமாலிருஞ் சோலை மலையில் எழுந்தருளினான். இளமையே வடிவான இப்பெருமானை அடியேன் வணங்கினேன். 2034

அடியேன் ஒன்று கேட்க முற்பட்டேன். வராஹ வடிவம் கொண்டு பூமியை எடுத்துக் காத்த பூப்போன்ற மென்மையான திருமாலை நெஞ்சாலே கண்டு, மனம், மொழி,செயல் என்னும் முத்திறத்திலும் ஈடுபட்டு ஆசை மீதூர விழுங்குவது போல அனுபவிக்கிறேன். எப்படி இது மிக இனிமையாக உள்ளது? 2035

மிகக் காய்ந்த இரும்பு, குடித்த தண்ணீர் போல, வகுத்த தலைவனான இறைவனிடம், அடியேன், கிடைத்தற்கு அரிய அன்பு வைத்து, அடிமை என்றும் ஆபரணத்தை அணிந்து கொண்டு, உய்வு பெற்றேனே! என்னைத் தானே அடைந்த, மேக நிறப் பெருமானை என் மனத்தே பொருந்த வைத்து, கரும்புச் சாற்றைப் பருகிய இன்பத்தைப் பெற்றேனே! இந்த இனிமை தான் என்ன ஆச்சரியம்! 2036

மூவரில் முதல்வன் ஆய ஒருவனை, உலகம் கொண்ட
கோவினை, குடந்தை மேய குரு மணித் திரளை,இன்பப்
பாவினை, பச்சைத் தேனை, பைம் பொன்னை அமரர் சென்னிப்
பூவினைப் புகழும் தொண்டர் என் சொல்லிப் புகழ்வர் தாமே? 2037

இம்மையை, மறுமை தன்னை, எமக்கு வீடு ஆகி நின்ற
மெய்ம்மையை விரிந்த சோலை வியன் திரு அரங்கம் மேய
செம்மையை, கருமை தன்னைத் திருமலை ஒருமையானை,
தன்மையை, நினைவார் என் தன் தலைமிசை மன்னுவாரே. 2038

வானிடைப் புயலை மாலை வரையிடைப் பிரசம் ஈன்ற
தேனிடைக் கரும்பின் சாற்றை திருவினை மருவி வாழார்
மானிடப் பிறவி அந்தோ! மதிக்கிலர்; கொள்க தம் தம்
ஊனிடைக் குரம்பை வாழ்க்கைக்கு உறுதியே வேண்டினாரே. 2039

உள்ளமோ ஒன்றில் நில்லாது; ஓசையில் எரி நின்று உண்ணும்
கொள்ளிமேல் எறும்புபோலக் குழையுமால் என் தன் உள்ளம்;
தெள்ளியீர்! தேவர்க்கு எல்லாம் தேவராய் உலகம் கொண்ட
ஒள்ளியீர்! உம்மை அல்லால் எழுமையும் துணை இலோமே. 2040

சித்தமும் செவ்வை நில்லாது; என் செய்கேன் தீவினையேன்?
பத்திமைக்கு அன்பு உடையேன் ஆவதே? பணியாய் எந்தாய்!
முத்து ஒளி மரகதமே! முழங்கு ஒளி முகில் வண்ணா! என்
அத்த! நின் அடிமை அல்லால், யாதும் ஒன்று அறிகிலேனே. 2041

தொண்டு எல்லாம் பரவி, நின்னைத் தொழுது அடி பணியுமாறு
கண்டு தான் கவலை தீர்ப்பான் ஆவதே? பணியாய், எந்தாய்!
அண்டம் ஆய் எண் திசைக்கும் ஆதி ஆய்! நீதி ஆன
பண்டம்ஆம் பரம சோதி! நின்னையே பரவுவேனே. 2042

ஆவியை, அரங்க மாலை அழுக்கு உடம்பு எச்சில் வாயால்,
தூய்மை இல் தொண்டனேன் நான் சொல்லினேன் தொல்லை நாமம்;
பாவியேன் பிழைத்தவாறு என்று அஞ்சினேற்கு அஞ்சல் என்று
காவிபோல் வண்ணர் வந்து என் கண்ணுளே தோன்றினாரே. 2043





பிரமன், சிவன், இந்திரன் மூவர்க்கும் முதல்வனான ஒப்பற்றவன்; மாவலியிடம் உலகம் கொண்ட இறைவன்; திருக்குடந்தையில் உள்ளவன்; நீலமணி போன்றவன்; இன்பப் பாடலையும் தேனையும் போல இனியவன்; பொன்னைப் போல் ஒளி ஆனவன்; நித்திய சூரிகள் தலையில் சூடும் பூப்போன்றவனை அடியார்கள் எப்படிப் புகழ்வார்களோ? 2037

இப் பிறவியில் ஞானத்தையும் மோட்சத்தில் கைங்கர்யத்தையும் அருள்பவன், மோட்சம் அடைய எமக்கு உபாயம் ஆனவன். சோலைகள் சூழ்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளினான். யுகங்களுக்கு ஏற்பச் சிவப்பாகவும் கறுப்பாகவும் இருப்பவன் திருவேங்கட மலையில் எல்லோர்க்கும் ஒத்த முகம் காட்டுகிறான். அடியார்களுக்கு ஆட்படும் இப்பெருமானை நினைப்பவர் என் தலைமேல் இருக்கத் தக்கவர். 2038

வானத்து மேக நிறமுடைய திருமால், மலைத் தேனில் கலந்த கருப்பஞ்சாறு போல இனியவன்; திருவுக்கும் திருவாகிய பெருமானை வணங்கி வாழாதவர் மனிதப் பிறவியை மதிக்காதவரே ஆவர். ஐயோ! இந்த பகவானை விட்டுவிட்டு, மாமிச மயமான உடல் வாழ்வே உறுதி என்று, தேடி ஓடுகிறார்களே! 2039

என் மனமோ எதிலும் நிலை பெற வில்லை; ஒலிக்கும் நெருப்பு மேல் நிற்கும் எறும்பு போல என் மனம் உடைகிறது. ஐயோ! தெளிவுடைய தெய்வமே! தேவ தேவராக நீர் இருந்தும் மாவலியிடம் யாசித்தீரே! உம்மை அன்றி எந்நிலையிலும் எனக்குத் துணை இல்லை. 2040

மனமோ தரித்து நிற்பதில்லை; தீவினையேன் என்ன செய்வேன்? நான், உம்மிடம் பக்தி மேலிட்ட அன்புடையவன் ஆகும்படி நீரே அருள வேண்டும். எந்தையே! முத்து, மரகதம் போன்ற ஒளியும் மேக நிறமும் உடையவரே! என் தலைவரே! உம்மிடம் கைங்கர்யம் செய்வதைத் தவிர நான் வேறொன்றை அறியேன். 2041

செய்யும் அடிமைத் திறம் பற்றி அடைவு கெடப் பேசி, உன் திருவடி பணிதலை ஆசைப் படும் ஒருவன், தன்னாலே தன் மனக் கவலையைப் போக்கமுடியுமோ? நீ அல்லவா அக்கவலையைப் போக்க வேண்டும்! அண்டத் தவர்க்கு அந்தர் யாமியாய் எண் திசைத் தேவர்க்கும் காரணமாய் உள்ள பரஞ்சோதியே! உன்னையே நான் துதிப்பேன். 2042

திருவரங்கத்துத் திருமால் உலகத்தவரின் உயிர் ஆனவன். வீணானவற்றில் தொண்டு செய்த தூய்மை இல்லாத பாவியேன், அழுக்குடம்பில் உள்ள எச்சில் வாயால் அவனுடைய மேன்மையான திருநாமத்தைக் கூறினேன். 'எவ்வளவு பெரிய பிழை செய்தேன்!' என்று அஞ்சினேன் 'அஞ்சாதே' எனக் கூறிய கருங்குவளைப் பெருமான் தாமே வந்து என் கண்ணுள்ளே தோன்றினாரே! என்னே அருள்! 2043

இரும்பு அனன்று உண்ட நீரும் போதரும்; கொள்க; என் தன்
அரும்பிணி, பாவம் எல்லாம் அகன்றன என்னை விட்டு;
கரும்பு அமர் சோலை சூழ்ந்த அரங்க மா கோயில் கொண்ட
கரும்பினைக் கண்டு கொண்டு என் கண் இணை களிக்குமாறே! 2044

காவியை வென்ற கண்ணார் கலவியே கருதி, நாளும்
பாவியேன் ஆக எண்ணி அதனுள்ளே பழுத்தொழிந்தேன்;
தூவி சேர் அன்னம் மன்னும் சூழ் புனல் குடந்தையானைப்
பாவியேன் பாவியாது பாவியேன் ஆயினேனே. 2045

முன் பொலா இராவணன் தன் முது மதிள் இலங்கை வேவித்து,
அன்பினால் அனுமன் வந்து ஆங்கு அடி இணை பணிய நின்றார்க்கு
என்பு எலாம் உருகி உக்கிட்டு என்னுடை நெஞ்சம் என்னும்
அன்பினால் ஞானநீர் கொண்டு ஆட்டுவன், அடியனேனே. 2046

மாய மான் மாயச் செற்று, மருது இற நடந்து வையம்
தாய் அமா பரவை பொங்கத் தட வரை திரித்து வானோர்க்கு
ஈயும் மால் எம்பிரானார்க்கு என்னுடையச் சொற்கள் என்னும்
தூயமா மாலைகொண்டு சூட்டுவன், தொண்டேனே. 2047

பேசினார் பிறவி நீத்தார்பேர் உளான் பெருமை; பேசி
ஏசினார் உய்ந்து போனார் என்பது இவ் உலகின் வண்ணம்;
பேசினேன்; ஏச மாட்டேன்; பேதையேன்; பிறவி நீத்தற்கு
ஆசையோ பெரிது; கொள்க அலை கடல் வண்ணர்பாலே. 2048

இளைப்பினை இயக்கம் நீக்கி இருந்து முன் இமையைக் கூட்டி
அளப்பு இல் ஐம்புலன் அடக்கி அன்பு அவர்கண்ணே வைத்து,
துளக்கம் இல் சிந்தைசெய்து தோன்றலும் சுடர்விட்டு, ஆங்கே,
விளக்கினை விதியின் காண்பார் மெய்ம்மையைக் காண்கிற்பாரே. 2049

பிண்டி ஆர் மண்டை ஏந்திப் பிறர் மனை திரிதந்து உண்ணும்
முண்டியான் சாபம் தீர்த்த ஒருவன் ஊர், உலகம் ஏத்தும்
கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை என்று
மண்டினார் உய்யல் அல்லால், மற்றையார்க்கு உய்யல் ஆமே? 2050





அனுபவித்தே அகற்ற வேண்டிய பாவங்களும் என்னை விட்டுப் போயின என்றால், காய்ந்த இரும்பு குடித்த நீரும் வெளிவரும் என்பது உறுதியே. என் வினைகள் விலகக் காரணம் அரங்கன் அருளே. வண்டுகள் பாடும் சோலைகள் சூழ்ந்த திருவரங்கத்தில் உள்ள கரும்பு போன்றவனைக் கண்ட கண்கள் களிக்கின்றன. 2044

நெய்தல் பூவை வெல்லும் கண்களுடைய பெண்களுடன் கலந்து, என்றும் பாவக் குழியில் விழுந்து முழுகினேன். சிறகுடைய அன்னங்கள் வாழும் நீர் சூழ்ந்த திருக்குடந்தை ஆராவமுதனை நினையாமல், நான் பாவிகளில் முதல்வன் ஆனேன். 2045

கொடிய இராவணனின் மதிள் இலங்கையை எரியச் செய்த அனுமன், சீதையைக் கண்டபின், அன்பு மீதூர இராமன் திருவடிகளில் வந்து வணங்கினான். எலும்பும் உருகும்படி இந்த இராம பிரானிடம் என் நெஞ்சில் பக்தி மேலிட்டது. அடியேன் மனம் என்னும் அன்பாலே ஞானமாகிற திருமஞ்சனம் ஆட்டுவேன். 2046

மாயமானைப் பின் சென்று வதைத்தவனும், மருதமரங்கள் விழும்படி தவழ்ந்தவனும் பூமியைத் தாவி அளந்தவனும், மந்திர மலையாலே பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமுதம் கொடுத்தவனும் ஆகிய திருமாலுக்கு அடியேன் தொண்டு பூண்டேன். என் சொற்களாகிய தூய மாலையை அவனுக்குச் சூட்டுவேன். 2047

திருப்பேர் நகரில் எழுந்தருளியவனின் பெருமையைப் பேசினால். பிறவியைக் கடந்தவர் ஆவார். அவன் பெருமைகளைக் குற்றங்களாகக் கூறிய சிசுபாலன் முதலானோரும் கூட உய்வடைந்தார் என்று உலகோர் கூறுவர். பேதையான அடியேன் ஏதோ பேசினேனே ஒழிய, ஏச மாட்டேன். பிறவியை நீக்குவதற்காக அலைகடல் நிறமுடைய திருமாலிடம் அடியேன் கொண்ட ஆசையோ பெரிது. இது உறுதியே. 2048

அறியாமை முதலிய ஐந்து துயரங்களையும் இயங்காமல் செய்து, இருக்கையில் அமர்ந்து இமைகளை மூடி, ஐம்புலன்களை அடக்கி, இடைவிடாமல் தியானம் செய்து பக்தியோக முறைப்படி எம்பெருமானைக் காண முனைபவரும் நிலை நின்ற தர்மமான அவனை காண்பார்களோ? காணார்கள். (காண்பார்கள் எனவும் பொருள் கொள்க) 2049

பொடிகள் உதிரும் கபாலத்தைக் கையில் ஏந்தித் தவசி போல் திரிந்து பிச்சை எடுத்த சிவனின் சாபத்தை நீக்கிய திருமால் புகழுடைய திருக்கண்டியூர், திருவரங்கம், திருமெய்யம், திருக்கச்சி, திருப்பேர்நகர், திருக்கடல் மல்லை என்னும் திருப்பதிகளில் எழுந்தருளினான். இவற்றில் ஈடுபட்டோர் உய்வு பெறுவர். மற்றவர்களுக்கு உய்வு பெற இயலுமோ? 2050

வானவர் தங்கள் கோனும் மலர்மிசை அயனும் நாளும்
தே மலர் தூவி ஏத்தும் சேவடிச் செங் கண் மாலை
மான வேல் கலியன் சொன்ன வண் தமிழ் மாலை நாலைந்தும்
ஊனம் அது இன்றி வல்லார் ஒளி விசும்பு ஆள்வர். தாமே. 2051

## திருக்குறுந்தாண்டகம் முற்றும்

### திருமங்கை ஆழ்வார் அருளிய திருநெடுந் தாண்டகம்

மின் உரு ஆய் முன் உருவில், வேதம் நான்கு ஆய்,
விளக்கு ஒளி ஆய், முளைத்து எழுந்த திங்கள் தான் ஆய்,
பின் உரு ஆய் முன் உருவில் பிணி மூப்பு இல்லாப்
பிறப்பிலி ஆய், இறப்பதற்கே எண்ணாது எண்ணும்
பொன் உரு ஆய் மணி உருவில் பூதம் ஐந்து ஆய்,
புனல் உரு ஆய் அனல் உருவில் திகழும் சோதி
தன் உரு ஆய், என் உருவில் நின்ற எந்தை
தளிர் புரையும் திருவடி என் தலைமேலவே. 2052

பார் உருவில், நீர் எரி கால், விசும்பும் ஆகி
பல் வேறு சமயமும் ஆய்ப் பரந்து நின்ற
ஏர் உருவில் மூவருமே என்ன நின்ற
இமையவர் தம் திருவுரு வேறு எண்ணும்போது
ஓர் உருவம் பொன் உருவம்; ஒன்று செந்தீ:
ஒன்று மா கடல் உருவம் ஒத்துநின்ற
மூவருவும் கண்ட போது ஒன்றாம் சோதி
முகில் உருவம் எம் அடிகள் உருவம் தானே. 2053

திருவடிவில் கரு நெடுமால் சேயன் என்றும்,
திரேதைக்கண்; வளை உருவாய்த் திகழ்ந்தான் என்றும்
பெரு வடிவில் கடல் அமுதம் கொண்ட காலம்;
பெருமானைக் கரு நீல வண்ணன் தன்னை,
ஒரு வடிவத்து ஓர் உரு என்று உணரல் ஆகாது;
ஊழிதோறு ஊழி நின்று ஏத்தல் அல்லால்,
கரு வடிவில் செங் கண்ண வண்ணன் தன்னைக்
கட்டுரையே யார் ஒருவர் காண்கிற்பாரே? 2054





தேவர்கள் தலைவன் இந்திரனும், தாமரையில் பிறந்த பிரமனும், எப்பொழுதும் மலர்களைப் போட்டுத் துதிக்கும் திருவடிகளை உடைய செங்கண் மாலைப் பற்றி, வேல் ஏந்திய கலியன் இவ்விருபது பாசுரங்களை அருளினார். இவற்றைப் பயன் கருதாது கற்க வல்லவர் பரம பதத்தை ஆள்வார்கள். 2051

## திருக்குறுந் தாண்டகம் முற்றிற்று

### திருமங்கை ஆழ்வார் அருளிய திருநெடுந் தாண்டகம்

இறைவன், இயங்காப் பொருள்களில், மின்னல் போன்ற நிலையின்மையைக் காட்டுகிறான். நான்கு வேதங்களாய், அவற்றால் உண்டாகும் ஞானஒளியாய் உள்ள அவனே, உதிக்கும் சந்திரனை ஒத்த ஆத்ம ஞானத்தை எனக்கு அளித்தான். ஆத்மா பிரகிருதியி லிருந்து வேறுபட்டுப் பிணி, மூப்பு, இறப்பு, இல்லாதது என்று தெரிவித்தான். கைவல்யத்தைக் கழிக்கச் செய்தான். பொன் ஒளி கூடிய, ஐந்து உபநிடத மயமான, இயற்கை கடந்த, மணி நிற மேனியை எனக்குக் காட்டினான். அடியார்க்கு நீர்மையனாய், அல்லாதவர்க்குத் தீயாக இருப்பவன்,சோதிகளுக்கு மேலான சோதி ஆவான். என் உடலில் தரித்து நிற்கும் எந்தையின் செவ்விய திருவடிகளைத் தலையில் சூடுவேன். 2052

திருமால் ஆகிய பரம்பொருளைப் பிரமன், விஷ்ணு, சிவன் என்னும் மூன்று வடிவங்களில் எண்ணும் பொழுது, பிரமன் பொன் நிறம் ஆனவன்; சிவன் தீ நிறம் உடையவன்; விஷ்ணு கடல் நிறம் உடையவன். சேர்ந்து நிற்கும் மூன்று தத்துவங்களையும் ஆராய்ந்தால், பூமி, நீர், தீ, காற்று, வானம் ஆகியவற்றைப் படைத்தும், பல்வேறு நிலைகளை உடைய உலகுகளை உண்டாக்கியும் வியாபித்த பரம்சோதி, ஒருவனே; அவனே, மேக நிறத் திருமால் ஆவான். 2053

அடியார்களிடம் பேரன்பு கொண்டுள்ள திருமாலின் திருமேனி, இயல்பிலே, மேகம் ஒத்த கருமை நிறமுடையதாகும். திரேதாயுகத்தில் இவன் நிறம் சிவப்பு. பலவடிவங்களுடைய இப்பெருமான் கிருதயுகத்தில் சங்கு போன்ற வெண்மை நிறம் உடையவன். ஒவ்வோர் கல்பத்திலும் இருந்து துதிப்பது ஒழிய, இப் படித்தான் மேனி உடையவன் என்று உணர இயலாது. நீல மேனியும் சிவந்த கண்களும் உடைய இப்பெருமானை, அனைவரும் வருணித்துப் பேசினாலும், அவன் காட்டிய வடிவத்தை அடியேன் கண்டது போல, வேறு எவர் காண முடியும்? 2054

இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன் தன்னை,
இரு நிலம் கால், தீ, நீர் விண் பூதம் ஐந்து ஆய்,
செந்திறத்த தமிழ் ஓசை வடசொல் ஆகி,
திசை நான்கும் ஆய், திங்கள் ஞாயிறு ஆகி,
அந்தரத்தில் தேவர்க்கும் அறியல் ஆகா
அந்தணனை, அந்தணர்மாட்டு அந்தி வைத்த
மந்திரத்தை மந்திரத்தால் மறவாது என்றும்
வாழுதியேல் வாழலாம் மட நெஞ்சமே! 2055

ஒண் மிதியில் புனல் உருவி ஒரு கால் நிற்ப,
ஒரு காலும் காமரு சீர் அவுணன் உள்ளத்து
எண் மதியும் கடந்து அண்டமீது போகி
இரு விசும்பினூடு போய் எழுந்து மேலைத்
தண் மதியும் கதிரவனும் தவிர ஓடித்
தாரகையின் புறந் தடவி அப்பால் மிக்கு
மண் முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை
மலர் புரையும் திருவடியே வணங்கினேனே. 2056

அலம்புரிந்த நெடுந் தடக்கை அமரர் வேந்தன்,
அம் சிறைப் புள் தனிப் பாகன, அவுணர்க்கு என்றும்
சலம்புரிந்து அங்கு அருள் இல்லாத் தன்மையாளன்,
தான் உகந்த ஊர் எல்லாம் தன் தாள் பாடி
நிலம் பரந்து வரும் கலுழிப் பெண்ணை ஈர்த்த
நெடு வேய்கள் படு முத்தம் உந்த உந்தி
புலம் பரந்து பொன் விளைக்கும் பொய்கை வேலிப்
பூங் கோவலூர் தொழுதும் போது நெஞ்சே! 2057

வற்பு உடைய வரை நெடுந் தோள் மன்னர் மாள,
வடி வாய மழு ஏந்தி உலகம் ஆண்டு
வெற்பு உடைய நெடுங் கடலுள் தனி வேல் உய்த்த
வேள் முதலா வென்றான் ஊர் விந்தம் மேய
கற்பு உடைய மடக் கன்னி காவல் பூண்ட
கடி பொழில் சூழ் நெடு மறுகில், கமல வேலி,
பொற்பு உடைய மலை அரையன் பணிய நின்ற
பூங்கோவலூர் தொழுதும் போது நெஞ்சே! 2058

நீரகத்தாய்! நெடுவரையின் உச்சி மேலாய்!
நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்த கச்சி
ஊரகத்தாய்! ஒண் துறை நீர் வெஃகா உள்ளாய்!
உள்ளுவார் உள்ளத்தாய்! உலகம் ஏத்தும்
காரகத்தாய்! கார்வனத்து உள்ளாய்! கள்வா!
காமரு பூங் காவிரியின் தென்பால் மன்னு
பேரகத்தாய் பேராது என் நெஞ்சில் உள்ளாய்!
பெருமான்! உன் திருவடியே பேணினேனே. 2059





மடநெஞ்சமே! இந்திரனுக்கும் பிரமனுக்கும் காரணமான திருமால், பூமி, காற்று, தீ, நீர், வானம் ஆகிய ஐம்பூதங்களுக்கு உள்ளே நின்று நியமிக்கிறான். செந்தமிழ் வேதத்தையும் வடமொழி வேதத்தையும் வெளிப்படுத்தியவன் நான்கு திசைகளுக்கும் சந்திரனுக்கும் சூரியனுக்கும் உள்ளே உறைகிறான். தேவர்களும் இதனை அறியார்கள். அந்தணரின் செல்வமான வேதத்தில் உச்சியாய் உள்ளவனைத் திருமந்திரம் ஓதித் துதித்து அனுபவித்தால், என்றும் பரம பதத்தில் வாழலாம். 2055

திரிவிக்கிரமனின் மென்மையான ஒரு திருவடி அண்டத்துக்கு அப்பால் நீர் வெள்ளத்தைத் தொட்டு மற்றொரு திருவடி, மாவலியின் நெஞ்சு நினைவையும் கடந்து, விண்மீன்களை வியாபித்து அப்பால் எல்லா இடங்களையும் அகப்படுத்தின. இவ்வாறு உலகளந்தவனின் தாமரைத் திருவடிகளை நான் வணங்கினேன். 2056

அளவின்றி அளிக்கும் திருக்கைகளை உடைய நித்திய சூரிகள் தலைவன், அழகிய சிறகுடைய கருடனை வாகனமாகப் பெற்றவன்; தீயரான அசுரர்களைத் தண்டிக்கும் பொழுது கருணை காட்டாதவன். இப் பெருமானின் எல்லாத் திருப்பதிகளிலும் அவன் திருவடி பணிந்து துதிப்போம். பின், திருக்கோவலூரையும் வழிபடுவோம். இங்குத் தென்பெண்ணை ஆறு, மூங்கில் முத்துக்களைத் தள்ளியபடி, வயல்களில் புகுந்து பொன்னை விளைவிக்கும். நெஞ்சே! குளங்கள் சூழ்ந்த இத் திருக்கோவலூர் சென்று வணங்கு. 2057

பரசுராமன் மலைபோன்ற தோள்களும் பலமும்பெற்ற அரசர்களைத் தன் மழுவால் அழித்தான். இராமபிரான் உலகை நெடுங் காலம் ஆண்டார். மலையை அடக்கிய கடலின் மீது வேல் ஏய்த்த முருகன் முதலானோரை வெற்றி கொண்ட எம் பெருமான் திருக்கோவலூரில் எழுந்தருளி உள்ளார். விந்தியத்தில் தவம் செய்து, திருமாலுக்கு அடிமை பூண்ட கற்புடைய துர்க்கையால் காவல் செய்யப்படும் தலம் இது. அகன்ற வீதிகளும் தாமரைக் குளங்களும் உள்ள இத்தலத்தில் மலையமான் அரசன் வழிபட்டான். நெஞ்சே நீயும் இதை வணங்கு. 2058

திருநீரகம், மலைஉச்சிகள் உள்ள திருமலை, நிலாத் திங்கள் துண்டம், கச்சியில் உள்ள ஊரகம், நீர்த்துறைகள் உள்ள திருவெஃகா ஆகிய திருப்பதிகளில் எழுந்தருளியவனே! நினைப்போர் நெஞ்சில் நிற்பவனே! உலகம் துதிக்கத் திருக்காரகத்தில் உள்ளவனே! கார்வானம் என்னும் தலத்தில் உள்ளவனே! காவிரியின் தென் கரையில் உள்ள திருப்பேர் நகரில் எழுந்தருளியவனே! என் நெஞ்சை விட்டு நீங்காதவனே! உன் திருவடிகளில் வணங்கினேன். 2059

வங்கத்தால் மா மணி வந்து உந்து முந்நீர்
மல்லையாய்! மதிள் கச்சியூராய்! பேராய்!
கொங்கத் தார் வளங் கொன்றை அலங்கல் மார்வன்
குலவரையன் மடப் பாவை இடப்பால் கொண்டான்
பங்கத்தாய்! பாற்கடலாய்! பாரியின் மேலாய்!
பனி வரையின் உச்சியாய்! பவள வண்ணா!
எங்கு உற்றாய்? எம் பெருமான்! உன்னை நாடி
ஏழையேன் இங்ஙனமே உழிதருகேனே. 2060

பொன் ஆனாய்! பொழில் ஏழும் காவல் பூண்ட
புகழ் ஆனாய்! இகழ்வாய தொண்டேனேன் நான்
என் ஆனாய்! என் ஆனாய்! என்னல் அல்லால்,
என் அறிவன் ஏழையேன்? உலகம் ஏத்தும்
தென் ஆனாய்! வட ஆனாய்! குடபால் ஆனாய்!
குணபால மத யானாய்! இமையோர்க்கு என்றும்
முன் ஆனாய்! பின் ஆனார் வணங்கும் சோதி!
திருமூழிக்களத்து ஆனாய்! முதல் ஆனாயே! 2061

### பெண்ணின் ஆற்றாமைக்குத் தாய் இரங்கல்

பட்டு உடுக்கும்; அயர்த்து இரங்கும்; பாவை பேணாள்;
பனி நெடுங் கண் நீர் ததும்பப் பள்ளி கொள்ளாள்;
எள் துணைப் போது என் குடங்கால் இருக்ககில்லாள்;
எம் பெருமான் திருவரங்கம் எங்கே ? என்னும்;
மட்டு விக்கி மணி வண்டு முரலும் கூந்தல்
மட மானை இது செய்தார் தம்மை மெய்யே,
கட்டுவிச்சி சொல் என்னச் சொன்னாள் நங்காய்
கடல் வண்ணர் இது செய்தார்; காப்பார் ஆரே ? 2062

நெஞ்சு உருகிக் கண் பனிப்ப நிற்கும்; சோரும்;
நெடிது உயிர்க்கும்; உண்டு அறியாள்; உறக்கம் பேணாள்;
நஞ்சு அரவில் துயில் அமர்ந்த நம்பீ! என்னும்;
வம்பு ஆர் பூ வயல் ஆலி மைந்தா! என்னும்;
அம் சிறைய புட்கொடியே ஆடும்; பாடும்;
அணி அரங்கம் ஆடுதுமோ? தோழீ!என்னும்;
என் சிறகின்கீழ் அடங்காப் பெண்ணைப் பெற்றேன்;
இரு நிலத்து ஓர் பழி படைத்தேன், ஏ! பாவமே! 2063





கப்பல்கள் மணிகளைக் கொண்டு வரும் கடற்கரையிலுள்ள திருக்கடல் மல்லைப் பெருமானே! மதிள் காஞ்சியில் எழுந்தருளியவா! திருப்பேர் நகரில் உள்ளவனே! தேன் துளிர்க்கும் கொன்றை மாலையையும் மலையரசன் மகள் பார்வதியையும் மார்பில் கொண்ட சிவனை உன் உடலில் கொண்டவனே! பாற்கடலில் பள்ளி கொண்டவனே! உலகோர்க்காகத் திருமலையில் நின்றவனே! பவள வண்ணா! எம் பெருமானே! உன்னை நாடி எளியனான அடியேன் இவ்வாறு அலைகிறேன். 2060

உலகம் துதிக்கும் தென் திருமாலிருஞ்சோலை மலையில் நின்ற யானை போன்றவனே! வட திருவேங்கடத்தில் நின்ற யானையே! மேற்கே திருவரங்கத்தில் பள்ளி கொண்ட யானையே! கிழக்கே திருக் கண்ணபுரத்தில் உள்ள மதயானையே! என்றும் நித்திய சூரிகளுக்குக் காட்சி தருபவனே! அவதார காலத்துக்குப் பின் வந்தோரும் வணங்கும்படி, திருமூழிக் களத்தில் எழுந்தருளியவா! உலக காரணா! பொன் போன்றவனே! ஏழுலகங்களையும் காக்கும் புகழுடையவனே! இகழ்ச்சி உடைய தொண்டனான அடியேன் என் யானையே! என் யானையே! என்று துதிப்பது அல்லால் வேறு அறியேன். 2061

### பெண்ணின் ஆற்றாமைக்குத் தாய் இரங்கல்

என் மகள் பட்டாடையை உடுத்துகிறாள்; உடனே மயங்கி வருந்துகிறாள்; பொம்மையை விரும்பாமல் கண்ணீர் விடுகிறாள். தூங்குவதும் இல்லை. நொடி நேரமாவது என் மடியில் பொருந்துவதும் இல்லை. எப்பொழுதும் எம்பெருமான் திருவரங்கம் எங்கே! என்று கேட்கிறாள். தேன்பருகிய வண்டு முரலும் பூச்சூடிய கூந்தலை உடைய, மான் போன்ற என் பெண்ணை இப்படிச் செய்தவர் யார்? நான் இதை அறியக் குறிகாரியிடம் ‘உண்மையைக் கூறு’ என்று கேட்ட பொழுது, அவள் ‘கடல் நிறத் திருமாலே இப்படிச் செய்தான்’ என்றாள். நங்கைமீர்! காக்கும் திருமாலே இப்படிச் செய்தால் வேறு யாரால் இவளைக் காக்க முடியும்! 2062

என் பெண் மனம் நீராய் உருகக் கண்ணீர் பெருக்கி மயங்கிப் பெருமூச்சு விடுகிறாள். உணவு உட்கொள்ள வில்லை; உறங்கவும் இல்லை. “நச்சுப் பாம்பின் மீது பள்ளி கொண்ட நம்பீ! வாசனைப் பூக்கள் உள்ள வயல்கள் சூழ்ந்த திருவாலி மைந்தா!” என்று அழைக்கிறாள். அழகிய சிறகுடைய கருடன் போல் ஆடுகிறாள்; பாடுகிறாள். தோழியை அழைத்து “நாம் திருவரங்கத் துறையில் நீராடுவோமா?” என்று கேட்கிறாள். எனக்கு அடங்காத பெண்ணைப் பெற்ற நான் இவ்வுலகில் பழியைத்தான் அடைந்தேன். என்ன பாவமோ? 2063

கல் எடுத்துக் கல் மாரி காத்தாய்! என்றும்;
காமரு பூங் கச்சி ஊரகத்தாய்! என்றும்;
வில் இறுத்து மெல்லியல் தோள் தோய்ந்தாய்! என்றும்;
வெஃகாவில் துயில் அமர்ந்த வேந்தே! என்றும்;
மல்அடர்த்து மல்லரை அன்று அட்டாய்! என்றும்;
மா கீண்ட கைத்தலத்து என் மைந்தா! என்றும்;
சொல் எடுத்துத்தன் கிளியைச் சொல்லே என்று,
துணை முலைமேல் துளிசோரச் சோர்கின்றாளே. 2064

முளைக் கதிரை, குறுங்குடியுள் முகிலை, மூவா
மூவுலகும் கடந்து அப்பால் முதலாய்நின்ற
அளப்பு அரிய ஆர் அமுதை, அரங்கம் மேய
அந்தணனை, அந்தணர் தம் சிந்தையானை,
விளக்கு ஒளியை மரகதத்தை, திருத்தண்காவில்
வெஃகாவில் திருமாலைப் பாடக் கேட்டு
வளர்த்ததனால் பயன்பெற்றேன்; வருக என்று
மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே. 2065

கல் உயர்ந்த நெடு மதிள் சூழ் கச்சி மேய
களிறு! என்றும் கடல் கிடந்த கனியே! என்றும்,
அல்லியம் பூ மலர்ப் பொய்கைப் பழன வேலி
அணி அழுந்தூர் நின்று உகந்த அம்மான்! என்றும்,
சொல் உயர்ந்தநெடு வீணை முலை மேல் தாங்கி,
தூ முறுவல் நகை இறையே தோன்ற நக்கு,
மெல் விரல்கள் சிவப்பு எய்தத் தடவி ஆங்கே,
மென் கிளிபோல், மிக மிழற்றும் என் பேதையே. 2066

கன்று மேய்த்து இனிது உகந்த காளாய்! என்றும்
கடி பொழில் சூழ் கணபுரத்து என் கனியே! என்றும்,
மன்று அமரக் கூத்து ஆடி மகிழ்ந்தாய்! என்றும்,
வட திருவேங்கடம் மேய மைந்தா! என்றும்,
வென்று அசுரர் குலம் களைந்த வேந்தே! என்றும்,
விரி பொழில் சூழ் திருநறையூர் நின்றாய்! என்றும்
துன்று குழல் கரு நிறத்து என் துணையே! என்றும்
துணை முலைமேல் துளி சோரச் சோர்கின்றாளே. 2067

பொங்கு ஆர் மெல் இளங் கொங்கை பொன்னே பூப்ப,
பொருகயல்கண் நீர் அரும்பப் போந்து நின்று,
செங்கால மடப் புறவம் பெடைக்குப் பேசும்
சிறு குரலுக்கு உடல் உருகிச் சிந்தித்து, ஆங்கே,
தண்காலும் தண் குடந்தை நகரும் பாடித்
தண் கோவலூர் பாடி ஆடக் கேட்டு
நங்காய்! நம் குடிக்கு இதுவோ நன்மை? என்ன,
நறையூரும் பாடுவாள் நவில்கின்றாளே. 2068





"கண்ணா! மலையைத் தூக்கிக் கல் மழையைத் தடுத்தாயே! அழகான காஞ்சியில் திருவூரகத்தில் உள்ளவனே! வில்லொடித்துச் சீதை கைப்பிடித்தவனே! திருவெஃகாவில் பள்ளி கொண்ட அரசே! முன்பு மல்லர்களை வென்று அழித்தாய். குதிரை வடிவில் வந்த அசுரனைக் கொன்ற கைகளை உடையவனே! என் நாயகனே!" என்று என் மகள் தன் கிளிக்குப் பெருமானின் திருநாமங்களைக் கற்பித்துக் கூறச் சொல்கிறாள். அக்கிளி பேசவும், கேட்டு உருகி, முலைகளில் கண்ணீர் விழவும், சோர்ந்து போகிறாள். 2064

"இளங்கதிரவனைப் போன்ற மேக நிறப் பெருமான் திருக்குறுங்குடியில் உள்ளான். நித்தியமான அவன், மூவுலகையும் கடந்த முதல்வன். அளவற்ற கல்யாண குணங்களை உடையவன்; அமுதமாய் உள்ள அவன் திருவரங்கத்தில் உள்ள தூய்மையன்; வேதியர் உள்ளத்தில் தங்குவது போலவே, திருத்தண்காவில் விளக்கொளிப் பெருமானாய் எழுந்தருளினான். மரகத வடிவுடைய திருமாலே, திருவெஃகாவில் பள்ளி கொண்டான்" இவ்வாறு கிளி பாடவும் அதை நோக்கி 'மடக் கிளியே உன்னை வளர்த்த பயன் பெற்றேன்' என்று கூறிய என் மகள் கைகூப்பி வணங்கினாள். 2065

"கல் மதிள் சூழ்ந்த காஞ்சித் திருப்பாடகத்தில் உள்ள யானை போன்றவனே! பாற்கடலில் பள்ளி கொண்ட கனியே! இதழ் விரியப் பூக்கள் மலரும் பொய்கைகளும் நீர் நிலைகளும் வேலியாக உள்ள திருவழுந்தூரில் உள்ள என் அம்மானே!" என்று என் மகள் அழைக்கிறாள். நாதம் மிகுந்த வீணையைத் தன் மார்புகளோடு தாங்கியவாறு சிறிதே புன்முறுவல் செய்தபடி மெல்லிய விரல்கள் சிவக்க. வாசித்துக் கொண்டு இப் பேதைப் பெண் கிளியைப் போல் மிழற்றுகிறாள். 2066

"கன்றுகளை மேய்த்து மகிழ்ந்த காளையே! மணம் வீசும் சோலைகள் சூழ்ந்த திருக்கண்ணபுரத்தில் உள்ள என் கனியே! மன்றில் குடக்கூத்தாடி மகிழ்ந்தவனே! வடதிருவேங்கடத்தில் உள்ளவனே! அசுரர்களை வென்று அழித்த அரசனே! சோலைகள் சூழ்ந்த திருநறையூரில் நின்று அருள்பவனே! செறிந்த தலைமயிர் உடைய கரிய திருமேனியனே! என் துணைவனே!" என்று என் மகள் தன் முலைத் தடங்கள் மேல் கண்ணீர் வழியத் தளர்ந்து புலம்புகிறாள். 2067

என் மகளின் ஓங்கிய மெல்லிய மார்புகளில் பசலை படர்ந்தது. கயற்கண்களில் நீர் அரும்புகிறது. என்னை விட்டுப் பிரிந்தும் தரிக்கிறாள். செங்காற் புறாக்கள் தம் பேடைகளுடன் பேசும் சிறு குரலைக் கேட்டு உருகிச் சிந்திக்கிறாள். அவ்வளவில் திருத்தண்கால், திருக்குடந்தை, திருக்கோவலூர் ஆகியவை பற்றிப் பாடி ஆடுகிறாள். அதனைக் கேட்ட நான் "பெண்ணே! நீ வாய் விட்டுப் பாடுவது நம் குலத்துக்கு நன்மையா?" என்று கேட்கவும் மேலே திருநறையூரைப் பற்றியும் பாடத் தொடங்குகிறாள். 2068

கார்வண்ணம் திருமேனி; கண்ணும் வாயும்,
கைத்தலமும் அடி இணையும் கமல வண்ணம்;
பார்வண்ண மட மங்கை பத்தர்; பித்தர்
பனி மலர்மேல் பாவைக்கு; பாவம் செய்தேன்;
ஏர்வண்ண என் பேதை என் சொல் கேளாள்;
எம் பெருமான் திருவரங்கம் எங்கே? என்னும்;
நீர்வண்ணன் நீர்மலைக்கே போவேன் என்னும்;
இது அன்றோ நிறை அழிந்தார் நிற்குமாறே! 2069

முற்று ஆரா வன முலையாள், பாவை மாயன்
மொய் அகலத்துள் இருப்பாள் அஃதும் கண்டும்,
அற்றாள்; தன் நிறை அழிந்தாள்; ஆவிக்கின்றாள்;
அணிஅரங்கம் ஆடுதுமோ? தோழீ! என்னும்;
பெற்றேன் வாய்ச் சொல் இறையும் பேசக்கேளாள்;
பேர் பாடி தண் குடந்தை நகரும் பாடி
பொற்றாமரைக் கயம் நீராடப் போனாள்;
பொரு அற்றாள், என் மகள்உம் பொன்னும் அஃதே. 2070

தேர் ஆளும் வாள் அரக்கன் செல்வம் மாள,
தென் இலங்கை முன் மலங்கச் செந்தீ ஒல்கி;
போர் ஆளன் ஆயிரந் தோள் வாணன் மாள,
பொரு கடலை அரண் கடந்து புக்கு; மிக்க
பார் ஆளன் பார் இடந்து பாரை உண்டு,
பார் உமிழ்ந்து பார் அளந்து பாரை ஆண்ட
பேர் ஆளன் பேர் ஓதும் பெண்ணை மண்மேல்
பெருந் தவத்தள் என்று அல்லால், பேசல் ஆமே? 2071

### தலைவி பேச்சு

மை வண்ண நறுங் குஞ்சிக் குழல் பின் தாழ,
மகரம் சேர் குழை இருபாடு இலங்கி ஆட,
எய் வண்ண வெம் சிலையே துணையா இங்கே
இருவராய் வந்தார், என் முன்னே நின்றார்:
கை வண்ணம் தாமரை; வாய் கமலம் போலும்;
கண் இணையும் அரவிந்தம்; அடியும் அஃதே;
அவ் வண்ணத்து அவர் நிலைமை கண்டும் தோழீ!
அவரை நாம் தேவர் என்று அஞ்சினோமே. 2072

நைவளம் ஒன்று ஆராயா, நம்மை நோக்கா,
நாணினார் போல் இறையே நயங்கள் பின்னும்
செய்வு அளவில், என் மனமும் கண்ணும் ஓடி
எம் பெருமான் திருவடிக்கீழ் அணைய இப்பால்
கைவளையும் மேகலையும் காணேன்; கண்டேன்
கன மகரக் குழை இரண்டும் நான்கு தோளும்;
எவ்வளவு உண்டு எம் பெருமான் கோயில்? என்றேற்கு
இது அன்றோ எழில் ஆலி! என்றார் தாமே. 2073





பாவியேனின் அழகிய பெண் என் சொல்லைக் கேளாள். "அவர் மேனி மேகநிறம்; கண்களும் வாயும் கைகளும் திருவடிகளும் தாமரை போன்றவை. அவர் பூமாதேவியின் பக்தர்; தாமரைச் செல்வி திருமகளிடம் பித்துப் பிடித்தவர். அந்த எம்பெருமானின் திருவரங்கம் எங்கே உள்ளது? நான் நீர் வண்ணனின் திருநீர் மலைக்கே போவேன்'' என்று பேசுகிறாள். அடக்கம் இல்லாதவர் இப்படித் தான் இருப்பாரோ? 2069

ஒப்பற்ற என் மகளின் முலைகளோ இன்னும் வளரவில்லை. திருமகள் அத் திருமாலின் மார்பில் இருப்பதைக் கண்டும் அவனுக்கே அற்றுத் தீர்ந்தாள். தன் நிறை அழிந்தாள். நெடுமூச்சு விட்டபடி "தோழீ! நாம் திருவரங்கம் சென்று அவன் அழகில் நீராடுவோம்'' என்கிறாள். பெற்ற தாயான என் சொல்லைக் கேளாமல் திருப்பேர் நகர், திருக்குடந்தை இவற்றைப் பாடியபடி, பெருமானின் அனுபவமாகிய தாமரைக் குளத்தில் நீராடப் போனாள். தோழிகளே! உங்கள் பெண்ணும் இப்படியா? 2070

தேர்ப்படையும் வாள் வலிமையும் உடைய இராவணனின் இலங்கையை இராமன் அனுமானாலே தீக்கு இரை ஆக்கினான். கண்ணன் கடல் கடந்து ஆயிரம் தோளுடைய பாணாசுரனை வென்றான். வராகப் பிரான் பூமியைக் காத்தான். பூமியை வயிற்றில் வைத்துக் காத்த திருமால், திரிவிக்கிரமனாக உலகை அளந்தான். இப்படிப் பெருமைகளை உடையவனின் திருநாமங்களை என் மகள் சதா ஓதுகிறாள். இவள் பேறுதான் என்னே! 2071

### தலைவி பேச்சு

கருநிறத் தலை மயிரத் தொகுதிகள் பின்புறம் அலைய, இரு காதுகளில் மகர குண்டலங்கள் ஒளி வீச, எய்யும் இயல்புடைய வில்லின் துணை கொண்டு இக்கொல்லையில் என் தலைவன் தன்னைப் பிரியாத இளவலுடன் வந்து நின்றார். அவர் கைகளும் கண்களும் திருவடிகளும் தாமரைப் பூவை ஒத்தன. தோழி! இப்படி அழகின் திருவடிவைக் கண்டதும் நாம் அவரைப் பரதேவதை என்று எண்ணி அஞ்சினோம். 2072

நட்டபாடை என்னும் பண்ணைப் பாடும் அவர், நம்மைக் கண்டு வெட்கம் அடைந்தவர் போல் நிற்கிறார். நயமான அவர் பாடல் சொற்களைக் கேட்டதும் என் இதயம் அவரிடம் ஓடி, அவர் திருவடி களில் அணைந்தது. பிறகு என் கைவளை, மேகலை கழன்றன. நான்கு தோள்களுடன் மகர குண்டலங்கள் விளங்க அவரைக் கண்டேன். "உமது இருப்பிடம் எங்கே?'' என்று கேட்டதற்கு அவர், "அழகிய திருவாலி நகர் தான். இதோ பார்'' என்று சுட்டிக் காட்டினார். 2073

உள் ஊரும் சிந்தை நோய் எனக்கே தந்து, என்
ஒளி வளையும் மா நிறமும் கொண்டார் இங்கே
தெள் ஊரும் இளந் தெங்கின் தேறல் மாந்திச்
சேல் உகளும் திருவரங்கம் நம் ஊர் என்ன,
கள் ஊரும் பைந் துழாய் மாலையானைக்
கனவிடத்தில் யான் காண்பன்; கண்ட போது
புள் ஊரும் கள்வா! நீ போகேல் என்பன்;
என்றாலும் இது நமக்கு ஓர் புலவிதானே. 2074

இரு கையில் சங்குஇவை நில்லா, எல்லே பாவம்
இலங்கு ஒலி நீர்ப் பெரும் பௌவம் மண்டி உண்ட
பெரு வயிற்ற கரு முகிலே ஒப்பர் வண்ணம்;
பெருந் தவத்தர் அருந் தவத்து முனிவர் சூழ,
ஒரு கையில் சங்கு, ஒரு கை மற்று ஆழி ஏந்தி,
உலகு உண்ட பெரு வாயர் இங்கே வந்து, என்
பொரு கயல் கண் நீர் அரும்பப் புலவி தந்து
புனல் அரங்கம் ஊர் என்று போயினாரே. 2075

மின் இலங்கு திருவுருவும், பெரிய தோளும்
கரி முனிந்த கைத்தலமும் கண்ணும் வாயும்
தன் அலர்ந்த நறுந் துழாய் மலரின் கீழே
தாழ்ந்து இலங்கு மகரம் சேர் குழையும் காட்டி;
என் நலனும் என் நிறையும் என் சிந்தையும்
என் வளையும் கொண்டு; என்னை ஆளும் கொண்டு;
பொன் அலர்ந்த நறுஞ் செருந்திப் பொழிலினூடே,
புனல் அரங்கம் ஊர் என்று போயினாரே. 2076

தே மருவு பொழிலிடத்து மலர்ந்த போதைத்
தேன்அதனை வாய்மடுத்து உன் பெடையும் நீயும்
பூ மருவி இனிது அமர்ந்து பொறியில் ஆர்ந்த
அறு கால சிறு வண்டே! தொழுதேன் உன்னை;
ஆ மருவி நிரை மேய்த்த அமரர் கோமான்
அணி அழுந்தூர் நின்றானுக்க இன்றே சென்று
நீ மருவி அஞ்சாதே நின்று ஓர் மாது
நின் நயந்தாள் என்று இறையே இயம்பிக் காணே. 2077

செங் கால மட நாராய்! இன்றே சென்று
திருக்கண்ணபுரம் புக்கு என் செங் கண் மாலுக்கு
என் காதல் என் துணைவர்க்கு உரைத்தியாகில்
இது ஒப்பது எமக்கு இன்பம் இல்லை; நாளும்
பைங் கானம் ஈது எல்லாம் உனதே ஆகப்
பழன மீன் கவர்ந்து உண்ணத் தருவன்; தந்தால்,
இங்கே வந்து இனிது இருந்து உன் பெடையும் நீயும்
இரு நிலத்தில் இனிது இன்பம் எய்தலாமே. 2078





*உள்ளுக்குள் வளரும் மனநோயை எனக்குத் தந்து விட்டுப் பிரிந்த என் காதலர், என் ஒளிவளையையும் உடல் நிறத்தையும் கவர்ந்து போனார். சேல்மீன்கள் தென்னை மரத்திலிருந்து விழுந்த தேனைப் பருகி, உலவும் நீர் நிலைகள் உள்ள திருவரங்கமே தமது ஊர் என்று கூறினார். தேன் ஊரும் திருத்துழாய் மாலை அணிந்த அவரைக் கண்டால், “கருட வாகனப்பிரானே நீர் என்னை விட்டுப் போகலாகாது” என்பேன் என்றாலும் நமக்கு அவர் சேர்க்கை ஆற்றாமையை உண்டாக்கும்.* **2074**

*உலகங்களை உண்ட பெரிய வாயை உடையவர், கயல் மீன் போன்ற என் கண்களிலிருந்து நீர் பெருகும்படி பிரிவுத் துயரை உண்டாக்கி விட்டுப் போனார். கடல் நீரைப் பருகிய பருத்த வயிறுடைய மேகத்தை ஒத்த பெருமான், முனிவரும் அமரரும் சூழ சங்கு சக்கரம் ஏந்திய படி தோன்றி, நீர்வளமுடைய திருவரங்கமே தமது ஊர் என்று கூறிப் போனார். அதனால் என் சங்கு வளையல்கள் கழன்றன. என்னே பாவமே!* **2075**

*மின்னல் ஒளி வீசும் மேனியும் பெரிய தோளும் குவலயாபீட யானையைப் படைத்த கைகளும் கண்களும் வாயும், திருத்துழாய் மாலையின் கீழே விளங்கும் மகர குண்டலங்களையும் காட்டிய என் தலைவர், என்னுடைய அழகு நிறைவு, நெஞ்சு, கைவளை ஆகிய வற்றைக் கவர்ந்து போனார். என்னை அடிமை ஆக்கிக் கொண்ட அவர், “சுரபுன்னை மலர்ச்சோலைகள் நடுவே உள்ள நீர்வளமுடைய திருவரங்கமே நமது ஊர்” என்று கூறிப் போனார்.* **2076**

*சோலை மலர்களில் நிறைந்த தேனைப் பருகி, உன் பெடையுடன் இனிதே கலந்து மகிழும், ஆறு கால்களை உடைய சிறிய வண்டே! நான் உன்னை வணங்குகிறேன். பசுக்களை மேய்த்துக் காத்த, நித்திய சூரிகள் தலைவனான எம் பெருமான், அழகிய திருவழுந்தூரில் உள்ளான். இன்றே, நீ அவனிடம் சென்று, பயப்படாமல் நின்று, “ ஒரு பெண் உம்மை ஆசைப்பட்டாள்” என்று சிறிதாவது சொல்லிப் பார்.* **2077**

*சிவந்த கால்களை உடைய நாரையே! நீ, இன்றே திருக்கண்ணபுரம் சென்று, என் காதலரும் துணைவருமான செந்தாமரைக் கண்ணனிடம் என் காதலைக் கூறி, வந்தால். எனக்கு இதை விட இன்பம் வேறில்லை. இவ்வாறு நீ செய்தால், இச்சோலை எல்லாம், உன்னுடையதாக்கி என்றும் நீர் மீன்களைக் கவர்ந்து உண்ணும்படி அளிப்பேன். நீயும் உன் மனைவியும் இன்பமாக, இப்பூமியில் ஒன்றுகூடி வாழ்ந்து மகிழலாம்.* **2078**

தென் இலங்கை அரண் சிதறி, அவுணன் மாளச்
சென்று உலகம் மூன்றினையும் திரிந்து, ஓர் தேரால்
மன் இலங்கு பாரதத்தை மாள ஊர்ந்த
வரை உருவின் மா களிற்றை தோழீ! என் தன்
பொன் இலங்கு முலைக் குவட்டில் பூட்டிக் கொண்டு
போகாமை வல்லேனாய்ப் புலவி எய்தி,
என்னில் அங்கம் எல்லாம் வந்து இன்பம் எய்த
எப்பொழுதும் நினைந்து உருகி இருப்பன், நானே. 2079

அன்று ஆயர் குலமகளுக்கு அரையன் தன்னை
அலை கடலைக் கடைந்து அடைத்த அம்மான் தன்னை;
குன்றாத வலி அரக்கர் கோனை மாள,
கொடும் சிலைவாய்ச் சரம் துரந்து, குலம் களைந்து
வென்றானை; குன்று எடுத்த தோளினானை;
விரி திரை நீர் விண்ணகரம் மருவி நாளும்
நின்றானை; தண் குடந்தைக் கிடந்த மாலை;
நெடியானை அடி நாயேன் நினைந்திட்டேனே. 2080

மின்னு மா மழை தவழும் மேக வண்ணா!
விண்ணவர் தம் பெருமானே! அருளாய் என்று
அன்னம் ஆய், முனிவரோடு அமரர் ஏத்த
அருமறையை வெளிப்படுத்த அம்மான் தன்னை
மன்னு மா மணி மாட மங்கை வேந்தன்
மான வேல் பரகாலன். கலியன் சொன்ன
பன்னிய நூல் தமிழ் மாலை வல்லார் தொல்லைப்
பழவினையை முதல் அரிய வல்லார் தாமே. 2081

திருநெடுந் தாண்டகம் முற்றிற்று.

## பெரிய திருமொழி முற்றும்

---





தோழீ! அவர் தென் இலங்கை சென்று கோட்டைகளையும் அரக்கன் இராவணனையும் அழித்தவர். திரிவிக்கிரமனாக மூன்றுலகங்களையும் அளந்தவர். பாரதப் போரில் தேர்ஓட்டி, மன்னர்களை அழித்தவர். மலை போன்ற திண்மையையும் யானையை ஒத்த செருக்கும் உடையவர் இந்த எம் பெருமானைப் பசலை பூத்த என் முலைகளாகிற தூண்களில் பிணைத்துக் கொண்டு, அப்பால் போக முடியாதபடி அவரை வளைக்க வல்லேன். அவரைப் பிரிந்துபட்ட துன்பத்தை அவர் எதிரேயே படுவேன். என்உடல் உறுப்புகள் எல்லாம் என்னிடமே வந்து சேரும்படி அவரை நினைத்த மாத்திரத்திலேயே. அழிந்து விடுவேன். 2079

முன்பு இடைக்குலப் பெண்ணான நப்பின்னைக்கு நாயகர் ஆனவர். பாற்கடலைக் கடைந்தவர்; உவர்க் கடலின் மீது அணை கட்டியவர். குறையாத வலிமை பெற்ற இராவணன் அழியும்படி கொடிய வில்லிலே அம்பு தொடுத்து, அரக்கர் குலத்தைக் களைந்து வென்றவர். கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்த தோளுடையவர். அலை நீர்ப் பொய்கைகள் நிரம்பிய திருவிண்ணகரிலே எழுந்தருளியவர். திருக்குடந்தையில் பள்ளி கொண்டவர். நெடிய திருமாலான இப்பெருமானை நாய் போல் தாழ்ந்த அடியேன் நினைத்தேன். 2080

முனிவர்களும் தேவர்களும் துதிக்க, அன்ன வடிவம் எடுத்து அருமையான வேதங்களை வெளிப்படுத்திய திருமாலைப் பரகாலனான கலிகன்றி ஆழ்வார் இப்பாசுரங்களில் பாடினார். மாடங்கள் நிறைந்த திருமங்கை நகர்க்கு அரசரான ஆழ்வார் "மின்னலுடன் கூடிய மேகம் போன்ற வடிவுடையவனே! நித்திய சூரிகள் தலைவனே! அடியேனுக்கு அருள் செய்வாய்" என்று வேண்டினார். தமிழ் மாலையான இப் பாசுரங்களை ஓத வல்லவர். தம் பழைய வினைகளை வேருடன் போக்கிக் கொள்ள வல்லவர் ஆவார்கள். 2081

திருநெடுந்தாண்டகம் முற்றிற்று.

## பெரிய திருமொழி முற்றும்

---

ஸ்ரீ:

# நாலாயிர திவ்யப் பிரபந்தம்

## பெரிய திருமொழி

## நூல் : 2

## பாடல் முதற்குறிப்பு அகராதி